உ

கணபதி துணை.

தெய்வப்புலமைத்

# திருவள்ளுவ நாயனார்

அருளிச்செய்த

தமிழ்வேதமாகிய

# திருக்குறண்மூலமும்

## பரிமேலழகருரையும்

---

இவை

இராமநாதபுரசமஸ்தானம் ம-ள-ள-ஸ்ரீ

பொன்னுச்சாமித்தேவரவர்கள்

வேண்டுகோளின்படி,

யாழ்ப்பாணத்து நல்லூர்

ஆறுமு

கநாவலரவர்களால்

பலபிரதிருபங்களைக்கொண்டு பரிசோதித்து

சிதம்பரசைவப்பிரகாசவித்தியாசாலைத்
தருமபரிபாலகர்
Mudlr. G. சுப்பிரமணியம் J. P.
அவர்களால்
சென்னபட்டணம்
வித்தியாநுபாலனயந்திரசாலையில்
அச்சிற்பதிப்பிக்கப்பட்டன.
பதின்மூன்றும் பதிப்பு.
சர்வதாரிஞு கார்த்திகைமீ .

உ

கணபதிதுணை

# சிறப்புப்பாயிரம்.

மகாவித்துவானாகிய
ம-ா-ா-ஸ்ரீ திரிசிரபுரம்
மீனாட்சிசுந்தரம்பிள்ளை
இயற்றியது.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

பொன்பூத்தமகரந்தப்புதுமதுவச்செழுங்கமலப்பொகுட்டுவாழ்வோ
றென்பூத்தநான்முகத்தோனலனைமுகத்தோனேதெளிமினென்னக்

கொன்பூத்ததமிழ்வழங்குநிலத்தினறனினிதெழுந்துகுதிகொண்டாட
மின்பூத்தசெங்கதிரின்வள்ளுவரென்றொருநாமமேவத்தோன்றி.
(௧

பொலிதரமுன்னுணர்ந்தமறையகத்தமைந்தவ
றமுதனுற்பொருளுமேன்மே லொலிதரமற்றந்
நான்குமொருமூன்றினடக்கியின்றேனொழுக்கியாங்கு
மெலிதரவில்வரைமுதற்பேருருவொருசிற்றாடியகம்விளங்கன்மான
நலிதரநீர்சிலசொல்விற்பலபொருளுஞ்செறித்துநவைநண்ணாதாக.
(௨)

மொழிசுருங்கல்பொருள்விளங்கன்மொழியவினிதாதனலமொழிபுணர்த்த
ல் வழியமையோசையிற்பொழிதலாழ்ந்திருத்தன்முறைநிறுவன்
மலைவுதீர்தல் பொழிவிழு
மியதுபயத்தல்காட்டாதலிப்பத்தும்பொலியவாய்ந்த
கழிபொருளுங்கருதணியுநோக்குமிடந்தொறுங்கிடந்துகளிப்புச்செய்ய.
(௩)

மையேறுபொழின்மதுரைமாநகரத்தருட்புலமைமாட்சியார்முன்
கையேறுதிருமூலாகமச்சோதிமறைமுளைத்தகனிவாய்விண்டு
பையேறுமணிபொருமோர்துதிகவிசொற்றிடப்பலரும்பரவிப்போற்ற
வையேறுதிருக்குறளென்றொருநூல்செய்துலகுவப்பவளித்தானாக.
(௪)

அன்னநூற்பெருமையுணர்ந்தான்றபாணினிபுரிந்தவரியநூலுக்
கின்னாதீர்பதஞ்சலிபோற்பலருரையும்வியாப்பியமாயிருக்கநாளு
முன்னவாம்வியாபகமேயாகநூற்கருத்துணர்ந்தேமொழிந்தாரென்ன
நன்னர்வான்புகழ்ப்பரிமேலழகருரையியற்றவதைநாடியாரும்.
(௫)

எட்டுவரைந்தெடுத்துணர்ந்துவருநாளிலெங்கணுஞ்சாலெழுத்துக்குற்ற
'மாட்டும்வகையுணராராய்ப்பரம்பரையொன்றேகருதியொழிந்தாரத்தோ
ராட்டுவலென்றுணர்ந்தனையஃதலமும்பேருரையுமுனம்வகுத்தவாறே
நீட்டுதவிலாவெழுத்திலியைவியெனவுலகுபுகழ்செம்பிராடன்.
(௬) உ

## சிறப்புப்பாயிரம்.

ஓதுபதியாயவிராமீசர்திருவருளானீருடுத்தவைப்பிற்
கோதுபதியாதகலவறந்தழைந்துவிளங்கிடச்செங்கோல்கைக்கொண்ட
சேதுபதிமானேசரதிகாரகடாத்துசெயசிங்கஞ்செம்பூ
மாதுபதியயர்வுயிர்ப்பவுலகமுழுவதும்புரக்கும்வள்ளற்கோமான்.
(எ)

கற்பகத்தின்றளிரனையமென்னிறமுஞ்சங்கினொடுகமலரேகை
யுற்பவமுமொருசுரபிச்செருத்தன்முலைநிகர்விரலுமொளிர்பொன்னாழி
யிற்பதியொண்சுடர்மணியுமெய்துதலாற்றருநிதியமிரண்டுதெய்வப்
பொற்பமையாவரு
ண்மணியிவ்வைந்துஞ்சேர்ந்தாயவெனும்புரவுக்கையான். (அ)

பாருநெடுவிசும்புமறுவெங்குளதென்றாராயப்பரந்தமார்பா
னேருமுணர்வுடையயர்பாற்பெருங்கருணைமடைதிறந்தாலொத்தக
ண்ணன் வாருமிளநகையரும்பவினியர்முகமலர்த்துமொழிமதுரவாயான்
மேருவெனப்புடைபரந்துபகைவர்நிலைகலங்கவெழுஉவீங்குந்தோளான்.
(௯)

சிவஞானத்தேவர்வரப்பிரசாதபாலனருள்செறிபூபாலன்
பவஞானமுழுதொழியக்கோபாலனெஞ்ஞான்றும்பணிகாபாலன் றவ
ஞானநீற்றொளியேயொளிர்பாலன்பகைகாணத்தகாப்பின்பால
னவஞானமறுத்துணர்ந்தமுப்பாலன்போர்வையெனவமைசிர்ப்பாலன்.
(௧௦)

ஒருகாவித்துவசத்தாஜெளிர்தளவமாலிகையானுணர்வான்மீக்கூர்ந்
தருகாவித்துவசத்தானன்றபெருஞ்சிவஞானமடங்கவுய்க்கும்
கருகாவித்துவசத்தான்பகைநோக்கியுறுமனமேகடைகாதுஞ்சா
துருகாவித்துவசத்தான்புணர்யான்செய்காயமெனவுரைக்கும்வாளான்.
(கக) கந்துகத்தானம்பரவுமாறுபொழிந்தெழுகளிற்றான் நந்தார்மேற்பாய்
கந்துகத்தானம்பரவுகுடியடியான்வாயிற்கட்டித்தூங்கும்
கந்துகத்தானம்பரவுமாதாவென்றுயிர்கருதிக்கரிசெலாமி
கந்துகத்தானம்பரவுரவமாதிரீங்கவறங்கைக்கொண்டுள்ளான்.
(கஉ)

தரைசெய்தவப்பயனாகியமைந்தபெருவளப்புதுவை
வத்தலைமையோன்பொன் வரைசெய்நிதிப்பெருவாழ்க்கைமாக
னவான்பெரும்புலவர்மறவாதென்று முரைசெய்பெரும்பு
கழ்ப்பொன்னுச்சாமிநரேந்திரன்மகிழ்கூர்ந்துரைப்பக்கேட்டு
நரைசெய்விடையேறுயர்த்தாம்பிரானடிக்கன்பேயக்குநல்லோன்.
(கங) மன்னுபெருந்தமிழ்ப்பாடையிலக்கணமுமிலக்கியமும்வரம்புக
ண்டோன் பன்னுசிவபுராணங்கள்பலதெரிந்தோன்சிவாகமநூற்பரவை
மூழ்கி புன்னுமனுநூ தியெனும்விலைவரம்பிலாமணிகையுறங்கொண்டுள்ளா
னின்னுநயகுணத்தினனுய்ச்சைவமெனும்பயிர்
வளர்க்குமெழிலிபோல்வான். (கச)
நீடுபுகழ்த்திருக்கேதீச்சரந்திருக்கோணசலமிங்கிலவாகின்ற
நாடுபுகழ்த்தலம்பொலியாழ்ப்பாணத்துநல்லூர்வ
ாழ்நகராக்கொண்டோன் றேடுபுகழுருவமைந்தகந்தவேடவத்துதித்தசெ
ல்வன்யாரும்
பாடுபுகழாறுமுகநாவலனவ்வாறச்சிற்பதிப்பித்தானே.
(கடு)

# சிறப்புப்பாயிரம்.

மகாவித்துவானாகிய ம-ா-ா-ஸ்ரீ
## மீனாட்சிசுந்தரப்பிள்ளைமாணாக்கரும்
சிதம்பரச்செட்டியார் குமாரருமாகிய

# தியாகராஜச்செட்டியார்

## இயற்றியது.



### நேரிசையாசிரியப்பா.

திருவளர் தெய்வச் செழுமறை யவர்த—மூருவளர் செங்கை யுதக மவாவிக்—
கருங்கடன் முகட்டிற் செங்கேழ் பரப்பி—மரகதம் பழுத்த குரகத மோரேழ்—சேர்தர யாத்த வோர்கால் வையத்—தமர்ந்தினி தெழூஉ வகலிடம் புதைத்த—செறியிருள் விழுங்குஞ் செஞ்சுடர் வானவ—னலங்கொளி விரிக்கு நலங்கிளர் கரங்க—ஊண்டிடத் திறக்கு மாண்டகு புத வ—மாயிரந் தாங்கி யவிர்நிலா வெறிக்குந்—தாளங் குயிற்றிய தமனியக் கோயி—லரசுவீற் றிருந்திவ் வகில மீன்ற—நான்மறை முழங்கு நன் னுவுடைக் கடவுள்—பெருகுபே ரருளாற் றிருவள் ளுவராய்—மகிதலத் துதித்து மன்னுறு மக்க—ளாறமுத னன்குந் திறமுற வுணரவு—நன்மை யெங்கணு நனிசிறந் தோங்கவும்—புன்மை யண்டப் புறம்போ யொழியவுஞ்—சந்தனப் பொதியச் செந்த மிழ் முனிவ—னுள்ளம் பெருங்களி கொள்ளை கொள்ளவுந்—தவலரும் புகழ்சால் சங் கத் தமர்ந்த—நுவலரும் புலவர்சொ னுண்பொரு ளாலெலாந்—திருப்பெறு கல்வி நிரப்புறு வோர்சொல்—பருப்பொரு ளாய் விருப்பற் றொழியவுஞ்—சிற்றள வின தாய்ப் பெரும்பொரு ளடக்கி—யுற்றவிந் நூலினி துணர்வோர்

யாரு—நனுகுசொற் சுவையொடு நகுபொருட் சுவைகவர்ந்—தனுவின்மா
மேரு வடக்கத் துணியவு—நற் றமிழ்ச் செல்வம் பெற்றநன்
னாட்டின்முன்—மற்றைய பன்மொழி யுற்றபுன்
னுடைலா—மன்பொரு ளுடையர்முன் வறியவர் போல—வென்செய்
வாமென் றேக் கற்று நிற்கவு—மெழுத்து முதலாய விலக்கண
மெல்லாம்—பழுத்தினி துறங்கும் பள்ளி யாகவு—மின்றி யமையா
வின்னலம் பலவுந்—தன்றின இடந்து துதிபெறத் திகழவுந்—திருவுளத்
துன்னித் திருவாய் மலர்ந்து—பொருவறப் புகன்ற புகலருந்
தெய்வத்—திருக்குற ளென்னுஞ் செந்தமிழ் வேதம்—பலருரை
செய்ய நிலவிய தெனினு—மொருவாப் புலமைத் தருமர்முன்
னுய—பாடல்சால் சிறப்பிற் பதின்மர் செய்த—நாடுறு முரைகளுட்
பீடமைந் தோங்கும்—பரிமே லழகர் பண்ணிய வுரை யொடு—விரிகடல்
சூழ்புவி மேவி விளங்கப்—பரிவுறு மச்சிற் பதித்துத் தருகெ
னக்—கற்பகச் சோலை ககனத் துறுமெனப்—பொற்புறு புலவர் புகலுவ
ரஃது—நம் போன் மாரு நல்வள முடைத்தெனி—லம்பர்ச் சென்றினி
தறிய லாமென—வெண் ணிச் சென்றுங் கெழிலுற
வளர்ந்து—விண்ணுற நிவந்த வியன்மாம் பொழிற்கட்— சிவந்தழை
மனத்துச் செவ்வியோர்க் கிடமாய்க்—கவின்றிகழ் காரைக் காலவ
தரித்த—வம்மைதிருவுளங்கனிந் தடியார்க் களித்த—கனிக்கெதி ராகக்
கண்ணுதலரு ளிய—வினித்ததே மாங்கனி யிப்பொழிற்
கனியே—யென்னக்கிளைதொறுந துன்னிக் கனிந்த—வெண்ணிலாக்
கனிகளை யுண்ண விரும்பி—வாவிப் புகுந்திள மந்திக
ளெல்லா—மேவியத் தருக்கண் மீமிசை யிருந்து—தாவிப் புகாதத்
தருமனி யேறி— யோவிலக் கனிகவர்ந் துணவலி யின்றிக்—கூனடை
வெரிநின் மேன்மயி ரெலாமு திர்ந்—திருகண் குழியா வென்பெலாம்
வெளிப்பட்—டகடுற வொட்டி யடிபசி த

## சிறப்புப்பாயிரம்.

வருத்த—வண்ணாந்து நோக்கி ண்ணி யிருக்கு—முதுபெரு மந்திகண்

முன்னர்முன் னுகுத்து—வெறுத்திட வூட்டி விழைந்துபின்
னுண்டு—தாமுயன் றுண்ணுந் தகுவலி யில்லா—வுறவினர்க் கூட்டி யுண்
ணறவரை நிகர்க்கு—நலமலி செம்பி நன்னா டையான்—மேருவொன்
றென்று விளம்புதல் பொய்யென்—றூரு மியம்ப வளவற
வுயர்ந்து—செம்பொனா னியன்றபல் செழுமணி மாடத்—தும்ப ருலாவு
மொளியிழை மடவா—ரன்புறு மாடவ ரணுகநோக்கி—யின்புற முயங்க
வெண்ணுதங் காதல்— குறிப்பிற் புலப்படக் கொழுங்கனி
யிதனைச்—செ வ்வாய்ப் பைஞ்சிறைச் சிறுகிளி யூட் டப் — புகு வே
னென்று புதுமதி மழுங்கப்— பளிங்கரிந் தமைத்த விளங்கறை புக்
குப் · பித்திகைத் தலத்தி லொத்துத் தோன்று — நீழற் பஞ்சர
நேர்சென்று திறத் தல்— பின்படர் காதல ரன்புற நோக்க — வுறுநா
ணொடுநகைத் தோடித் தழுவும்— வளமலி புதுவை மாநகராளி
—யவமெலாஞ் சாரா தகலுற வகற்றிச்—சிவமெலாம் புனைந்த
சிவஞானத் தேவர்—பவமெலா முவந்து
பண்ணிய மாப்பெருந்—தவமெலாந் திரண்டொரு தனயனா
யுதித்தோன்—பூ விலுந் திசையிலும் புகலுறு மற்றைய— தீவிலு
மிருசுடர் திரிதரும் பெரிய—கோவிலுந் தீஞ்சுவை கொழிக்குந்
தமிழ்வ லோர் — நாவிலும் பாவிலு நடிக்கும் புகழா—னுண்மையு
நூலுணர் நுண்மையும் வறுமைகொல்—வண்மையுங் காட்சிக்
கெண்மையும் பகைதெறு —திண்மையுங் கதி ரவா மொண்மையு
மதியவாந்—தண்மையுங் கண்மையுந் தழைதரு செல்வன்—வண் டினங்
குழுமிக் கொண்டினி தேறிக்—கிண்டிடப் பருமுகை விண்டின்
னறவு—மண் டிப் பெருக வுண்டு தெவிட்டுந்—தண்டொடை புனையுந்
திண்டோள் வலியா—லேர் திகழ்ந் திலங்குங் கார்முடி
புனைந்து—சீர்பெற வுயர்ந்து நேருறக் கீழ்போய்—நீர் நிறைந் தமைந்த
வார்கடல் வளைந்த—பார்நடு நின்ற மேருவை வென்றோ—னெற்று
திரைப்புனல் சுற்றிய வசுந்தரை—யுற்றநன் னூ ல்கண் முற்றுற
வாய்ந்து—கற்றநா வலர்கள் சொற்றபாக் களையிஃ—திற்றிஃ திற்றென
மற்றுணர் புலமையான்—மலர் பொதுள் சோலை சுலவுற
வுடுத்தி—புலகெலாம் புகழ நிலவுதென் கூட—லிலகு பொற் சலச

மலர்தட மமர்ந்த—நலமலி சங்கப் பலகையை வென்றோன்—கரவுறு
பிறவியு மரணமு மொழித்து—வரவுறு மேன்மை வீ டீவுமெய்ஞ்
ஞானத்—திரமுறு முத்தி தாவல தாய—வரவுறு சடிலப் பரசிவ
பத்தியால்—விண்ணுறு மிமயப் பெண்ணமர் பாகத் -தண்ணலை
யருச்சனை பண்ணுற வொருநாட்—டண்ணறுங் கமலமொன் றெண்ணுறக்
குறைதலிற் —கண்ணிடந் திட்டகார் வண்ணனை வென்றோ—னெவ்
வெந் நலங்கட் கெல்லைதல்லை துரித்தோ--வவ்வந் நலங்களா லதையதை
வென்றோன்-- சிந்தாமணியோ நந்தாச் சுரபியோ— தெய்வத் தருவோ
பெய்யுமா முகிலோ— விருநிதி யோவிவ் வுருவெடுத் ததுந ா
—னலம்புனை யிதுவெனப் புலர்துணி விலமெனத்— தலம்புகல்
பொன்னுச் சா ம நமச்சிர— னனியுள மகிழ்ந்து நவின்றன
னுக—வினி தினி தென்று முனிவற நயப்புற்—றிவ ணிடை நிறைந்த
நுவலரு மறனெலாந்—தன் னுறு காட்டா மன்னுறக்
கொளுநான்—முதுபே ருலகி லிதுவே யாதலி—னறைந் தது சால
வமையுமென் றுன்னி—நிறைந்தி யாங்கணு நிலவுறப்
பதித்தனன்—விடை யத்திற் பரக்குந் தடையறு
மனத்தை—நடையறச் சுருக்கி யடியிணை வைக்குந்—
தன்மை யுயிர்க்குத் தானறி வுறுத்தப்—பாரிட மெங்கும் படர்பா கீரதிப்—பெரும்
புனல் சுருக்கிச் சிறுதுளி யாக்கி—யொளியுறு சடைமுடி மிளிர்தர வைக்கு—
மூவா முதல்வ னேவா தமருந்—தாவாப் பெருந்தவ மேவா விளங்கிக்—கவின்மலி
தன்னைக் கண்டவர் கொடும்பவங்—காணு தருடிருக் கோணு சலமுங்—குலவுறு நல
முயிர் கலவுற மலவலி—காதும் பெருந்திருக் கேதீச் சரமு—மிருநிதி யாக மருவு
றப் பெற்று—மன்னுறு மீழ நன்னு டென்னும்—பொருவிலாத் தனதற் கொருசிர
மாயது—மாணமர் பொழில்யாழ்ப் பாணமச் சிரத்திற்—கணிபெறக் கவிக்கு மணி

முடி திகர்க்கும்—பன்னூ லுணர்ந்த நன்று வலர்க—ளுடொறுங் கூடி நவிலுத லுற்ற—பீடுயர்ந் தோங்கு பெருவள னெல்லாந்—துன்னுதன் பெயராந் தொகை நிலைத் தொடர்சொலின்—மன்னுமுன் மொழியின் வயங்குபொரு ளாக்கி—யின்னும் பற்பல ரிசைப்ப விடங்கொடுக்குஞ் – செல்லூ ரெயில்சூழ் நல்லூ ரென்ப—திகழுமம் முடிக்கோர் சிகாமணி யென்னப்—புகரிலா ஞாலம் புகலவ ந் துதித்தோன்— செந் தமி ழென்னுஞ் சுந்தரமங்கை— கந்தரத் தழகு கனிமங் கலநா—ணிலக்கண மனைத்து நலக்க விளக்குந்—துலக்க மிகுந்த பூ ண்டா விளக்குப்—புணர்தரு மின்ப மணவுறு புராண— முணர்வோர் யார்க்கு மொழியுறு நேத்திர—நல்லறி வுறுத்தித் தொல்பவந் தொலைக்கும்—பல்கலை கட்கெலாம் புல்லுமோ ரில்லம்— பொய்த்தெரித் தகற்றி மெய் யிது வென்னுஞ்—சைவசித் தாந்தத்தெய்வ வைப்புக்—கண்ணுபுண் ணியங்கட் கண்ணிய வுயிராந்—தண்ணிய மாசிவ புண்ணியப் பிழம்பு— சிவனடி யவரைச் சிவமென மதிக்குந்—தவமது வளர்க்கு மவமறு சீல—னென் னுளங் குடிகொண் டிருக்கு— முன்னுசீ ராறு முகநா வலனே,

---

மகாவித்துவானாகிய ம-௱-௱-ஸ்ரீ

## மீனாட்சிசுந்தரப்பிள்ளையவர்களுக்கரும்

சங்கரலிங்கப்பிள்ளை குமாரருமாகிய

# தெய்வநாயகப்பிள்ளை

இயற்றியது.

## நேரிசையாசிரியப்பா.

திருவளர் ருமத் துருவளர் பெருமா—னுந்தியந் தாமரை யந்தி
லமர்ந்து— புரிமுறுக் குடைந்து முருகுகொப் பளிப்ப— வள்ளித
ழவிழ்க்கும் வெள் ளிதழ்க் கம லத்--திருமனை யவாவு மொருமனைக்
கிழத்தியை—மன்னுற நாளுந் தன்னுறு நாவிற்— செந்நிறந் திரிந்து
வெண்ணிறம் பயப்ப—மருவுற வைத்த வொருபெருந் தேவ—
னருமறைப் பொருளைப் பெருநிலத் துதித்த—மன்பதை கட்கெலா
மின்புற வுணர்த்த— வுள்ளத் துள்ளிக் கொண்டுந் தெய்வ— வுருவங்
கரந்து திருவள் ளுவராய்— மாநிலத் துற்று மேனிலத் தவரு—மவாவுற
வென்றுந் தவாநல மமைத்துப்—பன்மலை யுள்ளுயர் பொன்மலை
யென்னப்—பன்னூ லுள்ளுயர் நன்னூ லாகப்—பரிவுற வருளிய விரிவுறு
பொருள்சேர்— தெய்வத் திருக்குறண் மெய்ம்மலி நூலைப் — பொற்பமர்
தருக் களுட் கற்பக மென்னப்—பலருரை யுள்ளு நிலவுற விளங்கும் -
பரிமே லழகர் புரி யுரை யோடு— நயக்குறு மச்சில் வயக்கித்
தருகென—வானினங் களினுயர் தேனு வென்ன—முற்றுற வாய்ந்து
கற்றவர் குழுமிக்—கற்பம் புகலினு மற்பமுங் குறை யாப்— பெருவள
னமைந்து மருவும் புவியிற்—பம்புபன் னாட்டுயர் செம்பிநன் னாட—
னந்தா மணிகளுட் சிந்தா மணியெனப்— பொன்னியல் புரிசை
தென்னுற வுடுத்து—நன்னகர் பலவினுட் டென்னுச்ர் பெற்று—முதுபுகழ்
சுமந்துயர் புதுவையா நகரான்—சலஞ்சலத் துதித்த நலம்புரி
முத்தெனத்—தவஞாலம் புகழுஞ் சிவஞானத் தேவர் — பிறக்குமா
தவத்திற் சிறக்கவந் துதித்தோன்—பெருநிதி களினுய ரிருநிதி க்

## சிறப்புப்பாயிரம்.

யென்ன—விரவ லர்க் கெல்லாம் வரையாது கொடுக்கும்—வள்ளற்
குழாங்க ளுள்ளு யர் வள்ளல் — பன்னக் கேட்கவுன்னத் தெவிட்டாச்-
செந்தமிழ்ச் சுவைதெரி சுந் தரக் குரிசில்—கற்றூர்க் கெல்லா நற்று
யில்லங்—தூய்மை மிகுக்கும் வாய்மைப் பௌவந் —தெருட்குரித் தாய

வருட்பெருங் குன்ற— முத்தி தருஞ்சிவ பத்திப் பிண்ட—நன்னலம் பலவுந் துன்னுறு முறையுள்— பெரும்புயா சலத்திற் சுரும்பமர்ந் துண்ணுந்—தாமமார் பொன்னுச் சாமி மகிபன்—கழிந்தபேருவகையின் மொழிந்தன ஞகக் —களங்கமற வாய்ந்து விளங்குறப் பதித்தன — னம்பரத் தி லங்கு செம்பொன் ஞட்டைத் - தோழ னெனக்கொளு மீழ நன்ஞட்டி—னேனமர்ந் தொளிர் யாழ்ப் பாணத் துற்ற—வளமலி செல்வ வளகை நிகர்க்கும் — வில்லூர் மாட நல்லூர் வாண—னெழுத்துமுத லாக வழுத்திலக் கணமெலாங்—கடைபோக வுணர்ந்த தடை யறு மறிஞன்—றராதலம் பு கழ்சிவ புராணச் செல்வஞ்— சமையங் களினுயர்ந் தமைவு பெற் றோங்கித்— தெய்வத்தி றம்பொலி சைவ மென்னப்—பலபல கலையெலா நில வுற வுணர்ந்த—புலவரி லுயர்ந்தொளிர்நலமலி பெருமான்—புகலருஞ் சீர்த்தி பொத் துஞ் —சகமகி ழாறு முகநா வலனே.

---

மகாவித்துவாஞகிய ம-ா-ா-ஸ்ரீ

## மீஞட்சிசுந்தரப்பிள்ளைமாஞக்கரும்

## வீரசெட்டியார் குமாரருமாகிய சோடசாவதானம்

# சுப்பராயச்செட்டியார்

## இயற்றியது.

---

### நேரிசையாசிரியப்பா.

மலர்தலை யுலகிற் குலவுயிர்த் தொகைக—டன்னிய வினைவழி மன்னிய போகந்—தனைவிழைந் தருந்த நனைமலர்க் கோதை— மலைமக ளொருபா னிலைதர வமைத்த—சிவபிரா னருளின் றவலரு வலியாற் - பாற்படு மண்டப் பரப்பினை கொடி யினுள்— வீற்று

யிற்றுக விழுத்தக வகுத்த—தென்முகப் பதும நான்முகப் புத்தேள்—
வன்பட ரகன்று மன்பதை யனைத்தும்—விதிவிலக் குணர்ந்து
கதிபெறற் குவந்து—சீரிய தெய்வ வாரிய மொழியா—னல்கிய வளமை
மல்கிய சிறப்பிற்—பாயிர நான் மறை மாயிரு ஞாலத் — தம்பகை
கரக்கப் படுபொரு ளாதலி—னுலையா மரபி னிலை பெற
வம்மறைப்—பருப்பொரு ளொருவி விழுப்பொரு
ளொருங்கு—மமிழ்தினுமினிய தமிழினிற் றருவான்—பவர்சடைப் பனவர்
நுவலருஞ் சீர்சா—லிகலறு தவத்திறற் பகவமா முனிவரன்—செய்தவப்
பயனுன் மைதப வந்து—மாண்டநல் லருட்கொடை பூண்டகா
ரணத்தாற்—றெய்வப் புலமைத் திருவள் ளுவரெனு—நிகரில்பேர்
மேற் கொண் டகவிட முய்யத் —தன்பக லறம்பொரு ளின்பமவ்
டென்னு—நாற்பொருள் பயக்கு மேற்புடைத் தாகத் — தப்பா தருளிய
முப்பான் மருவிய—திருக்குற ளென் னுந் தெய்வமா
மறையொடு—தருமர் முதலிய சால்பினர் வகுத்த—திருவில்பே ருரை
களுட் சிறந்து நிலவிய—வரிமே லியல்புகழ்ப் பரிமே லழக—
ருளங்கனிந் தியற்றிய வளங்கனி புரையினைத் — தேர்ச்சியின்
மிக்கோர் சிந்தைநன் குவப்பக்—காவிரி தங்கனான் விரவிய
வழுக்களைத்—துருவிய லச்சிற் றருகெனப் பன்முறைப்—பன்ன



கஞ் சமர்த பன்னக வரைப்பித்—குணங்குளப் புரவி வணங்கல
சேறு—வெதுப்
பற வுலகம் பொதுக்கடிக் தளிக்கும்—வலமுறு மிராச குலசூ
டாமணி—கழை
சுளி புகர்முகக் கடவுணல் வேழம்—விழை தரு கற்பக மென்குழை
நொடுத்து—
வான்றேய் நறுஞ்சுவைத் தேன்றேய்த் தருந்தப்—புழைக்கர நீட்டப்

பழிப்பறு
தேனிரு—றாறமிய சந்தனச் சூழல்வாய்க் குலவுஞ்—செறுபுல னுடைய
குறுமுனி
தன்பா—லர்ச்சைகெட நுவன்று வரம்பெற பாக்குக்—குண்டுபடு
பீர்ஞ்சுனை
குடைந்தர மகளி—ராக்கலர் காம்விரித் திரப்பதை
நிகர்ப்ப—வடுப்படாக் கார்தட்
டுடுப்பலர் கஞலிய—முதியசெந் தமிழ்கமழ் பொழியமால்
வரையான்—விரலிய
விண்ணவர் பரவவீ ரடியான்—மூவுல களந்த மேவரு நெடுமால்—வன்திறற் பரு
வாய் வன்றியி னுருக்கொளீஇ—யுருவமண் புகுந்த வருவியுங் காணா—வருளார்
பசுங்கொடி யொருபாற் படர்ந்த—மூக்கட் கரும்பின் செக்கமலக்கான்—கரையினிற்
றேய்ந்து புரைதப மணக்க—நலந்தரு கலாணியக் குலக்கொழுந் திட்ட
—பழமறை தன்னகத் தளவளாய் மணக்குந் தெய்வவெண் டிரையெறி
வையைமா நதியான்—வரியளி மிதிப்பப் புரிமுறுக் கவிழ்ந்த—மணங்கம
ழம்பய மணங்கயர் குளர்க்கு மக
ணமர்ந் ததவுந்த கவினர் கடுப்ப—முகனமர்ங் கொழுக்குக் தகளறு செந்தே—னுவட்
டெறிந் தின்கழைப் படப்பையிற் புகுந்து—கரிமுகச் சங்குமுல் வரிமடை புடைப்ப—
மட்டியல் பூந்துகள் கொட்டிச் சிறைசெயுங்—கவிழ்துணர்த் தேமாம் பொழில்புடை
புடுத்த—பம்பிய வளம்பொலி செம்பியன் னாடன்—பூனத முளரி மானதத் தட
மெனத்—தேவரு மயிர்ப்பப் பூவனை யங்கனை—வெண்ணிறச் சிறக ரண்ணியமரான—
மருந்திட வென்றும் விருந்திடு மணித்தடந்—துறைதரு செல்வப்
புதுவைமா நகரா—
னுலம்பொரு மறுவில் வலம்படு புயத்தி—னுறைதரு கொற்றவை யுவகையொடு குறு
கை—யரும்பிய தொப்ப விரும்பிய வனைந்த—வளியடை கிடக்குந் தனவமா லிகை
யான் — மரவுரி யந்த ணன் மறுத்துமுட் சினப்பிற்—றகைக்குந்
திறனலன் சிகைக் கனல் கொழிக்குங்—குலிசவாட் படையுடைக்
குரிசிலென் றுணர்குற்—றன்னவன் றனைத் திங்கர்ப்
போந்த—துச்சைச் சிரவசீ துண்மையே யாமெனக்—கண்டவர்
பலரும்வாய் விண்டிடச் சிறந்து—விழிகவர் வனப்பிற் சுழிகொள்வாம்
பரியான்—றன்னுட னுடன்றமர் தாக்கிய தெய்வக்—கொன்னுறை

வயிரவா கோட்மோ
ணிணங்க—ளகைப்பொடு வாய்வெரீஇத்
திசைதொறு மிமையா—நாட்டமொடு

திகைத்தோட் டெடுத்தச்—செல்வுழி யின்றித்
வட்கி வாட்டமொடு நிற்ப—வயங்கொ டிற

மாக்து தயங்கிமதங் கவிழ்த்து—கிசரிகத் தலவும் புகர்முகக் களிற்றன்—கடையுகத்
தெழுந்த கருங்கட லென்னப்—படையொடு துவன்றிய வடையல ருடையா—னெஞ்சு

பறை கொட்ட வஞ்சிவிழி விளர்ப்ப—வேற்றிடி போல விடையறு
றுற மெறும்வலி யேற்றரி முரசினன்—பலப்பல வரசர் நலப்பமே

கிரட்டுங்—கூற்
றுயர்த்த—பைங்
கொடி யடங்கலும் பணிசெயூ நிற்பத் — திகழ்ந்துமே லோங்கிச்
சிறந்தெழிற் சய
மக—ளாவிக் கிணையதாங் காவிக் கொடியினேன் — பீடா ருலகங்
கோடா நெறியி
னிற் —குலவுற நடாத்து நிலவுசெங் கோலினன்—றண்ணிய ந
லங்கெழு புண்ணிய
மேரு—நிறைதரு கருணைக் குறையுணல் வின்பத்—திரையெறி கல்விக்
கரைபொரு
கடனறுங்—தண்ணளி யரும்பிப் புண்ணிய மலர்ந்து —நன்றிபல
பழுத்து நின்றருண
தாரு—நித்திய வருட்சிவ பத்தியின் பைங்கூழ்—புகழ்தரு மிரவலர்
நிகழ்தரு குறிப்ப
றிந்—துதவிடு சீர்சா லதுலசிந் தாமணி—விளங்குறு முயிரெனு
மிளங்கோ தனங்
கன்—கூட்டமிட் டருந்தி யேப்பமிட் டுவப்பக்—கண்ணிய
வின்சுவை நண்ணிய

வருட்பா—லேமமொடு சுரக்கும் காம தேனு—பொய்வகைச் சமயப் புதையிருள்
புடைபட—மெய்வகை யொளிவிரி சைவ சிகாமணி—யென்றுபற் பலரு மெடுத்தினி
தியம்பக்— குன்றலி னிலமகன் குதுகலிப் பெய்தத்—தவஞா னம்பெறு சிவஞான
தேவ—ரியற்றிய தவத்தா னயக்கத் தோன்றியோன்—பொதியவிழ் கடுக்கைகொடு அ

சிறப்புப்பாயிரம்.

மதிதவழ் சடில—மன்னு சாமிதன் மலர்க்கழல் பழிச்சும்—பொன்னு சாமிமால் புகன் றன ஞை —வடங்கிய தழறு வடங்கலு நிமிர்த்தெனத் — தளிர்த்தளி மொய்ப்பத் துளிர்த்தலர் தேமாங் —கனிசிறு வளியாற் கமலமென் பொகுட்டிற்—றூக்குறீஇ யுடை ந்து வாக்குறு பைந்தே—னீர்ந்தட நிரப்பு ர்ழநன் ஞட்டி—னிலமகண் முகமெனக் குலவும்யாழ்ப் பாணத்—ததிவளஞ் செறிந்து பொதிதலிற் பலகலை—வல்லோர் புகழு நல்லூ ராளி —நந்தலி னலங்கெழு கந்தவேட் குரிசில் —பெரிதுவந் துஞற்றிய வரிய மெய்த் தவத்தாற் —பொறையரு ன் சாந்த நிறைகொடை வாய்மையென் — றின்னாறற் குண ங்க ளோர் மன்னிய வுருக்கொடு வந்தென் றியாவரும் வழங்கிட வந்தோன்— கல்வியங் கடலைக் கடப்பவர் தமக்கோர்--சொல்வியன் புணையெனத் துரிசறநிற்போ-னிருவகைப் பிரம சரியநன் னெறியின் — மயற்றலை புகுத்தா நயிட்டிக நிலையினன்— கற்பனை கடந்த சிற்பரஞ் சுடர்தாள் - க னவினு நனவினுங் கழலாக் கருத்தினன் — பழிதரு முத்திப் பகுப்பெலா மொருவி—யழிவில்பே ரின்ப மளிக்குறு முத்தியை— யெளிதினிற் றெரிந்துப் பள கிலின் புறத்துஞ்--சைவசித் தாந்த மெய்தரு பனுவலை-- யையந் திரிபற வகத்தினன் குணர்ந்தோன் —கையற விகந்த கருணையங் கடலோன்— கூறுசீர் புனையு மாறுமுக காவலன்—பரவிய வுவப்பிற் பதித்தனன்—விரவிய வுலகம் விளங்குதற் பொருட்டே.

| | | | |
|---|---|---|---|
| ௨ | ௧௧ | வுடைாயர் | வுடையார் |
| ௬ | ௨௧ | ருமத் | மருமத் |
| ௭ | ௯ | பொழிய | பொதிய |
| ௭ | ௨௮ | வபிரவா | வபிரவாட் |
| ௯ | ௧௭ | மென்றூக் | மென்றூர் |
| ௪ | ௧௯ | இலவர்யின | இலவாயின |
| ௪ | ௯௯ | வேண்டாமையும் | வேண்டாமையும் |
| ௧0 | ௯௬ | யென்பனுள் | யென்பதனுள் |
| ௧௯ | ௧ | அறத்தினும் | அறத்தினாய் |
| ௧௯ | ௧0 | னாங்கில்லை | னாங்கில்லை |
| ௧௯ | ௯௨ | பிறறிதவ் | பிறறிதல் |
| ௧௪ | ௧௭ | யுடம்பினுஞ் | யுடம்பினுஞ் |
| ௧௪ | ௯௬ | யாக்கை | யாக்கை |
| ௧௭ | ௯௮ | தொல்காப்பியற் | தொல்காப்பியச் |
| ௧௮ | ௯0 | பட்டாது | பட்டது |
| ௨௯ | ௭ | உடைம | உடைமை |
| ௪0 | ௯௮ | வ ன் | தவன் |
| ௮௬ | ௨௯ | தலைமைக் | தலைமை |
| ௮௭ | ௪0 | றூரன் | றூன்ற |
| ௧0௮ | ௧0 | நிரம்பாயை | நிரம்பாமை |
| [illegible] | ௧௪ | துணிவென | றுணிவென |
| ௧௧௮ | ௧௬ | நாணித் | மாணிக் |
| ௧௨௮ | ௯௮ | பொகுள் | பொருள் |
| ௧௨௧ | ௭ | எரிமுன்னா | எரிமுன்னர் |
| ௧௯௯ | ௯௬ | தறுகி | தக்கி |
| ௧௯௮ | ௨0 | வெண்ணமைமை | வெண்ணமையை |
| ௧௩௧ | ௨௨ | லென்பனுற் | லென்பதனுற் |
| ௧௩௧ | ௯௮ | வண்வனளீர் | வண்புனளீர் |
| ௨௧௭ | ௯௨ | லாயினும் | லானும் |
| ௨௩௮ | ௯௨ | தொறாஉற் | தொறாஉக் |
| ௨௭௧ | ௨௬ | கொடுக்கும் | சொக்கும் |
| ௯0௬ | ௧௯ | புடையவர் | புடையர் |
| ௯௯௧ | ௧ | யவர்க்கண்ட | யவர்க்கண்ட |
| ௯௪௧ | ௯ | தந்தார் | தந்தார் அவர் |
| [illegible] | ௮ | மென்பதாம் | வெண்பதாம் |

| | | | |
|---|---|---|---|
| [illegible] | [illegible] | [illegible] | [illegible] |
| கடசக | கச | றன் | என் |
| கடஎ௫ | கக | சு | க |
| கடஅக | க0 | இரந்த | இறந்த |
| எ | அ | குணங்கலாலே | குணங்களாலே |
| கக | சக | லைக்குப் | லைக்கும் |
| கஅ | சு | தெட்டிப் | தெட்டுப் |

# பாலியலதிகாரவகராதி.

துறவு.

தூது.

தெரிந்துசெயல்வகை.

தெரிந்துதெளிதல்.

தெரிந்துவினையாடல்.

நடுவுநிலைமை.

நட்பாராய்தல்.

நட்பு.

நலம்புனைந்துரைத்தல்.

நல்குரவு.

நன்றியில்செல்வம்.

நாடு.

நாணுடைமை.

நாணுத்துறவுரைத்தல்.

நிலையாமை.

நிறையழிதல்.

நினைந்தவர்புலம்பல்.

நீத்தார்பெருமை.

நெஞ்சொடுகிளத்தல்.

நெஞ்சொடுபுலத்தல்.

பகைத்திறந்தெரிதல்.

பகைமாட்சி.

பசப்புறுபருவரல்.

படர்மெலிந்திரங்கல்.

படைச்செருக்கு.

படைமாட்சி.

பண்புடைமை.

பயனிலசொல்லாமை.

பழைமை.

பிரிவாற்றாமை.

# பிறனில்விழையாமை.

பாலியலதிகாரவகராதி முற்றிற்று.



உ

கணபதி துணை.

# திருவள்ளுவர் குறள்.

## பரிமேலழகருரை.



## அறத்துப்பால்.



### உரைப்பாயிரம்.

இந்திரன் முதலிய இறையவர் பதங்களும் அந்தமிலின்பத் தழிவில்வீடும் நெறியறிந்து எய்துதற்குரிய மாந்தர்க்கு உறுதியென உயர்ந்தோராலெடுக்கப்பட்ட பொருள் நான்கு: அவை அறம், பொருள், இன்பம், வீடென்பன. * அவற்றுள், வீடென்பது சிந்தையுமொழியுஞ் செல்லா நிலைமைத்தாகலின், துறவறமாகிய காரண வகையாற் கூறப்படுவதல்லது இலக்கணவகையாற் கூறப்படாமையின், நூல்களாற் கூறப்படுவன ஏனை

மூன்றுமேயாம்.

அவற்றுள், அறமாவது மனு முதலிய நூல்களில் விதித்தன செய்தலும் விலக்கி யன ஒழிதலுமாம். அஃது ஒழுக்கம் வழக்கு தண்டமென மூவகைப்படும். †

அவற்றுள், ஒழுக்கமாவது அந்தணர் முதலிய வருணத்தார் தத்தமக்கு விதிக்கப் பட்ட பிரமசரிய முதலிய நிலைகளினின்று ‡ அவ்வ வற்றிற்கோதிய அறங்களின் வழு வாதொழுகுதல்.

•

வழக்கமாவது ஒருபொருளைத் தனித்தனியே எனதெனதென்றிருப்பார் அது காரணமாகத் தம்முண்மாறுபட்டு அப்பொருண்மேற் சொல்வது. அது கடன் கோடன் முதற் பதினெட்டுப் பதத்ததாம். §

---

* அறம் பொருள் இன்பம் வீடெ ன்பனவற்றை வடநூலார் முறையே தருமம் அருத்தம் காமம் மோக்ஷமென்பர்.

† ஒழு க்கம் வழக்கு தண்டமென்பனவற்றை வடநூலார் முறையே ஆசாரம் விவகாரம் பிராயச்சித்தமென்பர்.

‡ நிலை - ஆச்சிரமம்.

§ விவகாரபதம் பதினெட்டாவன கடன்கோடல், உபநிதி, கூடிமேம்படல், கல்வியதை கல் காமை, ஒப்பிப்பணி செய்யாமை, கூலிகொடாமை, உடையனல்லான்விற்றல், விற்றுக்கொடாமை, கொண்டுள்ளமொப்பாமை, கட்டுப்பாடுகடத்தல், நிலவழக்கு, மாதராடவர்தருமம், தாயபாகம், வன்செய்கை, சொற்கொடுமை, தண்டக்கொடுமை, சூது, ஒழிபு எனவிவை.

உ

## உரைப்பாயிரம்.

தண்டமாவது அவ்வொழுக்கநெறியினும் வழக்குநெறியினும் வழீஇயினாரை அந்நெறி நிறுத்துதற்பொருட்டு ஒப்பாடி அதற்குத் தகவொறுத்தல்.

இவற்றுள் வழக்குந் தண்டமும் உலகநெறி நிறுத்துதற் பயத்தவாவதல்லது ஒழுக்கம்போல மக்களுயிர்க்கு உறுதிபயத்தற் சிறப்பிலவாகலானும், அவைதாம் நூலானேயன்றி உணர்வுமிகுதியானுந் தேயவியற்கையானும் அறியப்படுதலானும், அவற்றை யொழித்து, ஈண்டுத் தெய்வப்புலமைத் திருவள்ளுவராற் சிறப்புடைய ஒழுக்கமே அறமெனவெடுத்துக் கொள்ளப்பட்டது.

அதுதான் நால்வகை நிலைத்தாய் வருணந்தோறும் வேறுபாடுடைமையின், சிறு பான்மையாகிய அச்சிறப்பியல்புகளொழித்து, எல்லார்க்கு மொத்தலிற் பெரும் பான்மையாகிய பொதுவியல்புபற்றி இல்லறந் துறவறமென இருவகை நிலையாற் கூறப் பட்டது.

அவற்றுள், இல்லறமாவது இல்வாழ்க்கை நிலைக்குச் சொல்லுகின்ற நெறிக்கணின்று அதற்குத் துணையாகிய கற்புடைமனைவியோடுஞ் செய்யப்படுவதாகலின், அதனை முதற்கட் கூறுவான்றொடங்கி, எடுத்துக்கொண்ட இலக்கியமினிது முடிதற் பொருட்டுக் கடவுள்வாழ்த்துக் கூறுகின்றார்.

---

# பாயிரம்.

---

## முதல் அதிகாரம்.—கடவுள்வாழ்த்து.

அஃதாவது கவிதான் வழிபடுகடவுளையாதல் எடுத்துக்கொண்ட பொருட்கு ஏற்புடைக்கடவுளையாதல் வாழ்த்துதல். அவற்றுள் இவ்வாழ்த்து ஏற்புடைக்கடவுளை

யெனவறிக: என்னை? சத்துவமுதலிய குணங்களான் மூன்றாகிய உறுதிப்பொருட்கு அவற்றான் மூவராகிய முதற்கடவுளோடு இயைபுண்டாகலான் அம்மூன்று பொருளை

யுங் கூறலுற்றார்க்கு அம்மூவரையும் வாழ்த்துதல் முறைமையாகலின், அம்மூவர்க்கும் பொதுப்படக் கூறினாரெனவுணர்க.

இவ்வாழ்த்து

க. அகர முதல வெழுத்தெல்லா மாதி
பகவன் முதற்றே யுலகு

இதன்பொருள். எழுத்தெல்லாம் அகர முதல - எழுத்துக்களெல்லாம் அகரமாகிய முதலையுடையன:—உலகு ஆதிபகவன் முதற்று - அதுபோல உலகம் ஆதிபகவனாகிய * முதலையுடைத்து. என்றவாறு.

இது தலைமைபற்றிவந்த எடுத்துக்காட்டுவமை. அகரத்திற்குத்தலைமை விகாரத் தானன்றி நாதமாத்திரையாகிய இயல்பாற்பிறத்தலானும், ஆதிபகவற்குத் தலைமை செயற்கையுணர்வானன்றி இயற்கையுணர்வான் முற்றுமுணர்தலானுங்கொள்க. தமி ழெழுத்திற்கேயன்றி வடவெழுத்திற்கும் முதலாதல்நோக்கி,எழுத்தெல்லாமென்றார். ஆதிபகவன் என்னுமிருபெயரொட்டுப் பண்புத்தொகை வடநூன்முடிபு. உலகென் றது ஈண்டுயிர்கண்மேனின்றது. காணப்பட்ட உலகத்தாற் காணப்படாத கடவுட்கு உண்மை கூறவேண்டுதலின்,ஆதிபகவன்முதற்றேயென உலகின்மேல்வைத்துக் கூறினார்; கூறினாரேனும், உலகிற்கு முதல் ஆதிபகவனென்பது கருத்தாகக்கொள்க. ஏகாரம் தேற்றத்தின்கண் வந்தது. இப்பாட்டான் முதற்கடவுளதுண்மை கூறப்பட்டது.

உ. கற்றதனா லாய பயனென்கொல் வாலறிவ
னற்றா டொழாஅ ரெனின் உ.

இ - ள். கற்றதனால் ஆய பயன் என் - எல்லா நூல்களையுங் கற்றவர்க்கு அக்கல்வி யறிவானாய பயன்யாது?—வாலறிவன் நற்றாள் தொழாரெனின் - மெய்யுணர்வினை யுடையானது நல்லதாள்களைத் தொழாராயின். எ - று.

என்னென்னும் வினப்பெயர் என்னென்றாய், ஈண்டின்மை குறித்து நின்றது. கொல்லென்பது அசைநிலை. பிறவிப்பிணிக்கு மருந்தாகலின் நற்றாளென்றார். ஆகம வறிவிற்குப் பயன் அவன்றாளைத் தொழுது பிறவியறுத்தலென்பது இதனாற் கூறப் பட்டது.

(உ)

௩. மலர்மிசை யேகினன் மாணடி சேர்ந்தார்
நிலமிசை நீடுவாழ் வார். ௩.

இ - ள். மலர்மிசை ஏகினன் மாண் அடி சேர்ந்தார் - மலரின்கண்ணே சென்றவனது மாட்சிமைப்பட்ட அடிகளைச் சேர்ந்தார்—நிலமிசை நீடு வாழ்வார் - எல்லா வுலகிற்கும் மேலாய வீட்டுலகின்கண் அழிவின்றி வாழ்வார். எ - று.

---

* ஐசுவரியம், வீரியம், புகழ், திரு, ஞானம், வைராக்கியம் என்னுமாறுக்கும் பகமென்னும் பெயருண்மையால், பகவனென்பதற்கு இவ்வறுகுணங்களையு முடையோனென்பது பொருள்.

## முதல் அதிகாரம்.—கடவுள்வாழ்த்து.

அன்பானினைவாரது உள்ளக்கமலத்தின்கண் அவர் நினைந்த வடிவோடு விரைந்து சேறலின், ஏகினனென இறந்தகாலத்தாற் கூறினார்: என்னை? "வாராக் காலத்து நிகழுங் காலத்து—மோராங்கு வருஉம் வினைச்சொற் கிளவி—யிறந்தகா லத்துக் குறிப் பொடு கிளத்தல்—விரைந்த பொருள வென்மனார் புலவர்." * என்பதோத்தாகலின். இதனைப் "பூமேனடந்தான்" என்பதோர்

பெயாபற்றிப் பிறிதோர் கடவுட்கேற்று வாருமுளர். சேர்தல் - இடைவிடாது நினைத்தல். (௩)

வேண்டுதல்வேண் டாமை யிலானடி சேர்ந்தார்க்
கியாண்டு மிடும்பை யில.

இ - ள். வேண்டுதல் வேண்டாமை இலான் அடி சேர்ந்தார்க்கு - ஒருபொருளை யும் விழைதலும் வெறுத்தலுமில்லாதவனடியைச் சேர்ந்தார்க்கு—யாண்டும் இடும்பை இல - எக் காலத்தும் பிறவித்துன்பங்கள் உளவாகா. எ - று.

பிறவித்துன்பங்களாவன தன்னைப்பற்றி வருவனவும், பிறவுயிர்களைப்பற்றி வருவனவும் தெய்வத்தைப்பற்றி வருவனவுமென மூவகையான் வருந்துன்பங்கள். அடி சேர்ந்தார்க்கும் அவ்விரண்டு மின்மையின், அவை காரணமாக வரும் மூவகைத் துன்பங்களும் இலவாயின. (௪)

௫ இருள்சே ரிருவினையுஞ் சேரா விறைவன்
பொருள்சேர் புகழ்புரிந்தார் மாட்டு ௫.

இ - ள். இருள் சேர் இருவினையும் சேரா - மயக்கத்தைப்பற்றி வரும் நல்வினை தீவினையென்னு மிரண்டுவினையும் உளவாகா—இறைவன் பொருள் சேர் புகழ் புரிந் தார் மாட்டு - இறைவனது மெய்மை சேர்ந்த புகழை விரும்பினாரிடத்து. எ - று.

இன்ன தன்மைத்தென ஒருவராலுங்கூறப்படாமையின் அவிச்சையை இருளென் றும், நல்வினையும் பிறத்தற்கேதுவாகலான் இருவினையுஞ் சேராவென்றுங் கூறினார்.
இறைமைக்குணங்களிலராயினாரை உடையரெனக் கருதி அறிவிலார் கூறுகின்ற புகழ் கள் பொருள்சேராவாகலின், அவை முற்றவுமுடைய இறைவன்புகழே பொருள்சேர் புகழெனப்பட்டது. புரிதல் - எப்பொழுதுஞ் சொல்லுதல். (௫)

௬. பொறிவாயி லைந்தவித்தான் பொய்தீ ரொழுக்க
நெறிநின்றார் நீடுவாழ் வார். ௬.

இ - ள் பொறி வாயில் ஐந்து அவித்தான் - மெய், வாய், கண், மூக்குச், செவி யென்னும் பொறிகளை வழியாகவுடைய ஐந்தவாவினையும் அறுத்தானது—பொய் தீர் ஒழுக்கநெறி நின்றார் - மெய்யான ஒழுக்கநெறியின்கண் வழுவாது நின்றார்—நீடு வாழ் வார் - பிறப்பின்றி எக்காலத்தும் ஒரு தன்மையராய் வாழ்வார். எ-று.

---

* தொல்காப்பியம், வினையியல், ௪௪. † வேண்டுதலும் வேண்டாமையும்.

‡ ஈண்டு நல்வினையென்றது அழிதன்மாலையவாய சுவர்க்கவின்ப முதலிய காமியங்களைப் பயப்பனவாகிய வேள்விமுதலியனவற்றை. இவை வீட்டுக்கு நேரே வாயிலாகிய தத்துவஞானத்தைப் பயவாமைமாத்திரையேயன்றித் தீவினைபோல அது நிகழவொட்டாது தடைசெய்து நிற்றலுமுடையனவாம். ஆதலால், இந்நல்வினை தீவினை யிரண்டும் ஒருவனுக்கு ஞானத்தைத் தடுத்துப் பந்தமுறுத்துதற்கண் பொன்விலங்கும் இருப்புவிலங்கும்போலத் தம்முளொப்பனவாமென்க. சரியை கிரியை யோகங்கள் ஞானம் வாயிலாக வீடுபயத்தலின், ஈண்டு, நல்வினையென்றது அவற்றையன்றென்க.

## முதல் அதிகாரம்—கடவுள் வாழ்த்து.

ரு

புலன்கள் ஐந்தாகலான், அவற்றின்கட்செல்கின்ற அவாவும் ஐந்தாயிற்று. ஒழுக்க நெறி ஐந்தவித்தானாற் சொல்லப்பட்டமையின், ஆண்டையாறனுருபு செய்யுட் கிழமைக்கண் வந்தது, கபிலரதுபாட்டு என்பது போல. இவை நான்கு பாட்டானும் இறைவனை நினைத்தலும் வாழ்த்தலும் அவனெறிநிற்றலுஞ் செய்தார் வீடுபெறுவரென்பது கூறப்பட்டது.

(௬)

எ. **தனக்குவமை யில்லாதான் றாள்சேர்ந்தார்க் கல்லான்**
**மனக்கவலை மாற்ற லரிது.** எ.

இ - ள். தனக்கு உவமை இல்லாதான் தாள் சேர்ந்தார்க்கு அல்லால் - ஒருவாற்றானுந் தனக்கு நிகரில்லாதவனது தாளைச் சேர்ந்தார்க்கல்லது,—மனக்கவலை மாற்றல் அரிது - மனத்தின்கணிகழுந் துன்பங்களை நீக்குதல் உண்டாகாது. எ - று.

"உறற்பால - தீண்டா விடுத லரிது." * என்றாற்போல ஈண்டு அருமை இன்மைமேனின்றது. தாள் சேராதார் பிறவிக்கேதுவாகிய காம வெகுளி மயக்கங்களை மாற்றமாட்டாமையின், பிறந்து அவற்றான் வருந்துன்பங்களுள் அழுந்துவரென்பதாம.

(எ)

அ. **அறவாழி யந்தணன் றாள்சேர்ந்தார்க் கல்லாற்**
**பிறவாழி நீந்த லரிது.** அ.

இ - ள். அறவாழி அந்தணன் தாள் சேர்ந்தார்க்கு அல்லால் - அறக்கடலாகிய அந்தணனது தாளாகிய புணையைச் சேர்ந்தார்க்கல்லது—பிற ஆழி நீந்தல் அரிது - அதனிற் பிறவாகிய கடல்களை நீந்தல் அரிது. எ - று.

அறம், பொருள், இன்பமென உடனெண்ணப்பட்ட மூன்றனுள் அறத்தை முன்னர்ப் பிரித்தமையான் ஏனைப்பொருளுமின்பமும் பிறவெனப்பட்டன. பலவேறு வகைப்பட்ட அறங்களெல்லாவற்றையுந் தனக்கு வடிவாகவுடையனாகலின், அறவாழி யந்தணனென்றார். அறவாழியென்பதனைத் தருமசக்கரமாக்கி அதனையுடைய அந்தணனென்றுரைப்பாருமுளர். அப்புணையைச் சேராதார் கரைகாணாது அவற்றுள்ளே யழுந்துவராகலின், நீந்தலரிதென்றார். இஃதேகதேசவுருவகம். (அ)

கூ. கோளில் பொறியிற் குணமிலவே யெண்குணத்தான்
றாளை வணங்காத தலை.

இ - ள்.
கோள் இல் பொறியிற்குணம் இல - தத்தமக்கேற்ற புலன்களைக் கொள்கையில்லாத பொறிகள்போலப் பயன்படுதலுடையவல்ல—எண்குணத்தான் தாளை வணங்காத் தலை - எண்வகைப்பட்ட குணங்களையுடையானது தாள்களை வணங்காத தலைகள். எ - று.

எண்குணங்களாவன தன்வயத்தனாதல், தூயவுடம்பினனாதல், இயற்கையுணர்வினனாதல், முற்றுமுணர்தல், இயல்பாகவே பாசங்களினீங்குதல், பேரருளுடைமை, முடிவிலாற்றலுடைமை, வரம்பிலின்பமுடைமை எனவிவை. † இவ்வாறு சைவாக

* காலடியார். பழங்கலை,—எல்டுநீர் வையத்து ளெல்லாரு மெத்துணையும்—வேண்டார்மற் றீய விழைபயன் அல்லவை—வேண்டினும் வேண்டா விடினு முறற்பால—தீண்டா விடுதலரிது.

† தன்வயத்தனாதல்—சுவதந்திரத்துவம். தூயவுடம்பினனாதல்—விசுத்ததேகம். இயற்கை புணர்வினனாதல்—நிராமயான்மா, முற்றுமுணர்தல்—சருவஞ்ஞத்துவம். இயல்பாகவே பாசவ்,

உம் அதி.—வான்சிறப்பு.

மத்துக் கூறப்பட்டது. அணிமாவை * முதலாகவுடையனவெனவும், கடையிலாவறிவை † முதலாகவுடையனவெனவும் உரைப்பாருமுளர். காணாத கண் முதலியன போல வணங்காத தலைகள் பயனிலவெனத் தலைமேல்வைத்துக் கூறினார்;கூறினரேனும், இனம்பற்றி வாழ்த்தாத நாக்களும் அவ்வாறே பயனிலவென்பதுஉங்கொள்க. இவை மூன்றுபாட்டானும் அவனை நினைத்தலும் வாழ்த்தலும் வணங்கலுஞ் செய்யா வழிப் படுங் குற்றங் கூறப்பட்டது.
(௯)

௧0. பிறவிப் பெருங்கட னீந்துவர் நீந்தா
ரிறைவ னடிசேரா தார். ௧0.

இ - ள். இறைவன் அடி (சேர்ந்தார்) பிறவிப் பெருங்கடல் நீந்துவர் - இறைவ னடியென்னும் புணையைச் சேர்ந்தார் பிறவியாகிய பெரியகடலை நீந்துவர் ;—சேரா தார் நீந்தார் - அதனைச் சேராதார் நீந்தமாட்டாராய் அதனுளழுந்துவர். எ - று.

காரணகாரியத் தொடர்ச்சியாய்க் கரையின்றி வருதலின், பிறவிப்பெருங்கட லென்றார், சேர்ந்தாரென்பது சொல்லெச்சம். உலகியல்பை நினையாது இறைவனடியையே நினைப்பார்க்குப் பிறவியறுதலும், அவ்வாறன்றி மாறி நினைப்பார்க்கு அஃதறாமையுமாகிய இரண்டும் இதனால் நியமிக்கப்பட்டன. (௧0)

---

## உ ம் அதி.—வான்சிறப்பு.

அஃதாவது அக்கடவுளதாணையான் உலகமும் அதற்குறுதியாகிய அறம் பொருளின்பங்களும் நடத்தற்கேதுவாகிய மழையினது சிறப்புக் கூறுதல், அதிகார முறைமையும் இதனானே விளங்கும்.

௧௧. வானின் றுலகம் வழங்கி வருதலாற்
றானமிழ்த மென்றுணரற் பாற்று. ௧.

இ - ள். வான் நின்று உலகம் வழங்கி வருதலால் - மழை

இடையறாது நிற்ப உலகம் நிலைபெறறு வருதலான்,—தான் அமிழ்தமென்று உணரற் பாற்று - அம்மழை தான் உலகத்திற்கு அமிழ்தமென்று உணரும் பான்மையையுடைத்து. எ - று.

நிற்பவென்பது நின்றெனத் திரிந்து நின்றது. உலகமென்றது சீவன்களை. அவை நிலைபெற்று வருதலாவது பிறப்பு இடையறாமையின் எஞ்ஞான்றும் உடம்போடு காணப்பட்டு வருதல். அமிழ்தமுண்டார் சாவாது நிலைபெறுதலின், உலகத்தை நிலை பெறுத்துகின்ற வானை அமிழ்தமென றுணர்கவென்றார். (க)

---

ளினீங்குதல் —அநாதிபோதம். பேரருளுடைமை—அலுப்தசக்தி.
முடிவிலாற்றலுடைமை— அனந்தசக்தி. வரம்பிலின்பமுடைமை—திருப்தி.
"எட்டு வான்குணத் தீசனெம் மான்றனை" எனத் திருநாவுக்கரசுநாயனாரும், "இருமபுடாத மூவிய குலத்தினன் பிறையவனை மறைபவன் மெண்குணத்தினன்" எனச் சுந்தரமூர்த்திநாயனாரும் அருளிச்செய்தவாற்றானும், இறைவனுக்கு எண்குணமுண்மை சிவாகமமுதலியவற்றானுணர்கவென்பதறிக.

* அணிமா முதலிய எண்சித்திகளாவன அணிமா, மகிமா, கரிமா, லகிமா, பிராத்தி, பிராகாமியம், ஈசித்தை, வசித்தை என்பவை.

† கடையிலாவறிவு முதலிய எண்குணங்களாவன கடையிலாவறிவு, கடையிலாக்காட்சி, கடையிலாவீரியம், கடையிலாவின்பம், நாமமின்மை, கோத்திரமின்மை, ஆயுவின்மை, அழியா வியல்பு என்பவை. இவ்வாறு ஆருகதநூலிற் கூறப்பட்டன.

## உ ம் அதி.—வான்சிறப்பு. எ

கஉ. துப்பார்க்குத் துப்பாய துப்பாக்கித் துப்பார்க்குத்
துப்பாய தூஉ மழை. உ.

இ - ள். துப்பார்க்குத் துப்பு ஆய துப்பு ஆக்கி - உண்பார்க்கு நல்ல உணவுகளை உளவாக்கி,— துப்பார்க்குத் துப்பு ஆய தூஉம் மழை - அவற்றையுண்கின்றார்க்குத் தானும் உணவாய் நிற்பதூஉம் மழை. எ - று.

தானுமுணவாதலாவது தண்ணீராயுண்ணப்படுதல். சிறப்புடைய உயர்திணை மேல் வைத்துக் கூறினமையின், அஃறிணைக்கும் இஃதொக்கும். இவ்வாறு உயிர்களது பசியையும் நீர்வேட்கையையும் நீக்குதலின், அவை வழாங்கிவருதலுடைய வாயின வென்பதாம். (உ)

**கங. விண்ணின்று பொய்ப்பின் விரிநீர் வியனுலகத்**
**துண்ணின் றுடற்றும் பசி.**

இ - ள். விண் இன்று பொய்ப்பின் - மழை வேண்டுங்காலத்துப் பெய்யாது பொய்க்குமாயின்,—விரி நீர் வியன் உலகத்துள் - கடலாற் சூழப்பட்ட அகன்றவுலகத்தின்கண்—நின்று உடற்றும் பசி - நிலைபெற்று உயிர்களை வருத்தும் பசி. எ - று.

கடலுடைத்தாயினும் அதனாற் பயனில்லையென்பார், விரி நீர் வியனுலகத்தென் றார். உணவின்மையின், பசியான் உயிர்கள் இறக்குமென்பதாம். (ங)

**கச. ஏரி னுழாஅ ருழவர் புயலென்னும்**
**வாரி வளங்குன்றிக் கால்.**

இ - ள். உழவர் ஏரின் உழார்-உழவர் ஏரானுழுதலைச்செய்யார்,—புயல் என்னும் வாரி வளம் குன்றிக்கால் - மழைஎன்னும் வருவாய் தன் பயன் குன்றின் எ - று.

குன்றியக்காலென்பது குறைந்து நின்றது. உணவின்மைக்குக் காரணங் கூறிய வாறு.
(ச)

**கரு. கெடுப்பதூஉங் கெட்டார்க்குச் சார்வாய் மற்றாங்கே**
**எடுப்பதூஉ மெல்லா மழை** (ரு).

இ - ள். கெடுப்பதூஉம் - பூமியின்கண் வாழ்வாரைப் பெய்யாது நின்று கெடுப் பதூஉம்—கெட்டார்க்குச் சார்வாய் மற்று ஆங்கே எடுப்பதூஉம் - அவ்வாறு கெட் டார்க்குத் துணையாய்ப்பெய்து முன் கெடுத்தாற்போல எடுப்பதூஉம்—எல்லாம் மழை - இவையெல்லாம் வல்லது மழை. எ - று.

மற்று வினைமாற்றின்கண் வந்தது. ஆங்கென்பது மறுதலைத்தொழிலுவமத்தின் கண்வந்த உவமச்சொல். கேமோக்கமும் எய்துதற்குரியார் மக்களாதலின், கெட்டார்க் கென்றார். எல்லாமென்றது அம்மக்கண்முயற்சிவேறுபாடுகளாற் கெடுத்தல் எடுத்தல் கடாம் பலவாதல் நோக்கி. வல்லதென்பது அவாய்நிலையான்வந்தது. * மழையின தாற்றல் கூறியவாறு. (௫)

---

* அவாய்நிலை ஒருசொல் மற்றொருசொல்லை அவாவி நிற்றல். இவ்வாறு அவாய்நிலையால் வருவித்து முடிப்பதனை வடநூலார் அத்யாகாரமென்பர்.



அ

## ௨-ம் அதி.—வான்சிறப்பு.

கசு. விசும்பிற் றுளிவீழி னல்லான்மற் றாங்கே
பசும்புற் றலைகாண் பரிது. ௬.

இ - ள். விசும்பின் துளி வீழின் அல்லால் - மேகத்தின்றுளிவீழிற் காண்பதல்லது,—மற்று ஆங்கே பசும்புற் றலை காண்பு அரிது - வீழாதாயின், அப்பொழுதே பசும்புல்லினது தலையையுங் காண்டல் அரிது. எ - று.

விசும்பு ஆகுபெயர். மற்று வினைமாற்றின்கண் வந்தது. இழிவுசிறப்பும்மை விகாரத்தாற்றொக்கது. ஓரறிவுயிரும் இல்லையென்பதாம். (௬)

கஎ. நெடுங்கடலுந் தன்னீர்மை குன்றுந் தடிந்தெழிலி
தானல்கா தாகி விடின். எ.

இ - ள். நெடுங்கடலும் தன் நீர்மை குன்றும் - அளவில்லாதகடலும் தன்னியல்பு குறையும்,—எழிலி தான் தடிந்து நல்காதாகி விடின் - மேகந்தான் அதனைக் குறைத்து அதன்கட்பெய்யாது விடுமாயின். எ - று.

உம்மை சிறப்பும்மை. தன்னியல்பு குறைதலாவது நீர்வாழுயிர்கள் பிறவாமையும், மணி முதலாயின படாமையுமாம். ஈண்டுக்

ருறைத்தலென்றது முகத்தலே: அது "கடல்குறைபடுத்தநீர் கல்குறைபடவெறிந்து" * என்பதனானும் அறிக. மழைக்கு முதலாய கடற்கும் மழை வேண்டுமென்பதாம். இவை எழுபாட்டானும் உலகநடத் தற்கேதுவாதல் கூறப்பட்டது.
(எ)

கஅ. சிறப்பொடு பூசனை செல்லாது வானம்
வறக்குமேல் வானோர்க்கு மீண்டு. அ.

இ - ள். வானோர்க்கும் ஈண்டுச் சிறப்பொடு பூசனை செல்லாது - தேவர்கட்கும் இவ்வுலகின் மக்களாற் செய்யப்படும் விழவும் பூசையும் நடவாது,—வானம் வறக்குமேல் - மழை பெய்யாதாயின். எ - று.

நைமித்திகத்தோடு கூடிய நித்தியமென்றாராகலின், செல்லாதென்றார். உம்மை சிறப்பும்மை. நித்தியத்திற்றாழ்வுதீரச் செய்வது நைமித்திக † மாதலின், அதனை முற் கூறினார்.
(அ)

கக. தானந் தவமிரண்டுந் தங்கா வியனுலகம்
வானம் வழங்கா தெனின். க

இ - ள். வியன் உலகம் தானம் தவம் இரண்டும் தங்கா - அகன்றவுலகின்கண் தானமும் தவமுமாகிய இரண்டறமும் உளவாகா,—வானம் வழங்காதெனின் - மழை பெய்யாதாயின். எ-று.

தானமாவது அறநெறியான் வந்த பொருள்களைத் தக்கார்க்கு உவகையோடுங் கொடுத்தல். தவமாவது மனம் பொறிவழி போகாது நிற்றற்பொருட்டு விரதங்களான் உண்டிசுருக்கல் முதலாயின. பெரும்பான்மை பற்றித் தானம் இல்லறத்தின் மேலும், தவம் துறவறத்தின்மேலும் நின்றன.
(க)

உ0. நீரின் றமையா துலகெனின் யார்யார்க்கும்
வானின் றமையா தொழுக்கு. க0.

---

* பரிபாடல் உ0.

† நைமித்திகம்—நிமித்தத்தாலாவது.

## ௨ம் அதி.—நீத்தார்பெருமை.

கூ

இ - ள். யார் யார்க்கும் நீர் இன்று உலகு அமையாது எனின் - எவ்வகைமேம் பாட்டார்க்கும் நீரையின்றி உலகியல் அமையாதாயின்,—ஒழுக்கு வான் இன்று அமை யாது - அந்நீர் இடையறுதொழுகும் ஒழுக்கும் வானையின்றி யமையாது. எ - று.

பொருளின்பங்களை உலகியலென்றார், அவை இம்மைக்கண்ணனவாகலின். நீடை யறுதொழுகுதல் எக்காலத்தும் எவ்விடத்தும் உளதாகல். நீரின்றமையாதுலகென்பது எல்லாராலுந் தெளியப்படுதலின், அதுபோல ஒழுக்கும் வானின்றமையாமை தெளியப்படுமென்பார், நீரின்றமையாதுலகெனினென்றார். இதனை நீரையின்றி யமையாது உலகாயின் எத்திறத்தார்க்கும் மழையையின்றி ஒழுக்கம் நிடம்பாதென உரைப்பாருமுளர். இவை மூன்றுபாட்டானும் அறம்பொருளின்பங்கள் நடத்தற்கு ஏதுவாதல் கூறப்பட்டது. (௧0)

---

## ௩ம் அதி.—நீத்தார்பெருமை.

அஃதாவது முற்றத்துறந்த முனிவரது பெருமை கூறுதல். அவ்வறமுதற் பொருள்களை உலகிற்கு உள்ளவாறுணர்த்துவார் அவராகலின், இது வான்சிறப்பின் பின் வைக்கப்பட்டது.

**௨௧. ஒழுக்கத்து நீத்தார் பெருமை விழுப்பத்து**
**வேண்டும் பனுவற் றுணிவு. ௧.**

இ - ள். ஒழுக்கத்து நீத்தார் பெருமை - தமக்குரிய ஒழுக்கத்தின்கண்ணே நின்று துறந்தாரது பெருமையை—விழுப்பத்துவேண்டும் பனுவற்றுணிவு-விழுமிய பொருள்கள் பலவற்றுள்ளும் இதுவே விழுமிதென விரும்பும் நூல்களது துணிவு.

எ - று.

தமக்கு உரியவொழுக்கத்தின்கண்ணே நின்று துறந்தாலவது,—தந்தம் வருணத்திற்கும் நிலைக்குமுரிய ஒழுக்கங்களை வழுவாமலொழுக அறம் வளரும், அறம்வளரப் பாவங்தேயும், பாவந்தேய அறியாமை நீங்கும், அறியாமை நீங்க நித்தவநித்தங்களது வேறுபாட்டுணர்வும் அழிதன்மாலையவாய இம்மை மறுமையின் பங்களின் வெறுப்பும் பிறவித்துன்பங்களும் தோன்றும், அவைதோன்ற வீட்டின்கணாசையுண்டாம், அஃதுண்டாகப் பிறவிக்குக் காரணமாகிய பயனில் முயற்சிகளெல்லாம் நீங்கி வீட்டிற்குக் காரணமாகிய யோகமுயற்சியுண்டாம், அஃதுண்டாக மெய்யுணர்வு பிறந்து புறப்பற்றாகிய எனதென்பதும அகப்பற்றாகிய யானென்பதும் விடும், ஆகலான் இவ்விரண்டு பற்றையும் இம்முறையே யுவர்த்துவிடுதலெனக்கொள்க. பனுவலெனப் பொதுப்படக் கூறியவதனை, ஒன்றையொன்றுவவாத சமயநூல்களெல்லாவற்றுற்கும் இஃதொத்த துணிவென்பது பெற்றும். செய்தாரது துணிவு பனுவன் மேலேற்றப்பட்டது.

(க)

**உஉ. துறந்தார் பெருமை துணைக்கூறின் வையத்**
**திறந்தாரை யெண்ணிக்கொண் டற்று. உ.**

இ - ள். துறந்தார் பெருமை துணைக் கூறின் - இருவகைப் பற்றினையும் விட்டா ரது பெருமையை இவ்வளவென்று எண்ணாற் கூறியறியலுறின், அளவுபடாமை யான்—வையத்து இறந்தாரை எண்ணிக்கொண்டு அற்று - இவ்வுலகத்துப் பிறந்திறந் தாரை எண்ணி இத்துணையரென அறியலுற்றாற்போலும். எ - று.

முடியாதென்பதாம். கொண்டாலென்னும் வினையெச்சம் கொண்டெனத் திரிந்து நின்றது.

௨௩. இருமை வகைதெரிந் தீண்டறம் பூண்டார்
பெருமை பிறங்கிற் றுலகு. ௩.

இ - ள். இருமை வகை தெரிந்து - பிறப்பு வீடென்னும் இரண்டனது துன்ப வின்பக் கூறுபாடுகளை ஆராய்ந்தறிந்து - ஈண்டு அறம் பூண்டார் பெருமை - அப்பிறப் பறுத்தற்கு இப்பிறப்பின்கண் துறவறத்தைப் பூண்டாரது பெருமையே - உலகு பிறங்கிற்று - உலகின் கணுயர்ந்தது. எ - று.

"தெரிமாண் டமிழ்மும்மைத் தென்னம் பொருப்பன்" என்புழிப்போல இருமை யென்றது ஈண்டெண்ணின்கணின்றது. பிரிநிலையேகாரம் விகாரத்தாற்றொக்கது. இதனால் திகிரியுருட்டி உலகமுழுதாண்ட அரசர் முதலாயினோர் பெருமை பிரிக்கப்பட்டது. இவைமூன்றுபாட்டானும் நீத்தார்பெருமையே எல்லாப்பெருமையினும் மிக்கதென்பது கூறப்பட்டது. (௩)

௨௪. உரனென்னுந் தோட்டியா னோரைந்துங் காப்பான்
வரனென்னும் வைப்பிற்கோர் வித்து. ௪.

இ - ள். உரன் என்னும் தோட்டியான் ஓரைந்தும் காப்பான் - திண்மையென்னுந் தோட்டியால் பொறிகளாகிய யானையைந்தனையும் தத்தம் புலன்கண்மேற் செல்லாமற் காப்பான்—வரன் என்னும் வைப்பிற்கு ஓர் வித்து - எல்லாநிலத்தினும் மிக்கதென்று சொல்லப்படும் வீட்டுநிலத்திற்கு ஓர்வித்தாம். எ - று.

இஃதேகதேசவுருவகம். திண்மை ஈண்டறிவின்மேற்று. அந்நிலத்திற்சென்று முளைத்தலின், வித்தென்றார். ஈண்டுப்பிறந்திறந்து வரும் மகனல்லனென்பதாம். (௪)

௨௫. ஐந்தவித்தா னாற்ற லகல்விசும்பு ளார்கோமா
னிந்திரனே சாலுங் கரி. ௫.

இ - ள். ஐந்து அவித்தான் ஆற்றல் - புலன் களிற் செல்கின்ற அவாவைந்தனையும் அடக்கினுனது வலிககு—அகல் விசும்புளாாங்காமான் இந்திரனே சாலும் கரிஅகனற வானகதுள்ளாாிறைவனுகிய இந்திரனே அமையுஞ்சான்று. எ - று.

ஐந்துமென் னும் முற்றும்மையும் ஆற்றற்கென்னும் நான்கனுருபும் செய்யுள்விகா ரத்தாறமுகைன.தான ஐந்தவியாது சாப மெய்தினைறு அவிததவனதாற்றல் உணர்த் தினுகலின், இந்திரனே சாலுமகரியென்றார். (ரு)

உகூ. செயற்கரிய செய்வார் பெரியர் சிறியர்
செயற்கரிய செய்கலா தார். கூ.

இ - ள். செயற்கரிய செய்வார் பெரியர் - ஒத்த பிறப்பினராய மக்களுள் செய் தற்கெளியவற்றைச் செய்யாது அரியவற்றைச் செய்வார் பெரியர்:—செயற்கரியசெய் கலாதார் சிறியர் - அவ்வெளியவற்றைச் செய்து அரியவற்றைச செய்யமாட்டாதார் சிறியர். எ - று.

---

* எனடு இருமையென்பதுள் மைவிகுதி, தன்மையுணர்த்தாது தன்மையுடைப் பொருளையே யுணர்த்தலின், பகுதிப்பொருள் விகுதி யென்றுஞ் சுவார்த்தபாவ தத்திதப் பிரத்தியயம்.

## ரு ம் அதி.—நீத்தார்பெருமை.

மெய்யுணர்வு அவாவின்மை முதலிய நற்குணங்களாகிய குன்றின் முடிவின்கணின்ற முனிவரது வெகுளி,—கணமேயும் காத்தல் அரிது - தானுள்ளவளவு கணமேயாயினும், வெகுளப் பட்டாராற்றடுத்தல் அரிது. எ - று.

சலியாமையும்,பெருமையும் பற்றிக் குணங்களைக் குன்றாகவுருவகஞ்செய்தார். குணம் சாதியொருமை; அநாதியாய் வருகின்றவாறுபற்றி ஒரோவழி வெகுளி தோன்றியபொழுதே அதனை மெய்யுணர்வு அழிக்குமாகலின் கணமேயுமென்றும், நிறைமொழிமாந்தராகலின் காத்தலரிதென்றும் கூறினார். இவையிரண்டுபாட்டானும் அவராணை கூறப்பட்டது. (கூ)

௩0. அந்தண ரென்போ ரறவோர்மற் றெவ்வுயிர்க்குஞ்
செந்தண்மை பூண்டொழுக லான். ௧0

இ - ள். எவ்வுயிர்க்கும் செந்தண்மை பூண்டு ஒழுகலான் - எல்லாவுயிர்கண்மேலும் செவ்விய தண்ணளியைப் பூண்டொழுகலான்,—அந்தணர் என்போர்அறவோர்- அந்தணரென்றுசொல்லப்படுவார் துறவறத்துநின்றவர். எ - று.

பூணுதல் விரதமாகக்கோடல். அந்தணரென்பது அழகிய தட்பத்தினையுடையாரென ஏதுப்பெயராகலின், அஃது அவ்வருளுடையார்மேலன்றிச் செல்லாதென்பது கருத்து. அவ்வாறருளையுடையராயினும் யாகமாட்டுதலுடையரென்பது இதனாற் கூறப்பட்டது. (௧0)

## ௪ம் அதி.-அறன்வலியுறுத்தல்.

அஃதாவது அம்முனிவரானுணர்த்தப்பட்ட அறமூன்றனுள் ஏனைப்பொருளுமின்பமும் போலாது, அறன், இம்மை மறுமை வீடென்னும் மூன்றனையும் பயத்தலான், அவற்றின்

வலியுடைத்தென்பது கூறுதல். அதிகாரமுறைமையும் இதனானே விளங்கும். "சிறப்புடை மரபிற் பொருளு மின்பமு—மறத்து வழிப்படூஉந் தோற்றம் போல" † என்றார் பிறரும்.

௩௧. சிறப்பீனுஞ் செல்வமு மீனு மறத்தினூஉங்
காக்க மெவனோ வுயிர்க்கு. க.

---

* சாதியொருமையாவது ஒருசொல் ஒருமையீறு தோன்றியும் தோன்றாதும் நின்று பின் ஒருமைப்பன்மை இல்லையாக மேல்வந்த முடிபுச் சொற்களானும் தாமே பன்மைப் பொருளுணர்த்துவது. இதனை வடநூலார் சாதியேகவசனமென்பர். "ஈறுதோன்றுஞ் சாதி யொருமையு—மீறுதோன்றாச் சாதி யொருமையு - மேனவும் [illegible] பிறந்திலை மருங்கினும்." "[illegible]—பொருததாம் [illegible] [illegible]" "அருங்கலந் தருஞ்சாலைபோவதைமை" என்புழிப் பொருதநான் ஆருங்கலன் என ஈறுதோன்றிய சாதியொருமை வரும். "தென்புலத்தார் தெய்வம்" "குலமென்னுங் குன்றேறி நின்றார்" என்புழித் தெய்வம் குணம் எனவீறு தோன்றாச் சாதியொருமை வரும்.

† புறநானூறு. ௩௧.

## ௪ம் அதி.—அறன்வலியுறுத்தல்.

௩௧.

இ - ள். சிறப்பு ஈனும் - வீடுபேற்றையுந்தரும்;—செல்வமும் ஈனும் - துறக்கம் முதலிய செல்வத்தையுந்தரும்;—உயிர்க்கு அறத்தின் ஊங்கு ஆக்கம் எவன் - ஆதலான் உயிர்கட்கு அறத்தின்மிக்க ஆக்கம் யாது? எ - று.

எல்லாப்பேற்றினுஞ் சிறந்தமையின், வீடு சிறப்பெனப்பட்டது. ஆக்கந்தருவதனை ஆக்கமென்றார். ஆக்கம் மேன்மேலுயர்தல். ஈண்டுயிரென்றது மக்களுயிரை, சிறப்புஞ்செல்வமும் எய்துதற்குரியது அதுவேயாகலின். இதனால் அறத்தின் மிக்க வுறுதி இல்லையென்பது

கூறப்பட்டது. (௧)

**௩௨. அறத்தினூஉங் காக்கமு மில்லை யதனை
மறத்தலி னூங்கில்லை கேடு. ௨.**

இ - ள். அறத்தின் ஊங்கு ஆக்கமும் இல்லை - ஒருவனுக்கு அறஞ்செய்தலின் மேற்பட்ட ஆக்கமுமில்லை;—அதனை மறத்தலின் ஊங்கு கேடு இல்லை - அதனை மயக்கத்தான் மறத்தலின் மேற்பட்ட கேடுமில்லை. எ - று.

அறத்தினூஉங்காக்கமுமில்லையென மேற்சொல்லியதனையே அநுவதித்தார், அதனாற் கேடுவருதல் கூறுதற்பயனோக்கி. இதனால் அது செய்யாவழிக் கேடுவருதல் கூறப்பட்டது. (௨)

**௩௩. ஒல்லும் வகையா னறவினை யோவாதே
செல்லும்வா யெல்லாஞ் செயல். ௩.**

இ - ள். ஒல்லும் வகையான் - தந்தமக்கியலுந்திறத்தான்—அறவினை ஓவாதே செல்லும் வாய் எல்லாம் செயல் - அறமாகிய நல்வினையை ஒழியாதே அஃதெய்துமிடத்தானெல்லாஞ்செய்க. எ - று.

இயலுந்திறமாவது இல்லறம் பொருளளவிற்கேற்பவும், துறவறம் யாக்கைநிலைக் கேற்பவுஞ் செய்தல். ஓவாமை இடைவிடாமை. எய்துமிடமாவன மனம் வாக்குக் காயமென்பன. அவற்றாற் செய்யும் அறங்களாவன முறையே நற்சிந்தையும் நற்சொல் லும் நற்செயலுமெனவிவை. இதனான் அறஞ்செய்யுமாறு கூறப்பட்டது. (௩)

**௩௪. மனத்துக்கண் மாசில னாத லனைத்தற
னாகுல நீர பிற. ௪.**

இ - ள். மனத்துக்கண் மாசு இலன் ஆதல்-அவ்வாற்றான் அறஞ்செய்வான் தன் மனத்தின்கட் குற்றமுடையனல்லனாகை;—அனைத்து அறன்-அவ்வளவே அறமாவது;—பிற ஆகுல நீர - அஃதொழிந்த

சொல்லும் வேடமும் அறமெனப்படா, ஆரவார நீர்மைய. எ - று.

குற்றம் தீயனசிந்தித்தல். பிறரறிதல்வேண்டிச் செய்கின்றனவாகலின் ஆகுல நீரவென்றார். மனத்துமாசுடையனுயவழி அதன்வழியவாகிய மொழி மெய்களாற் செய்வன பயனிலவென்பதூஉம் பெறப்பட்டது.

(௪)

---

* அநுவதித்தலெனினும் வழிமொழிதலெனினுமொக்கும். அநுவாதமாவது முன்னர்ப் பெறப்பட்டதொன்றனை வேறொன்று விதித்தற்பொருட்டுப் பின்னருமெடுத்தோதுதல். அதனால் அது கூறியது கூறலென்னுங் குற்றமாகாது வழிமொழிதலென்றறிக. வழிமொழிதற்கு முன்னர்ப் பெறப்பட்டதனைப் புரோவாதமென்பர் வடநூலார். ஈண்டுப்புரோவாதம் "அறத்தினூஉங் காக்க மெவனோ" என்பது.

## ௧௪ ௪ம் அதி.—அறன்வலியுறுத்தல்.

௩௫. அழுக்கா றவாவெகுளி யின்னுச்சொ னான்கு
மிழுக்கா வியன்ற தறம். ௫.

இ - ள். அழுக்காறு - பிறராக்கம் பொறாமையும்—அவா - புலன்கண்மேற்செல்கின்ற அவாவும்—வெகுளி - அவையேதுவாகப் பிறர்பால்வரும் வெகுளியும்—இன்னச்சொல் - அதுபற்றிவருங் கடுஞ்சொல்லுமாகிய—நான்கும் இழுக்கா இயன்றது அறம் - இந்நான்கினையுங் கடிந்து இடையறாது நடந்தது அறமாவது. எ - று.

இதனை இவற்றோடு விரவியியன்றது அறமெனப்படாதென்பதூஉங்கொள்க. இவையிரண்டுபாட்டானும் அறத்தினியல்பு கூறப்பட்டது. (௫)

௩௬. அன்றறிவா மென்னா தறஞ்செய்க மற்றது
பொன்றுங்காற் பொன்றாத் துணை. ௬

இ - ள். அன்று அறிவாம் என்னாது அறம்செய்க - யாம் இது பொழுதிளையமாகலின் இறக்குநான்று செய்துமெனக் கருதாது அறத்தினை நாடோறுஞ் செய்க;—அதுபொன்றுங்கால் பொன்றாத் துணை - அவ்வாறு செய்தவறம் இவ்வுடம்பினின்றும் உயிர்போங்காலத்து அதற்கு அழிவில்லாத துணையாம் எ - று.

மற்றென்பது அசைநிலை. பொன்றாத் துணையென்றார்,செய்தவுடம்பழியவும் உயிரோடொன்றி வேறுடம்பினுஞ் சேறலின். இதனான் இவ்வியல்பிற்றாய அறத்தினை நிலையாத யாக்கை நிலையினபொழுதே செய்கவென்பது கூறப்பட்டது. (௬)

## ௩௭. அறத்தா றிதுவென வேண்டா சிவிகை
## பொறுத்தானோ டூர்ந்தா னிடை. ௭.

இ - ள். அறத்து ஆறு இது என வேண்டா - அறத்தின் பயன் இதுவென்று யாம் ஆகமவளவையான் உணர்த்தல்வேண்டா:—சிவிகை பொறுத்தானோடு ஊர்ந்தான் இடை-சிவிகையைக் காவுவானோடு செலுத்துவானிடைக் காட்சியளவை தன்னானே உணரப்படும். எ - று.

பயனை ஆறென்றார், பின்னதாகலின். எனவென்னுமெச்சத்தாற் சொல்லாகிய வாகமவளவையும், பொறுத்தானோ டூர்ந்தானிடையென்றதனாற் காட்சியளவையும் பெற்றாம். உணரப்படுமென்பது சொல்லெச்சம். இதனாற் பொன்றாத்துணையாதல் தெளிவிக்கப்பட்டது. (௭)

## ௩௮. வீழ்நாள் படாஅமை நன்றாற்றி னஃதொருவன்
## வாழ்நாள் வழியடைக்குங் கல். அ.

இ - ள். வீழ் நாள் படாமை நன்று ஆற்றின் - செய்யாது கழியும் நாளுளவாகாமல் ஒருவன் அறத்தைச் செய்யுமாயின்,—அஃது ஒருவன் வாழ்நாள் வழி அடைக்கும் கல் - அச்செயல் அவன் யாக்கையோடு கூடுநாள் வரும் வழியை வாராமலடைக்

குக்கல்லாம். எ - று.

ஐவகைக் குற்றத்தான்வரும் இருவகைவினையுமுள்ள துணையும் உயிர் யாக்கை யோடுங் கூடிநின்று அவ்வினைகளதிருவகைப் பயனையும் நுகருமாகலான், அந்நாண் முழுவதும் வாழ்நாளெனப்பட்டது. குற்றங்களாந்தாவன அவிச்சை, அகங்காரம், அவா, விழைவு, வெறுப்பென்பன; இவற்றை வடநூலார் பஞ்சக்கிலேசமென்ப. வினை

# ரு ம் அதி.—இல்வாழ்க்கை

௪ரு

யிரண்டாவன நல்வினை தீவினையென்பன. பயனிரண்டாவன இன்பர்துன்பமென்
பன. இதனுன் அறம் வீடு பயக்குமென்பது கூறப்பட்டது.
(அ)

**௩௯. அறத்தான் வருவதே யின்பமற் றெல்லாம்**
**புறத்த புகழு மில.** **௯.**

இ - ள். அறத்தான் வருவதே இன்பம் - இல்லறத்தோடு பொருந்தி வருவதே இன்பமாவது;—மற்ற எல்லாம் புறத்த - அதனோடு பொருந்ாது வருவன வெல்லாம் இன்பமாயினுந் துன்பத்தினிடத்த,—புகழும் இல - அதுவேயுமன்றிப் புகழுமுடைய வல்ல. எ - று.

ஆனுருபு ஈண்டுடனிகழ்ச்சிக்கண் வந்தது, "தூங்கு கையா னோங்கு நடைய"* என்புழிப்போல. இன்பம் காமநுகர்ச்சி, அஃதாமாறு காமத்துப்பாலின் முதற்கட் சொல்லுதும். இன்பத்திற் புறமெனவே துன்பமாயிற்று. பாவத்தான்வரும் பிறனில் விழைவு முதலாயின அக்கணத்துளின்பமாய்த் தோன்றுமாயினும் பின்றுன்பமாய் விளைதலின், புறத்தவென்றார். அறத்தோடு வாராதன

புகழுமிலவெனவே, வருவது புகழுமுடைத்தென்பது பெற்றும். இதனுன் அறஞ்செய்வாரே இம்மையின்பமும் புகழும் எய்துவரென்பது கூறப்பட்டது. (௯)

ச0. செயற்பால தோரு மறனே யொருவற்
குயற்பால தோரும் பழி. ௧0.

இ - ள். ஒருவற்குச் செயற்பாலது அறனே - ஒருவனுக்குச் செய்தற்பான்மையது நல்வினையே;—உயற்பாலது பழியே—ஒழிதற்பான்மையது தீவினையே எ - று.

ஒருமென்பன விரண்டும் அசைநிலை. தேற்றேகாரம் பின்னுங் கூட்டப்பட்டது. பழிக்கப்படுவதனைப் பழியென்றார். இதனுற் செய்வதுமொழிவதும் நியமிக்கப் பட்டன.
(௧0)

இவைநான்கும் பாயிரம்.



# இல் ல ற வி ய ல்.

## ரு ம் அதி.—இல்வாழ்க்கை.

அஃதாவது இல்லாளோடு கூடிவாழ்தலினது சிறப்பு. இன்னிலை அறஞ்செய் தற்குரிய இருவகைநிலையுள் முதலாதலின். இஃதறன்வலியுறுத்தலின்பின் வைக்கப் பட்டது.

சக. இல்வாழ்வா னென்பா னியல்புடைய மூவர்க்கு
நல்லாற்றி னின்ற துணை. ௧.

இ - ள். இல்வாழ்வான் என்பான் - இல்லறத்தோடு கூடிவாழ்வானென்று சொல் லப்படுவான்—இயல்பு உடைய மூவர்க்கும் நல்லாற்றின் நின்ற துணை - அறவியல் பிணையுடைய எனைமூவர்க்கும் அவர் செல்லும் நல்லொழுக்கநெறிக்கண் நிலைபெற்ற துணையாம். எ - று.

* புறநானூறு. ௨௨.

# ரு ம் அதி.—இல்வாழ்க்கை.

இல்லென்பது ஆகுபெயர். என்பானெனச்செயப்படுபொருள் வினைமுதல்போலக் கூறப்பட்டது* எனைமூவராவார் ஆசாரியனிடத்தினின்றோதுதலும் விரதங்காத்தலுமாகிய பிரமசரியவொழுக்கத்தானும்,இல்லைவிட்டு வனத்தின்கட்டீயொடுசென்று மனையாள் வழிபடத் தவஞ்செய்யுமொழுக்கத்தானும், முற்றத்துறந்த யோகவொழுக்கத்தானுமென இவர்; இவருள் முன்னையிருவரையும் பிறர் மதமேற்கொண்டு கூறினார். இவர் இவ்வொழுக்கநெறிகளை முடியச்செல்லுமளவும் அச்செலவிற்குப் பசி நோய் குளிர் முதலியவற்றான் இடையூறு வாராமல் உண்டியும் மருந்தும் உறையுளும் முதலிய வுதவி அவ்வவநெறிகளின் வழுவாமற்செலுத்துதலான், நல்லாற்றினின்ற துணை யென்றார்.

(க)

சஉ. துறந்தார்க்குந் துவ்வா தவர்க்கு மிறந்தார்க்கு
மில்வாழ்வா னென்பான் றுணை. உ.

இ-ள். துறந்தார்க்கும் - கனைகணைவராற்றுறக்கப்பட்டார்க்கும்—துவ்வாதவர்க்கும் - நல்கூர்ந்தார்க்கும்—இறந்தார்க்கும் - ஒருவருமின்றித் தன்பால் வந்திறந்தார்க்கும்— இல்வாழ்வான் என்பான் துணை - இல்வாழ்வானென்று சொல்லப்படுவோன் துணை. எ - று.

துறந்தார்க்குப் பாவமொழிய அவர் கனைகணைய் நின்று வேண்டுவன செய்தலானும், துவ்வாதவர்க்கு உணவு முதலிய கொடுத்தலானும், இறந்தார்க்கு நீர்க்கடன் முதலிய செய்து நல்லுலகின்கட் செலுத்தலானும் துணையென்றார். இவையிரண்டு பாட்டானும் இன்னிலை எல்லாவுபகாரத்திற்கு முரித்தாதல் கூறப்பட்டது. (உ)

சங. தென்புலத்தார் தெய்வம் விருந்தொக்க லானென்றாங்
கைம்புலத்தா றோம்ப றலை. ங.

இ - ள். தென்புலத்தார் தெய்வம் விருந்து ஒக்கல் தான் என்ற - பிதிரர் தேவர் விருந்தினர் சுற்றத்தார் தானென்று சொல்லப்பட்ட—ஐம்புலத்து ஆறு ஓம்பல் தலை- ஐந்திடத்துஞ் செய்யும் அறநெறியை வழுவாமற்செய்தல் இல்வாழ்வானுக்குச் சிறப்பு டைய அறமாம். எ - று.

பிதிரராவார் படைப்புக் காலத்து அயனாற்படைக்கப்பட்டதோர் கடவுட்சாதி; அவர்க்கிடம் தென்றிசையாதலின், தென்புலத்தாரென்றார். தெய்வமென்றது சாதி யொருமை. விருந்தென்பது புதுமை; அஃது ஈண்டாகுபெயராய்ப் புதியராய் வந் தார்மேனின்றது; அவர் இருவகையர், பண்டறிவுண்மையிற் குறித்து வந்தாரும், அஃ தின்மையிற் குறியாது வந்தாருமென. ஒக்கல் சுற்றத்தார். எல்லாவறங்களும் தானுள னாய் நின்று செய்யவேண்டுதலின், தன்னையோம்பலும், அறனாயிற்று. என்றவென்பது விகாரமாயிற்று. ஆங்கு அசை. ஐவகையும் அறஞ்செய்தற்கிடனாகலின் ஐம்புலமென் றார். அரசனுக்கு இறைப்பொருள் ஆறிலொன்றாயிற்று, இவ்வைம்புலத்திற்கும் ஐந்து கூறுவேண்டுதலானென்பதறிக. (ங)

சச. பழியஞ்சிப் பாத்தூ ணுடைத்தாயின் வாழ்க்கை
வழியெஞ்ச லெஞ்ஞான்று மில். ச.

---

* எனப்படுவானெனற்பாலது செயப்பாட்டுவினைப் பொருளுணர்த்தும் படிவிகுதி தொக்கு என்பானென நின்றதெனக்கொண்டார் பிரயோகவிவேகநூலாரும் தொல்காப்பியச் சூத்திர விருத்திகாரரும். இவ்வாறு வருவனவற்றை வடநூலார் லக்கு என்பர்.

## ௫ம் அதி.—இல்வாழ்க்கை.

கள்

இ - ள். பழிஅஞ்சிப் பாத்து ஊண் வாழ்க்கை உடைத்தாயின் - பொருள் செய்யுங்கால் பாவத்தையஞ்சி * யீட்டி, அப்பொருளை இயல்புடைய மூவர் முதலாயினர்க்கும் தென்புலத்தார் முதலிய நால்வர்க்கும் பகுத்துத் தானுண்டலை ஒருவனில்வாழ்க்கை உடைத்தாயின்,—வழி எஞ்ஞான்றும் எஞ்சல் இல் - அவன்வழி உலகத்தெஞ் ஞான்றும் நிற்றலல்லது இறத்தலில்லை. எ - று.

பாவத்தான்வந்த பிறன்பொருளைப் பகுத்துண்ணின், அறம்பொருளுடையார்மேலும் பாவந் தன்மேலுமாய் நின்று வழியெஞ்சுமாகலின், பழியஞ்சியென்றார். வாழ்வானதுடைமை வாழ்க்கைமேலேற்றப்பட்டது. (௪)

**௪௫. அன்பு மறனு முடைத்தாயி னில்வாழ்க்கை
பண்பும் பயனு மது. ௫.**

இ - ள். இல்வாழ்க்கை அன்பும் அறனும் உடைத்தாயின்-ஒருவனில்வாழ்க்கை தன்றுணைவிமேற் செய்யத்தகும் அன்பினையும் பிறர்க்குப் பகுத்துண்டலாகிய அறத்தினையுமுடைத்தாயின்,—அது பண்பும் பயனும் - அவ்வுடைமை அதற்குப் பண்பும் பயனுமாம். எ - று.

நிரனிறை. இல்லாட்கும் கணவற்கும் நெஞ்சொன்றுகாவழி இல்லறங் கடைபோகாமையின், அன்புடைமை பண்பாயிற்று, அறனுடைமை பயனாயிற்று. இவை மூன்று பாட்டாலும் இன்னிலையினின்றான் அறஞ்செய்யுமாறு கூறப்பட்டது. (௫)

**௪௬. அறத்தாற்றி னில்வாழ்க்கை யாற்றிற் புறத்தாற்றிற்
போஒய்ப் பெறுவ தெவன். ௬.**

இ - ள். இல்வாழ்க்கை அறத்தாற்றின் ஆற்றின் - ஒருவன் இல்வாழ்க்கையை அறத்தின் வழியே செலுத்துவனாயின்,—புறத்தாற்றில் போய்ப் பெறுவது எவன்-அவன் அதற்குப் புறமாகிய நெறியிற்போய்ப்

பெறும் பயன் யாது? எ - று.

அறத்தாறென்பது பழியஞ்சிப் பகுத்துண்டலும், அன்புடைமையுமென மேற்சொல்லிய ஆறு. புறத்தாறு இல்லைவிட்டு வனத்துச் செல்லுநிலை. அந்நிலையின் இது பயனுடைத்தென்பார், போய்ப் பெறுவதெவனென்றார். (௬)

௪௭. இயல்பினா னில்வாழ்க்கை வாழ்பவ னென்பான்
முயல்வாரு ளெல்லாந் தலை. ௭.

இ - ள். இல்வாழ்க்கை இயல்பினான் வாழ்பவன் என்பான் - இல்வாழ்க்கைக் கணின்று அதற்குரிய இயல்போடு கூடி வாழ்பவனென்று சொல்லப்படுவான்—முயல்வாருள் எல்லாம் தலை - புலன்களை விட முயல்வாரெல்லாருள்ளும் மிக்கவன். எ- று.

முற்றத்துறந்தவர் விட்டமையின், முயல்வாரென்றது மூன்றாநிலையினின்றாரை. அந்நிலைதான் பலவகைப்படுதலின் எல்லாருள்ளுமெனவும், முயலாதுவைத்துப் பயனெய்துதலின் தலையெனவுங்கூறினார். (௭)

௪௮. ஆற்றி னொழுக்கி யறனிழுக்கா வில்வாழ்க்கை
நோற்பாரி னோன்மை யுடைத்து. ௮.

* பழியஞ் சியென்பதனைப் பழியையஞ்சி, பழியினா னஞ்சி எனவிரிக்கலாமென்பது "அச்சக் கிளவிக் கைந்து மிரண்டு—மெச்சமிலவே பொருள்வயினான." என்னுந் தொல்காப்பியச் சூத்திரத்தானறிக.

௩அ ௬ம் அதி.—வாழ்க்கைத்துணைநலம்.

இ - ள் ஆற்றின் ஒழுக்கி அறன் இழுக்கா இல்வாழ்க்கை -

தவஞ்செய்வாரை யுந்
தத்தநெறியின்கணொழுகப்பண்ணித்தானுந்தன்னறத்திற்றவறுதஇல்வாழ்க்கை
க-- நோற்பாரின் நோன்மை உடைத்து - அத்தவஞ்செய்வார் நிலையினும்
பொறையுடை த்து. எ - று.

பசி முதலிய விடையூறு நீக்கலின், ஆற்றினொழுக்கியென்றார். நோற்பாரென்பது ஆகுபெயர். நோற்பார் நிலைக்கு அவர்தம்மையுற்ற நோயல்லது இல்வாழ்வார் நிலை போற் பிறரையுற்ற நோயும் தென்றார்.

பொறுத்தலின்மையின், நோற்பாரினோன்மையுடைத்

(அ)

**சக. அறனெனப் பட்டதே யில்வாழ்க்கை யஃதும்**
**பிறன்பழிப்ப தில்லாயி னன்று. கூ.**

இ - ள். அறன் எனப்பட்டது இல்வாழ்க்கையே - இருவகையறத்ினும் நூல்க ளான் அறனென்று சிறப்பித்துச்சொல்லப்பட்டது இல்வாழ்க்கையே;—அஃதும் பிறன் பழிப்பது இல்லாயின் நன்று - ஏனைத் துறவறமோவெனின், அதுவும் பிறனாற் பழிக்கப்படுவதில்லையாயின், அவ்வில்வாழ்க்கையோடு ஒருதன்மைத்தாகநன்று.எ - று.

ஏகாரம் பிரிநிலைக்கண்வந்தது;இதனாற் பிரிக்கப்பட்டது துறவறமாகலின்,அஃது என்னுஞ்சுட்டுப்பெயர் அதன்மேனின்றது. பிறன்பழிப்பதென்றது கூடாவொழுக் கத்தை. துறவறம், மனத்தையும்பொறிகளையும் ஒறுத்தடக்கவல்ல அருமையுடைத்தா யவழியே, அவற்றையொறுக்கவேண்டாது ஐம்புலவின்பங்களாரத்துய்க்கும் எண் மையுடைய இல்வாழ்க்கையோடு அறமென ஒருங்கெண்ணப்படுவதென்றவாறாயிற்று. இவை நான்குபாட்டானும் இன்னிலையே பயனுடைத்தென இதன்சிறப்புக் கூறப் பட்டது.

(க)

**ரு0. வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையுந்**
**தெய்வத்துள் வைக்கப் படும். க0.**

இ - ள். வாழ்வாங்கு வையத்துள் வாழ்பவன் - இல்லறத்தோடுகூடி வாழுமியல் பினால் வையத்தின்கண் வாழ்பவன்,— வான் உறையும் தெய்வத்துள் வைக்கப்படும்வையத்தானேயெனினும் வானின்கணுறையுந் தேவருள் ஒருவனாக வைத்து நன்கு மதிக்கப்படும். எ - று.

பின்றேவனாய் அவ்வறப்பயனுகர்தல் ஒருதலையாகலின்; தெய்வத்துள் வைக்கப் படுமென்றார், இதனான் இன்னிலையது மறுமைப்பயன் கூறப்பட்டாது. இம்மைப்பயன் புகழ்; அதனையிறுதிக்கட் கூறுப. (௫0)

## ௬ ம் அதி.—வாழ்க்கைத் துணைநலம்.

அஃதாவது அவ்வில்வாழ்க்கைக்குத் துணையாகிய இல்லாளது நன்மை. அதிகாரமுறைமையும் இதனானே விளங்கும்.

௫௧. மனைத்தக்க மாண்புடைய ளாகித்தற் கொண்டான்
வளத்தக்காள் வாழ்க்கைத் துணை. ௧.

இ - ள். மனைத் தக்க மாண்பு உடையளாகித் தற்கொண்டான் வளத்தக்காள் - மனையறத்திற்குத் தக்க நற்குண நற்செய்கைகளையுடையளாய்த் தன்னைக் கொண்டவனது வருவாய்க்குத் தக்க வாழ்க்கையையுடையாள்—வாழ்க்கைத்துணை - அதற்குத் துணை எ - று.



நற்குணங்களாவன துறந்தார்ப் பேணலும், விருந்தயர்தலும், வறியார்மாட்டருளுடைமையும் முதலாயின. நற்செய்கைகளாவன வாழ்க்கைக்குவேண்டும் பொருள்கள் அறிந்து கடைப்பிடித்தலும், அட்டிற்றொழில்வன்மையும், ஒப்புரவுசெய்தலும் முதலாயின.

வருவாய்க்குத்தக்க வாழ்க்கையாவது முதலையறிந்து அதற்கியைய அழித்தல். இதனான் இவ்விரண்டுநன்மையுஞ் சிறந்தனவென்பது கூறப்பட்டது. (க)

**ருஉ. மனைமாட்சி யில்லாள்க ணில்லாயின் வாழ்க்கை**
**யெனைமாட்சித் தாயினு மில். உ.**

இ - ள். மனைமாட்சி இல்லாள்கண் இல்லாயின் - மனையறத்திற்குத் தக்க நற்குண நற்செய்கைகள் ஒருவனில்லாளிடத்தில்லையாயின்,—வாழ்க்கை எனைமாட்சித்தாயினும் இல் - அவ்வில்வாழ்க்கை செல்வத்தான் எத்துணை மாட்சிமையுடைத்தாயினும் அஃதுடைத்தன்று. எ - று.

இல்லையென்றார், பயன்படாமையின்.

(உ)

**ருங. இல்லதெ னில்லவள் மாண்பானா லுள்ளதெ**
**னில்லவள் மாணாக் கடை. ங.**

இ - ள். இல்லவள் மாண்பு ஆனால் இல்லது என் - ஒருவனுக்கு இல்லாள் நற் குண நற்செய்கையளாயினக்கால் இல்லாததியாது;—இல்லவள் மாணாக்கடை உள்ளது என் - அவள் அன்னளல்லாக்கால் உள்ளதியாது; எ - று.

மாண்பெனக் குணத்தின்பெயர் குணி மேனின்றது. இவையிரண்டுபாட்டானும் இல்வாழ்க்கைக்கு வேண்டுவது இல்லாளது மாட்சியே பிறவல்லவென்பது கூறப் பட்டது.

(ங.)

**ருச. பெண்ணிற் பெருந்தக்க யாவுள கற்பென்னுந்**
**திண்மையுண் டாகப் பெறின். ச.**

இ - ள். பெண்ணின் பெருந்தக்க யா உள - ஒருவனெய்தும் பொருள்களுள் இல் லாளின்மேம்பட்ட பொருள்களியாவையுள,—கற்பு என்னும் திண்மை உண்டாகப் பெறின் - அவண்மாட்டுக கற்பென்னுங் கலங்காநிலைமை யுண்டாகப்பெறின்; எ-று.

கற்புடையாள்போல அறமுதலிய மூன்றற்கும் எதுவாவன

பிறவின்மையின் யாவுளவென்றார். இதனாற் கற்புநலத்தது சிறப்புக் கூறப்பட்டது. (௪)

௫௫. தெய்வந் தொழாஅள் கொழுநற் றொழுதெழுவாள்
பெய்யெனப் பெய்யு மழை. ௫.

இ - ள். தெய்வம் தொழாள் கொழுநற்றொழுது எழுவாள் பெய் என-பிறதெய் வந்தொழாது தன்றெய்வமாகிய கொழுநனைத் தொழாநின்று துயிலெழுவாள் * பெய் யென்றுசொல்ல,—மழை பெய்யும் - மழை பெய்யுட. எ - று.

---

* கொழுநற் றொழுதெழுவாளென்பது எழுந்து கொழுநற்றொழுவாளென்பது முன் பின்னாகப் பொருள்படுமென்றார் பிரயோகவிவேகநூலார். அவர் கூறுமாறு,—"இனிக் 'கொழுநற் றொழுதெழுவாள்' 'தொழுதெழுவார் வினைவளம் நீறெழ' என்னுந் திருவள்ளுவரினும் திருக்கோவையாரினும் பரிமேலழகரும் பேராசிரியரும் தொழாஅன்றெழுவாள் தொழாநின்றெழுவா ரெனத் துணிவினையாயுரைப்பர்; எழுதல் துயிலொழிதலாதலின், எழுந்து தொழுவாள் எழுந்து தொழுவார் என முன் பின்னாகப் பொருள்படுதலன்றி, [illegible] எவ்வாறு போலத் தொழாநின்று துயிலொழிதல் கூடாதென்க. "வைகறையாமந்துயிலெழுந்து தான்

உ௦ ௬ ம் அதி.—வாழ்க்கைத்துணைநலம்.

தெய்வந்தொழுதற்கு மனந்தெளிவது துயிலெழுங்காலத்தாகலின், தொழுதெழு வாளென்றார். தொழாநின்றென்பது தொழுதெனத்திரிந்துநின்றது. தெய்வந்தானே வல் செய்யுமென்பதாம். இதனாற் கற்புடையவளாற்றல் கூறப்பட்டது. (௫)

௫௬. தற்காத்துத் தற்கொண்டாற் பேணித் தகைசான்ற
சொற்காத்துச் சோர்விலாள் பெண். ௬.

இ - ள். தற்காத்துத் தற்கொண்டாற் பேணி - கற்பினின்றும் வழுவாமற்றன் னைக் காத்துத் தன்னைக்கொண்டவனையும் உண்டி

முதலியவற்றாற் பேணி—தகை சான்ற சொற் காத்து - இருவர் மாட்டும் நன்மையமைந்த புகழ் நீங்காமற் காத்து— சோர்வு இலாள் பெண் - மேற்சொல்லிய நற்குண நற்செய்கைகளினுங் கடைப்பிடியு டையாளே பெண்ணாவாள். எ - று.

தன் மாட்டுப் புகழாவது வாழுமூர் கற்பாற் றன்னைப் புகழ்வது. சோர்வு மறவி. இதனால் தற்புகழ்தற்சிறப்புக் கூறப்பட்ட து. (சு)

ருஎ. சிறைகாக்குங் காப்பெவன் செய்யு மகளிர்
நிறைகாக்குங் காப்பே தலை. எ.

இ - ள். மகளிர் சிறை காக்கும் காப்பு எவன் செய்யும் - மகளிரைத் தலைவர் சிறையாற்காக்குங்காவல் என்னபயனைச் செய்யும்?—நிறை காக்கும் காப்பே தலைஅவர் தமது நிறையாற் காக்குங் காவலே தலையாய காவல். ஏ - று.

சிறை மதிலும், வாயில்காவலும் முதலாயின. நிறை நெஞ்சைக் கற்புநெறியினி றுத்தல். காவலிரண்டிலும் நிறைக்காவலில்வழி ஏனை ச்சிறைக்காவலாற் பயனில்லையெ ன்பார், நிறைகாக்குங் காப்பே தலையென்றார். ஏகாரம் பிரிநிலைக்கண்வந்தது. இதனால் தற்காத்தற்சிறப்புக் கூறப்பட்டது.
(எ)

ருஅ. பெற்றாற் பெறிற்பெறுவர் பெண்டிர் பெருஞ்சிறப்புப்
புத்தேளிர் வாழு முலகு. அ.

இ - ள். பெண்டிர் பெற்றாற் பெறின் - பெண்டிர் தம்மையெய்திய கணவனை வழிபடுதல் பெறுவராயின்,—புத்தேளிர் வாழும் உலகு பெருஞ்சிறப்புப்பெறுவர் - புத்தேளிர் வாழுமுலகின்கண் அவராற் பெருஞ்சிறப்பினைப் பெறுவர். எ - று.

வழிபடுதலென்பது சொல்லெச்சம். இதனால் தற்கொண்டாற் பேணிய மகளிர் புத்தேளிராற் பேணப்படுவரென்பது கூறப்பட்டது.
(அ)

௫௯. புகழ்புரிந் தில்லிலோர்க் கில்லை யிகழ்வார்முன்
ளேறுபோற் பீடு நடை. ௯.

இ - ள். புகழ் புரிந்த இல் இலோர்க்கு - புகழை விரும்பிய இல்லாளையில்லா தார்க்கு—இகழ்வார் முன் ஏறுபோல் பீடு நடை இல்லை — தம்மை யிகழ்ந்துரைக்கும் பகைவர்முன் சிங்கவேறுபோல நடக்கும் பெருமிதநடை இல்லை. எ - று.

---

செய்பு—நல்லறமு மொண்பொருளுஞ் செறித்த வாய்மதிற்—றந்தையுந் தாயுந் தொழுதெ ழுக" † என்பது துயிலெழுந்து பின்றந்தையுந்தாயுந் தொழுது பின் காரியத்திற் செல்க வெனப் பொருள் பட்டுவருதலானும், அவருரை அசம்பாவிதமென்க."
காண்காவது திக்குப்படலம், ௯௦ம் பாட்டுரை.

† ஆசாரக்கோவை ௯௦ம் பாட்டு.

# ௭ ம் அதி.—புதல்வரைப்பெறுதல்.

௨௧
புரிந்தவென்னும்
பெயரெச்சத்தகரம்.விகாரத்தாற்றொக்கது.பெருமிதமுடையா ளுக்குச் சிங்கவேறு நடையானுவமமாகலின் ; ஏறுபோலென்றார்.
இதனால் தகை
சான்ற சொற்காவாவழிப்படுங் குற்றங் கூறப்பட்டது.
(௯)

௬௦. மங்கல மென்ப மனைமாட்சி மற்றத
னன்கல நன்மக்கட் பேறு. ௬௦.

இ - ள். மங்கலம் என்ப மனைமாட்சி - ஒருவற்கு நன்மையென்றுசொல்லுவர் அறிந்தோர் மனையாளது நற்குண நற்செய்கைகளை;—அதன் நன்கலம் (என்ப) நன் மக்கட்பேறு - அவைதமக்கு நல்லவணிகலமென்று சொல்லுவர் நல்ல புதல்வரைப் பெறுதலை. எ - று.

அறிந்தோரென்பது எஞ்சிநின்றது. மற்று அசைநிலை. இதனால் வாழ்க்கைத் துணைக்கு ஆவதோரணிநலங்கூறி, வருகின்ற அதிகாரத்திற்குத் தோற்றுவாய் செய்யப்பட்டது .
(௬0)

## எ ம் அதி.—புதல்வரைப்பெறுதல்.

அஃதாவது இருபிறப்பாளர் மூவரானும் இயல்பாகவிறுக்கப்படூஉங் கடன் மூன்றனுள். முனிவர்கடன் கேள்வியானும், தேவர்கடன் வேள்வியானும், தென்புலத் தார்கடன் புதல்வரைப் பெறுதலானுமல்லது இறுக்கப்படாமையின், அக்கடனிறுத் தற்பொருட்டு நன்மக்களைப்பெறுதல். அதிகாரமுறைமை மேலே பெறப்பட்டது.

௬௧ பெறுமவற்றுள் யாமறிவ தில்லை யறிவறிந்த
மக்கட்பே றல்ல பிற. ௧.

இ - ள். பெறுமவற்றுள் - ஒருவன் பெறும் பேறுகளுள்,—அறிவு அறிந்த மக்கட் பேறு அல்ல பிற - அறியவேண்டுவன அறிதற்குரிய மக்களைப் பெறுதலல்லது பிற பேறுகளை—யாம் அறிவது இல்லை - யாம் மதிப்பதில்லை. எ - று.

அறிவதென்பது அறிதலைச்செய்வதென அத்தொழின்மேனின்றது. காரணமா கியவுரிமை காரியமாகிய அறிதலைப் பயந்தேவிடுமாதலான், அத்துணிவுபற்றி அறிந்த வென இறந்தகாலத்தாற் கூறினார். அறிவறிந்தவென்றதனான், மக்களென்னும்பெயர் பெண்ணொழித்துநின்றது.இதனாற் புதல்வர்ப்பேற்றினது சிறப்புக் கூறப்பட்டது. ()

கஉ. எழுபிறப்புந் தீயவை தீண்டா பழிபிறங்காப்
பண்புடை மக்கட் பெறின். உ.

இ - ள். எழுபிறப்புந்தீயவை தீண்டா - வினைவயத்தாற் பிறக்கும் பிறப்பேழின் கண்ணும் ஒருவனைத்துன்பங்கள் சென்றடையா,— பழி பிறங்காப் பண்பு உடை மக்கட்பெறின் - பிறராற் பழிக்கப்படாத நற்குணங்களையுடைய புதல்வரைப் பெறுவானாயின். எ - று.

அவன் தீவினை வளராது தேய்தற்குக் காரணமாகிய நல்வினைகளைச் செய்யும் புதல்வரைப் பெறுவனாயினென்றவாறாயிற்று. பிறப்பேழாவன "ஊர்வபதினொன்று ———————————

———————————

* இருபிறப்பாளர் மூவரென்றது உபநயனத்திற்கு முன்னொருபிறப்பும் பின்னொருபிறப்பு மாகிய இருபிறப்புடையாராயுள்ள அந்தணர், அரசர், வணிகரென்னும் முதன் மூன்று வருணத் தாரை. இருபிறப்பாளரெனினும், துவிசரெனினுமொக்கும்.

உக எம் அதி.—புதல்வரைப்பெறுதல்.

மொன்பது மானுட—நீர்பறவை நாற்காலோர் பப்பத்துச் - சீரிய—பந்தமாந் தேவர் பதினொ லயன்படைத்த—வந்தமில்சீர்த் தாவரநா லைந்து." தந்தைதாயர் தீவினைதேய் தற்பொருட்டு அவரைநோக்கிப்புதல்வர் செய்யுந்தானதருமங்கட்கு அவர் நற்குணங் காரணமாகலின்,பண்பென்னுங் காரணப்பெயர் காரியத்தின்மேனின்றது. (உ)

கங. தம்பொரு ளென்பதம் மக்க ளவர்பொரு
டந்தம் வினையான் வரும். ங.

இ - ள். தம் மக்கள் தம்பொருள் என்ப - தம்புதல்வரைத் தம்பொருளென்று சொல்லுவர் அறிந்தோர்,—அவர் பொருள் தந்தம் வினையான் வரும் - அப்புதல்வர் செய்தபொருள் தம்மைநோக்கி அவர்செய்யும் லான். எ - று.

நல்வினையானே தம்பால் வரும் ஆத
லர்தம் வினையென்புழித் தொக்கு நின்ற ஆறாம்வேற்றுமை
முருகனது குறிஞ்சி
நிலம் என்புழிப்போல உரிமைப்பொருட்கண்வந்தது. பொருள்செய்த
மக்களைப்
பொருளென உபசரித்தார். இவையிரண்டுபாட்டானும்
நன்மக்கட்பெற்றார் பெறும் மறுமைப் பயன் கூறப்பட்டது.
(௩)

௬௪. அமிழ்தினு மாற்ற வினிதேதம் மக்கள்
சிறுகை யளாவிய கூழ். ௪.

இ - ள். அமிழ்தினும் ஆற்ற இனிதே - சுவையான்
அமிழ்தத்தினும்மிகவினிமை யுடைத்து— தம்மக்கள் சிறுகை அளாவிய
கூழ் - தம்மக்களது சிறுகையானளாவப் பட்ட சோறு. எ - று.

சிறுகையானளாவலாவது "இட்டுந் தொட்டுங் கௌவியுந்
துழந்து—நெய்யுடை யடிசின் மெய்பட விதிர்த்தல்." *
(௪)

௬௫. மக்கண்மெய் தீண்ட லுடற்கின்ப மற்றவர்
சொற்கேட்ட லின்பஞ் செவிக்கு. ௫.

இ - ள். உடற்கு இன்பம் மக்கள் மெய் தீண்டல் -
ஒருவன்மெய்க்கின்பமாவது மக்களது மெய்யைத் தீண்டுதல்; —செவிக்கு
இன்பம் அவர் சொற்கேட்டல் - செவிக் கின்பமாவது அவரதுசொல்லைக்
கேட்டல். எ - று.

மற்று வினைமாற்று. மக்களது மழலைச்சொல்லேயன்றி
அவர்கற்றறிவுடைய ராய்ச் சொல்லுஞ்சொல்லும் இன்பமாகலின்,
பொதுப்படச் சொல்லென்றார். தீண் டல் கேட்டலென்னுங்
காரணப்பெயர்கள் ஈண்டுக் காரியங்களின்மேனின்றன. (௫)

௬௬. குழலினி தியாழினி தென்பதம் மக்கண்
மழலைச்சொற் கேளா தவர். ௬.

இ - ள். குழல் இனிது யாழ் இனிது என்ப - குழலிசையினிது யாழிசையினி தென்றுசொல்லுவர்—தம்மக்கள் மழலைச்சொற் கேளாதவர் - தம்புதல்வருடையகுதலைச்சொற்களைக்கேளாதவர். எ- று.

---

* புறநானூறு, சஅஅ—"படைப்புப் பலபடைத்துப் பலரோடுண்ணு—முடைப் பெருஞ் செல்வராயினு மிடைப்படக்—குறுகுறு நடந்து சிறுகை நீட்டி—யிட்டுந் தொட்டுங் கௌவியுந் துழந்து—நெய்யுடை யடி சின் மெய்படவிதிர்த்து—மயக்குறு மக்களை யில்லோர்—பயக்குறை யில்லைதாம் வாழு நாளே."

## எம் அதி.—புதல்வரைப்பெறுதல்.

உங்

குழல் யாழ் என்பன ஆகுபெயர். கேட்டவர் அவற்றினும் மழலைச்சொல்இனிதெ ன்பரென்பது குறிப்பெச்சம். இனிமை மிகுதிபற்றி மழலைச்சொல்லைச் சிறப்புவகை யானுங் கூறியவாறு. இவை மூன்றுபாட்டானும் இம்மைப்பயன் கூறப்பட்டது. (கூ)

**கூஎ. தந்தை மகற்காற்று நன்றி யவையத்து**
**முந்தி யிருப்பச் செயல். எ.**

இ - ள். தந்தை மகற்கு ஆற்றும் நன்றி - தந்தை புதல்வனுக்குச்செய்யும் நன்மையாவது—அவையத்து முந்திஇருப்பச்செயல்-கற்றாரவையின் கண் இருக்குமாறு கல்வி யுடையனாக்குதல். எ - று.

அவரினும் மிக்

பொருளுடையனாக்குதல் முதலாயின துன்பம் பயத்தலின் நன்மையாகாவென் பது கருத்து. இதனால் தந்தைகடன் கூறப்பட்டது.

**கூஅ. தம்மிற்றம் மக்க ளறிவுடைமை மாநிலத்து**
**மன்னுயிர்க் கெல்லா மினிது. அ.**

இ -ள். தம்மக்கள் அறிவுடைமை - தம்மக்களதறிவுடைமை—மாநிலத்து மன் உயிர்க்கெல்லாம் தம்மின் இனிது - பெரியநிலத்து மன்னுகின்ற உயிர்கட்கெல்லாந் தம்மினு மினிதாம். எ - று.

ஈண்டறிவென்றது இயல்பாகிய அறிவோடுகூடிய கல்வியறிவினை. மன்னுயிரென்றது ஈண்டறிவுடையாரைனின்றது, அறிவுடைமை கண்டின்புறுதற்கு உரியார் அவராகலின். இதனால் தந்தையினும் அவையத்தாருவப்பரென்பது கூறப்பட்டது. ()

**கூகூ. ஈன்ற பொழுதிற் பெரிதுவக்குந் தன்மகனைச்**
**சான்றோ னெனக்கேட்ட தாய். கூ.**

இ - ள். ஈன்ற பொழுதின் பெரிது உவக்கும் - தான் பெற்றபொழுதை மகிழ்ச்சியினும் மிகமகிழும்—தன்மகனைச் சான்றோன் எனக் கேட்டதாய்-தன் மகனைக் கல்வி கேள்விகளானிறைந்தானென்று அறிவுடையோர் சொல்லக் கேட்ட தாய். எ - று.

கவானின்கட்கண்ட பொதுவுவகையினுஞ் சால்புடையனெனக் கேட்ட சிறப் புவகை பெரிதாகலின் பெரிதுவக்குமெனவும், பெண்ணியல்பாற் றானேகவறியாமை யிற் கேட்ட தாயெனவுங் கூறினர். அறிவுடையாரென்பது வருவிக்கப்பட்டது, சான் றோனென்றற்குரியர் அவராகலின். தாயுவகைக்களவின்மையின், அஃதிதனாற் பிரித் துக் கூறப்பட்டது.



**எ0. மகன்றந்தைக் காற்று முதவி யிவன்றந்தை**
**யென்னோற்றான் கொல்லெனுஞ் சொல். க0.**

இ - ள். தந்தைக்கு மகன் ஆற்றும் உதவி - கல்வியுடையனாக்கிய தந்தைக்கு மகன் செய்யுங் கைம்மாறாவது—இவன் தந்தை என் நோற்றான்கொல் எனும் சொல்- தன்னறிவு மொழுக்கமுங்கண்டார்

இவன்றந்தை இவனைப் பெறுதற்கு என்ன தவஞ் செய்தான் கொல்லோ வென்று சொல்லுஞ் சொல்லை நிகழ்த்துதல். எ - று.

சொல்லென்பது நிகழ்த்துதலாகிய தன்காரணந்தோன்ற நின்றது. நிகழ்த்துதல் அங்ஙனஞ்சொல்லவொழுகல். இதனாற் புதல்வன் கடன் கூறப்பட்டது. (கம)

---

## அம் அதி.—அன்புடைமை.

அஃதாவது அவ்வாழ்க்கைத் துணையும் புதல்வரும் முதலிய தொடர்புடையார் கட் காதலுடையனாதல். அதிகார முறைமையும் இதனானே விளங்கும். இல்லறம் இனிது நடத்தலும் பிறவுயிர்கண்மேல் அருள்பிறத்தலும் அன்பின் பயனாகலின், இது வேண்டப்பட்டது. வாழ்க்கைத்துணைமேல் அன்பில்வழி இல்லறமினிது நடவாமை "அறவோர்க் களித்தலு மந்தண ரோம்பலுந்—துறவோர்க் கெதிர்தலுந் தொல்லோர் சிறப்பின்—விருந்தெதிர் கோடலு மிழந்த வென்னை" * என்பதனானும், அதனாலருள் பிறத்தல் "அருளென்னு மன்பீன் குழவி" † என்பதனானுமறிக.

எக. அன்பிற்கு முண்டோ வடைக்குந்தா ழார்வலர்
புன்கணீர் பூச றரும். க.

இ - ள். அன்பிற்கும் அடைக்கும் தாழ் உண்டோ - அன்பிற்கும் பிறரறியாமலடைத்துவைக்குந் தாழுளதோ?—ஆர்வலர் புன்கணீர் பூசல் தரும்-தம்மாலன்புசெய் யப்பட்டாரது துன்பங்கண்டுழி அன்புடையார்கண் பொழிகின்ற புல்லிய கண்ணீரே உண்ணின்ற அன்பினை எல்லாருமறியத் தூற்றும் ஆதலான். எ - று.

உம்மை சிறப்பின்கண் வந்தது. ஆர்வலரது புன்மை கண்ணீர்மே லேற்றப்பட் டது. காட்சியளவைக்கெய்தாதாயினும் அனுமா னவளவையான் வெளிப்படுமென்பதாம். இதனால்

அன்பினதுண்மை கூறப்பட்டது. (க)

எஉ. அன்பிலா ரெல்லாந் தமக்குரிய ரன்புடையா
ரென்பு முரியர் பிறர்க்கு. உ.

இ - ள். அன்பிலார் எல்லாம் தமக்கு உரியர் - அன்பிலாதார் பிறர்க்குப் பயன் படாமையின் எல்லாப்பொருளானுந்தமக்கேயுரியர்;—அன்புடையார் என்பும் பிறர்க்கு உரியர் - அன்புடையார் அவற்றனேயன்றித் தம்முடம்பானும் பிறர்க்குரியர். எ - று.

ஆனுருபுகளும் பிரிநிலையேகாரமும் விகாரத்தாற் றொக்கன. என்பு ஆகுபெயர். என்புமுரியராதல் "தன்னகம் புக்க குறு நடைப் புறவின் றபுதியஞ்சிச் சீரை ‡ புக் கோன்" § முதலாயினுர்கட்காண்க. (உ)

எங. அன்போ டியைந்த வழக்கென்ப வாருயிர்க்
கென்போ டியைந்த தொடர்பு. ங.

இ - ள். ஆர் உயிர்க்கு என்போடு இயைந்த தொடர்பு - பெறுதற்கரிய மக்களுயிர்க்கு உடம்போடுண்டாகிய தொடர்ச்சியினை—அன்போடு இயைந்த வழக்கு என்ப - அன்போடு பொருந்துதற்குவந்த நெறியின்பயனென்று சொல்லுவர் அறிந்தோர். எ - று.

பிறப்பின தருமை பிறந்தவுயிர்மேலேற்றப்பட்டது. இயைந்தவென்பது உபசார வழக்கு. ○ வழக்கு ஆகுபெயர். உடம்போடியைந்தல்லது அன்புசெய்யலாகாமையின், அது செய்தற்பொருட்டு இத்தொடர்ச்சி யுளதாயிற்றென்பதாம். ஆகவே, இத்தொடர்ச்சிக்குப் பயன் அன்புடைமையென்றாயிற்று. (ங)

---

* சிலப்பதிகாரம், கொலைக்களக்காதை. † திருக்குறள், எஙள.

‡ சீரை - துலாக்கோற்றட்டு. § சிபிச்சக்கரவர்த்தி. புறநானூறு - சுஙு.

சையோக சம்பந்த வாசகத்தைச் சமவாய சம்பந்தத்திற்குரைத்தமையால் உபசாரமாயிற்று.

## அம் அதி.—அன்புடைமை.

உரு

எச. அன்பீனு மார்வ முடைமை யதுவீனு
நண்பென்னு நாடாச் சிறப்பு. ச.

இ - ள். அன்பு ஆர்வமுடைமை ஈனும் - ஒருவனுக்குத் தொடர்புடையார்மாட்டுச் செய்தவன்பு அத்தன்மையாற் பிறர்மாட்டும் விருப்பமுடைமையைத்தரும்,—அது நண்பு என்னும் நாடாச்சிறப்பு ஈனும்-அவ்விருப்பமுடைமை தான் இவற்குப் பகையும் நொதுமலுமில்லையாய் யாவரும் நண்பென்றுசொல்லப்படும் அளவிறந்த சிறப்பினைத் தரும். எ - று.

உடைமை உடையனாந்தன்மை. யாவருநண்பாதல் கேதுவாகலின், அதனை நாடாச்சிறப்பென்றார்.

எல்லாப்பொருளுமெய்துதற்

(ரு)

எரு. அன்புற் றமர்ந்த வழக்கென்ப வையகத்
தின்புற்றா ரெய்துஞ் சிறப்பு. ரு.

இ - ள். அன்பு உற்று அமர்ந்த வழக்கு என்ப - அன்புடையராய் இல்லறத்தோடு பொருந்திய நெறியின் பயனென்று சொல்லுவர் அறிந்தோர்—வையகத்து இன்பு உற்றார் எய்தும் சிறப்பு - இவ்வுலகத்து இல்வாழ்க்கைக்கணின்று இன்பநுகர்ந்து அதன்மேல் துறக்கத்துச்சென்றெய்தும்பேரின்பத்தினை. எ - று.

வழக்கு ஆகுபெயர். இல்வாழ்க்கைக்கணின்று மனைவியோடும்

மக்களோடும் ஒக்கலோடுங்கூடியின்புற்றார் தாஞ்செய்த வேள்வித்தொழிலாற்றேவராய் ஆண்டுமின்புறுவராகலின்,இன்புற் றாரெய்து ஞ்சிறப்பென்றார். தவத்தாற்றுன்புற்றெய்துஞ் துறக்கவின்பத்தினை யீண்டுமின்புற்றெய்துதல் அன்பானன்றி யில்லையென்பதாம். (௫)

எசு. அறத்திற்கே யன்புசார் பென்ப வறியார்
மறத்திற்கு மஃதே துணை. சு.

இ - ள். அன்பு சார்பு அறத்திற்கே என்ப அறியார் - அன்புதுணையாவது அறத்திற்கேயென்று சொல்லுவர்சிலரறியார்;—மறத்திற்கும் அஃதே துணை - வினைமறத்திற்கும் அவ்வன்பே துணையாவது. எ-று.

ஒருவன்செய்தபகைமைபற்றி உள்ளத்து மறநிகழ்ந்துழி அவனை நட்பாகக்கருதி அவன்மேலன்புசெய்ய அது நீங்குமாகலின்,மறத்தை நீக்குதற்குந் துணையாமென்பார், மறத்திற்குமஃதே துணையென்றார், "துன்பத்திற்கியாரே துணையாவார்*." என்புழிப் போல†.இவையைந்துபாட்டானும் அன்பினது சிறப்புக்கூறப்பட்டது. (௬)

எஎ. என்பி லதனை வெயில்போலக் காயுமே
யன்பி லதனை யறம். எ.

இ - ள். என்புஇலதனை வெயில்போலக் காயும் - என்பில்லாதவுடம்பை வெயில் காய்ந்தாற்போலக் காயும்—அன்பு இலதனை அறம் - அன்பில்லாதவுயிரை அறக்கடவுள். எ - று.

என்பிலதென்றதனான் உடம்பென்பதூஉம், அன்பிலதென்றதனான் உயிரென்பதூஉம் பெற்றாம். வெறுப்பின்றி எங்குமொருதன்மைத்தாகிய வெயிலின்முன்என்பில்

* திருக்குறள், கஉகக.
† "ஆதி சத்தத்தால் பூமிற்குச் சென்றான், துன்பத்திற் கியாரே துணையாவார், மறத்திற்கு மஃதே துணை, பிணிக்குமருந்து என்பவற்றின்கட் பரித்தல் நீக்குதலென வடுவே பெய்து பொருளுரைத்துத் தமர்த்தமென்பதுக்கொள்க" என்றார் பிரயோக விவேகநூலார், காரக படலத்து "உடனிகழ்வின்று" என்னும் பதினொருஞ்செய்யுளுரையிற்காண்க.

லது தன்னியல்பாற்சென்று கெடுமாறுபோல, அத்தன்மைத்தாகிய அறத்தின்முன்
அன்பில்லது தன்னியல்பாற்கெடுமென்பதாம். அதனைக்காயுமென வெயிலறங்களின்
மேலேற்றினர், அவற்றிற்கும் அவ்வியல்புண்மையின். இவ்வாறு "அல்லவை செய்
தாற் கறங்கூற்றம்"* எனப்பிறருங் கூறினர்.
(எ)

எஅ. அன்பகத் தில்லா வுயிர்வாழ்க்கை வன்பாற்கண்
வற்றன் மரந்தளிர்த் தற்று. அ.

இ - ள். அகத்து அன்பு இல்லா உயிர் வாழ்க்கை - மனத்தின்கணன்பில்லாத உயிர் இல்லறத் தோடு கூடி வாழ்தல் —வன்பாற்கண் வற்றல் மரம் தளிர்த்தற்று-வன்பாலின்கண் வற்றலாகிய மரந் தளிர்த்தாற்போலும். எ - று.

கூடாதென்பதாம். வன்பால் வன்னிலம். வற்றலென்பது பால்விளங்காவஃறி ணைப்படர்க்கைப்பெயர்.
(அ)

எகூ. புறத்துறுப் பெல்லா மெவன்செய்யும் யாக்கை
யகத்துறுப் பன்பி லவர்க்கு. கூ.

இ - ள். யாக்கையகத்து உறுப்பு அன்பு இலவர்க்கு-யாக்கை யகத்தின் கணின்று
இல்லறத்திற்குறுப்பாகிய அன்புடையரல்லாதார்க்கு—புறத்து உறுப்பெல்லாம் எவன் செய்யும் - ஏனைப்புறத்தின் கணின்று உறுப்பாவனவெல்லாம் அவ்வறஞ்செய்தற்கண் என்னவுதவியைச் செய்யும்! எ - று.

புறத்துறுப்பாவன இடனும், பொருளும்,

எவல்செய்வாருமுதலாயின. துணை யொடுகூடாதவழி அவற்றாற்பயனின்மையின், எவன்செய்புமென்றார். உறுப்புப்போற லின், உறுப்பெனப்பட்டன. யாக்கையிற் கண்முதலிய உறுப்புக்களெல்லாம் என்ன பயனைச் செய்யும், மனத்தின்கணுறுப்பாகிய அன்பிலாதார்க்கென்றுரைப்பாருமுளர். அதற்கு இல்லறத்தோடு யாதுமியைபில்லாமையறிக. (௯)

௮௦. அன்பின் வழிய துயிர்நிலை யஃதிலார்க்
கென்புதோல் போர்த்த வுடம்பு. ௧௦.

இ-ள். அன்பின் வழியது உயிர்நிலை - அன்புமுதலாக அதன்வழிநின்ற உடம்பே உயிர்நின்றவுடம்பாவது;—அஃது இலார்க்கு உடம்பு என்பு தோல்போர்த்த - அவ்வன்பில்லாதார்க்கு உளவான உடம்புகள் என்பினைத் தோலாற்போர்த்தனவாம், உயிர்நின்றனவாகா. எ-று.

இல்லறம் பயவாமையின், அன்னவாயின. இவைநான்குபாட்டானும் அன்பில் வழிப்படுங் குற்றங்கூறப்பட்டது. (௮௦)

---

## ௯ ம் அதி.—விருந்தோம்பல்.

அஃதாவது இருவகை விருந்தினரையும் † புறந்தருதல். தென்புலத்தார் முதலியவைம்புலத்துள் முன்னையவிரண்டும் கட்புலனாகாதாரை நினைந்து செய்வனவாகலானும், பின்னையவிரண்டும் பிறர்க்கீதலன்மையானும், இடைநின்ற விருந்தோம்பல்

---

* கல்லா வொருவற்குத் தன்வாயிற் சொற்கூற்ற—மெல்லிய வாழைக்குத் தானீன்ற காய்கூற்ற—மல்லவை செய்தாற் கறங்கூற்றங் கூற்றமே—யில்லிருந்து தீங்கொழுகுவாள்—நான்மணிக்கடிகை.

† இருவகைவிருந்தினர். ௪௩-ம் குறளுரையிற்காண்க.

சிறப்புடைத்தாய் இல்லறங்கட்கு முதலாயிற்று. வேறாகாத அன்புடையிருவர்கூடி யல்லது செய்யப்படாமையின், இஃது அன்புடைமையின்பின் வைக்கப்பட்டது.

௮௧. இருந்தோம்பி யில்வாழ்வ தெல்லாம் விருந்தோம்பி
வேளாண்மை செய்தற் பொருட்டு. ௧.

இ-ள். இல் இருந்து ஓம்பி வாழ்வது எல்லாம் - மனைவியோடும் வனத்திற் செல்லாது இல்லின்கணிருந்து பொருள்களைப்போற்றிவாழும் செய்கையெல்லாம்— விருந்து ஓம்பி வேளாண்மை செய்தற்பொருட்டு - விருந்தினரைப்பேணி அவர்க் குபகாரஞ்செய்தற் பொருட்டு. எ-று.

எனவே வேளாண்மைசெய்யாவழி யில்லின்கணிருத்தலும் பொருள்செய்தலும் காரணமாக வருந்துன்பச்செய்கைகட்கெல்லாம் பயனில்லையென்பதாம். (௧)

௮௨. விருந்து புறத்ததாத் தானுண்டல் சாவா
மருந்தெனினும் வேண்டற்பாற் றன்று. ௨.

இ-ள். சாவா மருந்து எனினும் - உண்ணப்படும் பொருள் அமிர்தமேயெனினும்—விருந்து புறத்ததாத் தான் உண்டல் - தன்னைநோக்கிவந்த விருந்து தன்னில்லின்புறத்ததாகத் தானே உண்டல்—வேண்டற்பாற்று அன்று - விரும்புதல் முறைமையுடைத்தன்று. எ-று.

சாவாமருந்து சாவாமைக்குக் காரணமாகிய மருந்து. விருந்தின்றியே யொருகால் உண்டலைச் சாவாமருந்தென்பார் உளராயினும் அதனையொழிக வென்றுரைப்பினு மமையும். இவையிரண்டுபாட்டானும் விருந்தோம்பலின் சிறப்புக் கூறப்பட்டது. (௨)

அ௩. வருவிருந்து வைகலு மோம்புவான் வாழ்க்கை
பருவந்து பாழ்படுத லின்று. ௩.

இ - ள். வரு விருந்து வைகலும் ஓம்புவான் வாழ்க்கை - தன்னைநோக்கி வந்த விருந்தை நாடோறும் புறந்தருவானதில்வாழ்க்கை—பருவந்து பாழ்படுதல் இன்று - நல்குரவான் வருந்திக்கெடுதலில்லை. எ - று.

நாடோறும் விருந்தோம்புவானுக்கு அதனாற்
கிளைக்குமென்பதாம்.
பொருடொலையாது மேன்மேற்

(௩)

அ௪. அகனமர்ந்து செய்யா ளுறையு முகனமர்ந்து
நல்விருந் தோம்புவா னில். ௪.

இ - ள். செய்யாள் அகன் அமர்ந்து உறையும் - திருமகள் மனமகிழ்ந்து வாழா நிற்கும்—முகன் அமர்ந்து நல்விருந்து ஓம்புவான் இல் - முகமினியனாய்த் தக்கவிருந்தினரைப் பேணுவான தில்லின்கண். எ - று.

மனமகிழ்தற்குக் காரணம் தன்செல்வம் நல்வழிப்படுதல். தகுதிகளானுயர்தல். பொருள் கிளைத்தற்குக் காரணங் கூறியவாறு.

ஞானவொழுக்

(௪)

அ௫. வித்து மிடல்வேண்டுங் கொல்லோ விருந்தோம்பி
மிச்சின் மிசைவான் புலம். ௫. உ

இ - ள் விருந்து ஓம்பி மிச்சில் மிசைவான் புலம் - முன்னேவிருந்தினரை மிசைவித்துப் பின் மிக்கதனைத் தான் மிசைவானது விளைபுலத்திற்கு—வித்தும் இடல் வேண்டுமோ - வித்திடுதலும் வேண்டுமோ, வேண்டா. எ - று.

கொல்லென்பது அசைநிலை. தானே விளையுமென்பது குறிப்பெச்சம். இவை மூன்றுபாட்டானும் விருந்தோம்புவார் இம்மைக்கணெய்தும் பயன் கூறப்பட்டது. ()

அசு. செல்விருந் தோம்பி வருவிருந்து பார்த்திருப்பா
னல்விருந்து வானத் தவர்க்கு. சு.

இ - ள். செல் விருந்து ஓம்பி வருவிருந்து பார்த்து இருப்பான்-தன்கட்சென்ற விருந்தைப் பேணிப் பின் செல்லக் கடவ விருந்தைப் பார்த்துத் தான் அதனோடு உண் ணவிருப்பான்—வானத்தவர்க்கு நல்விருந்து - மறுபிறப்பிற்றேவனாய் வானிலுள்ளார்க்கு நல்விருந்தாம். எ - று.

வருவிருந்தென்பது இடவழுவமைதி. நல்விருந்து எய்தாவிருந்து. இதனான் மறு மைக்கணெய்தும்பயன் கூறப்பட்டது. (சு)

அஎ. இனைத்துணைத் தென்பதொன் றில்லை விருந்தின்
றுணைத்துணை வேள்விப் பயன். எ.

இ - ள். வேள்விப் பயன் இனைத்துணைத்து என்பது ஒன்று இல்லை - விருந்தோம்பலாகிய வேள்வியின்பயன் இன்னவளவிற்றென்பதோரளவுடைத்தன்று;—விருந் தின் துணைத் துணை - அதற்கு அவ்விருந்தின் தகுதியளவே அளவு. எ - று.

ஐம்பெருவேள்வியி * னொன்றாகலின் வேள்வியென்றும், பொருளளவு "தான் சிறி தாயினுந் தக்கார்கைப் பட்டக்கால்—வான்சிறிதாப் போர்த்து விடும்"† ஆக லின், இனைத்துணைத்தென்பதொன்றில்லையென்றுங் கூறினார். இதனான் இருமையும் பயத்தற்குக் காரணங் கூறப்பட்டது.

(எ)

அஅ. பரிந்தோம்பிப் பற்றற்றே மென்பர் விருந்தோம்பி
வேள்வி தலைப்படா தார். அ.

இ - ள். பரிந்து ஓம்பிப் பற்று அற்றேம் என்பர் - நிலையாப்பொருளை வருந்திக் காத்துப் பின் அதனையிழந்து இதுபொழுதியாம் பற்றுக்கோடிலமாயினே மென்றிரங் குவர்—விருந்து ஓம்பி வேள்வி தலைப்படாதார் - அப்பொருளான் விருந்தினரை யோம்பி வேள்விப் பயனையெய்தும் பொறியிலாதார். எ - று.

" ஈட்டிய வொண்பொருளைக்—காத்தலு மாங்கே கடுந்துன்பம்"‡ ஆகலின், பரிந் தோம்பியென்றார். வேள் வி ஆகுபெயர். (அ)

---

* ஐம்பெருவேள்வியாவன பிரமயாகம், தேவயாகம், மாநுடயாகம், பிதிர்யாகம், பூதயாக மெனவிவை. அவற்றுள், பிரமயாகம் வேதமோதல்; தேவயாகம் ஓமம்வளர்த்தல்; மாநுட யாகம் விருந்தோம்பல்; பிதிர்யாகம் நீர்க்கடனாற்றல்; பூதயாகம் பலியீதல்.

† உறக்குந் துணையதோ ராலம்வித் தீண்டி—யிறப்ப நிழற்பயந் தாஅங் - கறப்பயனுந்— தான்சிறி தாயினுந் தக்கார்கைப் பட்டக்கால்—வான்சிறிதாப் போர்த்து விடும்—நாலடியார், அறன்வலியுறுத்தல்.

‡ ஈட்டலுந் துன்பமற் றீட்டிய வொண்பொருளைக்—காத்தலு மாங்கே கடுந்துன்பங் - காத்தல்—குறைபடிற் றுன்பங் கெடிற்றுன்பந் துன்பக்—குறைபதி மற்றைப் பொருள்—நாலடியார், ஈயாமை.

## ௧௦ ம் அதி.—இனியவைகூறல்.

௨௯

அகூ. உடைமையு ளின்மை விருந்தோம்ப லோம்பா
மடமை மடவார்கணுண்டு. கூ.

இ - ள். உடைமையுள் இன்மை விருந்தோம்பல் ஓம்பா மடமை - உடைமைக் காலத் தின்மையாவது விருந்தோம்பலையிகழும் பேதைமை;—மடவார்கண் உண்டு - அஃது அறிந்தார்மாட்டு உளதாகாது, பேதையார்மாட்டேயுளதாம். எ - று.

உடைமை பொருளுடையனுந்தன்மை.

பொருளாற்கொள்ளும்பயனையிழப்பித்து உடைமையை இன்மையாக்கலின், மடமையை இன்மையாகவுபசரித்தார். பேதைமையான் விருந்தோம்பலையிகழிற் பொருள் நின்றவழியும் அதனுற்பயனில்லையென்பதாம். இவையிரண்டுபாட்டானும் விருந்தோம்பாவழிப் படுங்குற்றங் கூறப்பட்டது. (க)

கய. மோப்பக் குழையு மனிச்ச முகந்திரிந்து
நோக்கக் குழையும் விருந்து. கய.

இ - ள். அனிச்சம் மோப்பக் குழையும் - அனிச்சப்பூ மோந்துழியன் றிக்குழை யாது;—விருந்து முகம் திரிந்து நோக்கக் குழையும் - விருந்தினர் முகம் வேறுபட்டு நோக்கக் குழைவர். எ - று.

அனிச்சம் ஆகுபெயர். செய்மைக்கட்கண்டுழி இன்முகமும், அதுபற்றி நண்ணிய வழி இன்சொல்லும், அதுபற்றி உடன்பட்டவழி நன்றாற்றலு மென விருந்தோம்புவார்க்கு இன்றியமையாத மூன்றனுள் முதலாய இனமுகம் இல்வழிச் செய்மைக்கண்ணே வாடிநீங்குதலின், தீண்டியவழியல்லது வாடாத அனிச்சப்பூ வினும் விருந்தினாமெல்லியரென்பதாம். இதனன் விருந்தோம்புவார்க்கு முதற்கண் இன்முகம் வேண் டுமென் பது கூறப்பட்டது.
(கo)

---

## கo ம் அதி.—இனியவைகூறல்.

அஃதாவது மனத்தின்கணுவகையை வெளிப்படுப்பனவாகிய இனியசொற்களைச் சொல்லுதல். இதுவும், விருந்தோம்புவார்க்கு இன்றியமையாதாகலின், விருந்தோம்பலின்பின் வைக்கப்பட்டது.

கூக. இன்சொலா லீர மளைஇப் படிறிலவாஞ்
செம்பொருள் கண்டார்வாயச் சொல். க.

இ - ள். இன்சொல் - இன்சொலாவன—ஈரம் அளைஇப் படிறு இலவாம் செம் பொருள் கண்டார் வாய்ச் சொல் - அன்போடு கலந்து வஞ்சனையிலவாயிருக்கின்ற அறத்தினை உணர்ந்தார்வாயிற் சொற்கள். எ - று.

ஆல் அசைநிலை. அன்போடு கலத்தல் அன்புடைமையை வெளிப்படுத்தல். படிறின்மை வாய்மை. மெய்யுணர்ந்தார் நெஞ்சிற்கெல்லாஞ் செம்மையுடைத்தாய்த்தோன்றலின், செம்பொருளெனப்பட்டது. இலவாஞ்சொல்லெனவியையும். வாயென வேண்டாதுகூறினர், தீயசொற்பயிலாவென்ப தறிவித்தற்கு. இதனான் இன்சொற்றிலக்கணங் கூறப்பட்டது. (க)

கூஉ. அகனமர்ந் தீதலி னன்றே முகனமர்ந்
தின்சொல னாகப் பெறின். உ.

இ - ள். அகன் அமர்ந்து ஈதலின் நன்று - நெஞ்சுவந்து ஒருவற்கு வேண்டிய பொருளைக்கொடுத்தலினும் நன்று—முகன் அமர்ந்து இன்சொலனாகப் பெறின் - ௬௦ ம் அதி

.—இனியவைகூறல்.

கண்டபொழுதே முகமினியனாய் அதனோடு இனியசொல்லையு முடையனாகப் பெறின். எ - று.

இன்முகத்தோடுகூடிய இன்சொல் ஈதல்போலப் பொருள்வயத்ததன்றித் தன் வயத்ததாயினும், அறநெஞ்சுடையார்க்கல்லது இயல்பாகவின்மையின், அதனினுமரிதென்னுங் கருத்தான், இன்சொலனாகப் பெறினென்றார். (உ)

கூ௩. முகத்தா னமர்ந்தினிது நோக்கி யகத்தானாம்
இன்சொ லினதே யறம். ௩.

இ - ள். முகத்தான் அமர்ந்து இனிது நோக்கி - கண்டபொழுதே முகத்தான் விரும்பி இனிதாக நோக்கி - அகத்தான் ஆம் இன்சொலினதே அறம் - பின் நண்ணிய வழி மனத்தொடுகூடிய இனியசொற்களைச் சொல்லுதலின் கண்ணதே அறம். எ - று.

நோக்கியென்னும் வினையெச்சம் இன்சொலென்ன அடையடுத்துநின்ற முதனிலைத் தொழிற்பெயர்கொண்டது. ஈதலின்கணணதன்றென்றவாறு. இவையிரண்டுபாட்டானும் இனமுகத்தோடு கூடியவின்சொல் முன்னமே பிணித்துக்கோடலின் விருந்தோம்புதறகட் சிறந்ததென்பது கூறப்பட்டது. (௩)

கூ௪. துன்புறூஉந் துவ்வாமை யில்லாகும் யார்மாட்டு
மின்புறூஉ மின்சொ லவர்க்கு. ௪.

இ - ள். யார்மட்டும் இன்பு உறூஉம் இன்சொலவர்க்கு - எல்லார்மாட்டும் இன்பத்தை மிகுவிக்கும் இன்சொல்லையுடையார்க்கு—துன்பு உறூஉம் துவ்வாமை இல்லாகும் - துன்பத்தை மிகுவிக்கும் நல்குரவு இல்லையாம். எ - று.

நாமுதலிய பொறிகள் சுவை முதலிய புலன்களை நுகராமையுடைமையின், துவ்வாமையென்றார். யார்மாட்டுமின்புறூஉமின்சொலவர்க்குப் பகையும் நொதுமலுமின்றி உள்ளது நண்பேயாம், ஆகவே, அவர் எல்லாச்செல்வமுமெய்துவரென்பது கருத்து. (௪)

கூ௫. பணிவுடைய னின்சொல னாத லொருவற்
கணியல்ல மற்றுப் பிற. ௫.

இ - ள். ஒருவற்கு அணி பணிவு உடையன் இன்சொலனுதல்-ஒருவனுக்கணியாவது தனனொற்றுழப்பவர்கட்டாழ்ச்சியுடையனுய்எல்லார்கண்ணும் இனியசொல்லையுமுடையனுதல்;— பிற அல்ல - இவையிரண்டுமன்றி மெய்க்கணியும் பிறவணிகள் அணியாகா. எ - று.

இன்சொலனுதற்கினமாகலின், பணிவுடைமையும் உடன்கூறினார். மற்று அசை நிலை. வேற்றுமையுடைமையாற் பிறவெனவும், இவை போலப் பேரழுகுசெய்யாமை யின் அல்லவெனவுங் கூறினார். இவையிரண்டுபாட்டானும் இனியவை கூறுவார்க்கு இம்மைப்பயன் கூறப்பட்டது. (௬)

கூகூ. அல்லவை தேய வறம்பெருகு நல்லவை
நாடி யினிய சொலின். கூ.

இ - ள். நல்லவை நாடி இனிய சொலின் - பொருளாற் பிறர்க்கு நன்மை பயக் குஞ்சொற்களை மனததானாய்ந்து இனியவாக ஒருவன்சொல்லுமாயின்,—அல்லவை தேய அறம் பெருகும் - அவனுக்குப் பாவங்கடேய அறம் வளரும். எ - று.

## ௧0 ம் அதி.—இனியவைகூறல்.

ஙக்

தேய்தல் தன்பகையாகிய அறம்வளர்தலிற் றனக்கு நிலையின்றிமெலிதல். "தவத்தின்முன் னில்லாதாம் பாவம்" * என்பதூஉம் இப்பொருட்டு. நல்லவை நாடிச் சொல்லுங்காலுங்.கடியவாகச்சொல்லின், அறனாகாதென்பதாம். இதனான் மறுமைப் பயன் கூறப்பட்டது. (கூ)

கூஎ. நயனீன்று நன்றி பயக்கும் பயனீன்று
பணபிற றலைப்பிரியாச் சொல். எ.

இ - ள். நயன் ஈன்று நன்றி பயக்கும் - ஒருவனுக்கு இம்மைக்கு நீதியையுமுண் டாக்கி மறுமைக்கு அறத்தையும் பயக்கும்—பயன் ஈன்று பண்பின் தலைப்பிரியாச் சொல் - பொருளாற் பிறர்க்கு நன்மையைக் கொடுத்து இனிமைப்பண்பினீங்காத சொல். எ - று.

நீதி உலகத்தோடு பொருந்துதல். பண்பென்பது ஈண்டதிகாரத்தான் இனிமை மேனின்றது. தலைப்பிரிதல் ஒருசொன்னீர்மைத்து. (எ)

கூஅ. சிறுமையு ணீங்கிய வின்சொன் மறுமையு

மிமையு மின்பந் தரும். அ.

இ - ள். சிறுமையுள் நீங்கிய இன்சொல் - பொருளாற் பிறர்க்கு நோய்செய்யாத இனியசொல்—மறுமையும் இம்மையும் இன்பம் தரும் - ஒருவனுக்கு இருமையினும் இன்பத்தைப் பயக்கும். எ - று.

மறுமையின்பம் பெரிதாகலின், முற்கூறப்பட்டது. இம்மையின்பமாவது உலகம் தன்வயத்ததாகலான் நல்லனவெய்தி இன்புறுதல். இவையிரண்டொட்டாலும் இருமைப்பயனும் ஒருங்கெய்துதல் வலியுறுத்தப்பட்டது. (அ)

கூகூ. இன்சொ லினிதீன்றல் காண்பா னெவன்கொலோ
வன்சொல் வழங்கு வது. கூ.

இ - ள். இன்சொல் இனிது ஈன்றல் காண்பான் - பிறர் கூறும் இன்சொற்றனக் கின்பம் பயத்தலை அனுபவித்தறிகின்றவன்—வன்சொல் வழங்குவது எவன்கொல் - அது நிற்கப் பிறர்மாட்டு வன்சொல்லைச் சொல்லுவது என்னபயன் கருதி! எ - று.

இனியதனறுதல் வினைக்குறிப்பெச்சம். வன்சொற் பிறர்க்கு இன்னாதாகலின், அது கூறலாகாதென்பது கருத்து. (கூ)

கoo. இனிய வுளவாக வின்னாத கூறல்
கனியிருப்பக் காய்கவர்ந் தற்று. கo.

இ - ள். இனிய உளவாக இன்னாத கூறல் - அறம் பயக்கும் இனியசொற்களும் தனக்குளவாயிருக்க அவற்றைக் கூறாது பாவம் பயக்கும்இன்னாதசொற்களை ஒருவன் கூறுதல்—கனி இருப்பக் காய் கவர்ந்தற்று - இனிய கனிகளும் தன்கைக்கணுளவாயிருக்க அவற்றை நுகராது இன்னாத காய்களை நுகர்ந்ததனோடொக்கும். எ - று.

கூறலென்பதனாற் சொற்களென்பது பெற்றும். பொருளை விசேடித்து நின்ற பண்புகள் உவமைக்கண்ணுஞ்சென்றன. இனியகனிகளென்றது ஔவையுண்டநெல்

---

* விளக்குப் புகவிருண் மாய்ந்தாங் கொருவன்—தவத்தின்முன் னில்லாதாம் பாவம் • விளக்குநெய்—தேய்விடத்துச் சென்றிருள் பாய்ந்தாங்கு நல்வினை—தீர்விடத்து நிற்குமாம்

## கக ம் அதி.—செய்ந்நன் றியறிதல்.

விக்கனி போல அமிழ்தாவனவற்றை. இன்னாதகாய்களென்றது காஞ்சிரங்காய் போல நஞ்சாவனவற்றை. கடுஞ்சொற்சொல்லுதல் முடிவிற்றனக்கே யின்னாதென்ப தாம். இவையிரண்டுபாட்டாலும் இன்னாதகூறலின் குற்றங் கூறப்பட்டது. (கo)

---

## கக ம் அதி.—செய்ந்நன் றியறிதல்.

அஃதாவது தனக்குப் பிறர் செய்த நன்மையை மறவாமை. இனியவை கூறி இல்லறம் வழுவாதார்க்கு உய்தியில் குற்றம் செய்ந்நன்றி கோறலேயாகலின், அதனைப் பாதுகாத்துக் கடிதற்பொருட்டு, இஃதினியவைகூறலின்பின் வைக்கப்பட்டது.

கoக. செய்யாமற் செய்த வுதவிக்கு வையகமும்
வானகமு மாற்ற லரிது. க.

இ - ள். செய்யாமல் செய்த உதவிக்கு - தனக்கு முன்னொருதவிசெய்யாதிருக்க ஒருவன் பிறனுக்குச் செய்தவுதவிக்கு—வையகமும் வானகமும் ஆற்றல் அரிது - மண்ணுலகும் விண்ணுலகுங் கைம்மாறாகக் கொடுத்தாலும் ஒத்தலரிது. எ - று.

கைம்மாறுகளெல்லாம் காரணமுடையவாகலின், காரணமில்லாத உதவிக்கு ஆற் றாவாயின. செய்யாமைச் செய்தவுதவியென்று பாடமோதி, மறித்துதவமாட்டாமை யுள்ளவிடத்துச் செய்தவுதவியென்றுரைப்பாருமுளர். (க)

கoஉ. காலத்தி னாற்செய்த நன்றி சிறிதெனினு
ஞாலத்தின் மாணப் பெரிது. உ.

இ - ள். காலத்தினால் செய்த நன்றி - ஒருவனுக்கு இறுதிவந்த வெல்லைக்கண் ஒருவன் செய்தவுபகாரம்—சிறிது எனினும் ஞாலத்தின

மாணப் பெரிது - தன்னை நோக்கச் சிறிதாயிருந்ததாயினும் அக்காலத்தை நோக்க நிலவுலகத்தினும் மிகப் பெரிது. எ - று.

அக்காலநோக்குவதல்லது பொருணோக்கலாகாதென்பதாம். காலத்தினுலென் பது வேற்றுமை மயக்கம்.

(உ)

கoங. பயன்றூக்கார் செய்த வுதவி நயன்றூக்கி
னன்மை கடலிற் பெரிது. ங.

இ - ள். பயன் றூக்கார் செய்த உதவி நயன் றூக்கின் - இவர்க்கு இதுசெய்தால் இன்னது பயக்குமென்று ஆராய்தலிலராய்ச் செய்தவுதவியாகிய ஈரமுடைமையை ஆராயின்,—நன்மை கடலிற் பெரிது - அதனன்மை கடலினும் பெரிதாம். எ - று.

இவை மூன்றுபாட்டானும் முறையே காரணமின்றிச் செய்ததூஉம், காலத்தினுற் செய்ததூஉம், பயன்றூக்காராய்ச் செய்ததூஉம் அளவிலவாதல் கூறப்பட்டது. (ங)

கoச. தினைத்துணை நன்றி செயினும் பனைத்துணையாக்
கொள்வர் பயன்றெரி வார்.

---

* மல்லலைக—கமழ்பூஞ் சாரற் கலி்வ னிய கொல்லி—[illegible] தீங்கனி பெலவைக் [illegible] கனது மெளிநிகழ் கெடுவேலை[illegible] முனைபதிகளும்—[illegible] புபப[illegible].

தொன்னில்—பெருமலை விடரகத் தருமிசைக் கொண்ட—[illegible] செல்லிக் குறியா—தாத னின்னகத் தடக்கிச்—சாதனின்ன மெய்க்கிதநன்மே—புதை[illegible],

தீங்கனி
கக.

## கக ம் அதி.—செய்ந்நன்றியறிதல் .

கக

இ - ள். தினைத்துணை நன்றி செயினும் - தமக்குத் தினையளவிற்றாய உபகாரத்தை ஒருவன் செய்தானாயினும்,—பனைத்துணையாக்கொள்வர் பயன் தெரிவார் அதனை அவ்வளவிற்றாகக்கருதாது பனையளவிற்றாகக் கருதுவர் றெரிவார். எ - று.
அக்கருத்தின்பயன்

தினை பனையென்பன சிறுமைபெருமைகட்குக் காட்டுவன சிலவளவை.அக்கருத் தின் பயனாவது அங்ஙனங் கருதுவார்க்குவரும் பயன். (சு)

க0ரு. உதவி வரைத்தன் றுதவி யுதவி
செயப்பட்டார் சால்பின் வரைத்து. ரு.

இ - ள். உதவி உதவிவரைத்து அன்று - கைம்மாறானவுதவி காரணத்தானும் பொருளானுங் காலத்தானுமாகிய மூவகையானும் முன்செய்த உதவியளவிற் றன்று;— உதவிசெயப்பட்டார் சால்பின் வரைத்து - அதனைச் செய்வித்துக்கொண்ட வர்தம் அமைதியளவிற்று. எ - று.

சால்பு எவ்வளவுபெரிதாயிற்று உதவியும் அவ்வளவு பெரிதாமென்பார்,சால்பின் வரைத்தென்றார். இவையிரண்டுபாட்டானும் மூன் று மல்லாத வுதவிமாத்திரமும் அறிவார்க்குச் செய்தவழிப் பெரிதாமென்பது கூறப்பட்டது. (௬)

க0௬. மறவற்க மாசற்றார் கேண்மை துறவற்க
துன்பத்துட் டுப்பாயார் நட்பு. ௬.

இ - ள். துன்பத்துள் துப்பு ஆயார் நட்புத் துறவற்க - துன்பக்காலத்துத் தனக் குப் பற்றுக்கோடாயினாரது நட்பை

விடாதொழிக;—மாசு அற்றார் கேண்மை மற வற்க - அறிவொழுக்கங்களிற் குற்றமற்றாரது கேண்மையை மறவாதொழிக. எ - று.

கேண்மை கேளாந்தன்மை. இம்மைக்குறுதிகூறுவார் மறுமைக்குறுதியும் உடன் கூறினார்.
(சு)

கoஎ. எழுமை யெழுபிறப் ; முள்ளுவர் தங்கண்
விழுமந் துடைத்தவர் நட்பு. எ.

இ - ள். தங்கண் விழுமம் துடைத்தவர் நட்பு - தங்கணெய்திய துன்பத்தை நீக்கினவருடைய நட்பினை—எழுமை எழுபிறப்பும் உள்ளுவர் - எழுமையினையுடைய தம்மெழுவகைப்பிறப்பினும் நினைப்பர் நல்லோர். எ - று.

எழுமையென்றது வினைப்பயன்றொடரும் எழுபிறப்பினை; அது வளையாபதியுட்
கண்டது. எழுவகைப்பிறப்பு மேலேயுரைத்தாம். * விரைவுதோன்றத் துடைத்தவரென்றார். நினைத்தலாவது துன்பந்துடைத்தலான் அவர்மாட்டுளதாகிய அன்பு பிறப்புத்தோறுந் தொடர்ந்து அன்புடையாதல். இவை இரண்டுபாட்டானும் நன்றி செய்தாரது நட்பு விடலாகாதென்பது கூறப்பட்டது.
(எ)

கoஅ. நன்றி மறப்பது நன்றன்று நன்றல்ல
தன்றே மறப்பது நன்று. அ.

இ - ள். நன்றி மறப்பது நன்று அன்று - ஒருவன் முன்செய்த நன்மையை மறப் பது ஒருவற்கு அறனன்று;— நன்றல்லது அன்றே மறப்பது நன்று - அவன் செய்த
தீமையைச் செய்தபொழுதே மறப்பது அறன். எ - று.

---

* திருக்குறள் - கஉ.

இரண்டும் ஒருவனாற்செய்யப்பட்ட வழி மறப்பதும் மறவாததும் வகுத்துக் கூறியவாறு.
(அ)

**க0௯. கொன்றன்ன வின்னா செயினு மவர்செய்த**
**வொன்றுநன் றுள்ளக் கெடும்.** ௯.

இ - ள். கொன்று அன்ன இன்னா செயினும் - தமக்கு முன்னொரு நன்மைசெய் தவர்பின்கொன்றாலொத்த இன்னாதவற்றைச் செய்தாராயினும்,—அவர்செய்த நன்று ஒன்று உள்ளக்கெடும் - அவையெல்லாம் அவர்செய்த நன்மையொன்றனையும் நினைக்க இல்லையாம். எ - று.

தினைத்துணை பனைத்துணையாகக்கொள்ளப்படுதலின், அவ்வொன்றுமே அவற் றையெல்லாங் கெடுக்குமென்பதாம். இதனான் கூறப்பட்டது.
நன்றல்லது அன்றே மறக்குந்திறங்
(௯)

**ககo. எந்நன்றி கொன்றார்க்கு முய்வுண்டா முய்வில்லை**
**செய்ந்நன்றி கொன்ற மகற்கு.** கo.

இ-ள். எந்நன்றி கொன்றார்க்கும் உய்வு உண்டாம் - பெரியவறங்களைச் சிதைத் தார்க்கும் பாவத்தினீங்கும் வாயிலுண்டாம்;—செய்நன்றி கொன்ற மாற்கு உய்வு இல்லை - ஒருவன் செய்த நன்றியைச்சிதைத்த மகனுக்கு அஃதில்லை. எ - று.

பெரியவறங்களைச் சிதைத்தலாவது ஆன்முலையறுத்தலும், மகளிர் கருவினைச் சிதைத்தலும், பார்ப்பார்த்தபுதலும் முதலிய பாதகங்களைச் செய்தல். * இதனாற் செய்ந்நன்றிகோறலின் கொடுமை கூறப்பட்டது. (கo)

---

## கஉ ம் அதி.—நடுவு நிலைமை.

அஃதாவது பகை நொதுமல் நண்பென்னும் மூன்றுபகுதியினும் அறத்தின் வழுவாது ஒப்ப நிற்கு நிலைமை. இது, நன்றிசெய்தார் மாட்டு அந்நன்றியினை நினைத்த வழிச் சிதையுமன்றே அவ்விடத்துஞ் சிதையலாகாதென்றற்கு,செய்ந்நன்றியறிதலின் பின்வைக் கப்பட்டது.

**ககக.** *தகுதி யெனவொன்று நன்றே பகுதியாற்*
*பாற்பட் டொழுகப் பெறின்.*

இ - ள். தகுதி என ஒன்றே நன்று - நடுவுநிலைமையென்று சொல்லப்படும் ஓரறமுமே நன்று,—பகுதியான் பாற்பட்டு ஒழுகப்பெறின் - பகை நொதுமல் நண்பென் னும் பகுதிதோறும் தன்முறைமையை விடாதொழுகப்பெறின். எ - று.

தகுதியுடையதனைத் தகுதியென்றார்."ஊராளுேர் தேவகுலம்" என்பதுபோலப் பகுதியானென்புழி ஆனுருபு தோறுமென்பதன் பொருட்டாய்நின்றது. பெறினென் பது அவ்வொழுக்கத்தருமைதோன்ற நின்றது. இதனான் நடுவுநிலைமையது சிறப்புக் கூறப்பட்டது.

(க)

---

* ஆன்முலை யறுத்த வறனி லோர்க்கு—மாணிழை மகளிர் கருச்சிதைத் தோர்க்கும்— குரவர்த் தப்பிய கொடுமை யோர்க்கும்—வழுவாய் மருங்கிற் கழுவாயுமுளவே—நிலம்புடை பெயர்வ தாயினுமொருவன்—செய்தி கொன்றோர்க்குய்தியில்லென்—அறம்பாடின்றே யாயிழை கணவ—புறநானூறு, உச. கழுவாய் - பிராயச்சித்தம்.

# ௧௨ம் அதி.—நடுவு நிலைமை.

௩௫

௧௧௨. செப்ப முடையவ னாக்கஞ் சிதைவின்றி
யெச்சத்திற் கேமாப் புடைத்து. ௨.

இ - ள். செப்பம் உடையவன் ஆக்கம் - நடுவுநிலைமையையுடையவனது செல்வம்—சிதைவு இன்றி எச்சத்திற்கு ஏமாப்பு உடைத்து - பிறர்செல்வம்போல் அழிவின்றி அவன் வழியினுள்ளார்க்கும் வலியாதலையுடைத்து. எ - று.

விகாரத்தாற்றொக்க எச்சவும்மையான் இறக்குந் துணையும் அவன்றனக்கும் ஏமாப்புடைத்தென்பது பெற்றாம். அ ற க்தோடேவருதலின், அன்னதாயிற்று. தாணி றந்துழி எஞ்சிநிற்பதாகலின், எச்சமென்றார்.

(௨)

௧௧௩. நன்றே தரினு நடுவிகந்தா மாக்கத்தை
யன்றே யொழிய விடல். ௩.

இ - ள். நன்றே தரினும் - தீங்கன்றி நன்மையே பயந்ததாயினும்,—நடுவுஇகந்து ஆம் ஆக்கத்தை அன்றே ஒழிய விடல் - நடுவு நிற்றலையொழிதலான் உண்டாகின்ற ஆக்கத்தை அப்பொழுதே யொழியவிடுக. எ - று.

நன்மை பயவாமையின், நன் றே தரினுமென்றார். இகத்தலாமென்பது இகந்தெ னத்திரிந்துநின்றது. இவையிரண்டுபாட்டானும் முறையே நடுவுநிலைமையான் வந்த செல்வம் நன்மை பயத்தலும், ஏனைச்செல்வம் தீமை பயத் தலுங் கூறப்பட்டன.

(௩)

கக௪. தக்கார் தகவில ரென்ப தவரவ
ரெச்சத்தாற் காணப் படும். ௪.

இ - ள். தக்கார் தகவிலர் என்பது - இவர் நடுவுநிலைமையுடையர் இவர் நடுவு நிலைமையிலரென்னும் விசேடம்—அவரவர் எச்சத்தால் காணப்படும்-அவரவருடைய நன்மக்களது உண்மையானும் இன்மையானும் அறியப்படும். எ - று.

தக்கார்க்கெச்சமுண்டாதலும் தகவிலார்க்கில்லையாதலும் ஒருதலையாகலின்,இரு திறத்தாரையும் அறிதற்கு அவைகுறியாயின. இதனால் தக்காரையுந் தகவிலாரையும் அறியுமாறு கூறப்பட்டது. (௪)

ககரு. கேடும் பெருக்கமு மில்லல்ல நெஞ்சத்துக்
கோடாமை சான்றோர்க் கணி. ரு.

இ - ள். கேடும் பெருக்கமும் இல் அல்ல - தீவினையாற்கேடும் நல்வினையாற் பெருக்கமும் யாவர்க்கும் முன்னே அமைந்து கிடந்தன;— நெஞ்சத்துக் கோடாமை சான்றோர்க்கு அணி - அவ்வாற்றையறிந்து அவை காரணமாக மனத்தின்கட்கோடா மையே அறிவானமைந்தார்க்கு அழகாவது. எ - று.

அவை காரணமாகக் கோடுதலாவது அவை இப்பொழுது வருவனவாகக் கருதிக் கேடுவாராமையைக்குறித்தும் பெருக்கம் வருதலைக்குறித்தும் ஒருதலைக்கணிற்றல். அவற்றிற்குக் காரணம் பழவினையே, கோடுதலன்று என உண்மையுணர்ந்து நடுவுநிற் றல் சால்பினை யழகுசெய்தலின், சான்றோர்க்கணியென்றார். (ரு)

ககசு. கெடுவல்யா னென்ப தறிகதன் னெஞ்ச
நடுவொரீஇ யல்ல செயின். சு.

இ - ள். தன் நெஞ்சம் நடுவு ஒரீஇ அல்ல செயின் - ஒருவன் தன்னெஞ்சம் நடுவு நிற்றலையொழிந்து நடுவல்லவற்றைச் செய்ய நினைக்குமாயின்,—யான் கெடுவல் என்பது அறிக - அந்நினைவை யான் கெடக் கடவே னென்றுணரும் உற்பாதமாக அறிக. எ - று.

நினைத்தலும் செய்தலோடொக்குமாகலின், செயினென்றார். (௬)

**௧௧௭.** கெடுவாக வையா துலக நடுவாக
நன்றிக்கட் டங்கியான் றாழ்வு. எ.

இ - ள். நடுவாக நன்றிக்கண் தங்கியான் தாழ்வு - நடுவாகநின்று அறத்தின் கண்ணே தங்கினவனது வறுமையை—கெடுவாகவையாது உலகம் - வறுமையென்று கருதார் உயர்ந்தோர். எ - று.

கெடுவென்பது முதனிலைத்தொழிற்பெயர். செல்வமென்று கொள்ளுவரென்பது குறிப்பெச்சம். இவை மூன்றுபாட்டானும், முறையே கேடும்பெருக்கமும் கோடுதலான் வாராவென்பதூஉம், கோடுதல் கேட்டிற்கேதுவாமென்பதூஉம், கோடாதவன் றாழ்வு கேடன்றென்பதூஉம், கூறப்பட்டன. (எ)

**௧௧௮.** சமன்செய்து சீர்தூக்குங் கோல்போ லமைந்தொருபாற்
கோடாமை சான்றோர்க் கணி. அ.

இ - ள். சமன் செய்து சீர்தூக்கும் கோல்போல் - முன்னேதான் சமனாகநின்று பின் தன் கண் வைத்த பாரத்தை வரையறுக்குந் துலாம்போல—அமைந்து ஒருபால் கோடாமை சான்றோர்க்குஅணி - இலக்கணங்களானமைந்து ஒருபக்கத்துக் கோடாமை சான்றோர்க்கு

அழகாம். எ - று.

உவமையடையாகிய சமன்செய்தலும் சீர்தூக்கலும் பொருட்கண்ணும், பொருளடையாகிய அமைதலும் ஒருபாற்கோடாமையும் உவமைக்கண்ணும், கூட்டி சான்றோர் சீர்தூக்கலாவது தொடைவிடை * களாற் கேட்டவற்றை ஊழான் † உள்ளவாறுணர்தலாகவும், ஒருபாற்கோடாமையாவது அவ்வுள்ளவாற்றை மறையாது பகை நொதுமல் நட்பென்னும் மூன்றுதிறத்தார்க்கும் ஒப்பக்கூறுதலாகவும் உரைக்க இலக்கணங்களானமைதல் இருவழியும் ஏற்பனகொள்க. (அ)

கஉக. சொற்கோட்ட மில்லது செப்ப மொருதலையா
வுட்கோட்ட மின்மை பெறின்.

இ - ள். செப்பம் சொற்கோட்டம் இல்லது - நடுவுநிலைமையாவது சொல்லின் கட்கோடுதலில்லாததாம்;—உட்கோட்டம்இன்மை ஒருதலையாப் பெறின் - அஃதுண்டாவது மனத்தின்கட்கோட்டமின்மையைத் திண்ணிதாகப் பெறின். எ - று.

சொல் ஊழான் அறுத்துச் சொல்லுஞ்சொல். காரணம்பற்றி ஒருபாற்கோடாத மனத்தோடு கூடுமாயின், அறங்கிடந்தவாறு சொல்லுதல் நடுவுநிலைமையாமெனவே, அதனோடு கூடாதாயின் அவ்வாறு சொல்லுதல் நடுவுநிலைமையன்றென்பது பெறப் பட்டது. (க)

---

* தொடை - வினா. † ஊழ் -முறைமை. "தொடைவிடை யூழாத் தொடைவிடை தன்னி"—வெண்பாமாலை, வாகைப்படலம், அவையமுல்லை, கூ.

**கு.ள் கஉ௦. வாணிகஞ் செய்வார்க்கு வாணிகம் பேணிப்**
**பிறவுந் தமபோற் செயின். க௦.**

இ - ள். பிறவுந் தமபோல் பேணிச் செயின் - பிறர்பொருளையுந் தம்பொருள் போலப் பேணிச் செய்யின்,—வாணிகம் செய்வார்க்கு வாணிகம் - வாணிகஞ்செய் வார்க்கு நன்றாய வாணிகமாம். எ - று.

பிறவுந்தமபோற்செய்தலாவது கொள்வது மிகையுங் கொடுப்பது குறையுமாகாமல் ஒப்பநாடிச் செய்தல். இப்பாட்டு மூன்றனுள், முன்னையவிரண்டும் அவையத்தாரை நோக்கின, ஏனையது வாணிகரை நோக்கிற்று, அவ்விருதிறத்தார்க்கும் இவ்வறம் வேறாகச் சிறந்தமையின். (க௦)

---

## க௩-ம் அதி.—அடக்கமுடைமை.

அஃதாவது மெய், மொழி, மனங்கள் தீநெறிக்கட்செல்லாது அடங்குத லுடையனாதல். அஃது ஏதிலார்குற்றம்போற் றன்குற்றமுங்காணும் நடுவுநிலைமை யுடையார்க்காதலின், இது நடுவுநிலைமையின்பின் வைக்கப்பட்டது.

**கஉக. அடக்க மமரரு ளுய்க்கு மடங்காமை**
**யாரிரு ளுய்த்து விடும். க.**

இ - ள். அடக்கம் அமரருள் உய்க்கும் - ஒருவனை அடக்கமாகியவறம் பின்றே வருலகத்துய்க்கும்,—அடங்காமை ஆர் இருள் உய்த்துவிடும் - அடங்காமையாகிய பாவம் தங்குதற்கரிய இருளின்கட்செலுத்தும். எ - று.

இருளென்பது ஓர் நரகவிசேடம். "எல்லாம் - பொருளிற் பிறந்துவிடும்" * என்றாற்போல உய்த்துவிடுமென்பது ஒருசொல்லாய் நின்றது. (க)

**கஉஉ. காக்க பொருளா வடக்கத்தை யாக்க**
**மதனினூஉங் கில்லை யுயிர்க்கு. உ.**

இ - ள். உயிர்க்கு அதனின் ஊங்கு ஆக்கம் இல்லை - உயிர்கட்கு அடக்கத்தின் மிக்க செல்வமில்லை,—அடக்கத்தைப் பொருளாக் காக்க-ஆகலான் அவ்வடக்கத்தை உறுதிப்பொருளாகக்கொண்டு அழியாமற்காக்க. எ - று.

உயிரென்பது சாதியொருமை. அஃது ஈண்டு மக்களுயிர்மேனின்றது, அறிந்தடங்கிப்பயன்கொள்வது அதுவேயாகலின். (உ)

**கஉங. செறிவறிந்து சீர்மை பயக்கு மறிவறிந்**
**தாற்றி னடங்கப் பெறின். ங.**

இ - ள். அறிவு அறிந்து ஆற்றின் அடங்கப்பெறின் - அடங்குதலே நமக்கு அறிவாவதென்றறிந்து நெறியானே ஒருவன் அடங்கப்பெறின்,—செறிவு அறிந்து சீர்மை பயக்கும் - அவ்வடக்கம் நல்லோரானறியப்பட்டு அவனுக்கு விழுப்பத்தைக் கொடுக்கும். எ - று.

---

* கல்லிற் பிறக்குங் கதிர்மணி காதலி—சொல்லிற் பிறக்கு முயர்மத - மெல்ல—வருளிற் பிறக்கு மறநெறி யெல்லாம்—பொருளிற் பிறந்து விடும்—நான்மணிக்கடிகை, எ.

## ந௮ கங - ம் அதி.—அடக்கமுடைமை.

இல்வாழ்வானுக்கு அடங்குநெறியாவது மெய்ம்முதன் மூன்றும் தன்வயத்தவாதல்.

கஉச. நிலையிற் றிரியா தடங்கியான் றோற்ற
மலையினு மாணப் பெரிது. ௪.

இ - ள். நிலையின் திரியாது அடங்கியான் தோற்றம் - இல்வாழ்க்கையாகிய தன் னெறியின் வேறுபடாது நின்று அடங்கினவனது உயர்ச்சி—மலையினும் மாணப் பெரிது - மலையினுயர்ச்சியினும் மிகப்பெரிது. எ - று.

திரியாதடங்குதல் பொறிகளாற் புலன்களை நுகராநின்றே அடங்குதல். மலை ஆகுபெயர்.
(௪)

கஉரு. எல்லார்க்கு நன்றும் பணித லவருள்ளுஞ்
செல்வர்க்கே செல்வந் தகைத்து. ரு.

இ - ள் பணிதல் எல்லார்க்கும் நன்றாம் - பெருமிதமின்றியடங்குதல் எல்லார்க்கும் ஒப்ப நன்றேயெனினும்,—அவருள் செல்வர்க்கே செல்வந்தகைத்து-அவ்வெல்லாருளுஞ் செல்வமுடையார்க்கே வேறுமொரு செல்வமாஞ்சிறப்பினையுடைத்து. எ-று.

பெருமிதத்தினைச்செய்யுங் கல்வியுங் குடிப்பிறப்புமுடையார் அஃதின்றி அவை தம்மானேயடங்கியவழி அவ்வடக்கஞ் சிறந்து காட்டாதாகலின், செல்வர்க்கே செல்வந்தகைத்தென்றார். செல்வத்தகைத்தெனபது மெலிந்துநின்றது. பொதுவென் பாரையுமுடம்பட்டுச் சிறப்பாதல கூறியவாறு. இவையைந்து பாட்டானும் பொது வகையான் அடக்கத்தது சிறப்புக் கூறப்பட்டது.
(ரு)

கஉசு. ஒருமையு ளாமைபோ லைந்தடக்க லாற்றி
னெழுமையு மேமாப் புடைத்து. சு.

இ - ள். ஆமைபோல் ஒருமையுள் ஐந்து அடக்கல் ஆற்றின் - ஆமைபோல ஒருவன் ஒருபிறப்பின்கண் ஐம்பொறிகளையுமடக்கவல்லனாயின்,—எழுமையும் ஏமாப்பு உடைத்து-அவ்வன்மை அவனுக்கு எழுபிறப்பின் கண்ணும்அரணாதல

லையுடைத்து.எ-று.

ஆமை ஐந்துறுப்பினையும் இடர்புகுதாமல் அடக்குமாறுபோல இவனும் ஐம்பொறிகளையும் பாவமபுகுதாமலடக்கவல்லனாயின், ஆமைபோலென்றார். ஒருமைக்கட் செய்தவினையினபயன் எழுமையுந்தொடருமென்பது இதனானறிக. இதனான் மெய் யடக்கங் கூறப்பட்டது.

(௬)

**௧௨௭. யாகாவா ராயினு நாகாக்க காவாக்காற்**
**சோகாப்பர் சொல்லிழுக்குப் பட்டு. எ.**

இ - ள். யா காவாராயினும் நா காக்க - தம்மாற் காக்கப்படுவனவெல்லாவற்றையும் காக்கமாட்டாராயினும் நாவொன்றினையுங்காக்க;—காவாக்கால் சொல்லிழுக்குப் பட்டுச் சோகாப்பர் - அதனைக் காவாராயிற் சொற்குற்றத்தின்கட்பட்டுத் தாமே துன்புறுவர். எ - று.

யாவென்பது அஃறிணைப்பன்மைவினாப்பெயர். அஃது ஈண்டு எஞ்சாமையுணர நின்றது. முற்றும்மை விகாரத்தாற்றொக்கது. சொற்குற்றம் சொல்லின்கட்டோன்றுங் குற்றம். அல்லாப்பர் செம்மாப்பர் என்பனபோலச் சோகாப்பரென்பது ஒருசொல். ()

**௧௨௮. ஒன்றானுந் தீச்சொற் பொருட் பயனுண்டாயி**
**னன்றாகா தாகி விடும். அ.**

## க௩ம் அதி.—ஒழுக்கமுடைமை.

௩௪

இ - ள். தீச்சொற்பொருட்பயன் ஒன்றானும் உண்டாயின் - தீயவாகிய சொற்களின் பொருள்களாற் பிறர்க்கு வருந்துன்பமொன்றாயினும் ஒருவன்பக்க லுண்டாவதாயின்,—நன்று ஆகாதாகிவிடும் - அவனுக்குப் பிறவறங்களானுண்டான நன்மை தீதாய்விடும். எ - று.

தீயசொல்லாவன தீங்குபயக்கும்பொய், குறளை,

கடுஞ்சொல்லென்பன. ஒருவன் நல்லவாகச்சொல்லுஞ் சொற்களின்கண்ணே ஒன்ருயினுந் தீச்சொற்படும் பொருளி னது பயன் பிறர்க்குண்டாவதாயினென்றுரைப்பாருமுளர். (அ)

கஉகூ. தீயினுற் சுட்டபு ணுள்ளா று மாருதே
நாவினுற் சுட்ட வடு. கூ.

இ - ள். தீயினுல் சுட்ட புண் உள் ஆறும் - ஒருவனையொருவன் தீயினுற்சுட்ட புண் மெய்க்கட்கிடப்பினும் மனத்தின்கண் அப்பொழுதேயாறும்,—நாவினுல் சுட்ட வடு ஆருது - அவ்வாறன்றி வெவ்வுரையுடைய நாவினுற் சுட்ட வடு அதன்கண்ணும் எஞ்ஞான்றும் ஆருது. எ - று.

ஆறிப்போதலால் தீயினுற்சுட்டதனைப் புண்ணென்றும், ஆருதகிடத்தலால் நாவினுற்சுட்டதனை வடுவெனறுங்கூறினர். தீயும் வெவ்வுரையுஞ் சுடுதற்ருெழிலான் ஒக்குமாயினும, ஆருமையாற்றீயினும் வெவ்வுரை கொடிதென்பது போதரலின், இது குறிபபான வநத வேற்றுமையலங்காரம். இவைமூன்றுபாட்டானும் மொழியடக் கங் கூறப்பட்டது.
(கூ)

கஉ0. கதங்காத்துக் கற்றடங்க லாற்றுவான் செவ்வி
யறமபார்க்கு மாற்றி னுழைந்து. க0.

இ - ள். கதம் காத்துக் கற்று அடங்கல் ஆற்றுவான் செவ்வி - மனத்தின்கண் வெகுளிதோன்ருமற் காத்துக் கல்வியுடையனயடஙகுதலைவல்லவனதுசெவ்வியை— அறம பாாககும ஆறறின நுழைநது - அறககடவுள் பாாாகிற்கும் அவனையடையும் நெறியின்கட்சென்று. எ - று.

அடங்குதல் மனம் புறத்துப் பரவாது அறத்தின்கண்ணேநிற்றல். செவ்வி தன் குறைகூறுதற்கேற்ற மன மொழி முகஙகள் இனியனுங் காலம். இப்பெற்றியானை அறந் தானே சென்றடையுமென்பதாம். இதனுன் மனவடக்கங் கூறப்பட்டது. (க0)

## கச ம் அதி.—ஒழுக்கமுடைமை.

அஃதாவது
யுடையராதல். இது,

தத்தம் வருணத்திற்கும் நிலைக்குமோதப்பட்ட ஒழுக்கத்தினை
மெய்ம்முதலிய அடங்கினார்க்கல்லது முடியாதாகலின், அடக்க
முடைமையின்பின் வைக்கப்பட்டது.

கஙக. ஒழுக்கம் விழுப்பந் தரலா னொழுக்க
உயிரினு மோம்பப் படும். க.

இ - ள். ஒழுக்கம் விழுப்பம் தரலான் - ஒழுக்கம் எல்லார்க்குஞ் சிறப்பினைத் தரு
தலான்,—ஒழுக்கம் உயிரினும் ஓம்பப்படும் - அவ்வொழுக்கம் உயிரினும் பாதுகாக்கப்
படும். எ - று. .

கச ம் அதி.—ஒழுக்கமுடைமை.

உயர்ந்தார்க்கும் இழிந்தார்க்கும் ஒப்ப விழுப்பந்தருதலின்,
பொதுப்படக்கூறினார். காட்டு வருவிக்கப்பட்டது. அதனால் அங்ஙனம்
விழுப்பந்தருவதாயது ஒழுக்க மென்பது பெற்றாம். உயிர்
எல்லாப்பொருளினுஞ் சிறந்ததாயினும் ஒழுக்கம்போல
விழுப்பந்தாராமையின், உயிரினுமோம்பப்படுமென்றார்.
(க)

கஙஉ. பரிந்தோம்பிக் காக்க வொழுக்கந் தெரிந்தோம்பித்
தேரினு மஃதே துணை. உ.

இ - ள். ஒழுக்கம் ஓம்பிப் பரிந்து காக்க - ஒழுக்கத்தினை ஒன்றானும்
அழிவுபடா மற்பேணி வருந்தியுங்காக்க;—தெரிந்து ஓம்பித்தேரினும்
துணை அஃதே - அறங்கள் பலவற்றையுமாராய்ந்து இவற்றுள்

இருமைக்குந் துணையாவது யாதென்று மனத்தை யொருக்கித் தேர்ந்தாலும் துணையாய் முடிவது அவ்வொழுக்கமேயாகலான். எ - று.

பரிந்துமென்னும்உம்மைவிகாரத்தாற்றொக்கது.
இவையிரண்டுபாட்டானும்ஒழுக் கத்தது சிறப்புக் கூறப்பட்டது.
(உ)

கஙரு. ஒழுக்க முடைமை குடிமை யிழுக்க
இழிந்த பிறப்பாய் விடும். ரு.

இ - ள். ஒழுக்கமுடைமை குடிமை - எல்லார்க்குந் தத்தம் வருணத்திற்கேற்ற ஒழுக்கமுடைமை குலனுடைமையாம்,—இழுக்கம் இழிந்த பிறப்பாய் விடும் - அவ் வொழுக்கத்திற்றவறுதல் அவ்வருணத்திற் றாழ்ந்த வருணமாய்விடும். எ - று.

பிறந்த வருணத்தன் இழிந்தகுலத்தாராயினும் ஒழுக் கமுடையராக உயர்குலத்த ராவராகலின் குடிமையாமென்றும், உயர்ந்தவருணத்துப் பிறந்தாராயினும் ஒழுக்கத் திற்றவறத் தாழ்ந்த வருணத்தராவராகலின இழிந்த பிறப்பாய்விடுமென்றுங்கூறினர். [illegible] குணத்தினும் இவ்வழிப்படுங்குற்றம் பெரிதென்றவாறு. பயன் இடை யீடின்றி யெய்துதலின், அவ்விரைவு பற்றி அவ்வேதுவாகிய வினைகளே பயனாகவோ [illegible].
(ரு)

கஙச. மறப்பினு மோத்துக் கொளலாகும் பார்ப்பான்
பிறப்பொழுக்கங் குன்றக் கெடும். ச.

இ - ள். ஒத்து மறப்பினும் கொளலாகும் - கற்ற வேதத்தினை மறந்தானாயினும் அவ்வருணங்கெடாமையிற் பின்னும் அஃதோதிககொளலாம்;—பார்ப்பான் பிறப்பு ஒழுக்கம் குன்றக் கெடும் - அந்தணனது உயர்ந்தவருணம் தன்னொழுக்கங்குன்றக் கெடும். எ - று.

மறந்தவழி இழிகுலத்தனுமாகலின் , மறக்கலாகாதென்னுங் கருத்தான், மறப் பினுமென்றார். சிறப்புடைவருணத்திற்கு

மொழிந்தமையின், இஃது ஏனைய வருணக் கட்கும் கொள்ளப்படும். (௪)

கநு௪. அழுக்கா றுடையான்க ணாக்கம்போன் றில்லை
 யொழுக்க மிலான்க ணுயர்வு. ௫.

இ—ள். அழுக்காறு உடையான்கண் ஆக்கம் போன்று - அழுக்காறுடையான் மாட்டு ஆக்கமில்லாதாற்போல—ஒழுக்கம் இலான்கண் உயர்வுஇல்லை - ஒழுக்கமில்லா து ன்மாட்டும் உயர்ச்சியில்லை. எ - று.

## கஈ ம் அதி.—ஒழுக்கமுடைமை.

ஈக

உவமையான் ஒழுக்கமில்லாதவன் சுற்றத்திற்கும் உயர்ச்சியில்லையென்பது பெற் றும்; என்னை? "கொடுப்பதழுக்கறுப்பான் சுற்றம்" மூம் நல்கூர்தலின், உயர்வு உயர்குலமாதல், (௫)

கநுகூ. ஒழுக்கத்தி னொல்கா ருரவோ ரிழுக்கத்தி
 னேதம் படுபாக் கறிந்து. கூ.

இ - ள். ஒழுக்கத்தின் ஒல்கார் உரவோர் - செய்தற்கருமை நோக்கி ஒழுக்கத்திற் சுருங்கார் மனவலியுடையார்,—இழுக்கத்தின் ஏதம் படுபாக்கு அறிந்து - அவ்விழுக் கத்தால் தமக்கிழிகுலமாகிய குற்றமுண்டாமாற்றை அறிந்து.எ - று.

ஒழுக்கத்திற்சுருக்கம் அதனை யுடையார்மேலேற்றப்பட்டது. கொண்ட விரதம் விடாமைபற்றி, உரவோரென்றார். (௬)

கங௭. ஒழுக்கத்தி னெய்துவர் மேன்மை யிழுக்கத்தி
னெய்துவ ரெய்தாப் பழி. ௭.

இ - ன். ஒழுக்கத்தின் மேன்மை எய்துவர் - எல்லாரும் ஒழுக்கத்தானே மேம் பாட்டையெய்துவர்,—இழுக்கத்தின் எய்தாப் பழி எய்துவர் - அதனினின்றிழுக்குத லானே தாம் எய்துதற்குரித்தல்லாத பழியையெய்துவர். எ - று.

பகைபற்றி அடாப்பழி கூறியவழி அதனையும் இழுக்கம்பற்றி உலகம் அடுக்குமென்று கொள்ளுமாகலின், எய்தாப்பழி யெய் துவரென்றார். இவையிரண்டுபாட்டானும் ஒழுக்கம் உள்வழிப்படுங்குணமும் இல்வழிப்படுங் குற்றமுங் கூறப்பட்டன. (௭)

கஙஅ. நன்றிக்கு வித்தாகு நல்லொழுக்கந் தீயொழுக்க
மென்று மிடும்பை தரும். அ.

இ - ன். நல்லொழுக்கம் நன்றிக்கு வித்தாகும் - ஒருவனுக்கு நல்லொழுக்கம் அறத்திற்குக் காரணமாய் இருமையினும் இன்பம் பயக்கும்;— தீயொழுக்கம் என்றும் இடும்பை தரும் - தீயவொழுக்கம் பாவத்திற்குக் காரணமாய் இருமையினுந் துன்பம் பயக்கும். எ - று.

நன்றிக்கு வித்தாகுமென்றதனால் தீயொழுக்கம் பாவத்திற்குக் காரணமாதலும் இடும்பைதருமென்றதனால் நல்லொழுக்கம் இன்பந்தருதலும் பெற்றாம், ஒன்றுயின்றே வினையதை முடிக்குமாகலின். இதனாற் பின்விளைவு கூறப்பட்டது. (அ)

கஙகூ. ஒழுக்க முடையவர்க் கொல்லாவே தீய
வழுக்கியும் வாயாற் சொலல். கூ.

இ - ன். வழுக்கியும் தீய வாயால் சொலல் - மறந்தும் தீயசொற்களைத் தம் வாயாற் சொல்லுந் தொழில்கள்—ஒழுக்கமுடையவர்க்கு ஒல்லா - ஒழுக்கமுடையவர்க்கு முடியா. எ - று.

தீயசொற்களாவன பிறர்க்குத் தீங்கு பயக்கும் பொய்ம்முதலியனவும், வருணத்திற்கு உரியவல்லனவுமாம். அவற்றது பன்மையாற் சொல்லுதற்றொழில் பலவாயின. சொலல் சாதியொருமை. சொலலெனவே அமைந்திருக்க வாயாவென வேண்டாது

---

* திருக்குறள், கககக.

## சஉ. கறு ம் அதி.—பிறனில்விழையாமை.

கூறினர், நல்லசொற்கள் பயின்றதெனத் தாம் வேண்டியதன்சிறப்பு முடித்தற்கு. இதனை வடநூலார் தாற்பரியமென்ப. (க)

சச0. உலகத்தோ டொட்ட வொழுகல் பலகற்றுங்
கல்லா ரறிவிலா தார். சO.

இ - ள். உலகத்தோடு ஒட்ட ஒழுகல் கல்லார்-உலகத்தோடு பொருந்த வொழுகுதலைக் கல்லாதார்,—பல கற்றும் அறிவிலாதார் - பலநூல்களையுங் கற்றாராயினும், அறிவிலாதார். எ - று.

உலகத்தோடு பொருந்தவொழுகுதலாவது உயர்ந்தோர் பலரும் ஒழுகியவாற்றான் ஒழுகுதல். அறநூல் சொல்லியவற்றுள் இக்காலத்திற்கு ஏலாதனவொழிந்து சொல்லாதனவற்றுள் ஏற்பனகொண்டு வருதலான் அவையுமடங்க உலகத்தோடொட்டவென் றும், கல்விக்குப் பயன் அறிவும் அறிவிற்குப் பயன் ஒழுக்கமுமாகவின் அவ்வொழுகுதலைக் கல்லாதார் பலகற்றுமறிவிலாதாரென்றுங் கூறினர். ஒழுகுதலைக் கற்றலாவது அடிப்படுதல். இவையிரண்டுபாட்டானுஞ் சொல்லானுஞ் செயலானும் வருமொழுக்கங்களெல்லாம் ஒருவாற்றாற் றொகுத்துக் கூறப்பட்டன. (சO)

---

## கறு ம் அதி.—பிறனில்விழையாமை.

அஃதாவது காம மயக்கத்தாற் பிறனுடைய இல்லாளை விரும்பாமை. இஃது, ஒழுக்க முடையார் மாட்டே நிகழ்வதாகலின், ஒழுக்கமுடைமையின்பின் வைக்கப் பட்டது.

**கசக. பிறன்பொருளாட் பெட்டொழுகும் பேதைமை ஞாலத்**
**தறம்பொருள் கண்டார்க ணில். க.**

இ - ள். பிறன் பொருளாட் பெட்டு ஒழுகும் பேதைமை - பிறனுக்குப் பொரு ளாந் தன்மையையுடையாளைக் காதலித்தொழுகுகின்ற அறியாமை —ஞாலத்து அறம் பொருள் கண்டார்கண் இல்-ஞாலத்தின்கண் அறநூலையும் பொருணூலையும் ஆராய்ந் தறிந்தார்மாட்டில்லை. எ - று.

பிறன்பொருள் பிறனுடைமை. அறம் பொருளென்பன ஆகுபெயர். செவ்வெண் ணின்றொகை தொக்குநின்றது. இன்பமொன்றையே நோக்கும் இன்பநூலுடையார் இத்தீயொழுக்கத்தையும் பரகீயமென்று! * கூறுவராகலின், அறம் பொருள் கண்டார் கணில்லென்றார்; எனவே, அப்பேதைமையுடையார்மாட்டு அறமும் பொருளும் இல்லையென்பது பெறப்பட்டது. (க)

**கசஉ. அறன்கடை நின்றாரு ளெல்லாம் பிறன்கடை**
**நின்றாரிற் பேதையா ரில்.. உ.**

இ - ள். அறன்கடை நின்றாருள் எல்லாம் - காமங் காரணமாகப் பாவத்தின்கண் நின்றாரெல்லாருள்ளும்—பிறன்கடை நின்றாரின் பேதையார் இல் - பிறனில்லாளைக் காதலித்து அவன் வாயிற்கட்சென்று நின்றார்போலப் பேதையாரில்லை. எ - று.

அறத்தினீக்கப்பட்டமையின், அறன்கடையென்றார். அறன்க டை நின்ற பெண்

வழிச் செல்வாரும் வரைவின்மகளிரோடும் இழிகுலமகளிரோடுங் கூடி இன்பறுகர்

* பாகீபம் - பிறர்க்குரியது.

## கரு ம் அதி.—பிறனில்விழையாமை.

சாங

வாரும்போல அறமும் பொருளும் இழத்தலேயன்றிப், பிறன்கடை நின்றார் அச்சத் தால் தாங்கருதிய இன்பமும் இழ க்கின்றாராகலின், பேதையாரில்லென்றார், எனவே, இன்பமுமில்லையென்பது பெறப்பட்டது. (உ)

கசங. விளிந்தாரின் வேறல்லர் மன்ற தெளிந்தாரிற்
றீமை புரிந்தொழுகு வார். ங.

இ - ள். தெளிந்தார் இல் தீமை புரிந்து ஒழுகுவார் - தம்மை ஐயுறாதாரில்லாள் கண்ணே பாவஞ்செய்தலைவிரும்பியொழுகுவார்,—விளிந்தாரின் வேறு அல்லர்மன்ற- உயிருடையவரேனும், இறந்தாரேயாவர் எ - று.

அறம் பொருளின்பங்களாகிய பயன் உயிரெய்தாமையின்,விளிந்தாரின்வேறல்ல ரென்றும் ; அவர் தீமை புரிந்தொழுகுவது இல்லுடையவரது தெளிவுபற்றியாகலின் தெளிந்தாரில்லென்றுங் கூ றினர்.
(ங)

கசச. எனைத்துணைய ராயினு மென்னாந் தினைத்துணையுந்
தேரான் பிறனில் புகல். ச.

இ - ள் . எனைத்துணையராயினும் என்னும்-எத்துணைப்பெருமையுடையராயினும் ஒருவர்க்கு யாதாய் முடியும்—தினைத்துணையும் தேரான் பிறன் இல் புகல் - காமமயக்

கத்தால் இனையளவும் தம்பிழையையோராது பிறனுடைய இல்லின்கட்புகுதல்! எ-று.

இந்திரன்போல எல்லாப்பெருமையுமிழந்து சிறுமையெய்தல் நோக்கி, என்று மென்றார். "என்னி ரறியாதீர் போல விவைகூறி—னின்னீர வல்ல நெடுந்தகாய்" என்புழிப்போல உயர்த்தற்கட் பன்மை யொருமை மயங்கிற்று. தேரான்பிறனென்ப தனைத் தம்மை ஐயுறாத பிறனென்றுரைப்பாருமுளர்.

(௪)

கசரு. எளிதென வில்லிறப்பா னெய்துமெஞ் ஞான்றும்
விளியாது நிற்கும் பழி. ௫.

இ - ள். எளிது என இல் இறப்பான்-எய்துதலெளிதென்று கருதிப் பின்விளைவு கருதாது பிறனில்லின்கணிறப்பான்—விளியாது எஞ்ஞான்றும் நிற்கும் பழி எய்தும்- மாய்தலின்றி எஞ்ஞான்றும் நிலைநிற்கும் குடிப்பழியினையெய்தும். எ- று.

இல்லின்கணிறத்தல் இல்லாள்கண் நெறிகடந்து சேறல்.

(௫)

கசசு. பகைபாவ மச்சம் பழியென நான்கு
மிகவாவா மில்லிறப்பான் கண். சு.

இ - ள். இல் இறப்பான்கண் - பிறனில்லாள்கண் நெறிகடந்து செல்வானிடத்து—பகை பாவம் அச்சம் பழி என நான்கும் இகவாவாம் - பகையும் பாவமும் அச்சமும் குடிப்பழியுமென்னும் இந்நான்கு குற்றமும் ஒருகாலும் நீங்காவாம். எ - று.

எனவே, இருமையுமிழத்தல் பெற்றும். இவையாறுபாட்டானும் வான்கட் குற்றங் கூறப்பட்டது.

பிறனில்விழை

(௬)

கசஎ. அறனியலா னில்வாழ்வா னென்பான் பிறனியலாள்
பெண்மை நயவா தவன். . எ.

---

* கலித்தொகை, பாலைக்கலி, ௪-ம் பாட்டு.

ச௪ கசு ம் அதி.—பொறையுடைமை.

இ - ள் அறனியலான் இல்வாழ்வான் என்பான் - அறனுடைய இயல்போகூடி இல்வாழ்வானென்று சொல்லப்படுவான் —பிறன் இயலாள் பெண்மை நயவாதவன்- பிறனுக்குரிமைபூண்டு அவனுடைய இயல்பின்கண்ணே நிற்பாளது பெண்டன்மையை விரும்பாதவன். எ - று.

ஆனுருபு ஈண்டு
உடனிகழ்ச்சிக்கண்வந்தது.இல்லறஞ்செய்வானெனப்படுவான் அவனே யென்பதாம்.

(எ)

கசஅ. பிறன்மனை நோக்காத பேராண்மை சான்றோர்க்
கறனொன்றோ வான்ற வொழுக்கு. அ.

இ - ள். பிறன் மனை நோக்காத பேர் ஆண்மை - பிறன்மனையாளை உட்கொள்ளாத பெரிய ஆண்டகைமை—சான்றோர்க்கு அறன் ஒன்றோ ஆன்ற ஒழுக்கு - சால் புடையார்க்கு அறனுமாம் நிரம்பியவொழுக்கமுமாம். எ - று.

புறப்பகைகளை அடக்கும் ஆண்மையுடையார்க்கும் உட்பகையாகிய காமம் அட க்குதற்கருமையின், அதனையடக்கிய ஆண்மையைப்பேராண்மையென்றார். ஒன்றோ வென்பது எண்ணிடைச்சொல். செய்தற்கரிய அறனும் ஒழுக்கமும் இதனைச் செய்யா மையே பயக்குமென்பதாம்.

(அ)

கசக. நலக்குரியார் யாரெனி னமநீர் வைப்பிற்
பிறற்குரியா டோடோயா தார். கூ.

இ - ள். காம நீர் வைப்பின் - அச்சந் தரும் கடலாற் சூழப்பட்ட உலகத்து— நலக்குஉரியார் யார் எனின் - எல்லாநன்மைகளும் எய்துதற்குரியார் யாவரெனின்;— பிறற்கு உரியாள் தோள் தோயாதார் - பிறனொருவனுக்கு உரிமையாயினாளுடைய தோளைச்சேராதார். எ - று.

அகலம், ஆழம், பொருளுடைமை முதலியவற்றான் அளவிடப்படாமையின், காம நீரென்றார். நலத்திற்கென்பது நலக்கெனக் குறைந்து நின்றது. உரிச்சொல் ஈறு திரிந்து நின்றது *. இருமையினும் நன்மையெய்துவரென்பதாம். (கூ)

கசூ0. அறன்வரையான் அல்ல செயினும் பிறன்வரையாள்
பெண்மை நயவாமை நன்று. க0.

இ - ள். அறன் வரையான் அல்லசெயினும் - ஒருவன் அறத்தைத் தனக்குரித் தாகச் செய்யாது பாவங்களைச் செய்யுமாயினும்,—பிறன்வரையாள் பெண்மை நய வாமை நன்று புண்டாயின்,
- அவனுக்குப் பிறனெல்லைக்கணிற்பாளது பெண்மையை விரும்பாமை அது நன்று. எ - று.

இக்குணமே மேற்பட்டுத் தோன்றுமென்பதாம். இவைநான்குபாட்டானும் பிற னில் விழையாதான்கட் குணங் கூறப்பட்டது. (க0)

---

## கசு ம் அதி.—பொறையுடைமை.

அஃதாவது காரணம் பற்றியாதல் மடமையானாதல் ஒருவன் தமக்கு மிகை செய்தவழித் தாமும் அதனை அவன்கட்செய்யாது பொறுத்தலையுடையராதல்.நெறியி

---

* காம் என்றது காம எனத் திரிந்து நின்றது.

# கஉ ம் அதி.—பொறையுடைமை.

சரு

தீங்கிய செய்தாரையும் பொறுக்கவேண்டுமென்றற்கு, இது பிறனில்விழையாமையின்பின் வைக்கப்பட்டது.

கருக. அகழ்வாரைத் தாங்கு நிலம்போலத் தம்மை
இகழ்வார்ப் பொறுத்த றலை. க.

இ - ள். அகழ்வாரைத் தாங்கும் நிலம்போல - தன்னையகழ்வாரை வீழாமற் றாங்கு நிலம்போல—தம்மை இகழ்வார்ப் பொறுத்தல் தலை - தம்மை அவமதிப் பாரைப் பொறுத்தல் தலையாயவறம். எ - று.

இகழ்தல் மிகையாயின செய்தலும், சொல்லுதலும். (க)

கருஉ. பொறுத்த லிறப்பினை யென்று மதனை
மறத்த லதனினு நன்று. உ.

இ -ள். என்றும் இறப்பினைப் பொறுத்தல் - பொறை நன்றாகலால், தாமொறுத் தற்கு இயன்ற காலத்தும் பிறர் செய்த மிகையைப் பொறுக்க;—அதனை மறத்தல் அதனினும் நன்று - அதனை உட்கொள்ளாது அப்பொழுதே மறத்தல் பெறின், அப் பொறையினும் நன்று. எ - று.

மிகையென்றது மேற்சொல்லிய இரண்டனையும். பொறுக்குங்காலும் உட்கொள் ளப்படுதலின், மறத்தலை அதனினுநன்றென்றார். (உ)

கருங. இன்மையு ளின்மை விருந்தொரால் வன்மையுள்
வன்மை மடவார்ப் பொறை. ங.

இ - ள். இன்மையுள் இன்மை விருந்து ஒரால்-ஒருவனுக்கு வறுமையுள்வைத்து வறுமையாவது விருந்தினரையேற்றுக்கொள்ளாது நீக்குதல்;—வன் மையுள் வன்மை மடவார்ப் பொறை - அதுபோல வன்மையுள்வைத்து வன்மையாவது அறிவின்மை யான் பிழைசெய்தாரைப் பொறுத்தல். எ - று.

இஃதெடுத்துக்காட்டுவமை. அறனல்லாத விருந்தொரால் பொருளுடைமையா காதவாறுபோல, மடவார்ப்பொறையும மென்மையாகாதே வன்மையாமென்பது கருத்து.
(௩)

௱ருச. நிறையுடைமை நீங்காமை வேண்டிற் பொறையுடைமை
போற்றி யொழுகப் படும். ௪.

இ - ள். நிறையுடைமை நீங்காமை வேண்டின் - ஒருவன் சால்புடைமை தன்க ண் ன்று நீங்காமை வேண்டுவனாயின்,—பொறையுடைமை போற்றி ஒழுகப்படும் - அவனாற் பொறையுடைமை தன்கண் அழியாமற் காத்தொழுகப்படும். எ - று.

பொறையுடையாற்கல்லது சால்பில்லையென்பதாயிற்று. இவை நான்குபாட்டா லும் பொறையுடைமையது சிறப்புக் கூறப்பட்டது.
(௪)

௱ருரு. ஒறுத்தாரை யொன்றாக வையாரே வைப்பர்
பொறுத்தாரைப் பொன்போற் பொதிந்து. ரு. ச்சு
கசு ம் அதி.—பொறையுடைமை.

இ - ள். ஒறுத்தாரை ஒன்றாக வையார் - பிறன் தமக்குத் தீங்குசெய்தவழிப் பொறாது அவனையொறுத்தாரை அறிவுடையார் ஒருபொருளாக மனத்துக்கொள் ளார்,—பொறுத்தாரைப் பொன்போல் பொதிந்து வைப்பர் - அதனைப் பொறுத்தா ரைப் பொன்போற்

பொதிந்து கொள்வர். எ - று.

ஒறுத்தவர் தாமும் அத்தீங்கு செய்தவனேடொத்தலின், ஒன்றாகவையாரென் றார். பொதிந்துவைத்தல் சால்புடை மைபற்றி இடைவிடாது நினைத்தல். (௬)

**கருசு. ஒறுத்தார்க் கொருநாளை யின்பம் பொறுத்தார்க்குப்**
**பொன்றுந் துணையும் புகழ். சு.**

இ - ள். ஒறுத்தார்க்கு ஒருநாளை இன்பம் - தமக்குத் தீங்கு செய்தவனை யொறுத் தார்க்கு உண்டாவது அவ்வொருநாளை யின்பமே;—பொறுத்தார்க்குப் பொன்றுந் துணையும் புகழ் - அதனைப் பொறுத்தார்க்கு உலகமழியுமளவும் புகழுண்டாம். எ - று.

ஒரு நாளையின்பம் அந்நாளொன்றினும் கருதியது முடித்தே மெனத் தருக்கியிருக் கும் பொய்யின்பம். ஆதாரமாகிய உலகம் பொன்றப் புகழும் பொன்றுமாகலின், ஏற்புடையுலகென்னுஞ் சொல் வருவித்துரைக்கப்பட்டது. (சு)

**கருஎ. திறனல்ல தற்பிறர் செய்யினு நோநொந்**
**தறனல்ல செய்யாமை நன்று. எ.**

இ - ள். திறன் அல்ல தற் பிறர் செய்யினும் - செய்யத்தகாத கொடியவற்றைத் தன்கட்பிறர் செய்தாராயினும்,—நோ நொந்து அறன் அல்ல செய்யாமை நன்று - அவர்க்கு அதனல் வருந்துன்பத்திற்கு நொந்து தான் அறனல்லாத செயல்களைச் செய்யாதிருத்தல் ஒருவனுக்கு நன்று. எ - று.

உம்மை சிறப்பும்மை. துன்பத்திற்கு நோதலாவது "உம்மை—யெரிவாய் நிர யத்து வீழ்வர்கொல் * " என்றுபரிதல். (எ)

**கருஅ. மிகுதியான் மிக்கவை செய்தாரைத் தாந்தந்**
**தகுதியான் வென்று விடல். அ.**

இ - ள். மிகுதியான் மிக்கவை செய்தாரை - மனச்செருக்காற் றங்கட்டீயவற்றைச் செய்தாரை—தாம் தந்தகுதியான் வென்றுவிடல் -

தாம் தம்முடைய பொறையான் வென்றுவிடுக. எ - று.

தாமும் அவர்கட்டீயவற்றைச்செய்து தோலாது பொறையான் அவரின் மேம் பட்டு வெல்கவென்பதாம். இவை நான்குபாட்டானும் பிறர்செய்தன பொறுத்தல் சொல்லப்பட்டது.

(அ)

கருகூ. துறந்தாரிற் றூய்மை யுடைய ரிறந்தார்வா
யின்னாச்சொ னோற்கிற் பவர். கூ.

இ - ள். துறந்தாரின் தூய்மை உடையர் - இல்வாழ்க்கைக்கணின்றேயும் துறந்தார்போலத் தூய்மையுடையார்—இறந்தார்வாய் இன்னாச்சொல் நோற்கிற்பவர் - நெறியைக் கடந்தார்வாய் இன்னாதசொல்லைப் பொறுப்பவர். எ - று.

---

• தமகம பிகழ்நதமை தாயபொ டிப்ப தன்றுமற்—றமைமை விகழ்கத ல்லைப் பயத்தா - தும்மை—பெரிவாய் ிசயத்து வீழ்வர்கொ லென்று—பரிவதூஉஞ் சான்றோர் கடன்—நாலடியார், துறவு.

## களம் அதி.—அழுக்காறுமை.

சஎ

தூய்மை மனமாசின்மை. வாயென வேண்டாது கூறினார், தெனத் தாம்வேண்டியதனிழிபு முடித்தற்கு.

தீயசொற்கள் பயின்ற

(க)

கசுo. உண்ணாது நோற்பார் பெரியர் பிறர்சொல்லு
மின்னாச்சொ னோற்பாரிற் பின். கo.

இ - ள். உண்ணுது நோற்பார் பெரியர் - விரதங்களான் உணவைத்தவிர்ந்து உற்ற நோயைப் பொறுப்பார் எல்லாரினும் பெரியர்;—பிறர் சொல்லும் இன்னுச்சொல் நோற்பாரிற் பின் - அவர் பெரியராவது தம்மைப் பிறர்சொல்லும் இன்னுதசொல்லைப் பொறுப்பாரிற்பின். எ - று.

பிறர் அறிவிலாதார். நோலாமைக்கேதுவாகிய இருவகைப்பற்றுமு நின்றே நோற்றலின், இன்னுச்சொனேற்பாரிற் பின்னென்ருர். இவையிரண்டெபாட்டானும் பிறர் மிகைக்கச்சொல்லியன பொறுத்தல் கூறப்பட்டது. (௩0)

---

## கள ம் அதி.—அழுக்காருமை.

இதனுள் அழுக்காறென்பது ஒருசொல். அதற்குப் பொருள் * மேலேயுரைத் தாம். அச்சொற் பின்னழுக் காற்றைச் செய்யாமையென்னும் பொருள்பட எதிர்மறை யாகாரமும் மகரவைகாரவிகுதியும்பெற்று அழுக்காருமையென நின்றது. இப்பொருமையும் பொறைக்கு மறுதலையாகலின், இதனை விலக்குதற்கு இது பொறையுடைமை யின்பின் வைக்கப்பட்டது.

**கக௧.** ஒழுக்காறுக் கொள்க வொருவன்றன் னெஞ்சத்
தழுக்கா றிலாத வியல்பு. **௧.**

இ - ள். ஒருவன் தன்னெஞ்சத்து அழுக்காறு இலாத இயல்பு - ஒருவன் தன் னெஞ்சத்தின் கண் அழுக்காறென்னுங் குற்றமில்லாத இயல்பினை—ஒழுக்காறுக் கொள்க - தனக்கோதிய ஒழுக்கநெறியாகக் கொள்க. எ - று.

இயல்பு அறிவோடுகூடிய தன்மை. அத்தன்மையும் நன்மைபயத்தலின், ஒழுக்க நெறிபோல உயிரினுமோம்புகவென்பதாம். (௧)

**கக௨.** விழுப்பேற்றி னஃதொப்ப தில்லையார் மாட்டு
மழுக்காற்றி னன்மை பெறின். **௨.**

இ - ள். யார்மாட்டும் அழுக்காற்றின் அன்மை பெறின் -

யாவர்மாட்டும் அழுக் காற்றினின்று நீங்குதலை ஒருவன் பெறுமாயின்,—விழுப்பேற்றின் அஃது ஒப்பது இல்லை - மற்றவன்பெறுஞ் சீரிய பேறுகளுள் அப்பேற்றினையொப்பதில்லை. எ - று.

அழுக்காறு பகைவர்மாட்டும் 'ஒழிதற்பாற்றென்பார், யார்மாட்டுமென்றார். அன்மை வேறுதல். இவையிரண்டுபாட்டானும் அழுக்காறின்மையது குணங் கூறப்பட்டது. (உ)

கசுரு. அறனாக்கம் வேண்டாதா னென்பான் பிறனாக்கம்
பேணா தழுக்கறுப் பான். க.

* திருக்குறள், கூ0.

அ

# சஅ களம் அதி.—அழுக்காறுமை.

இ - ள். அறன் ஆக்கம் வேண்டாதான் என்பான் - மறுமைக்கும் இம்மைக்கும் அறமுஞ் செல்வமுமாகிய உறுப்புக்களைத் தனக்கு வேண்டாதானென்று சொல்லப்படுவான்—பிறன் ஆக்கம் பேணாது அழுக்கறுப்பான்-பிறன் செல்வங்கண்டவழி அதற்கு உவவாது அழுக்காற்றைச் செய்வான். எ - று.

அழுக்கறுத்தலெனினும் அழுக்காறெனினுமொக்கும். அழுக்காறு செய்யின் தனக்கே ஏதமாமென்பதாம். (ங)

கசுச. அழுக்காற்றி னல்லவை செய்யா ரிழுக்காற்றி

னேதம் படுபாக் கறிந்து. ௪.

இ - ள். அழுக்காற்றின் அல்லவை செய்யார் - அழுக்காறு ஏதுவாக அறனல்லவற்றைச் செய்யார் அறிவுடையார்—இழுக்காற்றின் ஏதம் படுபாக்கு அறிந்து - அந்நெறியால் தமக்கிருமையினும் துன்பம் வருதலையறிந்து. எ - று.

அறனல்லவையாவன செல்வம் கல்வி முதலியனவுடையார்கட்கு உங்குவினைத்தலும், சொல்லுதலும், செய்தலுமாம்.

(௪)

**௧௬௫. அழுக்கா றுடையார்க் கதுசாலு மொன்னார்**
**வழுக்கியுங் கேடீன் பது. ௫.**

இ - ள். ஒன்னார் வழுக்கியும் கேடு ஈன்பது - அழுக்காறு பகைவரையொழிந்துங் கேடு பயப்பதொன்றாகலின்,—அழுக்காறு உடையார்க்கு அது சாலும் - அவ்வழுக்காறுடையார்க்குப் பகைவர் வேண்டா, கேடுபயத்தற்கு அதுதானேயமையும். எ - று.

அதுவேயென்னும் பிரிநிலையேகாரம் விகாரத்தாற்றொக்கது.

(௫)

**௧௬௬. கொடுப்ப தழுக்கறுப்பான் சுற்ற முடுப்பதூஉ**
**முண்பதூஉ மின்றிக் கெடும். ௬.**

இ - ள். கொடுப்பது அழுக்கறுப்பான் சுற்றம் - ஒருவன் பிறர்க்குக் கொடுப்ப தன்கண் அழுக்காற்றைச் செய்வானது சுற்றம்—உடுப்பதும் உண்பதும் இன்றிக் கெடும் - உடுக்கப்படுவதும் உண்ணப்படுவது மின்றிக் கெடும். எ - று.

கொடுப்பதன்கணழுக்கறுத்தலாவது கொடுக்கப்படும் பொருள்களைப் பற்றிப் பொறாமைசெய்தல். சுற்றங்கெடுமெனவே, அவன் கேடு சொல்லாமையே பெறப்பட்டது. பிறர்பேறு பொறாமை தன்பேற்றையேயன்றித் தன்சுற்றத்தின் பேற்றையும் இழப்பிக்குமென்பதாம்.

(௬)

௧௬எ. அவ்வித் தழுக்கா றுடையானைச் செய்யவ
டவ்வையைக் காட்டி விடும். எ.

இ - ள். அழுக்காறு உடையானை - பிறராக்கங்கண்ட வழிப் பொறுமையுடை யானை—செய்யவள் அவ்வித்துத் தவ்வையைக் காட்டிவிடும் - திருமகள் தானும் பொறாது தன்றவ்வைக்குக் காட்டி நீங்கும். எ - று.

தவ்வை மூத்தவள். தவ்வையைக்காட்டியென்பது "அறிவுடையந்தண னவனைக் காட்டென்றானே*" என்பதுபோல உருபு மயக்கம். மனத்தைக்கோடுவித்து அழுக்காறுடையனுயினனையென்றுரைப்பாருமுனர். (எ)

---

*கலித்தொகை, மருதம்,—எ.

## ௧௮ம் அதி.—வெஃகாமை.

சக

௧௬அ. அழுக்கா றெனவொரு பாவி திருச்செற்றுத்
தீயுழி யுய்த்து விடும். அ.

இ - ள். அழுக்காறு என ஒருபாவி-அழுக்காறென்றுசொல்லப்பட்ட ஒப்பில்லாத பாவி—திருச் செற்றுத் தீயுழி உய்த்துவிடும் - தன்னையுடையானை இம்மைக்கட்செல் வத்தைக்கெடுத்து, மறுமைக்கண் நரகத்திற் செலுத்திவிடும். எ - று.

பண்பிற்குப் பண்பியில்லையேனும், தன்னையாக்கினனை இருமையுங்கெடுத்தற் கொடுமைபற்றி, அழுக்காற்றினைப் பாவியென்றார், கொடியானைப் பாவியென்னும் வழக்குண்மையின். இவையாறுபாட்டானும் அழுக்காறுடைமையது குற்றங் கூறப் பட்டது. (அ)

௧௬௯. அவ்விய நெஞ்சத்தா னாக்கமுஞ் செவ்வியான்

கேடு நினைக்கப் படும். க௯

இ - ள். அவ்விய நெஞ்சத்தான் ஆக்கமும் - கோட்டத்தினைப்பொருந்திய மனத்தையுடையவனதாக்கமும்,—செவ்வியான் கேடும் நினைக்கப்படும் - எனச் செம்மையுடையவனது கேடும் உளவாயின், அவை ஆராயப்படும். எ - று.

கோட்டம் ஈண்டழுக்காறு. உளவாயினென்பது எஞ்சிநின்றது. ஆக்கக்கேடுகள் கோட்டமுஞ் செம்மையும் ஏதுவாக வருதல் கூடாமையின், அறிவுடையாரால் இதற் கேதுவாகிய பழவினை யாதென்றாராயப்படுதலின், நினைக்கப்படுமென்றார்: "இம்மைச் செய்தன யானறி நல்வினை—யும்மைப் பயன்கொ லொருதனி யுழந்தித்—திருத்தகு மாமணிக் கொழுந்துடன் போந்தது" * என நினைக்கப்பட்டவாறறிக. (௯)

௱௭0. அழுக்கற் றகன்றாரு மில்லையஃ தில்லார்
பெருக்கத்திற் றீர்ந்தாரு மில். ௧0.

இ - ள். அழுக்கற்று அகன்றாரும் இல்லை - அழுக்காற்றைச் செய்து பெரியராயி னாருமில்லை;—அஃது இல்லார் பெருக்கத்தின் றீர்ந்தாரும் இல் - அச்செயலிலாதார் பெருக்கத்தினீங்கினாருமில்லை. எ - று.

இவையிரண்டொட்டாலும் கேடுமாக்கமும் வருதற்கேது ஒருங்கு கூறப்பட்டது.

---

## ௧௮ம் அதி.—வெஃகாமை.

அஃதாவது பிறர்க்குரிய பொருளை வௌவக்கருதாமை. பிறருடைமை கண்ட வழிப் பொறுமையேயன்றி அதனைத் தான் வௌவக்கருதுதலுங் குற்றமென்றற்கு இஃது அழுக்காறாமையின்பின் வைக்கப்பட்டது.

௱௭௧. நடுவின்றி நன்பொருள் வெஃகிற் குடிபொன்றிக்

குற்றமு மாங்கே தரும். க.

இ - ன். நடுவு இன்றி நன்பொருள் வெஃகின் - பிறர்க்குரியன கோடல் நமக்கு அறனன்றென்னும் நடுவுநிலைமையின்றி அவர் நன்பொருளை ஒருவன் வெஃகுமாயின்,—குடி பொன்றிக் குற்றமும் ஆங்கே தரும் - அவ்வெஃகுதல் அவன்குடியைக் கெடச்செய்து, பல குற்றங்களையும் அப்பொழுதே அவனுக்குக் கொடுக்கும். எ - று.

---

* சிலப்பதிகாரம், அடைக்கலக்காதை, கக - கரு.

# ரு0 கஅம் அதி.—வெஃகாமை.

குடியை வளரச்செய்து பலநன்மையும் பயக்குமியல்புபற்றி, வெஃகினென்பார், நன்பொருள் வெஃகினென்றார். பொன்ற வென்பது பொன்றி யெனத் திரிந்துநின் றது*; செய்தென்பது சொல்லெச்சம். (க)

கஎஉ. படுபயன் வெஃகிப் பழிப்படுவ செய்யார்
நடுவன்மை நாணு பவர். உ.

இ - ள். படு பயன் வெஃகிப் பழிப்படுவ செய்யார்-பிறர் பொருளை வௌவினால் தமக்கு வரும் பயனை விரும்பி அது வௌவுதற்குப் பழியின்கண்ணே படுஞ்செயல் களைச் செய்யார்—நடுவு அன்மை நாணுபவர் - நடுவுநிலைமையன்மையை அஞ்சுப வர். எ - று.

நடுவு ஒருவன் பொருட்குப் பிறன் உரியனல்லனென்னும் நடுவு. (உ)

கஎங. சிற்றின்பம் வெஃகி யறனல்ல செய்யாரே
மற்றின்பம் வேண்டு பவர். ங.

இ - ள் சிற்றின்பம் வெஃகி அறனல்ல செய்யார் - பிறர்பால் வௌவியபொரு ளால் தாமெய்தும் நிலையில்லாத வின்பத்தை விரும்பி

அவர்மாட்டு அறனல்லாத செயல்களைச் செய்யார்—மற்றின்பம் வேண்டுபவர் - அறத்தான் வரும் நிலையுடைய வின்பத்தைக் காதலிப்பவர். எ - று.

பாவத்தான் வருதலின் அப்பொழுதே யழியுமென்பார், சிற்றின்பமென்றார். மற்றையின்பமென்பது மற்றின்பமென நின்றது. (ங)

**கஎச. இலமென்று வெஃகுதல் செய்யார் புலம்வென்ற**
**புன்மையில் காட்சி யவர். ச.**

இ - ள். இலம் என்று வெஃகுதல் செய்யார் - யாம் வறிய மென்று கருதி அது தீர்தற்பொருட்டுப் பிறர்பொருளை விரும்புதல் செய்யார்—புலம் வென்ற புன்மையில் காட்சியவர் - ஐம்புலன்களையும் வென்ற குற்றமில்லாத காட்சியினையுடையார். எ-று.

வெல்லுதல் பாவநெறிக்கட்செல்ல விடாமை. புலம் வென்ற புன்மையில் காட்சி யவர்க்கு வறுமையின்மையின், வெஃகுதலு மில்லையாயிற்று. புன்மையில் காட்சி பொருள்களைத் திரிபின்றி யுணர்தல். (ச)

**கஎரு. அஃகி யகன்ற வறிவென்னும் யார்மாட்டும்**
**வெஃகி வெறிய செயின். ரு.**

இ - ள். அஃகி அகன்ற அறிவு என்னும் - நுண்ணிதாய் எல்லாநூல்களினுஞ் சென்ற தம்மறிவு என்ன பயத்ததாம்,—வெஃகி யார்மாட்டும் வெறிய செயின்பொருளை விரும்பி யாவர்மாட்டும் அறிவோடு படாத செயல்களை அறிவுடையார் செய் வராயின். எ -று.

---

* குடிபொன்றிக் குற்றமு மாங்கே தரும், குடிமடிந்து குற்றம் பெருகும், இருணீங்கி யின்பம் பயக்கும் என்புழிப் பொன்றுவித்து, மடிவித்து, நீங்குவித்து எனற்பாலன பிறவினைப் பொருளுணர்த்தும் விவ்விகுதி தொக்கு, பொன்றி, மடிந்து, நீங்கி என நின்றனவெனக் கொண் டார் தொல்காப்பியச் சூத்திரவிருத்திகாரர். இவ்வாறும் வருவனவற்றை வடநூலார் அந்தர்ப் பாவித

யார்மாட்டும் வெறிய செய்தலாவது தக்கார்மாட்டும் தகாதார்மாட்டும் இழிந்த னவும் கடியனவும் முதலியன செய்தல். அறிவிற்குப் பயன் அவைசெய்யாமையாக லின், அறிவென்னுமென்றார். (ஞ)

**களசு. அருள்வெஃகி யாற்றின்க ணின்றான் பொருள்வெஃகிப்**
**பொல்லாத சூழக் கெடும். சு.**

இ - ள். அருள் வெஃகி ஆற்றின்கண் நின்றான் - அருளாகிய அறத்தை
விரும்பி அதற்குவழியாகிய இல்லறத்தின்கணின்றவன்— பொருள் வெஃகிப் பொல் லாத சூழக்கெடும் - பிறர்பொருளையவாவி அதனை வருவிக்குங் குற்றநெறிகளை எண் ணக்கெடும். எ - று.

இல்லறநெறியால் அறிவு முதிர்ந்துழியல்லது துறக்கப்படாமையின், அதனைத் துறவறத்திற்கு ஆறென்றார். கெடுதல் இரண்டறமுஞ் சோவிழத்தல். சூழ்ந்த துணை யானே கெடுமெனவே, செய்தாற்கெடுதல் சொல்லாமையே பெறப்பட்டது. (சு)

**களஎ. வேண்டற்க வெஃகியா மாக்கம் விளைவயின்**
**மாண்டற் கரிதாம் பயன். எ.**

இ - ள். வெஃகி ஆம் ஆக்கம் வேண்டற்க - பிறர்பொருளை யவாவிக்கொண்டு அதனாலாகின்ற ஆக்கத்தை
விரும்பாதொழிக;—விளைவயின் பயன் மாண்டற்கு அரிதாம்-பின்னனுபவிக்குங்கால் அவ்வாக்கத்தின் பயன் நன்றாதலில்லை ஆகலான். எ-று.

விளையென்பது முதனிலைத்தொழிற்பெயர்.
இவையேழுபாட்டானும் வெஃகுத லின் குற்றம் கூறப்பட்டது.

(எ)

௧எஅ. அஃகாமை செல்வத்திற் கியாதெனின் வெஃகாமை
வேண்டும் பிறன்கைப் பொருள். அ.

இ - ள். செல்வத்திற்கு அஃகாமை யாதெனின் - சுருங்கன் மாலைத்தாகிய செல் வத்திற்குச் சுருங்காமைக்காரணம் யாதென்று ஒருவனுராயின்,—பிறன் வேண்டும் கைப்பொருள் வெஃகாமை - அது பிறன்வேண்டுங் கைப்பொருளைத் தான் வேண்டாமையாம். எ - று.

அஃகாமை ஆகுபெயர். வெஃகாதான்செல்வம் அஃகாதென்பதாயிற்று. (அ)

௧எ௯. அறனறிந்து வெஃகா வறிவுடையார்ச் சேருந்
திறனறிந் தாங்கே திரு. ௯.

இ - ள். அறன் அறிந்து வெஃகா அறிவுடையார் - இஃதறனென்றறிந்து பிறர் பொருளை விரும்பாத அறிவுடையாரை—திரு திறன் அறிந்து ஆங்கே சேரும் - திருமகள் தானடைதற்காங்கூற்றினையறிந்து அக்கூற்றானே சென்றடையும். எ - று.

அடைதற்காங்கூறு காலமும், இடனும், செவ்வியும் முதலாயின. பாட்டானும் வெஃகாமையின் குணங் கூறப்பட்டது.

இவையிரண்டு

(௯)

௧அ௦. இறலீனு மெண்ணாது வெஃகின் விறலீனும்
வேண்டாமை யென்னுஞ் செருக்கு. ௧௦.

இ - ள். எண்ணாது வெஃகின் இறல் ஈனும் - பின் விளைவதறியாது ஒருவன் பிறன்பொருளை வெளவக்கருதின் அக்கருத்து அவனுக்கிறுதியைப் பயக்கும்,—வேண்டாமை என்னும் செருக்கு விறல் ஈனும் - அப்பொருளை வேண்டாமையென்னுஞ் செல்வம் வெற்றியைப் பயக்கும். எ - று.

பகையும் பாவமும் பெருக்கலின் இறலீனுமென்றும், அப்பொருளை வேண்டி உழல்வோர் யாவரையுங் கீழ்ப்படுத்தலின் விறலீனுமென்றுங் கூறினார். செருக்கு ஆகுபெயர். இதனால் அவ்விருமையும் ஒருங்கு கூறப்பட்டன. (க0)

---

## ககூ ம் அதி.—புறங்கூறாமை.

அஃதாவது காணாதவழிப் பிறரையிகழ்ந்துரையாமை. மொழிக்குற்றம் மனக் குற்றமடியாக வருதலான், இஃது அழுக்காறாமை வெஃகாமைகளின்பின் வைக்கப் பட்டது.

கஅக. அறங்கூறா னல்ல செயினு மொருவன்
புறங்கூறா னென்ற லினிது. க.

இ - ள். ஒருவன் அறம் கூறான் அல்ல செயினும் - ஒருவன் அறனென்று சொல்லுவதுஞ் செய்யாது பாவங்களைச் செய்யுமாயினும்,—புறங்கூறான் என்றல் இனிது - பிறனைப் புறங்கூறானென்று உலகத்தாராற் சொல்லப்படுதல் நன்று. எ - று.

புறங்கூறாமை அக்குற்றங்களானிழிக்கப்படாது மேற்பட்டுத் தோன்றுமென்பதாம். இதனால் அவ்வறத்தினது நன்மை கூறப்பட்டது. (க)

கஅஉ. அறனழீஇ யல்லவை செய்தலிற் றீதே
புறனழீஇப் பொய்த்து நகை. உ.

இ - ள். அறன் அழீஇ அல்லவை செய்தலின் தீது - அறனென்பதொன்றில்லை யென அழித்துச்சொல்லி

அதன்மேற்பாவங்களைச் செய்தலினுந் தீமையுடைத்து— புறன் அழீஇப் பொய்த்து நகை - ஒருவனைக் காணுதவழி இகழ்ந்துரையால் அழித்துச் சொல்லிக் கண்டவழி அவனோடு பொய்த்துநகுதல். எ - று.

உறழ்ச்சி நிரனிறைவகையாற் கொள்க. அழித்தல் ஒளியைக்கோறல். (உ)

கஅங. புறங்கூறிப் பொய்த்துயிர் வாழ்தலிற் சாத
லறங்கூறு மாக்கந் தரும். ௩.

இ - ள். புறங்கூறிப் பொய்த்து உயிர் வாழ்தலின் - பிறனைக் காணுதவழி இகழ்ந்துரைத்துக் கண்டவழி அவற்கினியனுகப் பொய்த்து ஒருவனுயிர்வாழ்தலின்—சாதல் அறம் கூறும் ஆக்கம் தரும் - அது செய்யாது சாதல் அவனுக்கு அறநூல்கள் சொல்லும் ஆக்கத்தைக் கொடுக்கும். எ - று.

பின் புறங்கூறிப் பொய்த்தலொழிதலின், சாதல் ஆக்கந்தருமென்றார். ஆக்கம் அஃதொழிந்தார் மறுமைக்கணெய்தும் பயன். அறம் ஆகுபெயர். தருமென்பது இடவழுவமைதி. * (௩ )

* தொல்காப்பியத்துக் கிளவியாக்கத்தில், "அவற்றுள், தருசொல் வருசொல்லாயிரு கிளவியுந்—தன்மை முன்னிலை யாயீரிடத்த" என்னுஞ் சூத்திரத்திற்கு மாறுக நின்றுப் படர்க்கை யிடத்திற்கு வந்தமையின், இடவழுவமைதியாயிற்று.

# ககம் அதி.—புறங்கூறாமை.

ருக.

கஅச. கண்ணின்று கண்ணறச் சொல்லினுஞ் சொல்லற்க
முன்னின்று பின்னோக்காச் சொல். ச.

இ - ள். கண் நின்று கண் அறச்சொல்லினும் - ஒருவனெதிரேநின்று கண்ணோட் டமறச் சொன்னாயினும்,—முன் இன்று பின்நோக் காச் சொல் சொல்லற்க - அவனெதிரின்றிப் பின்வருங்குற்றத்தை நோக்காத சொல்லைச் சொல்லாதொழிக. எ - று.

பின் ஆகுபெயர். சொல்வான்றொழில் சொன்மேலேற்றப்பட்டது. இவை மூன்றுபாட்டானும் புறங்கூற்றினது கொடுமை கூறப்பட்டது. (௪)

**கஅ௫. அறஞ்சொல்லு நெஞ்சத்தா னன்மை புறஞ்சொல்லும்**
**புன்மையாற் காணப் படும். ௫.**

இ - ள். அறம் சொல்லும் நெஞ்சத்தான் அன்மை-புறஞ்சொல்லுவானொருவன் அறனை நன்றென்று சொல்லினும், அது தன்மனத்தானாய்ச் சொல்லுகின்றானல்ல னென்பது †— புறஞ்சொல்லும் புன்மையால் காணப்படும் - அவன் புறஞ்சொல்லு தற்குக் காரணமான மனப்புன்மையானே அறியப்படும். எ - று.

மனந்தீதாக லின், அச்சொற் கொள்ளப்படா தென்பதாம். (௫)

**கஅ௬. பிறன்பழி கூறுவான் றன்பழி யுள்ளுந்**
**திறன்றெரிந்து கூறப் படும். ௬.**

இ - ள். பிறன் பழி கூறுவான் - பிறனொருவன் பழியை அவன்புறத்துக் கூறு மவன்—தன்பழியுள்ளும் திறன் தெரிந்து கூறப்படும் - தன்பழி பலவற்றுள்ளும் உளையுந் திறமுடையவற்றைத் தெரிந்து அவனாற் கூறப்படும். எ - று.

புறத்தென்பது அதிகாரத்தாற்பெற்றாம். இது வருகின்றவற்றிற்குமொக்கும். திறன் ஆகுபெயர். தன்னைப் புறங்கூறியவாறு கேட்டான் அக்கூறியாற்கு அவ்வள வன்றி அவனிறந்துபட்டு உளையுந் திறத்தனவாகிய பழிகளை நாடி எதிரே கூறுமாக லின், திறன்றெரிந்து கூறப்படுமென்றார்.

கஅ௭. பகச்சொல்லிக் கேளிர்ப் பிரிப்பர் நகச்சொல்லி
நட்பாட றேற்றா தவர். ௭.

இ - ள் பகச் சொல்லிக் கேளிர்ப் பிரிப்பர் - தம்மை விட்டு நீங்குமாற்றாற் புறங் கூறித் தங்கேளிரையும் பிரியப்பண்ணுவர்—நகச்சொல்லி நட்பாடல் தேற்றாதவர்கூடி மகிழுமாறு இனியசொற்களைச் சொல்லி அயலாரோடு நட்பாடலை அறியா தார். ௭ - று.

சிறப்பும்மை விகாரத்தாற்றொக்கது. கேளிரையும் பிரிப்பரென்றகருத்தான், அய லாரோடுமென்பது வருவித்துரைக்கப்பட்டது. அறிதல் தமக்குறுதியென்றறிதல்.

---

* முன்னின்று பின்னோக்காச்சொல்.

---

இது ஒருபொருளின் வினை மற்றொருபொருளின் வினையானது. பிரயோகவிவேகம், திங்ஙப்படலம், "மருஞறு காரணம்" என்னும் கச - ம் பாட்டிற் காண்க.

† அறஞ்சொல்லு நெஞ்சத்தான் என்பதனை நெஞ்சோடறஞ் சொல்வானென விகுதி பிரித்துக்கூட்டுவர் பிரயோகவிவேகநூலார்.

## ருச உ௦ ம் அதி.—பயனிலசொல்லாமை.

"கடிபு-மிடர்தேற்றான் சோர்ந்தனன் கை"* என்புழிப் போலத் தேற்றாமை தன்வினையாய்நின்றது. புறங்கூறுவார்க்கு யாவரும் பகையாவரென்பது கருத்து. (௭)

கஅஅ. தன்னிபார் குற்றமுந் தூற்று மரபினா
ரென்னைகொ லேதிலார் மாட்டு. அ.

இ - ள். தன்னியார் குற்றமும் தூற்றும் மரபினர் - தம்மொடு செறிந்தாரது குற்றத்தையும் அவர்புறத்துத் தூற்றுமியல்பினையுடையார்—ஏதிலார்மாட்டு என்னை கொல் - அயலார்மாட்டுச் செய்வது யாதுகொல்லோ! எ - று.

தூற்றுதல் பலருமறியப் பரப்புதல். அதனிற்கொடியது பிறிதொன்று காணாமை யின், என்னைகொலென்றார். செய்வதென்பது சொல்லெச்சம். என்னர்கொலென்று பாடமோதி, எவ்வியல்பினராவரென்றுரைப்பாருமுளர். (அ)

## ௧அ௯. அறனோக்கி யாற்றுங்கொல் வையம் புறனோக்கிப்
## புன்சொ லுரைப்பான் பொறை. ௯.

இ - ள். புறன் நோக்கிப் புன்சொல் உரைப்பான் பொறை - பிறர் நீங்கினவளவு பார்த்து அவர் பழித்துரையைஉரைப்பானதுஉடற்பாரத்தை—வையம்அறன்நோக்கி ஆற்றுங்கொல் - நிலம் இக்கொடியது பொறுத்தலே எனக்கறமாவ தெனக் கருதிப் பொறுக்கின்றதுபோலும். எ - று.

எல்லாவற்றையும் பொறுத்தல் இயல்பாயினும், இது பொறுத்தற்கரிதென்னுங் கருத்தால், அறனோக்கியாற்றுங்கொலென்றார். இவையைந்து பாட்டானும் புறங்கூறு வார்க் கெய்துங்குற்றங் கூறப்பட்டது. (௯)

## ௧௯0. ஏதிலார் குற்றம்போற் றங்குற்றங் காண்கிற்பிற்
## றீதுண்டோ மன்னு முயிர்க்கு. ௧0.

இ - ள். ஏதிலார் குற்றம்போல் தங்குற்றம் காண்கிற்பின் - ஏதிலாரைப் புறங் கூறுவார் அதற்கு அவர் குற்றங்காணுமாறுபோலப் புறங்கூறலாகிய தங்குற்றத்தை யுங் காண வல்லராயின்,—மன்னும் உயிர்க்குத் தீது உண்டோ - அவர் நிலைபேறு டைய வுயிர்க்கு வருவதொரு துன்பமுண்டோ? எ - று.

நடுவுநின்று ஒப்பக்காண்டலருமைநோக்கிக் காண்கிற்பினென்றும், கண்டவழி யொழிதலிற் பாவமின்றும் ஆகவே வரும் பிறவிகளினுந் துன்பமில்லையென்பது நோக்கி உயிர்க்குத் தீதுண்டோ வென்றுங்கூறினர். இதனாற்புறங்கூற்றொழிதற்கு உபாயங் கூறப்பட்டது. (௧0)

---

## ௨0 ம் அதி.—பயனிலசொல்லாமை.

அஃதாவது தமக்கும் பிறர்க்கும் அறம்பொருள் இன்பமாகிய பயன்களுள் ஒன்றும் பயவாத சொற்களைச் சொல்லாமை. பொய், குறளை, கடுஞ்சொல், பயனில் சொல்லென வாக்கின்கணிகழும் பாவநான்கனுள், பொய் துறந்தார்க்கல்லது ஒருதலையாகக் கடியலாகாமையின், அஃதொழித்து, இல்வாழ்வாராற் கடியப்படும் எனை மூன்றனுள், கடுஞ்சொல் இனியவைகூறலானும், குறளை புறங்கூறாமையானும், விலக்கி, நின்ற பயனில்சொல் இதனான் விலக்குகின்றாராகலின், இது புறங்கூறாமை யின்பின் வைக்கப்பட்டது.

---

* கலித்தொகை, மருதம்—உஎ.

---

## உ௦ ம் அதி.—பயனில்சொல்லாமை.

நிரு

**கககக. பல்லார் முனியப் பயனில சொல்லுவா**
**னெல்லாரு மெள்ளப் படும். க.**

இ - ள். பல்லார் முனியப் பயன் இல சொல்லுவான் - அறிவுடையார் கேட்டு வெறுப்பப் பயனிலவாகிய சொற்களைச் சொல்லுவான்—எல்லாரும்

பலருங்

எள்ளப்

படும் - எல்லாரானுமிகழப்படும். எ - று.

அறிவுடையார் பலரும் வெறுப்பவே ஒழிந்தாரானும் இகழப்படுதலின், மெள்ளப்படுமென்றார். மூன்றனுருபு விகாரத்தாற் றொக்கது.

எல்லாரு

(க)

**ககஉ. பயனில பல்லார்முற் சொல்ல னயனில**

நட்டார்கட் செய்தலிற் றீது.        உ.

இ - ள். பயன் இல பல்லார்முன் சொல்லல் - பயனிலவாகிய சொற்களை அறிவுடையார் பலர்முன்பே ஒருவன் சொல்லுதல்—நயன் இல நட்டார்கண் செய்தலின் தீது-விருப்பமிலவாகிய செயல்களைத் தன்னட்டார் மாட்டுச் செய்தலினும் தீது.எ-று. விருப்பமில வெறுப்பன. இச்சொல் அச்செயலினும் மிகவிகழ்ந்பாடு பயக்கு மென்பதாம். (உ)

ககூ௩. நயனில னென்பது சொல்லும் பயனில
பாரித் துரைக்கு முரை.        ௩.

இ - ள். பயன் இல பாரித்து உரைக்கும் உரை - பயனிலவாகிய பொருள்களை ஒருவன் விரித்துரைக்குமுரைதானே—நயன் இலன் என்பது சொல்லும் - இவன் நீதியிலனென்பதனை உரைக்கும். எ - று.

உரையால் இவன் நயனிலனென்பதறியலாமென்பார், அதனை உரைமேலேற்றி உரைசொல்லுமென்றார். (௩)

ககூ௪. நயன்சாரா நன்மையி னீக்கும் பயன்சாராப்
பண்பில்சொற் பல்லா ரகத்து.        ௪.

இ - ள். பயன் சாராப் பண்பு இல் சொல் பல்லாரகத்து - பயனொடுபடாத பண்பில் சொற்களை ஒருவன் பலரிடைச்சொல்லுமாயின்,—நயன் சாரா நன்மையின் நீக்கும்-அவை அவர்மாட்டு நீதியொடுபடாவாய், அவனை நற்குணங்களினீக்கும். எ-று.

பண்பு இனிமையும் மெய்ம்மையும் முதலாய சொற்குணங்கள். சொல்லுமாயி னென்பதும், அவர்மாட்டென்பதும், எச்சமாக வருவிக்கப்பட்டன. (௪)

கசுரு. சீர்மை சிறப்பொடு நீங்கும் பயனில
நீர்மை யுடையார் சொலின். ரு.

இ - ள். பயன் இல நீர்மையுடையார் சொலின் - பயனிலவாகிய சொற்களை இனியநீர்மையுடையார் சொல்லுவராயின்,—சீர்மை சிறப்பொடு நீங்கும் - அவரது விழுப்பமும் அதனல் வரும் நன்குமதிக்கற்பாடும் உடனே நீங்கும். எ - று.

நீர்மை நீரின்றன்மை. சொலினென்பது சொல்லாமையை விளக்கிற்று. (ரு) ருக உ0 ம்

## அதி.—பயனிலசொல்லாமை.

கசுசு. பயனில்சொற் பாராட்டு வானை மகனெனல்
மக்கட் பதடி யெனல். சு.

இ - ள். பயன் இல் சொல் பாராட்டுவானை மகன் எனல் - பயனில்லாத சொற்களைப் பலகாலுஞ் சொல்லுவானை மகனென்று சொல்லற்க,—மக்கட்பதடி எனல் - மக்களுட்பதரென்று சொல்லுக. எ - று.

அல்விகுதி வியங்கோள் முன் எதிர்மறையினும், பின் உடன்பாட்டினும் வந்தது. அறிவென்னும் உள்ளீடின்மையின், மக்கட்பதடியென்றார். இவையாறுபாட்டானும் பயனில்லாத சொற்களைச் சொல்லுதலின் குற்றங் கூறப்பட்டது. (சு)

கசுஎ நயனில சொல்லினுஞ் சொல்லுக சான்றோர்
பயனில சொல்லாமை நன்று. எ.

இ - ள். நயன் இல சான்றோர் சொல்லினும் சொல்லுக - நீதியொடு படாத சொற்களைச் சான்றோர் சொன்னாராயினும், அஃதமையும்:—பயன் இல சொல்லாமை நன்று - அவர் பயனிலவற்றைச் சொல்லாமை பெறின், அது நன்று. எ - று.

சொல்லினுமெனவே, சொல்லாமை பெறப்பட்டது. பயனிலவற்றினும் பயனில தீயவென்பதாம். (எ)

கஅ௯அ. அரும்பய னாயு மறிவினர் சொல்லார்
பெரும்பய னில்லாத சொல். அ.

இ - ள். அரும்பயன் ஆயும் அறிவினர் - அறிதற்கரிய பயன்களை ஆராயவல்ல அறிவினையுடையார்—பெரும்பயன் இல்லாத சொல் சொல்லார் - மிக்க பயனுடைய வல்லாத சொற்களைச் சொல்லார். எ - று.

அறிதற்கரிய பயன்களாவன வீடுபேறும், மேற்கதிச்செலவும் முதலாயின. பெரும்பயனில்லாதவெனவே, பயன் சிறிதுடையனவும் ஒழிக்கப்பட்டன. (அ)

க௯௯. பொருடீர்ந்த பொச்சாந்துஞ் சொல்லார் மருடீர்ந்த
மாசறு காட்சி யவர். ௯.

இ - ள். பொருள் தீர்ந்த பொச்சாந்தும் சொல்லார் - பயனினீங்கிய சொற்களை மறந்துஞ்சொல்லார்—மருள் தீர்ந்த மாசு அறு காட்சியவர் - மயக்கத்தினீங்கிய தூய வறிவினையுடையார். எ - று.

தூயவறிவு மெய்யறிவு. மருடீர்ந்தவென்னும் பெயரெச்சம் காட்சியவரென்னுங் குறிப்புப்பெயர்கொண்டது. இவை மூன்றுபாட்டானும் பயனிலசொல்லாமையின் குணங் கூறப்பட்டது. (௯)

உ௦௦. சொல்லுக சொல்லிற் பயனுடைய சொல்லற்க
சொல்லிற் பயனிலாச் சொல் ௧௦.

இ - ள். சொல்லின் பயனுடைய சொல்லுக - சொற்களிற் பயனுடைய சொற்களைச் சொல்லுக,—சொல்லின் பயனிலாச் சொல் சொல்லற்க - சொற்களிற் பயனில்லாத சொற்களைச் சொல்லாதொழிக. எ - று.

றுள

சொல்லினென்பது இருவழியும் மிகையாயினும், சொற்பொருட்பின்வருநிலை யென்னும் அணிநோக்கி வந்தது, "வைகலும் வைகல் வரக்கண்டும்"* என்பதுபோல. இதனாற் சொல்லப்படுவனவும் படாதனவும் நியமிக்கப்பட்டன. (க0)

## உகம் அதி.—தீவினையச்சம்.

அஃதாவது பாவங்களாயின செய்தற்கு அஞ்சுதல். இதனன் மெய்யின்கணி கழும் பாவங்களெல்லாந்தொகுத்து விலக்குகின்றாராகலின், இது பயனில சொல்லாமையின்பின் வைக்கப்பட்டது.

உ0க. தீவினையா ரஞ்சார் விழுமியா ரஞ்சுவர்
தீவினை யென்னுஞ் செருக்கு. க.

இ - ள். தீவினை யென்னும் செருக்கு - தீவினையென்று சொல்லப்படும் மயக் கத்தை—தீவினையார் அஞ்சார் - முன்செய்த தீவினையுடையார் அஞ்சார்,—விழுமியார் அஞ்சுவர் - அஃதிலராகிய சீரியார் அஞ்சுவர். எ - று.

தீவினையென்னுஞ் செருக்கெனக் காரியம் காரணமாக † உபசரிக்கப்பட்டது. மேற்றொட்டுச் செய்து கைவந்தமையான் அஞ்சாரென்றும், செய்த றியாமையான் அஞ்சுவரென்றுங் கூறினர். (க)

உ0உ. தியவை தீய பயத்தலாற் றீயவை
தீயினு மஞ்சப் படும். உ.

இ - ள். தீயவை தீய பயத்தலால் - தனக்கின்பம் பயத்தலைக் கருதிச் செய்யுந் தீவினைகள் பின் அஃதொழிந்துத் துன்பமே பயத்தலான்,—தீயவை தீயினும் அஞ்சப் படும் - அத்தன்மையவாகிய தீவினைகள் ஒருவனாற் றீயினுமஞ்சப்படும். எ - று.

பிறிதொருகாலத்தும் பிறிதொருதேயத்தும் பிறிதோருடம்பினுஞ்சென்று சுடு தல் தீக்கின்மையின், தீயினுமஞ்சப்படுவதாயிற்று. (உ)

உ0௩. அறிவினு ளெல்லாந் தலையென்ப தீய

செறுவார்க்குஞ் செய்யா விடல். ௩.

இ - ள். அறிவினுள் எல்லாம் தலை என்ப - தமக்குறுதி நாடும் அறிவுகளெல் லாவற்றுள்ளும் தலையாய அறிவென்று சொல்லுவர் நல்லோர்—செறுவார்க்கும் தீய செய்யா விடல் - தம்மைச் செறுவார்மாட்டும் தீவினைகளைச் செய்யாது விடுதலை. எ - று.

விடுதற்குக் காரணமாகிய அறிவை விடுதலென்றும், செயத்தக்குழியுஞ் செய்யாதொழியவே தமக்குத் துன்பம் வாராதென உய்த்துணர்தலின் அதனை அறிவினுளெல்லாந்தலையென்றுங் கூறினர். செய்யாதென்பது கடைக்குறைந்து நின்றது. மூன்றுபாட்டானும் தீவினைக்கஞ்சவேண்டுமென்பது கூறப்பட்டது.

இவை

(௩) * வைகலும் வைகல் வரக்கண்டும்

அஃதுணரார்—வைகலும் வைகலை வைகுமென்றின்புறுவர்—வைகலும் வைகற்றம் வாழ்நாண்மேல் வைகுதல்—வைகலை வைத்துணராதார்—நாலடியார், அறன்வலியுறுத்தல்.

† காரணங் காரியமாதற்கும் காரியங் காரணமாதற்கும் விதி பிரயோகவிவேகம், திங்குப் படலம், "மருளறுகாரணம்" என்னும் சூ-ம் பாட்டிற்காண்க.

உ0ச. மறந்தும் பிறன்கேடு சூழற்க சூழி
னறஞ்சூழுஞ் சூழ்ந்தவன் கேடு. ச.

இ - ள். பிறன் கேடு மறந்தும் சூழற்க - ஒருவன் பிறனுக்குக் கேடு பயக்கும் வினையை மறந்தும் எண்ணுதொழிக;—சூழின் சூழ்ந்தவன் கேடு அறம் சூழும் - எண் ணுவனுயின், தனக்குக் கேடுபயக்கும் வினையை அறக்கடவுள் எண்ணும். எ - று.

கேடென்பன ஆகுபெயர். சூழ்கின்றபொழுதே தானு முடன்சூழ்தலின், இவன் பிற்படினும் அறக்கடவுள் முற்படுமென்பது மெபறபபட்டது. அறககடவுளெண்ணு தலாவது அவன்கெடத் தான் நீங்க நினைத்தல். தீவினை எண்ணலுமாகாதென்பதாம்.()

உ௫. இலனென்று தீயவை செய்யற்க செய்யி
னிலனுகு மற்றும் பெயர்த்து. ரு.

இ - ள். இலன் என்று தீயவை செய்யற்க - யான் வறியனென்று கருதி அது தீர்தற்பொருட்டுப் பிறர்க்குத் தீவினைகளை ஒருவன் செய்யாதொழிக;—செய்யின் பெயர்த்தும் இலன் ஆகும் - செய்வானுயின், பெயர்த்தும் வறியனும். எ - று.

அத்தீவினையாற் பிறவிதோறும் இலனுமென்பதாம். அன்விகுதி முன் தனித் தன்மையினும், பின் படர்க்கையொருமையினும் வந்தது. தனித்தன்மை"உளனுவென் னுயிரையுண்டு" * என்பதனுனுமறிக. மற்று அசைநிலை. இலமென்றுபாடமோதுவாரு முளர். பொருளான் வறியனெனக் கருதித் தீயவை செய்யற்க, செய்யின் அப்பொரு ளானேயன்றி நற்குண நற்செய்கைகளானும் வறியனு மென்றுரைப்பாருமுளர். (௬)

உ0௬. தீப்பால தான்பிறர்கட் செய்யற்க நோய்ப்பால
தன்னை யடல்வேண்டா தான். ௬.

இ - ள். நோய்ப்பால தன்னை அடல்வேண்டாதான் - துன்பஞ்செய்யுங் கூற்ற வாகிய பாவங்கள் தன்னைப் பின்வந்து வருத்துதலை வேண்டாதவன்—தீப்பால தான் பிறர்கண் செய்யற்க - தீமைக்கூற்றவாகிய வினைகளைத் தான் பிறர்மாட்டுச் செய்யா தொழிக. எ - று.

செய்யின், அப்பாவங்களடுதல் ஒருதலையென்பதாம். (௬)

உ0௭. எனைப்பகை யுற்றாரு முய்வர் வினைப்பகை
வீயாது பின்சென் றடும். ௭.

இ - ள். எனைப்பகை உற்றாரும் உய்வர் - எத்துணைப் பெரிய பகையுடையாரும் அதனையொருவாற்றாற்றப்புவர்;—வினைப்பகை வீயாது பின் சென்று அடும் - அவ்வா றன்றித் தீவினையாகிய பகை நீங்காது புக்குழிப் புக்குக் கொல்லும். எ- று.

"வீயா—துடம்பொடு நின்ற வுயிருமில்லை" † என்புழியும் வீயாமை நீங்காமைக் கண் வந்தது.
(௭)

உ0அ. தீயவை செய்தார் கெடுத னிழறன்னை
வீயா தடியுறைந் தற்று. அ.

---

* கலித்தொகை, குறிஞ்சி—உஉ. † புறநானூறு, ௩௬௩.

## உஉ ம் அதி.—ஒப்புரவறிதல்.

இ - ள். தீயவை செய்தார் கெடுதல் - பிறர்க்குத் தீவினைகளைச்செய்தார் தாங்
கெடுதல் எத்தன்மைத்தெனின்,—நிழல் தன்னை வீயாது அடி உறைந்தற்று - ஒருவ னிழல் கெடாதாகப்போயும் அவன்றன்னை விடாது வந்து அடியின்கட்டங்கியதன் மைத்து. எ - று.

இவ்வுவமையைத் தன்காலம் வருந்துணையும் புலனாகாது உயிரைப்பற்றி நின்று அது வந்துழி உருப்பதாய தீவினையைச்செய்தார் பின் அதனாற் கெடுதற்கு உவமை யாக்கி உரைப்பாருமுளர். அஃதுரையன்றென்பதற்கு அடியுறைந்தன்றுதன்னை வீயர் தற்றென்றது வீயாதடியுறைந்தற்றென்ற பாடமே கரியாயிற்று. மேல் வீயாது பின் சென்றடுமென்றார். ஈண்டு அதனையுவமையான் விலக்கினார். (அ)

உ0கூ. தன்னைத்தான் காதல னாயி னெனைத்தொன்றுந்
துன்னற்க தீவினைப் பால். கூ.

இ - ள். தன்னைத் தான் காதலன் ஆயின் - ஒருவன், தன்னைத் தான் காதல் செய் தலுடையனாயின்,—தீவினைப்பால் எனைத்து ஒன்றும் துன்னற்க-தீவினையாகிய பகுதி எத்துணையுஞ் சிறியதொன்றாயினும் பிறர்மாட்டுச் செய்யாதொழிக. எ - று.

நல்வினை தீவினையென வினைப்பகுதி இரண்டாகலின், தீவினைப்பாலென் றார். பிறர்மாட்டுச்செய்த தீவினை தன்மாட்டுத் துன்பம் பயத்தல் விளக்கினாராகலின், தன்னைத்தான் காதலனாயினென்றார். இவையாறுபாட்டானும் பிறர்க்குத்தீவினைசெய் யிற் றாங்கெடுவரென்பது கூறப்பட்டது.
(கூ)

உகo. அருங்கேட னென்ப தறிக மருங்கோடித்
தீவினை செய்யா னெனின். கo.

இ - ள். மருங்கு ஓடித் தீவினை செய்யான் எனின் - ஒருவன்

செந்நெறிக்கட் செல்லாது கொடுநெறிக்கட்சென்று பிறர்மாட்டுத் தீவினைகளைச செய்யானாயின்,— அருங்கேடன் என்பது அறிக - அவனை அரிதாகிய கேட்டையுடைய னென்பதறிக. எ - று.

அருமை இன்மை. அருங்கேடனென்பதனை "சென்று சேர் கல்லாப் புள்ள புளனி லென்றூழ வியன்குளம்" * என்பதுபோலக் கொள்க †. ஒடியென்னும் வினையெசசம் செய்யானென்னும் எதிர்மறைவினையு டைசெய்தலோடு முடிந்தது. இதனால் தீவினை செய்யாதவன் கேடிலனென்பது கூறப்பட்டது. (௧0)

---

## உ௨ ம் அதி.—ஒப்புரவறிதல்.

அஃதாவது உலகநடையினையறிந்து செய்தல். உலகநடை வேதநடைபோல அறநூல்களுட் கூறப்படுவதன்றித் தாமேயறிந்து செய்யுந்தன்மைத்தாகலின், ஒப்புரவறிதலென்றார். மேல் மனமொழிமெய்களாற் றவிரத்தகுவன கூறினார், இனிச் செய்யத்தகுவனவற்றுள் எஞ்சிநின்றன கூறுகின்றாராகலின், இது தீவினையச்சத்தின் பின் வைக்கப்பட்டது.

---

* அகநானூறு, ௩௨.

† அருங்கேடன் என்பதனைக் கேடரியனென விகுதிபிரித்துக் கூட்டுவர் பிரயோகவிவேக நூலார்.



உ௧௧. கைம்மாறு வேண்டா கடப்பாடு மாரிமாட்
டென்னாற்றுங் கொல்லோ வுலகு. ௧.

இ - ள். மாரிமாட்டு உலகு என் ஆற்றும் - தமக்கு நீருதவுகின்ற மேகங்களி

னிடத்து உயிர்கள் என்ன கைம்மாறு செய்யாநின்றன?—கடப்பாடு கைம்மாறு

வேண்டா - ஆகலான், அம்மேகங்கள் போல்வார் செய்யும் ஒப்புரவுகளும் கைம்மாறு

நோக்குவனவல்ல. எ - று.

என்னாற்றுமென்ற வினை யாதுமாற்றுவென்பது தோன்ற நிற்றலின், அது வருவித்துரைக்கப்படும். தவிருந்தன்மையவல்லவென்பது கடப்பாடென்னும் பெயரானே பெறப்பட்டது. செய்வாரது வேண்டாமையைச் செய்யப்படுவனமேலேற்றினர். (க)

உகஉ. தாளாற்றித் தந்த பொருளெல்லாந் தக்கார்க்கு
வேளாண்மை செய்தற் பொருட்டு. உ.

இ - ள். தக்கார்க்கு - தகுதியுடையார்க்காயின்,—தாள் ஆற்றித் தந்த பொரு ளெல்லாம் - முயறலைச் செய்தீட்டிய பொருண்முழுதும் — வேளாண்மை செய்தற் பொருட்டு - ஒப்புரவு செய்தற்பயத்தவாம். எ - று.

பிறர்க்குதவாதார் போலத்தாமே உண்டற்பொருட்டும், வைத்திழத்தற்பொருட்டு மன்றென்பதாயிற்று. (உ)

உகரு. புத்தே ளுலகத்து மீண்டும் பெறலரிதே
யொப்புரவி னல்ல பிற. ரு.

இ - ள். புத்தேளுலகத்தும் ஈண்டும் - தேவருலகத்தும் இவ்வுலகத்தும்—ஒப்புர வின் நல்ல பிற பெறல் அரிது - ஒப்புரவுபோல நல்லன பிறசெயல்களைப் பெறுத லரிது. எ - று.

ஈவாரும் ஏற்பாருமின்றி எல்லாரும் ஒருதன்மையராதலின், புத்தேளுலகத்தரி தாயிற்று; யாவர்க்குமொப்பது இதுபோற் பிறிதொன்றின்மையின், இவ்வுலகத்தரி தாயிற்று. பெறற்கரிதென்று பாடமோதிப் பெறுதற்குக் காரணமரிதென்றுரைப்பாரு முளர். இவை மூன்றுபாட்டானும் ஒப்புரவினது சிறப்புக் கூறப்பட்டது. (௩)

உகச. ஒத்த தறிவா னுயிர்வாழ்வான் மற்றையான்
செத்தாருள் வைக்கப் படும். ச.

இ - ள். உயிர்வாழ்வான் ஒத்தது அறிவான் - உயிரோடு கூடிவாழ்வானாவான் உலகநடையினை யறிந்து செய்வான்;—மற்றையான் செத்தாருள் வைக்கப்படும் - அஃதறிந்து செய்யாதவன், உயிருடையனேயாயினும் செத்தாருள் ஒருவனாகக் கருதப்படும். எ - று.

உயிரினறிவுஞ்செயலுங் காணாமையின், செத்தாருள்வைக்கப்படுமென்றார். இது நூல் உலகநடைவழு வேதநடைவழுப்போலத் தீர்திறனுடைத்தன்றென்பது கூறப் பட்டது. (ச)

உகரு. ஊருணி நீர்நிறைந் தற்றே யுலகவாம்
பேரறி வாளன் திரு. ரு.

உஉ ம் அதி.—ஒப்புரவறிதல்.

அகூ

இ - ள். உலகு அவாம் பேரறிவாளன் திரு - உலகநடையை விரும்பிச் செய்யும் பெரியவறிவினையுடையவனது செல்வம் —ஊருணி நீர் நிறைந்தற்று - ஊரின்வாழ் வார் தண்ணீருண்ணுங்குளம் நீர் நிறைந்தாற்போலும். எ - று.

நிறைதலென்னும் இடத்துநிகழ்பொருளின் றொழில் இடத்தின்மே லேற்றப்பட் டது. பாழ்போகாது நெடிதுநின்று எல்லார்க்கும் வேண்டுவன தப்பாதுதவுமென் பதாம்.

(ரு)

உகசு. பயன்மர முள்ளூர்ப் பழுத்தற்றற் செல்வ
நயனுடை யான்கட் படின். சு.

இ - ள். செல்வம் நயனுடையான்கண் படின் - செல்வம் ஒப்புரவுசெய்வான் கண்ணே படுமாயின்,—பயன் மரம் உள்ளூர்ப் பழுத்தற்று - அது பயன்படுமரம் ஊர் நடுவே பழுத்தாற்போலும். எ - று.

உலகநீதி பலவற்றுள்ளும் ஒப்புரவு சிறந்தமையின், அதனையே நயனென்றார். எல்லார்க்கும் எளிதிற் பயன்கொடுக்குமென்பதாம்.

(சு)

உகஎ. மருந்தாகித் தப்பா மரத்தற்றற் செல்வம்
பெருந்தகை யான்கட் படின். எ.

இ - ள். செல்வம் பெருந்தகையான்கண் படின் - செல்வம் ஒப்புரவுசெய்யும் பெரியதகைமையையுடையான்கண்ணே படுமாயின்— மருந்தாகித் தப்பா மரத்தற்று- அஃது எல்லாவுறுப்பும் பிணிகட்கு மருந்தாய்த் தப்புாத மரத்தை யொக்கும். எ - று.

தப்புதலாவது கோடற்கரிய இடங்களினின்றுதல், மறைந்து நின்றுதல், காலத் தான் வேறுபட்டாதல் பயன்படாமை. தன்குறைநோக்காது எல்லார் வருத்தமுந் தீர்க்குமென்பதாம். இவைமூன்றுபாட்டானும் கடப்பாட்டாளனுடைய பொருள் பயன்படுமாறு கூறப்பட்டது.

(எ)

உகஅ. இடனில் பருவத்து மொப்புரவிற் கொல்கார்
கடனறி காட்சி யவர். அ.

இ - ள். இடன் இல் பருவத்தும் ஒப்புரவிற்கு ஒல்கார் - செல்வஞ் சுருங்கிய காலத்தும் ஒப்புரவு செய்தற்குத் தளரார்—கடன் அறி காட்சியவர் - தாஞ்செய்யத் தகுவனவற்றையறிந்த

இயற்கையறிவுடையார். எ - று.

பிறவெல்லாம் ஒழியினும், இஃதொழியாரென்பதாம்.

(அ)

உகக. நயனுடையா னல்கூர்ந்தா னாதல் செயுநீர
செய்யா தமைகலா வாறு. கூ.

இ - ள். நயன் உடையான் நல்கூர்ந்தான் ஆதல் - ஒப்புரவுசெய்தலையுடையான் நல்கூர்ந்தானாதலாவது—செயும் நீர செய்யாது அமைகலா ஆறு - தவிராது செய்யு நீர்மையையுடைய அவ்வொப்புரவுகளைச் செய்யப்பெறாது வருந்துகின்ற வியல் பாம். எ - று.

தானுகர்வன நுகரப்பெறாமையன்றென்பதாம். இவையிரண்டுபாட்டானும் வறுமையான் ஒப்புரவொழிதற்பாற்றன்றென்பது கூறப்பட்டது.

(கூ) சூ2 உங ம் அதி.—ஈகை.

உஉ0. ஒப்புரவி னல்வருங் கேடெனி னஃதொருவன்
விற்றுக்கோட் டக்க துடைத்து. க0.

இ - ள். ஒப்புரவினால் கேடு வரும் எனின் - பொருட்கேடு வருமென்பாருளராயின்,—அஃது

ஒப்புரவுசெய்தலான் ஒருவனுக்குப்
ஒருவன் விற்றுக் கோட்டக்கது
உடைத்து - அக்கேடு தன்னை விற்றாயினுங்
கொள்ளுந்தகுதியையுடைத்து. எ - று.

தன்னை விற்றுக்கொள்ளப்படுவதொரு பொருளில்லையன்றே இஃதாயின் அது வுஞ்செய்யப்படுமென்றது, புகழ் பயத்தனோக்கி. இதனால் ஒப்புரவினாற் கெடுவது கேடன்றென்பது கூறப்பட்டது.

## ௨௩ ம் அதி.—ஈகை.

*அஃதாவது வறியாரயேற்றூர்க்கு மாற்றாது கொடுத்தல்.*

இது மறுமைநோக்கி யதாகலின், இம்மைநோக்கிய ஒப்புரவறிதலின்பின்

வைக்கப்பட்டது.

௨௨௧. *வறியார்க்கொன் றீவதே யீகைமற் றெல்லாங்*
*குறியெதிர்ப்பை நீர துடைத்து.* ௧.

இ - ள். வறியார்க்கு ஒன்று ஈவதே ஈகை - ஒருபொருளுமில்லாதார்க்கு அவர் வேண்டியதொன்றைக் கொடுப்பதே பிறர்க்குக் கொடுத்தலாவது;—மற்றெல்லாம் குறியெதிர்ப்பை நீரது உடைத்து - அஃதொழிந்த எல்லாக்கொடையுங் குறி யெதிர்ப்பை கொடுக்கு நீர்மையையுடைத்து. எ - று.

ஒழிந்த கொடைகளாவன வறியரல்லாதார்க்கு ஒருபயனோக்கிக் கொடுப்பன. குறியெதிர்ப்பையாவது அளவுகுறித்துவாங்கி அவ்வாங்கியவாறே எதிர்கொடுப்பது. நீரதென்புழி அதுவென்பது பகுதிப்பொருள்விகுதி. பின்னுந் தன்பால் வருதலின், குறியெதிர்ப்பை நீரதுடைத்தென்றூர். இதனுன் ஈகையதிலக்கணங் கூறப்பட்டது.()

௨௨௨. *நல்லா றெனினுங் கொளறீது மேலுலக*
*மில்லெனினு மீதலே நன்று.* ௨.

இ - ள். கொளல் நல்லாறு எனினும் தீது - ஏற்றல் வீட்டுலகிற்கு நல்லநெறி யென்பார் உளராயினும் அது தீது; மேலுலகம் இல் எனினும் ஈதலே நன்று - ஈந்தார்க்கு அவ்வுலகெய்துதலில்லை யென்பார் உளராயினும் ஈதலே நன்று. எ - று.

எனினு மென்பது இருவழியும் அங்ஙனங்கூறுவாரின்மை

விளக்கின்றது. பிரி கிலையேகாரத்தால் பிறவறங்களின் ஈதல் சிறந்ததென்பது பெற்றும். நல்லதுகூறு வார் தீயதுமுடன்கூறினர். (உ)

உஉக. இலனென்னு மெவ்வ முரையாமை யீதல்
குலனுடையான் கண்ணே யுள. ௩.

இ - ள். இலன் என்னும் எவ்வம் உரையாமை - யான் வறியனென்று இரப்பான் சொல்லுமிளிவரவைத் தான் பிறர்கட்சொல்லாமையும்,—ஈதல் - அதனைத் தன்கட் சொன்னார்க்கு மாற்று தீதலும்,—உள குலனுடையான்கண்ணே - வாவன குடிப்பிறந்தான்கண்ணே. எ - று.

இவையிரண்டுமுள

## உ௩ ம் அதி.—ஈகை.

சிாங

மேற்றீதென்றது ஒழிதற்கும் நன்றென்றது செய்தற்குமுரியவனே உணர்த்திய வாறு. இனி இலனென்னுமெவ்வமுரையாமை யீதலென்பதற்கு அவ்விளிவரவை ஒரு வன்றனக்குச் சொல்வதற்கு முன்னே அவன் குறிப்பறிந்து கொடுத்தலெனவும், அதனைப் பின்னும் பிறனொருவன்பாற்சென்று அவனுரையாவகையாற் கொடுத்தலெனவும், யான் இதுபொழுது பொருளுடையேனல்லேனெனக் கரப்பார்சொல்லும் இளிவரவைச்சொல்லாது கொடுத்தலெனவும் உரைப்பாருமுளர். அவர் ஈதலென்பதனைப் பொருட்பன்மை பற்றி வந்த பன்மையாகவுரைப்பர். (௩)

உஉச. இன்னா திரக்கப் படுத லிரந்தவ
ரின்முகங் காணு மளவு. ச.

இ - ள். இரக்கப்படுதல் இன்னாது - இரத்தலேயன்றி

இரக்கப்படுதலும் இனி தன்று,—இரந்தவர் இன்முகம் காணும் அளவு - ஒருபொருளையிரந்தவர்அது பெற்றதனால் இனிதாகிய அவர்முகங்காணுமளவும். எ - று.

எச்சவும்மையும் முற்றும்மையும் விகாரத்தாற்றொக்கன. இரக்கப்படுதல் இரப் பார்க்கு ஈவலென்றிருத்தல். அதனை இன்னாதென்றது "எ ல்லா—மிரப்பார்க்கொன் றீ யாமை"* கூடுங்கொல்லோ வென்னும் அச்சநோக்கி. எனவே, எல்லாப்பொருளும் ஈதல்வேண் டுமென்பது பெறப்பட்டது. (௪)

௨௨௫. ஆற்றுவா ராற்றல் பசியாற்ற லப்பசியை
மாற்றுவா ராற்றலிற் பின். ௫.

இ - ள் ஆற்றுவார் ஆற்றல் பசி ஆற்றல் - தவத்தான் வலியார்க்கு வலியாவது தம்மையுற்ற பசியைப் பொறுத்தல்:—அப்பசியை மாற்றுவார் ஆற்றலிற்பின்-அவ்வலி தான் அங்ஙனம் பொறுத்தற்கரிய பசியை ஈகையா னொழிப்பாரது வலிக்குப் பின். எ - று.

தாமும் பசித்துப் பிறரையும் அது தீர்க்கமாட்டாதாராற்றலின் தாமும் பசியாது பிறரையும் அது தீர்ப்பாராற்றல் நன்றென்பதாம். (௫)

௨௨௬. அற்றா ரழிபசி தீர்த்த லஃதொருவன்
பெற்றான் பொருள்வைப் புழி. ௬.

இ - ள். அற்றார் அழி பசி தீர்த்தல் - வறியாரது மிக்க பசியை அறனோக்கித் தீர்க்க,—பொருள் பெற்றான் ஒருவன் வைப்புழி அஃது - பொருள்பெற்றானொருவன் அதனைத் தனக்குதவ வைக்குமிடம் அவ்வறமாகலான். எ - று.

எல்லாநன்மைகளும் அழிய வருதலின், அழிபசியென்றார். அறனோக்கியென்பது எஞ்சிநின்றது. அற்றாரழிபசி தீர்த்த பொருள் பின்றனக்கே வந்துதவுமென்பதாம். (௬)

௨௨௭. பாத்தூண் மரீஇ யவனைப் பசியென்னுந்

தீப்பிணி தீண்ட லரிது. எ.

இ - ள். பாத்து ஊண் மரீஇயவனை - என்றான்றும் பகுத்துண்டல்பயின்ற வனை—பசி என்னும் தீப்பிணி தீண்டல் அரிது - பசியென்றுசொல்லப்படுந் தீயநோய் தீண்டுதலில்லை. எ - று.

* கல்லாமை யச்சங்

கயவர் தொழிலச்சஞ்—சொல்லாமை யுள்ளுமோர் சோர்வச்ச - மெல்லா—மிரப்பார்க்கொன் றீயாமை யச்ச மாக்காரிம்—மாணைக் குடிப்பிறந்தார்—காலடியார், குடிப்பிறப்பு.



உ௨ ௦. ஒப்புரவி னால்வருங் கேடெனி னஃதொருவன்
விற்றுக்கோட் டக்க துடைத்து. ௧௦.

இ - ள். ஒப்புரவினால் கேடு வரும் எனின் - ஒப்புரவுசெய்தலான் ஒருவனுக்குப் பொருட்கேடு வருமென்பாருளராயின்,—அஃது ஒருவன் விற்றுக் கோட்டக்கது உடைத்து - அக்கேடு தன்னை விற்றாயினுங் கொள்ளுந்தகுதியையுடைத்து. எ - று.

தன்னை விற்றுக்கொள்ளப்படுவதொரு பொருளில்லையன்றே இஃதாயின் அது வுஞ்செய்யப்படுமென்றது, புகழ் பயத்தலானோக்கி. இதனால் ஒப்புரவினாற் கெடுவது கேடன்றென்பது கூறப்பட்டது. (௧௦)

---

## உ௩ ம் அதி.—ஈகை.

அஃதாவது வறியாரயேற்றார்க்கு மாற்றாது கொடுத்தல். இதுமறுமைநோக்கி யதாகலின், இம்மைநோக்கிய ஒப்புரவறிதலின்பின் வைக்கப்பட்டது.

'உஉக. வறியார்க்கொன் றீவதே யீகைமற் றெல்லாங்
குறியெதிர்ப்பை நீர துடைத்து. க.

இ - ள். வறியார்க்கு ஒன்று ஈவதே ஈகை - ஒருபொருளுமில்லாதார்க்கு அவர் வேண்டியதொன்றைக் கொடுப்பதே பிறர்க்குக் கொடுத்தலாவது;—மற்றெல்லாம் குறியெதிர்ப்பை நீரது உடைத்து - அஃதொழிந்த எல்லாக்கொடையுங் குறி யெதிர்ப்பை கொடுக்கு நீர்மையையுடைத்து. எ - று.

ஒழிந்த கொடைகளாவன வறியரல்லாதார்க்கு ஒருபயனோக்கிக் கொடுப்பன. குறியெதிர்ப்பையாவது அளவுகுறித்துவாங்கி அவ் வாங்கியவாறே எதிர்கொடுப்பது. நீரதென்புழி அது வென்பது பகுதிப்பொருள்விகுதி. பின்னுந் தன்பால் வருதலின், குறி யெதிர்ப்பை நீரதுடைத்தென்றார். இதனான் ஈகையதிலக்கணங் கூறப்பட்டது.()

உஉஉ. நல்லா றெனினுங் கொளறீது மேலுலக
மில்லெனினு மீதலே நன்று. உ.

இ - ள். கொளல் நல்லாறு எனினும் தீது - ஏற்றல் வீட்டுலகிற்கு நல்லநெறி யென்பார் உளராயினும் அது தீது; மேலுலகம் இல் எனினும் ஈதலே நன்று - ஈந் தார்க்கு அவ்வுலகெய்துதலில்லை யென்பார் உளராயினும் ஈதலே நன்று. எ - று.

எனினு மென்பது இருவழியும் அங்ஙனங்கூறுவாரின்மை விளக்கிநின்றது. பிரி நிலையேகாரத்தால் பிறவறங்களின் ஈதல் சிறந்ததென்பது பெற்றும். நல்லதுகூறு வார் தீயதுமுடன்கூறினார். (உ)

உஉ௩. இலனென்னு மெவ்வ முரையாமை யீதல்
குலனுடையான் கண்ணே யுள. ௩.

இ - ள். இலன் என்னும் எவ்வம் உரையாமை - யான் வறியனென்று இரப்பான் சொல்லுமிளிவரவைத் தான்

பிறர்கட்சொல்லாமையும்,—ஈதல் - அதனைத் தன்கட் சொன்னார்க்கு மாற்று நீதலும்,—உள குலனுடையான்கண்ணே - இவையிரண்டுமுள வாவன குடிப்பிறந்தான்கண்ணே. எ - று.

## உ௩ ம் அதி.—ஈகை.

சீ௩

மேற்றீதென்றது ஒழிதற்கும் ஈன்றென்றது செய்தற்குமுரியவனை உணர்த்திய வாறு. இனி இலனென்னுமெவ்வமுரையாமை யீதலென்பதற்கு அவ்விளிவரவை ஒருவன்றனக்குச் சொல்வதற்கு முன்னே அவன் குறிப்பறிந்து கொடுத்தலெனவும், அதனைப் பின்னும் பிறனொருவன்பாற்சென்று அவனுரையாவகையாற் கொடுத்தலெனவும், யான் இதுபொழுது பொருளுடையேனல்லேனெனக் கரப்பார்சொல்லும் இளி வரவைச்சொல்லாது கொடுத்தலெனவும் உரைப்பாருமுளர். அவர் ஈதலென்பதனைப் பொருட்பன்மை பற்றி வந்த பன்மையாகவுரைப்பர். (௩)

உ உ ச. இன்னா திரக்கப் படுத லிரந்தவ
 ரின்முகங் காணு மளவு. ச.

இ - ள். இரக்கப்படுதல் இன்னாது - இரத்தலேயன்றி இரக்கப்படுதலும் இனி தன்று,—இரந்தவர் இன்முகம் காணும் அளவு - ஒருபொருளையிரந்தவர் அதுபெற்றதனால் இனிதாகிய அவர்முகங்காணுமளவும். எ - று.

எச்சவும்மையும் முற்றும்மையும் விகாரத்தாற்றொக்கன. இரக்கப்படுதல் இரப்பார்க்கு ஈவலென்றிருத்தல். அதனை இன்னாதென்றது "எல்லா—மிரப்பார்க்கொன்றீயாமை"* கூடுங்கொல்லோ வென்னும் அச்சநோக்கி. எனவே, எல்லாப்பொருளும் ஈதல்வேண்டுமென்பது பெறப்பட்டது.

உஉரு. ஆற்றுவா ராற்றல் பசியாற்ற லப்பசியை
மாற்றுவா ராற்றலிற் பின். ரு.

இ - ள் ஆற்றுவார் ஆற்றல் பசி ஆற்றல் - தவத்தான் வலியார்க்கு வலியாவது தம்மையுற்ற பசியைப் பொறுத்தல்:—அப்பசியை மாற்றுவார் ஆற்றலிற்பின்-அவ்வலி தான் அங்ஙனம் பொறுத்தற்கரிய பசியை ஈகையா னொழிப்பாரது வலிக்குப் பின். எ - று.

தாமும் பசித்துப் பிறரையும் அது தீர்க்கமாட்டாதாராற்றலின் தாமும் பசியாது பிறரையும் அது தீர்ப்பாராற்றல் நன்றென்பதாம். (ரு)

உஉசு. அற்றா ரழிபசி தீர்த்த லஃதொருவன்
பெற்றான் பொருள்வைப் புழி. சு.

இ - ள். அற்றார் அழி பசி தீர்த்தல் - வறியாரது மிக்க பசியை அறனோக்கித் தீர்க்க,—பொருள் பெற்றான் ஒருவன் வைப்புழி அஃது - பொருள்பெற்றானொருவன் அதனைத் தனக்குதவ வைக்குமிடம் அவ்வறமாகலான். எ - று.

எல்லாநன்மைகளும் அழிய வருதலின், அழிபசியென்றார். அறனோக்கியென்பது எஞ்சிநின்றது. அற்றாரழிபசி தீர்த்த பொருள் பின்றனக்கே வந்துதவுமென்பதாம். (சு)

உஉஎ. பாத்தூண் மரீஇ யவனைப் பசியென்னுந்
தீப்பிணி தீண்ட லரிது. எ.

இ - ள். பாத்து ஊண்
வனை—பசி என்னும் தீப்பிணி

மரீஇயவனை - எஞ்ஞான்றும் பகுத்துண்டல்பயின்ற
தீண்டல் அரிது - பசியென்றுசொல்லப்படுந் தீயநோய்
தீண்டுதலில்லை. எ - று.

* கல்லாமை யச்சங் கயவர் தொழிலச்சஞ்—சொல்லாமை யுள்ளுமோர் சோர்வச்ச - மெல்லா—மிரப்பார்க்கொன் றீயாமை யச்ச மாத்தாரிம்—மாணாக் குடிப்பிறந்தார்—நாலடியார், குடிப்பிறப்பு.





## ௨௪ம் அதி.—புகழ்.

இவ்வுடம்பினின்று ஞானவொழுக்கங்களை அழித்து அதனால் வருமுடம்புகட்கும் துன்பஞ்செய்தலின், தீப்பிணியெனப்பட்டது. தனக்கு மருந்துவன்றாகலின், பசிப்பிணி நணுகாதென்பதாம். இவையாறுபாட்டாலும் ஈதலின்சிறப்புக் கூறப்பட்டது. (எ)

௨௨அ. ஈத்துவக்கு மின்ப மறியார்கொ றுமுடைமை
வைத்திழக்கும் வன்க ணவர். அ.

இ - ள். தாம் உடைமை வைத்து இழக்கும் வன்கணவர் - தாமுடையபொருளை ஈயாதுவைத்துப் பின்னிழந்துபோம் அருளிலாதார்— ஈத்து உவக்கும் இன்பம் அறி யார்கொல்-வறியார்க்கு வேண்டியவற்றைக் கொடுத்து அவருவத்தலான் அருளுடை யாரெய்தும் இன்பத்தினைக் கண்டறியார்கொல்லோ! எ - று.

உவக்குமென்பது காரணத்தின்கண்வந்த பெயரெச்சம்; அஃது இன்பமென் னும் காரியப்பெயர் கொண்டது. அறிந்தாராயின், தாமும் அவ் வின்பத்தை யெய்துவ தல்லது வைத்திழவாரென்பது கருத்து. (அ)

௨௨௯. இரத்தலி னின்னாது மன்ற நிரப்பிய
தாமே தமிய ருணல். ௯.

இ - ன். நிரப்பிய தாமே தமியர் உணல் - பொருட்குறை நிரப்பவேண்டி வறியார்க்கீயாது தாமே தனித்துண்டல்—இரத்தலின் இன்னாது மன்ற - ஒருவர்க்குப் பிறர்பாற்சென்று இரத்தலினுமின்னாது ஒருதலையாக. எ - று.

பொருட்குறைநிரப்பலாவது ஒரோவெண்களைக்குறித்து அத்துணையீட்டுதுமென ஈட்டத்தையே மேற்கொண்டு இவறிக் கூட்டுதல். தனித்தல் பிறரையொழித்தல்.

இரத்தற்குள்ளது அப்பொழுதை யினிவரவே பின் நல்குரவில்லை; தமியருண்டற்கு அவையிரண்டுமுளவாமாகலின் இரத்தலினின்னாதென்றார். நிரப்பியவென்பதற்குத் தேடிய வுணவுகளையென் றுரைப்பாருமுளர். (க)

உரு0. சாதலி னின்னாத தில்லை யினிததூஉ
 மீத லியையாக் கடை. 50.

இ - ன். சாதலின் இன்னாதது இல்லை - ஒருவற்குச் சாதல்போல இன்னாததொன் றில்லை;—அதூஉம் ஈதல் இயையாக்கடை இனிது - அத்தன்மைத்தாகிய சாதலும் வறியார்க்கொன்றீதன் முடியாதவழி இனிது. எ - று.

பிறர்க்குப் பயன்படாத உடற்பொறை நீங்குதலான், மூன்றுபாட்டானும் ஈயாமையின் குற்றங் கூறப்பட்டது.

இனிதென்றார். இவை
(50)

---

## உச ம் அதி.—புகழ்.

அஃதாவது இல்வாழ்க்கைமுதல் ஈகையீறுகச் சொல்லப்பட்ட இல்லறத்தின் வழுவாதார்க்கு இம்மைப்பயனாகி இவ்வுலகின்கணிகழ்ந்து இறவாது நிற்குங் கீர்த்தி. இது, பெரும்பான்மையும் ஈதல்பற்றி வருதலின், அதன்பின் வைக்கப்பட்டது.

உகக. ஈத லிசைபட வாழ்த லதுவல்ல

ஊதிய மில்லை யுயிர்க்கு. க.

# ௨௪ம் அதி.—புகழ்.

இ - ள். ஈதல் - வறியார்க்கீக;—இசைபட வாழ்தல் - அதனாற் புகழுண்டாக வாழ்க;—அதுவல்லது உயிர்க்கு ஊதியம் இல்லை - அப்புகழல்லது மக்களுயிர்க்குப் பயன் பிறிதொன்றில்லையாகலான். எ - று.

இசைபடவாழ்தற்குக் கல்வி ஆண்மை முதலிய பிறகாரணங்களும் உளவேனும், "உணவின் பிண்ட முண்டி முதற்று" * ஆகலின், ஈதல் சிறந்ததென்பதற்கு ஞாபகமாக ஈதலென்றார். உயிர்க்கென்பது, பொதுப்படக்கூறினாரேனும் விலங்குயிர்கட்கேலாமையின், மக்களுயிர்மேனின்றது. (க)

உஙஉ. உரைப்பா ருரைப்பவை யெல்லா மிரப்பார்க்கொன்

றீவார்மே னிற்கும் புகழ். உ.

இ - ள். உரைப்பார் உரைப்பவை எல்லாம் - உலகத்து ஒன்றுரைப்பாருரைப் பனவெல்லாம்—இரப்பார்க்கு ஒன்று ஈவார் மேல் நிற்கும் புகழ் - வறுமையா னிரப் பார்க்கு அவர்வேண்டியதொன்றை யீவார்கணிற்கும் புகழாம். எ - று.

புகழ்தான் உரையும் பாட்டுமென இருவகைப்படும்†. அவற்றுள் உரைப்பா ருரைப்பவையென எல்லார்க்குமுரிய வழக்கினையே யெடுத்தாராயினும்,இனம்பற்றிப் புலவர்க்கேயுரிய செய்யுளுங் கொள்ளப்படும்; படவே பாடுவார் பாடுவனவெல்லாம் புகழா மென்பதூஉம் பெற்றும். ஈதற்காரணஞ் சிறந்தமை இதனுள்ளுங் காண்க. இதனைப் பிறர்மேலும் நிற்குமென்பார் தாமெல்லாஞ் சொல்லுக, புகழ் ஈவார்மே னிற்குமென் றுரைப்பாருமுளர். அது புகழது சிறப்புநோக்காமையறிக. (உ)

உகரு. ஒன்றா வுலகத் துயர்ந்த புகழல்லாற்
பொன்றாது நிற்பதொன் றில். ௩.

இ - ள். ஒன்றா உயர்ந்த புகழல்லால் - தனக்கு இணையின்றாக வோங்கிய புகழல் லது—உலகத்துப் பொன்றாது நிற்பது ஒன்று இல் - உலகத்து இறவாதுநிற்பது பிறிதொன்றில்லை. எ - று.

இணையின்றாகவோங்குதலாவது கொடுத்தற்கரிய உயிருறுப்புப்பொருள்களைக் கொடுத்தமைபற்றி வருதலால் தன்னொடொப்பதின்றித் தானேயுயர்தல். அத்தன்மைத்தாகிய புகழே செய்யப்படுவதென்பதாம். இனி ஒன்றாவென்பதற்கு ஒருவார்த்தையாகச் சொல்லினெனவும், ஒருதலையாகப் பொன்றாது நிற்பதெனவும் உரைப்பாரு முளர். இவை மூன்றுபாட்டானும் புகழது சிறப்புக் கூறப்பட்டது. (௩)

உகச. நிலவரை நீள்புக ழாற்றிற் புலவரைப்
போற்றாது புத்தே ளுலகு. ௪.

இ -ள். நிலவரை நீள் புகழ் ஆற்றின் - ஒருவன் நிலவெல்லைக்கண்ணே பொன் றாது நிற்கும் புகழைச் செய்யுமாயின்,—புத்தேள் உலகு புலவரைப் போற்றாது- புத்தேளுலகம் அவனையல்லது தன்னையெய்திநின்ற ஞானிகளைப் பேணாது. எ - று.

புகழுடம்பான் இவ்வுலகும் புத்தேளுடம்பான் அவ்வுலகும் ஒருங்கே யெய்தாமையின் புலவரைப்போற்றாதென்றார். அவன் இரண்டுலகும் ஒருங்கெய்துதல் "புலவர் பாடும் புகழுடையோர் விசும்பின்—வலவ னேவா வான வூர்தி—யெய்துப வென்பதஞ் செய்வினை முடித்து" ‡ எனப் பிறரானுஞ் சொல்லப்பட்டது. (௪)

---

* புறநானூறு, ௩௮. † புறநானூறு, உள. ‡ புறநானூறு, உள.

உகரு. நத்தம்போற் கேடு முளதாகுஞ் சாக்காடும்
வித்தகர்க் கல்லா லரிது. ரு.

இ - ள். நத்தம் (ஆகும்) கேடும் - புகழுடம்பிற்கு ஆக்கமாகுங் கேடும்,—உளது ஆகும் சாக்காடும் - புகழுடம்புளதாகுஞ் சாக்காடும்,—வித்தகர்க்கல்லால் அரிது- சதுரப்பாடுடையார்க் கல்லதில்லை. எ - று.

நந்தென்னுந் தொழிற்பெயர் விகாரத்தான் நத்தென்றாய், பின் அம்மென்னும் பகுதிப்பொருள் விகுதிபெற்று, நத்தமென்றாயிற்று. போலென்பது ஈண்டுரையசை. ஆகுமென்பதனை முன்னுங்கூட்டி, அரிதென்பதனைத் தனித்தனி கூட்டியுரைக்க. ஆக்கமாகுங்கேடாவது புகழுடம்பு செல்வமெய்தப் பூதவுடம்பு நல்கூர்தல். உளதாகுஞ் சாக்காடாவது புகழுடம்பு நிற்கப் பூதவுடம்பு இறத்தல். நிலையாதனவற்றான் நிலையின வெய்துவார் வித்தகராகலின், வித்தகர்க்கல்லாலரிதென்றார். இவையிரண்டு பாட்டானும் புகழுடையாரெய்தும் மேன்மை கூறப்பட்டது.
(ரு)

உகசு. தோன்றிற் புகழொடு தோன்றுக வஃதிலார்
தோன்றலிற் றோன்றாமை நன்று. சு.

இ - ள். தோன்றின் புகழொடு தோன்றுக - மக்களாய்ப் பிறக்கின் புகழுக்கேது வாகிய குணத்தோடு பிறக்க;—அஃது இலார் தோன்றலின் தோன்றாமை நன்று-அக் குணமில்லாதார் மக்களாய்ப் பிறத்தலின் விலங்காய்ப் பிறத்தல் நன்று. எ - று.

புகழ் ஈண்டு ஆகுபெயர். அஃதிலாரென்றமையின மக் களாயென்பதூஉம், மக்க ளாய்ப பிறவாமையென்ற அருததாபததியான விலஙகாயப் பிறததலென்பதூஉம், பெற்றாம். இகழ்வாரின்மையின, நன்றென்றார். (சு)

உ௬எ. புகழ்பட வாழாதார் தந்நோவார் தம்மை
யிகழ்வாரை நோவ தெவன். எ.

இ - ள். புகழ் பட வாழாதார் - தமக்குப் புகழுண்டாக வாழமாட்டாதார்—தம் நோவார் - அதுபற்றிப் பிறரிகழ்ந்தவழி இவ்விகழச்சி நம் மாட்டாமையான் வந்த தென்று தம்மை நோவாதே—தம்மை இகழ்வாரை நோவது எவன் - தம்மை யிகழ் வாரை நோவதென்கருதி! எ - று.

புகழ்பட வாழலாயிருக்க அதுமாட்டாத குற்றம்பற்றிப் பிறரிகழ்தல் ஒருதலையா கலின், இகழ்வாரையென்றார்.

(எ)

உ௬அ. வசையென்ப வையத்தார்க் கெல்லா மிசையென்னு
மெச்சம் பெறாஅ விடின். அ.

இ - ள். இசை என்னும் எச்சம் பெறாவிடின் - புகழென்னுமெச்சம் பெறலா யிருக்க அது பெறுதொழிவராயின்,—வையத்தார்க்கு எல்லாம் வசை என்ப - வைய கத்தோர்க்கெல்லாம் அதுதானே வசையென்று சொல்லுவர் நல்லோர். எ - று.

எச்சமென்றார்; செய்தவரிறந்துபோகத் தான் இறவாது நிற்றலின். இகழப்படு தற்கு பிறிதொருகுற்றம் வேண்டாவென்பது கருத்து.

(அ)

உ௬௯. வசையிலா வண்பயன் குன்று மிசையிலா
யாக்கை பொறுத்த நிலம். ௯.

உ௪ ம் அதி.—புகழ்.

க்ஷ்ள்

இ - ள். இசை இலா யாக்கை பொறுத்த நிலம் - புகழில்லாத வுடம்பைச் சுமந்த நிலம்—வசை இலா வண்பயன் குன்றும் - பழிப்பில்லாத வளப்பத்தையுடைய விளையுள் குன்றும். எ - று.

உயிருண்டாயினும் அதனாற்பயன் கொள்ளாமையின் யாக்கையெனவும், அது நிலத்திற்குப் பொறையாகலிற் பொறுத்தவெனவுங் கூறினர். விளையுள் குன்றுதற் கேது பாவயாக்கையைப் பொறுக்கின்ற வெறுப்பு. குன்றுமென இடத்துநிகழ்பொரு ளின் றொழில் இடத்தின்மேனின்றது. இவை நான்குபாட்டானும் புகழில்லாதாரது தாழ்வு கூறப்பட்டது. (௯)

௨௪௦. வசையொழிய வாழ்வாரே வாழ்வா ரிசையொழிய
வாழ்வாரே வாழா தவர். ௪௦.

இ - ள். வசை ஒழிய வாழ்வாரே வாழ்வார் - தம்மாட்டு வசையுண்டாகாமல் வாழ்வாரே உயிர்வாழ்வாராவார்;—இசை ஒழிய வாழ்வாரே வாழாதவர் - புகழுண்டா காமல் வாழ்வாரே இறந்தாராவார். எ - று.

வசையொழிதலாவது இசையென்னுமெச்சம் பெறுதலாயினமையின், இசையொ ழிதலாவது வசைபெறுதலாயிற்று. மேல் இசையிலாயாக்கையென்றதனை விளக்கிய வாறு. இதனல் இவ்விரண்டும் உடன் கூறப்பட்டன. மறுமைப்பயன் "வானுறையுந் தெய்வத்துள் வைக்கப்படும்*" என மேலே கூறப்பட்டது; படவே, இல்லறத்திற்கு இவ்வுலகிற் புகழும் தேவருலகிற்போகமும் பயனென்பது பெற்றும்.

இனி மனுமுதலிய அறநூல்களாற் பொதுவாகக் கூறப்பட்ட இல்லறங்களெல்லாம் இவர் தொகுத்துக்கூறிய இவற்றுள்ளே அடங்கும்; அஃதறிந்தடக்கிக்கொள்க; யாமுரைப்பிற்பெருகும். (௪௦)

இல்லறவியல் முற்றிற்று.



* திருக்குறள் - ௫௦.

# துறவறவியல்.

இனி முறையானே துறவறங்கூறிய தொடங்கினார். துறவறமாவது மேற் கூறிய இல்லறத்தின் வழுவாதொழுகி அறிவுடையராய்ப் பிறப்பினையஞ்சி வீடுபேற் றின்பொருட்டுத் துறந்தார்க்கு உரித்தாய அறம். அதுதான் வினைமாசுதீர்ந்து அந்தக் கரணங்கள் தூயவாதற்பொருட்டு அவராற் காக்கப்படும் விரதங்களும், அவற்றான் அவை தூயவாயவழி உதிப்பதாய ஞானமுமென இருவகைப்படும்.

## விரதம்.

அவற்றுள் விரதங்களாவன இன்னவறஞ்செய்வலெனவும் இன்னபாவமொழிவலெனவும் தம்மாற்றலுக்கேற்ப வரைந்துகொள்வன. அவைதாம் வரம்பிலவாகலிற் பெருகுமென்றஞ்சி, அவைதம்முள் ளே பலவற்றையும் அகப்படுத்துநிற்குஞ் சிறப்பு டையன சிலவற்றை ஈண்டுக் கூறுவான்றொடங்கி, முதற்கண் அருளுடைமை கூறுகின்றார்.

### ௨௫ம் அதி.—அருளுடைமை.

அஃதாவது தொடர்புபற்றாது இயல்பாக எல்லாவுயிர்கண்மேலுஞ் செல்வ தாகிய கருணை. இல்லறத்திற்கு அன்புடைமைபோல இது துறவறத்திற்குச் சிறந்த மையின்

முற்கூறப்பட்டது.

உசக . அருட்செல்வஞ் செல்வத்துட் செல்வம் பொருட்செல்வம்
பூரியார் கண்ணு முள.
க.

இ - ள். செல்வத்துள் செல்வம் அருட்செல்வம் - செல்வங்கள் பலவற்றுள்ளும் ஆராய்ந்தெடுக்கப்பட்ட செல்வமாவது அருளான் வருஞ்செல்வம்,—பொருட்செல்வம் பூரியார் கண்ணும் உள - அஃதொழிந்த பொருளான் வருஞ் செல்வங்கள் இழிந்தார் கண்ணுமுளவாம் ஆகலான். எ - று.

அருளான் வருஞ்செல்வமாவது உயிர்களையோம்பி அவ்வறத்தான் மேம்படுதல். உயர்ந்தார்கண்ணேயல்லதில்லாத அருட்செல்வமே சிறப்புடைய செல்வம், ஏனைநீசர் கண்ணுமுளவாம் பொருட்செல்வங்கள் சிறப்பிலவென்பதாம். (க)

உசஉ. நல்லாற்ற னாடி யருளாள்க பல்லாற்றாற்
றேரினு மஃதே துணை. உ.

இ - ள். நல்லாற்றான் நாடி அருள் ஆள்க - அளவைகளானும் பொருந்துமாற்றானும் நன்றான நெறியிலே நின்று, நமக்குத் துணையாம் அறம் யாதென்றாராய்ந்து, அருளுடையராக;—பல்லாற்றால் தேரினும் துணை அஃதே-ஒன்றையொன்றொவ்வாத சமயநெறிகளெல்லாவற்றானும் ஆராய்ந்தாலும் துணையாவது அவ்வருளே, பிறிதில்லை. எ - று.

அளவைகளாவன பொறிகளாற் காணுங்காட்சியும், குறிகளானுய்த்துணரும்
'னுமானமும்; கருத்தாமொழியாகிய ஆகமமுமென் மூன்று. ஒப்புப்பற்றியுணரும்

௲௬

உவமையும், இங்ஙனமன்றாயின் இது கூடாதென்றுணரும் அருத்தாபத்தியும், உண் மைக்கு மாறாய இன்மையுமென இவற்றைக் கூட்டி ஆறென்பாருமுளர். இவையும் ஒருவாற்றான் அவற்றுள்ளே அடங்குதலின், மூன்றென்றலே கருத்து. பொருந்துமா றாவது இது கூடும் இது கூடாதெனத் தன்கண்ணே தோன்றுவது: இதனை வட நூலார் யுத்தியென்ப. ஆற்றானென்பது வேற்றுமைமயக்கம். ஒன்றையொன்றொவ்வா மையாவது மதவேறுபாட்டான் அளவைகளும் பொருள்களும் தம்முண்மாறுகோடல்; அன்னவாயினும் அருளினையென்றற்கண் ஒக்குமென்பதாம். உயிரை விட்டு நீங்காது இருமையினுமுதவலின், துணையென்றார். இவையிரண்டுபாட்டானும் அருளினது சிறப்புக் கூறப்பட்டது.
(உ)

உ௪௩. அருள்சேர்ந்த நெஞ்சினார்க் கில்லை யிருள்சேர்ந்த
இன்னா வுலகம் புகல். ௩.

இ - ள். இருள் சேர்ந்த இன்னா உலகம் புகல் - இருள் செறிந்த துன்பவுலகத் துட் சென்றுபுகுதல்—அருள் சேர்ந்த நெஞ்சினார்க்கு இல்லை - அருள்செறிந்த நெஞ் சினையுடையார்க்கில்லை. எ - று.

இருள்செறிந்த துன்பவுலகமென்றது திணிந்தவிருளையுடைத்தாய்த் தன்கட்புக் கார்க்குத் துன்பஞ்செய்வதோர் நரக த்தை; அது கீழுலகத்துள் ஓரிடமாகலின், உலக மெனப்பட்டது.
(௩)

உ௪௪. மன்னுயி ரோம்பி யருளாள்வாற் கில்லென்ப
தன்னுயி ரஞ்சும் வினை. ௪.

இ - ள். மன் உயிர் ஓம்பி அருள் ஆள்வாற்கு-நிலைபேறுடைய உயிர்களைப்பேணி அவற்றின்கண் அருளுடையனாவானுக்கு—தன் உயிர்

அஞ்சும் வினை இல் என்ப - தன்னுயிர் அஞ்சுதற்கேதுவாகிய தீவினைகள் உளவாகாவென்று சொல்லுவர் அறிந்தோர். எ - று.

உயிர்களெல்லாம் நித்தமாகலின், மன்னுயிரென்றார். அஞ்சுதல் துன்பநோக்கி யஞ்சுதல். அன்னவறத்தினோன் கொலைமுதலிய பாவங்கள் செய்யானெனவே மறுமைக்கண் நரகம் புகாமைக்கேது கூறியவாறாயிற்று. (௪)

**உ௪௫. அல்ல லருளாள்வார்க் கில்லை வளிவழங்கு**
**மல்லன்மா ஞாலங் கரி. ரு.**

இ - ள். அருள் ஆள்வார்க்கு அல்லல் இல்லை - அருளுடையார்க்கு இம்மையினும் ஒருதுன்பமுண்டாகாது;—வளி வழங்கும் மல்லல் மா ஞாலம் கரி - அதற்குக் காற் றியங்குகின்ற வளப்பத்தையுடைய பெரிய ஞாலத்து வாழ்வார் சான்று. எ - று.

சான்றாவார் தாங்கண்டு தேறிய பொருளைக் காணாதார்க்குத் தேற்றுதற்குரியவர். அருளாள்வார்க்கு அல்லலுண்டாக ஒருகாலத்தும் ஓரிடத்தும் ஒருவருங்கண்டறிவா ரின்மையின், இன்மைமுகத்தான் ஞாலத்தார்யாவருஞ் சான்றென்பார், வளிவழங்குமல்லன்மாஞாலங் கரியென்றார்: எனவே, இம்மைக்கணென்பது பெற்றாம். ஞாலம் ஆகுபெயர். இவைமூன்றுபாட்டானும் அத்துணையுடையார்க்கு இருமையினுந் துன்ப மில்லாமை கூறப்பட்டது.
(ரு)

**உ௪௬. பொருணீங்கிப் பொச்சாந்தா ரென்ப ரருணீங்கி**
**யல்லவை செய்தொழுகு வார். சு.**

# துறவறவியல்.

---

இனி முறையானே துறவறங்கூறிய தொடங்கினார்.

துறவறமாவது மேற் கூறிய இல்லறத்தின் வழுவாதொழுகி அறிவுடையராய்ப் பிறப்பினையஞ்சி வீடுபேற் றின்பொருட்டுத் துறந்தார்க்கு உரித்தாய அறம். அதுதான் வினைமாசுதீர்ந்து அந்தக் கரணங்கள் தூயவாதற்பொருட்டு அவராற் காக்கப்படும் விரதங்களும், அவற்றான் அவை தூயவாயவழி உதிப்பதாய ஞானமுமென இருவகைப்படும்.

## விரதம்.

அவற்றுள் விரதங்களாவன இன்னவறஞ்செய்வலெனவும் இன்னபாவமொழி வலெனவும் தம்மாற்றலுக்கேற்ப வரைந்துகொள்வன. அவைதாம் வரம்பிலவாகலிற் பெருகுமென்றஞ்சி, அவைதம்முள்ளே பலவற்றையும் அகப்படுத்தலிற்குஞ் சிறப்பு டையன சிலவற்றை ஈண்டுக் கூறுவான்றொடங்கி, முதற்கண் அருளுடைமை கூறு கின்றார்.

## உ௫ம் அதி.—அருளுடைமை.

அஃதாவது தொடர்புபற்றாது இயல்பாக எல்லாவுயிர்கண்மேலுஞ் செல்வ தாகிய கருணை. இல்லறத்திற்கு அன்புடைமைபோல இது துறவறத்திற்குச் சிறந்த மையின் முற்கூறப்பட்டது.

உ௪௧. அருட்செல்வஞ் செல்வத்துட் செல்வம் பொருட்செல்வம்
பூரியார் கண்ணு முள.

௬.

இ - ள். செல்வத்துள் செல்வம் அருட்செல்வம் - செல்வங்கள் பலவற்றுள்ளும் ஆராய்ந்தெடுக்கப்பட்ட செல்வமாவது அருளான் வருஞ்செல்வம்,—பொருட்செல்வம் பூரியார் கண்ணும் உள - அஃதொழிந்த பொருளான் வருஞ் செல்வங்கள் இழிந்தார் கண்ணுமுளவாம் ஆகலான். எ - று.

அருளான் வருஞ்செல்வமாவது உயிர்களையோம்பி அவ்வறத்தான் மேம்படுதல். உயர்ந்தார்கண்ணேயல்லதில்லாத அருட்செல்வமே சிறப்புடைய செல்வம், ஏனைநீசர் கண்ணுமுளவாம் பொருட்செல்வங்கள் சிறப்பிலவென்பதாம். (க)

உசஉ. நல்லாற்ற னாடி யருளாள்க பல்லாற்றாற்
தேரினு மஃதே துணை. உ.

இ - ள். நல்லாற்றன் நாடி அருள் ஆள்க - அளவைகளானும் பொருந்துமாற்றானும் நன்றான நெறியிலே நின்று, நமக்குத் துணையாம் அறம் யாதென்றாராய்ந்து, அருளுடையராக;—பல்லாற்றல் தேரினும் துணை அஃதே-ஒன்றையொன்றொவ்வாத சமயநெறிக ளெல்லாவற்றானும் ஆராய்ந்தாலும் துணையாவது அவ்வருளே, பிறி தில்லை. எ - று.

அளவைகளாவன பொறிகளாற் காணுங்காட்சியும், குறிகளானுய்த்துணரும்
னுமானமும், கருத்தாமொழியாகிய ஆகமமுமென் மூன்று.
ஒப்புப்பற்றியுணரும்

உறு ம் அதி.—அருளுடைமை.

விசே

உவமையும், இங்ஙனமன்றாயின் இது கூடாதென்றுணரும்

அருத்தாபத்தியும், உண் மைக்கு மாறுய இன்மையுமென இவற்றைக் கூட்டி ஆறென்பாருமுளர். இவையும் ஒருவாற்றான் அவற்றுள்ளே அடங்குதலின், மூன்றென்றலே கருத்து. பொருந்துமா றுவது இது கூடும் இது கூடாதெனத் தன்கண்ணே தோன்றுவது: இதனை வட நூலார் யுத்தியென்ப. ஆற்றானென்பது வேற்றுமைமயக்கம். ஒன்றையொன்றுவ்வா மையாவது மதவேறுபாட்டான் அளவைகளும் பொருள்களும் தம்முண்மாறுகோடல்; அன்னவாயினும் அருடுணையென்றற்கண் ஒக்குமென்பதாம். உயிரை விட்டு நீங்காது இருமையினுமுதவலின், துணையென்றார். இவையிரண்டுபாட்டானும் அருளினது சிறப்புக் கூறப்பட்டது.
(உ)

உசங. அருள்சேர்ந்த நெஞ்சினார்க் கில்லை யிருள்சேர்ந்த
இன்னா வுலகம் புகல். ங.

இ - ள். இருள் சேர்ந்த இன்னா உலகம் புகல் - இருள் செறிந்த துன்பவுலகத் துட் சென்றுபுகுதல்—அருள் சேர்ந்த நெஞ்சினார்க்கு இல்லை - அருள்செறிந்த நெஞ் சினையுடையார்க்கில்லை. எ - று.

இருள்செறிந்த துன்பவுலகமென்றது திணிந்தவிருளையுடைத்தாய்த் தன்கட்புக் கார்க்குத் துன்பஞ்செய்வதோர் நரக த்தை; அது கீழுலகத்துள் ஓரிடமாகலின், உலக மெனப்பட்டது.
(ங)

உசச. மன்னுயி ரோம்பி யருளாள்வாற் கில்லென்ப
தன்னுயி ரஞ்சும் வினை. ச.

இ - ள். மன் உயிர் ஓம்பி அருள் ஆள்வாற்கு -நிலைபேறுடைய உயிர்களைப்பேணி அவற்றின்கண் அருளுடையனுவானுக்கு—தன் உயிர் அஞ்சும் வினை இல் என்ப - தன்னுயிர் அஞ்சுதற்கேது வாகிய தீவினைகள் உளவாகாவென்று சொல்லுவர் அறிந்தோர். எ - று.

உயிர்களெல்லாம் நித்தமாகலின், மன்னுயிரென்றார். அஞ்சுதல் துன்பநோக்கி யஞ்சுதல். அன்னவறத்தினோன் கொலைமுதலிய

பாவங்கள் செய்யானெனவே மறுமைக்கண் நரகம் புகாமைக்கேது கூறியவாறாயிற்று. (௪)

உ௪௫. அல்ல லருளாள்வார்க் கில்லை வளிவழங்கு
மல்லன்மா ஞாலங் கரி. ௫.

இ - ள். அருள் ஆள்வார்க்கு அல்லல் இல்லை - அருளுடையார்க்கு இம்மையினும் ஒருதுன்பமுண்டாகாது;—வளி வழங்கும் மல்லல் மா ஞாலம் கரி - அதற்குக் காற் றியங்குகின்ற வளப்பத்தையுடைய பெரிய ஞாலத்து வாழ்வார் சான்று. எ - று.

சான்றுவார் தாங்கண்டு தேறிய பொருளைக் காணாதார்க்குத் தேற்றுதற்குரியவர். அருளாள்வார்க்கு அல்லலுண்டாக ஒருகாலத்தும் ஓரிடத்தும் ஒருவருங்கண் டறிவா ரின்மையின், இன்மைமுகத்தான் ஞாலத்தார்யா வருஞ் சான்றென்பார், வளிவழங்கு மல்லன்மாஞாலங் கரியென்றார்: எனவே, இம்மைக்கணென்பது பெற்றாம். ஞாலம் ஆகுபெயர். இவைமூன்றுபாட்டானும் அத்துணையுடையார்க்கு இருமையினுந் துன்ப மில்லாமை கூறப்பட்டது.
(௫)

உ௪௬. பொருணீங்கிப் பொச்சாந்தா ரென்ப ரருணீங்கி
யல்லவை செய்தொழுகு வார். ௬. ௭௦

உ௫ ம் அதி.—அருளுடைமை.

இ - ள். அருள் நீங்கி அல்லவை செய்து ஒழுகுவார் - உயிர்கண்மாட்டுச் செய் யப்படும் அருளைத் தவிர்ந்து தவிரப்படுங் கொடுமைகளைச் 'செய்தொழுகுவாரை— பொருள் நீங்கிப் பொச்சாந்தார் என்பர் - முன்னும் உறுதிப்பொருளைச் செய்யாது தாந்துன்புறுகின்றமையை மறந்தவரென்று சொல்லுவர் நல்லோர். எ - று.

உறுதிப்பொருள் அறம். துன்புறுதல் பிறவித்துன்ப *

மூன்றனையும் அனுபவித் தல். மறந்திலராயின், அவ்வாறெழுகாரென்பது கருத்து. (சு)

உசஎ. அருளில்லார்க் கவ்வுலக மில்லை பொருளில்லார்க்
கிவ்வுலக மில்லா கியாங்கு. எ.

இ - ள். அருள் இல்லார்க்கு அவ்வுலகம் இல்லை - உயிர்கண்மேல் அருளில்லா தார்க்கு வீட்டுலகத்தின்பமில்லை,—பொருள் இல்லார்க்கு இவ்வுலகம் இல்லாகியாங்கு- பொருளில்லாதார்க்கு இவ்வுலகத்தின்பம் இல்லையாயினாற்போல. எ - று.

அவ்வலகம் இவ்வுலகம் என்பன ஆகுபெயர். இவ்வுலகத்தின்பங்கட்குப் பொருள் காரணமானாற்போல, அவ்வுலகத்தின்பங்கட்கு அருள் காரணமென்பதாயிற்று. (எ)

உசஅ பொருளற்றார் பூப்ப ரொருகா லருளற்று
ரற்றார்மற் றாத லரிது. அ.

இ - ள். பொருள் அற்றார் ஒருகால் பூப்பர் - ஊழான் வறியராயினார் அது நீங்கிப் பின் ஒருகாலத்துச் செல்வத்தாற்பொலிவர்,—அருள் அற்றார் அற்றார் மற்று ஆதல் அரிது - அவ்வாறன்றி அருளிலாதார் பாவமறாமையின் அழிந்தாரே, பின்னொருகாலத் தும் ஆதலில்லை. எ - று.

மற்று வினைமாற்றின்கண் வந்தது. மேற்பொருளின்மையோடு ஒருவாற்றானொப் புமை கூறினாராகலின், அது மறுத்து, பிறவாற்றான் அதனினுங் கொடிதென்பது கூறியவாறு. (அ)

உசகூ. தெருளாதான் மெய்ப்பொருள் கண்டற்றாற் றேறி
னருளாதான் செய்யு மறம். கூ.

இ - ள். அருளாதான் செய்யும் அறம் தேரின் - உயிர்கண்மாட்டு அருள்செய்யா தவன் செய்யுமறத்தையாராயின்,—தெருளாதான் மெய்ப்பொருள் கண்டற்று - ஞான மில்லாதவன் ஒருகால் மெய்ப்பொருளை உணர்ந்தாற்போலும். எ - று.

மெய்ப்பொருள் மெய்ந்நூலிற்சொல்லும்பொருள். நிலைபெற்ற

ஞானமில்லாதவன் இடையே மெய்ப்பொருளையுணர்ந்தால் அதனைத் தன்ஞானமின்மையால் தானே யழித்துவிடும், அதுபோல அருளாதான் இடையே அறஞ்செய்தால் அதனைத் தன்னருளாமையால் தானேயழித்துவிடுமென்பதாயிற்று; ஆகவே, பிறவறங்கட் கெல்லாம் அருளுடைமை மூலமென்பது பெற்றும். இவைா ர்குபாட்டானும் அத் துணையில்லாதார்க்கு வருங்குற்றங் கூறப்பட்டது. (௯)

உ௫0. வலியார்முற் றன்னை நினைக்கதான் றன்னின்
மெலியார்மேற் செல்லு மிடத்து. ௧0.

இ - ள். வலியார் முன் தன்னை நினைக்க - தன்னின்வலியார் தன்னை நலிய வரும் பொழுது அவர் முன் தானஞ்சிநிற்கு நிலையினை நினைக்க—தான் தன்னின் மெலியார்

* பிறவித்துன்பம் மூன்றும் மேலே நான்காம் குறளுரையிற் கூறப்பட்டது.

## உ௬ம் அதி.—புலான்மறுத்தல்.

ள்க் மேல் செல்லுமிடத்து - அருளில்லாதவன் தன்னினெளியார்மேல் தான் நலியச்செல் லும்பொழுது. எ - று.

மெலியாரெனச் சிறப்புடைய உயர்திணைமேற் கூறினாராயினும், எனையஃறிணை யுங் கொள்ளப்படும். அதனை நினைக்கவே இவ்வுயிர்க்கும் அவ்வாறே அச்சமாமென் றறிந்து அதன்மேல் அருளுடையனுமென்பது கருத்து. இதனால் அருள் பிறத்தற்குபாயங் கூறப்பட்டது. (௧0)

## உ௬ம் அதி.—புலான்மறுத்தல்.

அஃதாவது ஊனுண்டலையொழிதல். கொலைப்பாவத்தைப் பின்னுமுளதாக்கலின் அதற்குக் காரணமாதலையும் முன்னும் அதனான் வருதலின் அதன்காரியமாதலையும் ஒருங்குடைத்தாய ஊனுண்டல்

அருளுடையார்க்கு இயைவதன்றாகலின், அதனை விலக்குதற்கு, இஃதருளுடைமையின்பின் வைக்கப்பட்டது.

உருக. தன்னூன் பெருக்கற்குத் தான்பிறி தூனுண்பா
னெங்ஙன மாளு மருள். க.

இ - ள். தன் ஊன் பெருக்கற்கு தான்பிறிது ஊன் உண்பான் - தன்னுடம்பை வீக்குதற்பொருட்டுத் தான் பிறிதோருயிரினுடம்பைத் தின்பவன்—எங்ஙனம் ஆளும் அருள் - எவ்வகையான் நடத்தும் அருளினை! எ - று.

பயனிலாத ஊன் பெருக்கலைப் பயனெனக்கருதி இக்கொடுமை செய்வானே அறிவிலாத கொடியோனென்றவாறாயிற்று. எங்ஙனமாளுமருளென்பது ஆளானென்பது படப்பநின்ற இகழ்ச்சிக்குறிப்பு. (க)

உருஉ. பொருளாட்சி போற்றாதார்க் கில்லை யருளாட்சி
யாங்கில்லை யூன்றின் பவர்க்கு. உ.

இ - ள். பொருளாட்சி போற்றாதார்க்கு இல்லை - பொருளாற் பயன்கோடல் அதனைப் பாதுகாவாதார்க்கில்லை;—ஆங்கு அருளாட்சி ஊன் தின்பவர்க்கு இல்லை - அதுபோல அருளாற்பயன்கோடல் ஊன்றின்பவர்க்கில்லை. எ - று.

பொருட்பயனிழத்தற்குக் காரணம் காவாமை போல, அருட்பயனிழத்தற்கு ஊன்றினல் காரணமென்பதாயிற்று. ஊன்றின்றாராயினும் உயிர்கட்கு ஒரு தீங்கும் நினையாதார்க்கு அருளாடற்கிழுக்கில்லையென்பாரை மறுத்து, அஃதுண்டென்பது இவையிரண்டுபோட்டாலும் கூறப்பட்டது.
(உ)

உருங. படைகொண்டார் நெஞ்சம்போ னன்றூக்கா தொன்ற
னுடல்சுவை யுண்டார் மனம். ங.

இ - ள். படை கொண்டார் நெஞ்சம்போல் - கொலைக்கருவியைத் தங்கையிற் கொண்டவர் மனம் அதனாற் செய்யுங் கொலையையே நோக்குவதல்லது அருளை நோக்காதவாறுபோல—ஒன்றன் உடல் சுவை உண்டார் மனம் நன்று ஊக்காது - பிறிதோருயிரினுடலைச் சுவைபடவுண்டவர் மனம் அவ்வூனையே நோக்குவதல்லது அருளை நோக்காது. எ - று.

சுவைபடவுண்டல் காயங்களான் இனிய சுவைத்தாக்கியுண்டல். இதனால் ஊன்றின்றார் மனம் தீங்குநினைத்தல் தப்பட்டது.

உவமவளவையாற் சாதித்து, மேலது வலியுறுத்

(க)

எஉ உசம் அதி.—புலான்மறுத்தல.

உருச. அருளல்ல தியாதெனிற் கொல்லாமை கோறல்
பொருளல்ல தவ்வூன் றினல். ச.

இ - ள். அருள் யாதெனின் கொல்லாமை - அருள்யாதெனின், கொல்லாமை;- அல்லது (யாதெனின்) கோறல் - அருளல்ல தியாதெனிற் கோறல்;—அவ்வூன் தின பொருளல்லது - ஆகலான், அக்கோறலான் வாத வூனைத்தின்கை பாவம். எ - று.

உபசாரவழக்காற் கொல்லாமை கோறலாகிய காரியங்களை அருள் அல்லதென காரணங்களாக்கியும், ஊன்றின்கையாகிய காரணத்தைப் பாவமெனக் காரியமாக்யுங்கூறினார்.

வின், பாவம்

அருளல்லது கொலைமை. சிறப்புப்பற்றி அறமும் பொருளெனப்படு பொருளல்லதெனப்பட்டது கோறலென முன்னின்றமையின், அவ் வென்றார். இனி இதனை இவ்வாறன்றி அருளலலதென்பதனை ஒன்றாக்கி, கொல்லாமை கோறலென்பதற்குக் கொல்லாமையென்னும் விரதத்தையழித்தலென்றுரை பாருமுளர்.

(

உருரு. உண்ணாமை யுள்ள துயிர்நிலை யூனுண்ண
வண்ணாத்தல் செய்யா தளறு. ரு.

இ - ள். உயிர் நிலை ஊன் உண்ணாமை உள்ளது ஒருசாருயிர் உடம்பின்கண்ணே நிற்றல் ஊனுண்ணாமையென்கின்ற அறத்தின்கண்ணது;—உண்ண அளறு அண்ணாத்தல்செய்யாது - ஆகலான், அந்நிலை குலைய ஒருவன் அதனையுண்ணுமாயின், அவனை விழுங்கிய நிரயம் பின் உமிழ்தற்கு அங்காவாது. எ - று.

உண்ணப்படும்விலங்குகள் அதனாற்றேய்ந்து சிலவாக வினையவலவாய்வருதல் உண்ணாமையுள்ள துயிர்நிலையென்றார். உண்ணி என்பது உண்ணவெனத் திரிந்தது. ஊனுண்டவன் அப்பாவத்தான் மயங்குகாலம் எயத்துனமூழ்குமென்பத கொலைப்பாவம் கொன்றார்மேனிற்றலின் பின்னும் துணையாக்கும் பாவமில்லை யாரை மறுத்து, அஃதுண்டென்பது இவ்விரண்டுபாட்டானும் கூறப்பட்டது.

உருசு. தினற்பொருட்டாற் கொல்லா துலகெனின் யாரும்
விலைப்பொருட்டா லூன்றருவா ரில். சு.

இ - ள். தினற்பொருட்டு உலகு கொல்லாது எனின் - பேதைமை காரணமல்லது ஊன்றின்கை காரணமாகவுலகம்

கொல்லாதாயின், விலைப்பொருட்டூ தருவார் யாரும் இல் - பொருள் காரணமாக வூன் விற்பார் யாவரும் இல்லை. எ

உலகென்பது ஈண்டு உயிர்ப்பன்மைமேனின்றது. பின்னிகழ்தின்கை னிகழ்க்கொலைக்குக் காரணமாகாமையின் தின்பார்க்குக் காரணத்தான் வரும் பில்லையென்ற வாதியைநோக்கி, அருத்தாபத்தியளவையாற் காரணமாதல் சாதி லின், இதனான் மேலது வலியுறுத்தப்பட்டது.

உருஎ. உண்ணாமை வேண்டும் புலாஅல் பிறிதொன்றன்
புண்ணது உணர்வார்ப் பெறின். எ.

இ - ள். புலால் பிறிதொன்றன் புண் - புலாலாவது பிறிதோருடம்பின் புண் அது உணர்வார்ப் பெறின் உண்ணாமை வேண்டும் - அது தூய்தன்மை யறிவா பெறின், அதனை உண்ணுதொழியல் வேண்டும். எ - று.

## உஎம் அதி—தவம்.

எட

அஃதென்னல்லேண்மோய்தம்விகாரத்தாற்றெரக்கது. அம்மெய்ம்மையுணராமையின், அதனைபுண்ணின்றுரென்பதாம். பொருட்டுமாற்றுனும் புலாலுண்டல் இழிந்ததென்பது இதனாற் கூறப்பட்டது. (எ)

உருஅ. செயிரிற் றலைப்பிரிந்த காட்சியா ருண்ணா
ருயிரிற் றலைப்பிரிந்த வூன். அ.

இ - ள். செயிரின் தலைப்பிரிந்த காட்சியார் - மயக்கமாகிய குற்றத்தினீங்கிய அறிவினையுடையார் — உயிரின் தலைப்பிரிந்த ஊன் உண்ணார் - ஒருயிரினீங்கிவந்த வூனை யுண்ணார். எ - று.

தலைப்பிரிவென்பது ஒருசொல். பிணமென ஊனின்மெய்ம்மை தாமேயுணர்த லின், உண்ணாரென்றார்.

(அ)

உருக. அவிசொரிந் தாயிரம் வேட்டலி னொன்ற
ஹுயிர் செகுத் துண்ணாமை நன்று. க.

இ - ள். அவி சொரிந்து ஆயிரம்
அவிகளைச் சொரிந்து ஆயிரம்வேள்வி

வேட்டலின் - தீயின்கண் செய் முதலிய
வேட்டலினும்,—ஒன்றன் உயிர் செகுத்து
உண்ணாமை நன்று - ஒருவிலங்கினுயிரைப்போக்கி அது நின்ற
வுனைபுண்ணாமை நன்று. எ - று.

அவ்வேள்விகளான் வரும் பயனினும் இவ்விரதத்தான்
வரும்பயனே பெரி தென்பதாம்.

(க)

உ.க0. கொல்லான் புலாலை மறுத்தானைக் கைகூப்பி
யெல்லா வுயிருந் தொழும். க0.

இ - ள். கொல்லான் புலாலை மறுத்தானை -
ஒருயிரையு ங்கொல் லாதவனுமாய்ப்
புலாலையுமுண்ணாதவனை—எல்லாவுயிரும் கைகூப்பிதொழும் -
எல்லாவுயிருங் கை குவித்துத் தொழும். எ - று.

இவ்விரண்டறமும் ஒருங்குடையார்க்கல்லது ஒன்றேயுடையார்க்கு
அதனாற் பய னில்லையாகலின், கொல்லாமையுமுடன்கூறினார்.
இப்பொருளுடை யான் மறுமைக்கட் டே வரின் மிக் காணுமென
அப்பயனது பெருமை கூறியவாறு. இவைமூன்றுபாட் டாலும்
ஊனுண்ணாமையதுயர்ச்சி கூறப்பட்டது.

(க0)

---

## ௨௭ம் அதி.—தவம்.

அஃதாவது மனம் பொறிவழி போகாது நிற்றற்பொருட்டு விரதங்களான் உண்டிசுருக்கலும், கோடைக்கண்வெயினிலைநிற்றலும், மாரியினும் பனியினும் நீர்நிலை நிற்றலும் முதலிய செயல்களை மேற்கொண்டு, அவற்றாற் றம்முயிர்க்கு வருந் துன்பங்களைப் பொறுத்து, பிறவுயிர்களையோம்புதல். புலான்மறுத்து உயிர்கண்மேல் அருண் முதிர்ந்துழிச் செய்யப்படுவதாகலின், இது புலான்மறுத்தலின்பின் வைக்கப்பட்டது.

௨௬௧. உற்றநோய் நோன்ற லுயிர்க்குறுகண் செய்யாமை
யற்றே தவத்திற் குரு. ௧.

---

* பொருந்தமாறு—புத்தி.

## எ௨ ௨௬ம் அதி.—புலான்மறுத்தல்.

௨௫௪. அருளல்ல தியாதெனிற் கொல்லாமை கோறல்
பொருளல்ல தவ்வூன் றினல். ௪.

இ - ள். அருள் யாதெனின் கொல்லாமை - அருள்யாதெனின், கொல்லாமை; அல்லது (யாதெனின்) கோறல் - அருளல்ல தியாதெனிற் கோறல்;—அவ்வூன் றின்ல பொருளல்லது - ஆகலான், அக்கோறலான் வாத வூனைத்தின்கை பாவம். எ - று.

உபசாரவழக்காற் கொல்லாமை கோறலாகிய காரியங்களை அருள் அல்லதெ காரணங்களாக்கியும், ஊன்றின்கையாகிய காரணத்தைப் பாவமெனக் காரியமா

யுங்கூறினர்.
வின், பாவம்

அருளல்லது கொடுமை. சிறப்புப்பற்றி அறமும் பொருளெனப்படு பொருளல்லதெனப்பட்டது கோறலென முன்னின்றமையின், அ னென்றார். இனி இதனை இவ்வாறன்றி அருளலதெ ன்பதனை ஒன்றாக்கி, ... லாமை கோறலென்பதற்குக் கொல்லாமையன்றும்

விரதத்தையழித்தமையின் அன்றாறை பாருமுளர்.

உருரு. உண்ணாமை யுள்ள துயிர்நிலை யூனுண்ண
வண்ணாத்தல் செய்யா தளறு. ரு.

இ - ள். உயிர் நிலை ஊன் உண்ணாமை உள்ளது - ஒருசாருயிர் உடம்பின்கண் நிற்றல் ஊனுண்ணாமையென்கின்ற அறத்தின்கண்ணது; — உண்ண அளறு அண்ணாத்தல்செய்யாது - ஆகலான், அந்நிலை குலைய ஒருவன் அதனையுண்ணுமாயின், அவ விழுங்கிய நிரயம் பின் உமிழ்தற்கு அங்காவாது. எ - று.

உண்ணப்படும்விலங்குகள் அதனாற்றேய்ந்து சிலவாக ஏனையவ லவாய்வருத

உண்ணாமையுள்ளதுயிர்நிலையென்றார். உண்ணின் எனபது உண்ணவெனத் திரிந்து நின்றது. ஊனுண்டவன் அப்பாவத்தான் எக்காலமும் நிரயத்துளழுந்துமென்பது: கொலைப்பாவம் கொன்றார்மேனிற்றலின் ஈண்டு ஊண்பாக்குப் பாவமில்லை பாரை மறுத்து, அஃதுண்டென்பது இவ்விரண்டுபாட்டானும் கூறப்பட்டது.

உருசு. தினற்பொருட்டாற் கொல்லா துலகெனின் யாரும்
விலைப்பொருட்டா லூன்றருவா ரில். சு.

இ - ள். தினற்பொருட்டு உலகு கொல்லாது எனின் - பேதைமை காரணமாக வல்லது ஊன் தின்கை காரணமாக உலகங் கொல்லாதாயின், விலைப்பொருட்டு ஊன்தருவார் யாரும் இல் - பொருள் காரணமாக ஊன் விற்பார் யாவரும் இல்லை. எ

உலகென்பது ஈண்டு உயிர்ப்பன்மைமேனின்றது. பின்னிகழுந்தின்கை நிகழுங்கொலைக்குக் காரணமாகாமையின் தின்பார்க்குக் காரணந்தான் வரும் மில்லையென்ற வாதியைநோக்கி, அருத்தாபத்தியளவையாற் காரணமாதல் சாதி த்தின், இதனான் மேலது வலியுறுத்தப்பட்டது.

உருஎ. உண்ணாமை வேண்டும் புலாஅல் பிறிதொன்றன்
புண்ண துணர்வார்ப் பெறின். எ.

இ - ள். புலால் பிறிதொன்றன் புண் - புலாலாவது பிறிதோருடம்பின் புண்; அது உணர்வார்ப் பெறின் உண்ணாமை வேண்டும் - அது ஆய்தன்மை யறிவா பெறின், அதனை உண்ணாதொழியல் வேண்டும். எ - று.

## உளம் அதி.—தவம். எ

அஃதென்னல்வேண்டுமோய்தம்விகாரத்தாற்றெரிக்கது. அம்மெய்ம்மைபுணராமையின், அதனைபுண்கின்றாரென்பதாம். பொருந்தமாற்றானும் உ புணானுண்டல் இழிந்த தென்பது இதனாற் கூறப்பட்டது. (எ)

உருஅ. செயிரிற் றலைப்பிரிந்த காட்சியா ருண்ணா
ருயிரிற் றலைப்பிரிந்த வூன். அ.

இ - ள். செயிரின் தலைப்பிரிந்த காட்சியார் - மயக்கமாகிய குற்றத்தினின்றும் நீங்கிய அறிவினையுடையார் — உயிரின் தலைப்பிரிந்த ஊன் உண்ணார் - ஒருயிரினின்றும் நீங்கிவந்த ஊனை யுண்ணார். எ - று.

தலைப்பிரிவென்பது ஒருசொல். பிணமென ஊனின்மெய்ம்மை
லின், உண்ணாரென்றார்.
தாமேயுணர்த
(அ)

உருகூ. அவிசொரிந் தாயிரம் வேட்டலி னொன்ற
னுயிர்செகுத் துண்ணாமை நன்று. கூ.

இ - ள். அவி சொரிந்து ஆயிரம் வேட்டலின் - தீயின்கண் நெய் முதலிய அவிகளைச் சொரிந்து ஆயிரம்வேள்வி வேட்டலினும்,—ஒன்றன் உயிர் செகுத்து உண்ணாமை நன்று - ஒருவிலங்கினுயிரைப்போக்கி அது நின்ற ஊனையுண்ணாமை நன்று. எ - று.

அவ்வேள்விகளான் வரும் பயனினும் இவ்விரதத்தான் வரும்பயனே பெரி தென்பதாம்.
(௯)

உ௬0. கொல்லான் புலாலை மறுத்தானைக் கைகூப்பி
எல்லா வுயிருந் தொழும். ௰.

இ - ள். கொல்லான் புலாலை மறுத்தானை - ஒருயிரையுங்கொல்லாதவனுமாய்ப் புலாலையுமுண்ணாதவனை—எல்லாவுயிரும் கைகூப்பிதொழும் - எல்லாவுயிருங் கை குவித்துத் தொழும். எ - று.

இவ்விரண்டறமும் ஒருங்குடையார்க்கல்லது ஒன்றேயுடையார்க்கு அதனற் பய னில்லையாகலின், கொல்லாமையுமுடன்கூறினர். இப்பொருளுடையான் மறுமைக்கட் டேவரின் மிக் காணுமென அப்பயனது பெருமை கூறியவாறு. இவைமூன்றுபாட் டானும் ஊனுண்ணாமையதுயர்ச்சி கூறப்பட்டது. (௰)

## *உ௭ம் அதி.—தவம்.

அஃதாவது மனம் பொறிவழி போகாது நிற்றற்பொருட்டு விரதங்களான் உண்டிசுருக்கலும், கோடைக்கண்வெயினிலைநிற்றலும், மாரியினும் பனியினும் நீர்நிலை நிற்றலும் முதலிய செயல்களை மேற்கொண்டு, அவற்றாற் றம்முயிர்க்கு வருந் துன்பங் களைப் பொறுத்து, பிறவுயிர்களையோம்புதல். புலான்மறுத்து உயிர்கண்மேல் அருண் முதிர்ந்துழிச் செய்யப்படுவதாகலின், இது புலான்மறுத்தலின்பின் வைக்கப்பட்டது.

உ௬௧. உற்றநோய் நோன்ற லுயிர்க்குறுகண் செய்யாமை
யற்றே தவத்திற் குரு. ௧.

---

* பொருத்தமாறு—புத்தி.

**௨௫௪. அருளல்ல தியாதெனிற் கொல்லாமை கோறல்**
**பொருளல்ல தவ்வூன் றினல். ௪.**

இ-ள். அருள் யாதெனின் கொல்லாமை - அருள் யாதெனின், கொல்லாமை;— அல்லது (யாதெனின்) கோறல் - அருளல்ல தியாதெனிற் கோறல்;—அவ்வூன் றினல் பொருளல்லது - ஆகலான், அக்கோறலான் வந்த ஊனைத்தின்கை பாவம். எ - று.

உபசாரவழக்காற் கொல்லாமை கோறலாகிய காரியங்களை அருள் அல்லதெனக் காரணங்களாக்கியும், ஊன்றின்கையாகிய காரணத்தைப் பாவமெனக் காரியமாக்கி யுங்கூறினார். அருளல்லது கொடுமை. சிறப்புப்பற்றி அறமும் பொருளெனப்படுதலின், பாவம் பொருளல்லதெனப்பட்டது கோறலென முன்னின்றமையின், அவ்வூ னென்றார். இனி இதனை இவ்வாறன்றி அருளலலதென்பதனை ஒன்றாக்கி, கொல் லாமை கோறலென்பதற்குக் கொல்லா மையென்னும் விரதத்தையழித்தலென் றுரைப் பாருமுளர்.
(௪)

**௨௫௫. உண்ணாமை யுள்ள துயிர்நிலை யூனுண்ண**
**அண்ணாத்தல் செய்யா தளறு. ௫.**

இ-ள். உயிர் நிலை ஊன் உண்ணாமை உள்ளது-ஒருசாருயிர் உடம்பின்கண்ணே நிற்றல் ஊனுண்ணாமையென்கின்ற அறத்தின்கண்ணது;—உண்ண அளறு அண்ணாத் தல்செய்யாது - ஆகலான், அந்நிலை குலைய ஒருவன் அதனை யுண்ணுமாயின், அவனை விழுங்கிய நிரயம் பின் உமிழ்தற்கு அங்காவாது. எ - று.

உண்ணப்படும்விலங்குகள் அதனாற்றேய்ந்து சிலவாக ஏனையபல வாய்வருதலின்,

உண்ணுமைபுள்ள தயிரிலையென்றா. உண்ணினைபது உண்ணவெனத் திரிந்தின் றது. ஊனுண்டவன் அப்பாவததான பாம்யகாலம் நிரயத்தளழுந்துமென்பதாம். கொலைப்பாவம் கொன்றார்மேனிற்றலின ஏனனு: லூண்பாரக்குப் பாவமில்லையென் பாரை மறுத்து, அஃதுண்டென்பது இவ்விரண்டுபாட்டானுங் கூறப்பட்டது. (௫)

௨௫௬. தினற்பொருட்டாற் கொல்லா துலகெனின் யாரும்
விலைப்பொருட்டா லூன்றருவா ரில். ௬.

இ - ள். தினற்பொருட்டு உலகு கொல்லாது எனின் - பேதைமை காரணமாக வல்லது ஊன்றின்கை காரணமாகவுலகங் கொல்லாதாயின், விலைப்பொருட்டூன் தருவார் யாரும் இல் - பொருள் காரணமாக ஊன் விற்பார் யாவரும் இல்லை. எ - று.

உலகென்பது ஈண்டு உயிர்ப்பன்மைமேனின்றது. பின்னிகழ்தின்கை முன் னிகழ்கொலைக்குக் காரணமாகாமையின் தின்பார்க்குக் காரணததான் வரும்பாவ மில்லையென்ற வாதியைநோக்கி, அருத்தாபத்தியளவையாற் காரணமாதல் சாதித்த லின், இதனுன் மேலது வலியுறுத்தப்பட்டது. (௬)

௨௫௭. உண்ணுமை வேண்டும் புலாஅல் பிறிதொன்றன்
புண்ண துணர்வார்ப் பெறின். எ.

இ - ள். புலால் பிறிதொன்றன் புண் - புலாலாவது பிறிதோருடம்பின் புண்:— அது உணர்வாரப் பெறின் உண்ணுமை வேண்டும் - அது தூய்தன்மை யறிவாரைப் பெறின், அதனை உண்ணுதொழியல் வேண்டும், எ - று.

உளம் அதி—தவம்.

எக

அஃதெனன்வெண்மொய்தம்விகாசத்தாற்றுக்கது.
அம்மெய்ம்மைபுலாலமை யின், அதனைபுண்ணின்றாரென்பதாம்.
தென்பது இதனாற் கூறப்பட்டது.
பொருட்தமாற்றூம் உபுனாவுண்டல் இறிந்த
(எ)

உருஅ. செயிரிற் றலைப்பிரிந்த காட்சியா ருண்ணா
ருயிரிற் றலைப்பிரிந்த வூன். அ.

இ - ள். செயிரின் தலைப்பிரிந்த காட்சியார் - மயக்கமாகிய குற்றத்தினின்வெ அறிவினையுடையார் — உயிரின் தலைப்பிரிந்த ஊன் ஊனை புண்ணார். எ - று.

உண்ணார் - ஒருயிரினின்வெர்த
தலைப்பிரிவென்பது ஒருசொல். பிணமென ஊனின்மெய்ம்மை தாமேபுணர்த வின், உண்ணாரென்றார்.
(அ)

உருகூ. அவிசொரிந் தாயிரம் வேட்டலி னொன்ற
னுயிர்செகுத் துண்ணாமை நன்று. கூ.

இ - ள். அவி சொரிந்து ஆயிரம் வேட்டலின் - தீயின்கண் செய் முதலிய அவிகளைச் சொரிந்து ஆயிரம்வேள்வி வேட்டலினும்,—ஒன்றன் உயிர் செகுத்து உண்ணாமை நன்று - ஒருவிலங்கினுயிரைப்போக்கி அது நின்ற ஊனைபுண்ணாமை நன்று. எ - று.

அவ்வேள்விகளான் வரும் பயனினும் இவ்விரதத்தான் வரும்பயனே பெரி தென்பதாம்.
(கூ)

உகூ0. கொல்லான் புலாலை மறுத்தானைக் கைகூப்பி
யெல்லா வுயிருந் தொழும். கூ0.

இ - ள். கொல்லான் புலாலை மறுத்தானை -

ஒருயிரையுங்கொல்லாதவனுமாய்ப்
புலாலையுமுண்ணாதவனை—எல்லாவுயிரும் கைகூப்பிதொழும் - எல்லாவுயிருங் கை குவித்துத் தொழும். எ - று.

இவ்விரண்டறமும் ஒருக்குடையார்க்கல்லது ஒன்றேயுடையார்க்கு அதனாற் பய
னில்லையாகலின், கொல்லாமையுமுடன்கூறினர். இப்பேரருளுடை யான் மறுமைக்கட் டேவரின் மிக்கானுமென அப்பயனது பெருமை கூறியவாறு. இவைமூன்றுபாட் டாலும் ஊனுண்ணாமையதுயர்ச்சி கூறப்பட்டது. (௩0)

---

## உஎ ம் அதி.—தவம்.

அஃதாவது மனம் பொறிவழி போகாது நிற்றற்பொருட்டு விரதங்களான் உண்டிசுருக்கலும், கோடைக்கண்வெயிலினினிற்றலும், மாரியினும் பனியினும் நீர்நிலை நிற்றலும் முதலிய செயல்களை மேற்கொண்டு, அவற்றாற் றம்முயிர்க்கு வருந் துன்பங் களைப் பொறுத்து, பிறவுயிர்களையோம்புதல். புலான்மறுத்து உயிர்கண்மேல் அருண் முதிர்ந்துழிச் செய்யப்படுவதாகலின், இது புலான்மறுத்தலின்பின் வைக்கப்பட்டது.

உசுக. உற்றநோய் நோன்ற லுயிர்க்குறுகண் செய்யாமை
அற்றே தவத்திற் குரு. க.

---

* பொருத்தமாறு—புத்தி.



இ - ள். தவத்திற்கு உரு - தவத்தின் வடிவு—உற்ற நோய் நோன்றல் உயிர்க்கு உறுகண் செய்யாமை அற்றே - உண்டிசுருக்கன்முதலியவற்றால் தம்முயிர்க்கு வருந் துன்பங்களைப் பொறுத்தலும் தாம் பிறவுயிர்கட்குத் துன்பஞ்செய்யாமையுமாகிய அவ்வளவிற்று. எ - று.

மற்றுள்ளனவெல்லாம் இவற்றுள்ளே அடங்குதலின், அற்றேயெனத் தேற்றே காரங்கொடுத்தார். தவத்திற்குருவற்றென்பது யானையதுகோடு கூரிதென்பதனை யானைக்குக் கோடு கூரிதென்றாற்போல ஆறுவதன்பொருட்கண் நான்காவது வந்த மயக்கம். இதனால் தவத்தஇலக்கணங் கூறப்பட்டது.
(க)

உகஉ. தவமுந் தவமுடையார்க் காகு மவமதனை
யஃதிலார் மேற்கொள் வது. உ.

இ - ள். தவமும் தவமுடையார்க்கு ஆகும் - பயனையன்றித் தவந்தானும் உண் டாவது முற்றவமுடையார்க்கே,—அதனை அஃது இலார் மேற்கொள்வது அவம்-ஆ க லான், அத்தவத்தை அம்முற்றவமில்லாதார் முயல்வது பயனின்முயற்சியாம். எ - று.

பரிசயத்தால் அறிவுமாற்றலுமுடையராய் முடிவுபோக்கலின் தவமுடையார்க் காகுமென்றும், அஃதில்லாதார்க்கு அவையின்மையின் முடிவுபோகாமையின் அவமா மென்றுங் கூறினர்.
(உ)

உகங. துறந்தார்க்குத் துப்புரவு வேண்டி மறந்தார்கொன்
மற்றை யவர்க டவம். ங.

இ - ள். மற்றையவர்கள் - இல்லறத்தையே பற்றி நிற்பார்—துறந்தார்க்குத் துப் புரவு வேண்டி தவம் மறந்தார்கொல் - துறந்தார்க்கு உண்டியும் மருந்தும் உறையுளு முதலவலை விரும்பித் தாந்தவஞ்செய்தலை மறந்தார்போலும்! எ - று.

துப்புரவு அனுபவிக்கப்படுவன. * "வேண்டிய வேண்டியாங் கெய்த" ற்பயத்த தாகலின் யாவராலுஞ் செய்யப்படுவதாய தவத்தைத் தாஞ்செய்யுந் தானத்தின் மேல் விருப்பமிகுதியான்

மறந்தார்போலுமெனவே, தானத்திற்றவம் மிக்கதென்பது பெற்றும். (க)

உ௬௪. ஒன்னார்த் தெறலு முவந்தாரை யாக்கலு
மெண்ணிற் றவத்தான் வரும்.

இ - ள். ஒன்னார்த் தெறலும் - தம்மறத்திற்குப் பகையாய் அழிவுசெய்தாரைக் கெடுத்தலும்—உவந்தாரை ஆக்கலும் - அதனை யுவந்தாரை உயர்த்தலுமாகிய இவ்வி ரண்டையும்—எண்ணின் தவத்தான் வரும் - தவஞ்செய்வார் நினைப்பராயின், அவர் தவவலியான் அவை அவர்க்குளவாம். எ - று.

முற்றத்துறந்தார்க்கு ஒன்னாரும் உவந்தாரும் உண்மை கூடாமையின், தவத்திற் கேற்றியுரைக்கப்பட்டது. எண்ணினென்றதனுன், அவர்க்கு அவை யெண்ணுமை இயல்பென்பது பெற்றும். ஒன்னார்பெரியராயினும், உவந்தார் சிறியராயினும், கேடு மாக்கமும் நினைத்தவனையானே வந்து நிற்குமெனத் தவஞ்செய்வார்மேலிட்டுத் தவத் தினதாற்றல் கூறியவாறு. (௪)

---

* திருக்குறள், உ௬௪.

## உ௭ம் அதி.—தவம்.

௭௫.

உ௬௫. வேண்டிய வேண்டியாங் கெய்தலாற் செய்தவ
மீண்டு முயலப் படும். ௫.

இ - ள். வேண்டிய வேண்டியாங்கு எய்தலால் - முயன்றால் மறுமைக்கட்டாம் வேண்டிய பயன்கள் வேண்டியவாறே பெறலாம் ஆதலால்,—செய்தவம் ஈண்டு முய லப்படும் - செய்யப்படுவேதாய தவம்

இம்மைக்கண் அறிவுடையோரான் முயலப் படும். எ-று.

ஈண்டென்பதனான் மறுமைக்கணென்பது பெற்றும். மேற்கதி, வீடுபேறுகள் தவத்தானன்றி எய்தப்படாவென் பதாம். இவை நான்குபாட்டானும் தவத்தது சிறப் புக் கூறப்பட்டது. (௯)

உ௬௬. தவஞ்செய்வார் தங்கருமஞ் செய்வார்மற் றல்லா
ரவஞ்செய்வா ராசையுட் பட்டு. ௬.

இ-ள். தங்கருமம் செய்வார் தவம் செய்வார் - தங்கருமஞ் செய்வாராவார் துறந்து தவத்தைச்செய்வார்,—மற்று அல்லார் ஆசையுள் பட்டு அவம் செய்வார் - அவரையொழிந்த பொருளின்பங்களைச் செய்வார் அவற்றின்கணுசையாகிய வலையுட் பட்டுத் தமக்குக் கேடு செய்வார். எ-று.

அநித்தமாய் மூவகைத் துன்பத்ததாய் உயிரின்வேறாய உடற்கு வருத்தம் வரு மென்றொழியாது தவத்தினைச் செய்ய, பிறப்புப்பிணிமூப்பிறப்புக்களான் அநாதி யாகத்துன்பமெய்திவருகின்ற உயிர் ஞானம் பிறந்து வீடு பெறுமாகலின், தவஞ்செய் வாரைத் தங்கருமஞ்செய்வாரென்றும், கணத்துளழிவதாய சிற்றின்பத்தின்பொருட் டுப் பலபிறவியுந் துன்புறத்தக் க பாவஞ்செய்துகோடலின், அல்லாதாரை அவஞ் செய்வாரென்றும், கூறினர். மற்று வினைமாற்றின்கண் வந்தது. (௬)

உ௬௭. சுடச்சுடரும் பொன்போ லொளிவிடுந் துன்பஞ்
சுடச்சுட நோற்கிற் பவர்க்கு. எ.

இ-ள். சுடச் சுடரும் பொன்போல் - தீயின்கணிட்டுப் பொன்னுக்கு அது சுடச் சுடத் தன்னொடு கலந்த குற்றநீங்கி ஒளிமிகுமாறுபோல—நோற்கிற்பவர்க்குத் துன் பம் சுடச் சுட ஒளிவிடும் - தவஞ்செய்ய வல்லார்க்கு அதனான் வருத்தந் தம்மொடு கலந்த பாவநீங்கி ஞானமிகும். எ-று.

வருந்துன்பம் வருத்த

சுடச்சுடரும் பொன்போலென்றாராயினும், கருத்துநோக்கி இவ்வாறுரைக்கப் பட்டது. ஒளிபோலப் பொருள்களை விளக்கலின், ஒளியென்றார். (எ)

உகஅ. தன்னுயிர் தானறப் பெற்றானை யேனைய
மன்னுயி ரெல்லாந் தொழும். அ.

இ - ள். தன் உயிர் தான் அறப்பெற்றானை - தன்னுயிரைத் தான்றனக்குரித் தாகப் பெற்றவனை—ஏனைய மன்னுயிரெல்லாம் தொழும் - பெறாதனவாகிய மன்னுயிர்களெல்லாந்தொழும். எ- று.

தனக்குரித்தாதல் தவமாகிய தன்கருமஞ்செய்தல். அதனினாங்குப் பெறுதற் கரிய தின்மையின், பெற்றானையென்றார். அது பெறாதனவென்றது ஆசையுட்பட்டு அவஞ்செய்யுமுயிர்களை. மென்றார்.

சாபமுமருளுமாகிய இரண்டாற்றலுமுடைமையின், தொழு என
(அ)

## உ அம் அதிகாரவொழுக்கம்.

உகக. கூற்றங் குதித்தலுங் கைகூடு நோற்றலி
னாற்ற றலைப்பட் டவர்க்கு. க.

இ - ள். கூற்றம் குதித்தலும் கைகூடும் - கூற்றத்தைக் கடத்தலும் உண்டாவதாம்—நோற்றலின் ஆற்றல் தலைப்பட்டவர்க்கு - தவத்தான் வரும் ஆற்றலைத் தலைப் பட்டார்க்கு. எ - று.

சிறப்பும்மை அது கூடாமை விளக்கிற்று; மன்னுயிரெல்லாந் தொழுதலேயன்றி இதுவுங் கைகூடுமென எச்சவும்மையாக வுரைப்பினுமமையும். ஆற்றல் சாபவருள்கள். இவைநான்குபாட்டானும்

தவஞ்செய்வாரது உயர்ச்சி கூறப்பட்டது. (௯)

உ௭௦ இலர்பல ராகிய காரண நோற்பார்
சிலர்பலர் நோலா தவர். ௧௦.

இ - ள் இலர் பலராகிய காரணம் - உலகத்துச் செல்வர்கள் சிலராக நல்கூர்வார் பலராதற்குக் காரணம் யாதெனின்,—நோற்பார் சிலர் நோலாதவர் பலர் - அது தவஞ்செய்வார் சிலராக அதுசெய்யாதார் பலராதல், எ - று.

செல்வநல்குரவென்பன ஈண்டறிவினது உண்மையின்மைகளையுங் குறித்து நின்றன; என்னை? "நுண்ணுணர் வின்மை வறுமை யஃதுடைமை—பண்ணப் பணைத்த பெருஞ் செல்வம் * " என்றாராகலின். நோற்பார் சிலரெனக் காரணங் கூறினமை யான், காரியம் வருவித்துரைக்கப்பட்டது. தவஞ்செய்யாதார்க்கு இம்மையின்பமு மில்லையென இதனால் அவரது தாழ்வு கூறப்பட்டது. (௧௦)

---

## உ௮ம் அதி.—கூடாவொழுக்கம்.

அஃதாவது தாம் விட்ட காமவின்பத்தை உரனின்மையிற் பின்னும் விரும்பு மாறுதோன்ற அவ்வாறே கொண்டு நின்று தவத்தோடு பொருந்தாததாய தீயவொழுக்கம். அது விலக்குதற்கு இது தவத்தின்பின் வைக்கப்பட்டது.

உ௭௧. வஞ்ச மனத்தான் படிற்றொழுக்கம் பூதங்க
ளைந்து மகத்தே நகும். ௧.

இ - ள் வஞ்ச மனத்தான் படிற்றொழுக்கம் - வஞ்சம் பொருந்திய மனத்தையுடையவனது மறைந்தவொழுக்கத்தை—பூதங்கள் ஐந்தும் அகத்தே நகும்-உடம்பாய் அவனோடு கலந்து நிற்கின்ற பூதங்களைந்துங் கண்டு தம்முள்ளே நகும். எ - று.

காமம் தன்கண்ணே தோன்றி நலியாநிற்கவும் அதனதின்மைகூறிப் புறத்தாரை வஞ்சித்தலின் வஞ்சமனமென்றும், அந்நலிவு பொறுக்கமாட்டாதொழுகும் களவொழுக்கத்தைப் படிற்றொழுக்கமென்றும், உலகத்துக்களவுடையார் பிறரறியாமற் செய் வனவற்றிற்கு ஐம்பெரும்பூதங்கள் சான்றாகலின், அவ்வொழுக்கத்தையும் அவன் மறைக்கின்றவாற்றையுமறிந்து அவனறியாமற் றம்முள்ளே நகுதலின், அகத்தே நகுமென்றுங்கூறினர். செய்தகுற்றம் மறையாதாகலின், அவ்வொழுக்கம் ஆகாதென் பது கருத்து.

(௬)

---

* தன்றுணை யின்மை வறுமை யஃதுடைமை—பன்னப் பனைத்த பெருஞ் செல்வ - மென்றுங்காற்—பெண்ணவா யாணிழந்த பேடி யணியாளோ—கண்ணவாத் தக்க கலம்— நாலடியார், அறிவின்மை.

## உஅம் அதி.—கூடாவொழுக்கம்.

எள

உஎஉ. வானுயர் தோற்ற மெவன்செய்யுந் தன்னெஞ்சந்
தானறி குற்றப் படின். உ.

இ - ள். வான் உயர் தோற்றம் எவன் செய்யும் - ஒருவனுக்கு வான்போலுயர்ந்த தவவேடம் என்ன பயனைச் செய்யும்,—தான் அறி குற்றம் தன் நெஞ்சம் படின் - தான் குற்றமென்றறிந்த அதன்கண்ணே தன்னெஞ்சு தாழுமாயின். எ - று.

வானுயர் தோற்றமென்பது "வான்றோய்குடி*" என்றாற்போல இலக்கணை வழக்கு. அறியாது செய்த குற்றமல்லது அறிந்துவைத்துச் செய்த குற்றங் கழுவப் படாமையின், நெஞ்சு குற்றத்ததாயே விடும்;

விடவே, நின்ற வேடமாத்திரத்துக்குப் புறத்தாரை வெருட்டுதலேயல்லது வேறுபயனில்லை யென்பதாம். (உ)

உஎ௩. வலியி னிலைமையான் வல்லுருவம் பெற்றம்
புலியின்றோல் போர்த்துமேய்ந் தற்று. ௩.

இ - ள். வலி இல் நிலைமையான் வல்லுருவம் - மனத்தைத் தன்வழிப்படுத்தும் வலியில்லாத இயல்பினையுடையான் வலியுடையார் வேடத்தைக்கொண்டு தான் அதன் வழிப்படுதல்—பெற்றம் புலியின் றோல் போர்த்து மேய்ந்தற்று - பசு காவலர் கடியாமற் புலியின்றோலைப் போர்த்துப் பைங்கூழை மேய்ந்தாற்போலும். எ - று.

† இல்பொருளுவமை. வலியினிலைமையானென்ற அடையாலும்,மேய்ந்தற்றென் னும் தொழிலுவமையாலும், வல்லுருவத்தோடு மனவழிப்படுதலென்பது பெற்றும். காவலர் கடியாமை புலி புற்றின்னுதென்பதனாலும், அச்சத்தாலுமாம்; ஆகவே, வல் லுருவங்கோடற்குப் பயன் அன்னகாரணங்களான் உலகத்தார் அயிராமையாயிற்று. இவ்வாறு தனக்குரிய இல்லாளையுந்துறந்து வலியுமின்றிப் பிறர் அயிராத வல்லுருவ முங்கொண்டு நின்றவன் மனவழிப் படுதலாவது தன் மனமோடியவழியே ஓடி மறைந்து பிறர்க்குரிய மகளிரை விழைதலாம். அவ்வாறுதல், பெற்றம் தனக்குரிய புல்லைவிட்டுப் பிறர்க்குரிய பைங்கூழை மேய்ந்தாற்போலுமென்றஉவமையான் அறிக.

உஎ௪. தவமறைந் தல்லவை செய்தல் புதன்மறைந்து
வேட்டுவன் புட்சிமிழ்த் தற்று.

இ - ள். தவம் மறைந்து அல்லவை செய்தல் - அவ்வலியினிலைமையான் தவ வேடத்தின்கண்ணே மறைந்துநின்று தவமல்லவற்றைச் செய்தல்—வேட்டுவன் புதல் மறைந்து புள் சிமிழ்த்தற்று - வேட்டுவன் புதலின்கண்ணே மறைந்துநின்று புட்களைப்

பிணித்தாற்போலும். எ - று.

தவம் ஆகுயெர், தவமல்லவற்றைச் செய்தலாவது பிறர்க்குரிய மகளிரைத் தன்வயத்ததாக்குதல். இதுவும் இத்தொழிலுவமையானறிக. (௪)

உஎரு. பற்றற்றே மென்பார் படிற்றொழுக்க மெற்றெற்றென்
றேதம் பலவுந் தரும். ரு.

இ-ள். பற்று அற்றேம் என்பார் படிற்றொழுக்கம் - தம்மைப் பிறர் நன்கு மதித்தற்பொருட்டு யாம் பற்றற்றேமென்று சொல்வாரது மறைந்தவொழுக்கம்,— எற்று எற்று என்று ஏதம் பலவும் தரும் - அப்பொழுது இனிதுபோலத் தோன்றுமா

---

* நாலடியார், குடிப்பிறப்பு—உ. † இல்பொருளுவமை - அபூதவுவமை.



யினும், பின் என்செய்தேம் என்செய்தேமென்று தாமேயிரங்கும்வகை, அவர்க்குப் பல துன்பங்களையுங் கொடுக்கும். எ - று.

சொல்லளவல்லது பற்றறாமையின், பற்றற்றேமென்பாரென்றும், சிறிதாய்க் கணத்துள்ளே அழிவதாய இன்பத்தின்பொருட்டுப் பெரிதாய் நெடுங்கால நிற்பதாய பாவத்தைச் செய்வார் அதன் விளைவின்கண் "அந்தோ வினையேயென்றழுஉ" வராக லில், எற்றெற்றென்றுங் கூறினார். இவையிரண்டுபாட்டானும் கூடாவொழுக்கத்தி னிழுக் கம் கூறப்பட்டது.
(ரு)

உஎகூ. நெஞ்சிற் றுறவார் துறந்தார்போல் வஞ்சித்து
வாழ்வாரின் வன்கணா ரில். கூ.

இ - ள். நெஞ்சின் துறவார் - நெஞ்சாற் பற்றறாதுவைத்து —துறந்தார்போல் வஞ்சித்துவாழ்வாரின் - பற்றற்றார்போன்று

தானஞ்செய்வாரை வஞ்சித்து வாழு மவர்போல்—வன்கணார் இல் - வன்கண்மையையுடையார் உலகத்தில்லை. எ - று.

தானஞ்செய்வாரை வஞ்சித்தலாவது யாம் மறுமைக்கட்டேவராதற்பொருட்டு இவ்வருந்தவர்க்கு இன்னதீதுமென்று அறியாதீந்தாரை அதுகொண்டு இழிபிறப்பின ராக்குதல். அவர் இழிபிறப்பினராதல் "அடங்கலர்க் கீந்த தானப் பயத்தினா லலறு முந்நீர்த்—தடங்கட னடுவுட் டீவு பலவுள வவற்றுட் டோன்றி—யுடம்பொடு முகங்க ளொவ்வா ருழ்கனி மாந்தி வாழ்வர்—மடங்கலஞ் சீற்றத் துப்பின் மானவேன் மன்ன ரேறே†" என்பதனானறிக. தமக்கு ஆவனசெய்தார்க்கு ஆகாதன விளைத்தலின், வன்கணாரில்லென்றார். (௭)

உஎஎ. புறங்குன்றி கண்டனைய ரேனு மகக்குன்றி
மூக்கிற் கரியா ருடைத்து. எ.

இ - ன். குன்றிபுறம் கண்டு அனையரேனும் - குன்றியின்புறம்போல வேடத்தாற் செம்மையுடையாராயினும்,—குன்றி மூக்கின் அகம் கரியார் உடைத்து - அதன் மூக்குப்போல மனமிருண்டிருப்பாரை உடைத்து உலகம். எ - று.

குன்றி ஆகுபெயர். செம்மை கருமையென்பன ‡ பொருளின்கணிறத்தை விட் டுசெப்பத்தினும் அறியாமையினுஞ் சென்றனவாயினும், பண்பாலொத்தலின் இவை பண்புவமை: "கூழின் மலிமனம் போன்றிரு ளாகின்ற கோகிலமே§" என்பதுமது.

உஎஅ. மனத்தது மாசாக மாண்டார்நீ ராடி
மறைந்தொழுகு மாந்தர் பலர். அ.

இ - ன். மாசு மனத்தது ஆக - மாசு தம்மனத்தின்கணதாக—மாண்டார் நீராடி-பிறர்க்குத் தவத்தான் மாட்சிமையுடையராய் நீரின்மூழ்கிக்காட்டி—மறைந்து ஒழுகும் மாந்தர் பலர் - தாம் அதன்கண்ணே மறைந்து செல்லும் மாந்தர் உலகத்துப்

பலர். எ - று.

---

* சீவகசிந்தாமணி, முத்தியிலம்பகம், உஎ.

† சீவகசிந்தாமணி, முத்தியிலம்பகம், உசச.  ‡ பொருள் - உபமேயம்.

§ வாரும் படிபொன்றுங் கண்டிலம் வாழியிம் மாம்பொழிற்றேன்—தூறு முகச்சுற்றும் பற்றின வாறொருண்டை பங்கனிவா—யாழின் மொழிமங்கை பங்கன்சிற் றம்பல மாதரிபாக்—கூழின் மலிமனம் போன்றிரு ளாகின்ற

கோகிலமே—திருச் சிற்றம்பலக்கோவையார், கஉஉ. ஊக்க ம்

## அதி.—கள்ளாமை. எக

மாசு காம வெகுளி மயக்கங்கள். அவை போதற்கன்றி மாண்டாரென்று பிறர் கருதுதற்கு நீராடுதலான், அத்தொழிலை அவர் மறைதற்கிடனாக்கினார். இனி மாண்டார் நீராடியென்பதற்கு மாட்சிமைப்பட்டாரது நீர்மையையுடையராயென உரைப்பாருமுளர். இவை மூன்றுபாட்டானும் அவ்வொழுக்கமுடையாரது குற்றமும் அவரை யறிந்து நீக்கல்வேண்டுமென்பதும் கூறப்பட்டன. (அ)

உஎகூ. கணைகொடிது யாழ்கோடு செவ்விதாங் கன்ன
வினைபடு பாலாற் கொளல். கூ.

இ - ள். கணை கொடிது யாழ் கோடு செவ்விது - அம்பு வடிவாற்செவ்விதாயினும், செயலாற்கொடிது; யாழ் கோட்டால் வளைந்ததாயினும், செயலாற்செவ்விது;—ஆங்கு அன்ன வினைபடு பாலால் கொளல் - அவ்வகையே தவஞ்செய்வோரையுங் கொடியர் செவ்வியரென்பது, வடிவாற்கொள்ளாது, அவர் செயல்பட்ட கூற்றானே அறிந்துகொள்க. எ - று.

கணைக்குச்செயல் கொலை. யாழுக்குச்செயல் இசையாலின்பம் பயத்தல். அவ் வகையே செயல் பாவமாயிற் கொடியரெனவும், அறமாயிற் செவ்வியரெனவுங் கொள்க வென்பதாம். இதனான் அவரையறியுமாறு கூறப்பட்டது. (கூ)

உஅ௦. மழித்தலு நீட்டலும் வேண்டா வுலகம்
பழித்த தொழித்து விடின். ௩௦.

இ - ள். மழித்தலும் நீட்டலும் வேண்டா - தவஞ்செய்வார்க்குத் தலைமயிரை மழித்தலுஞ் சடையாக்கலுமாகிய வேடமும் வேண்டா,—உலகம் பழித்தது ஒழித்து விடின் - உயர்ந்தோர் தவத்திற்காகாதென்று குற்றங்கூறிய ஒழுக்கத்தைக் கடிந்து விடின். எ - று.

பறித்தலும் மழித்தலுளடங்கும். மழித்தலென்பதே தலைமயிரை உணர்த்தலின், அது கூறாராயினர். இதனாற் கூடாவொழுக்கமில்லாதார்க்கு வேடமும் வேண்டாவென அவரது சிறப்புக் கூறப்பட்டது. (௩௦)

---

## உ௯ ம் அதி.—கள்ளாமை.

அஃதாவது பிறருடைமையாயிருப்பதியாதொருபொருளையும் அவரைவஞ்சித் துக்கொள்ளக் கருதாமை. கருதுதலும்செய்தலோடொத்தலின், கள்ளாமையென்றார். இல்வாழ்வார்க்காயின் தமரோடு விளையாட்டுவகையால் அவரை வஞ்சித்துக் கோடற்கு இயைந்த பொருள்களை அங்ஙனங்கொள்ளினும் அமையும், துறந்தார்க்காயின் அதனைக் கருதியவழியும் பெரியதோரிழுக்காம் ஆகலின், இது துறவறமாயிற்று. புறந்துப்போகாது மடங்கி ஒருதலைப்பட்டு உயிரையே நோக்கற்பாலதாய அவர்மனம் அஃதொழிந்து புறத்தே போந்து பஃறலைப்பட்டு உடம்பின்பொருட்டுப் பொருளை நோக்குதலேயன்றி, அது தன்னையும் வஞ்சித்துக்கொள்ளக்கருதுதல் அவர்க்குப் பெரியதோரிழுக்காதல் அறிக. இவ்வாறு வாய்மைமுதற் கொல்லாமையிறுய நான்கதிகாரத்திற்குமொக்கும். பொருள்பற்றி நிகழுங் குற்றத்தை விலக்குகின்றதாகலின், இது காமம்பற்றி நிகழ்வதாய கூடாவொழுக்கத்தின்பின் வைக்கப்பட்டது.

உஅ௧. எள்ளாமை வேண்டுவா னென்பா னெனைத்தொன்றுங்
கள்ளாமை காக்கதன் னெஞ்சு. ௧.

இ - ள். எள்ளாமை வேண்டுவான்,என்பான் - வீட்டினையிகழாது விரும்புவான் இவனென்று தவத்தோரான் நன்குமதிக்கப்படுவான்—எனைத்தொன்றும் கள்ளாமை தன் நெஞ்சு காக்க - யாதொருபொருளையும் பிறரை வஞ்சித்துக்கொள்ளக் கருதா வகை தன்னெஞ்சினைக் காக்க. எ - று.

எள்ளாதென்னும் எதிர்மறைவினையெச்சம் எள்ளாமையெனத் திரிந்து நின்றது. வீட்டினையிகழ்தலாவது காட்சியே அளவையாவதென்றும், நிலம், நீர் தீ, வளி யெனப் பூதம் நான்கேயென்றும், அவற்றது புணர்ச்சி விசேடத்தாற்றோன்றிப் பிரிவான் மாய்வதாய உடம்பின் கண்ணே அறிவு மதுவின்கட்களிப்புப்போல வெளிப்பட்டழியுமென்றும், இறந்தவுயிர் பின் பிறவாதென்றும், இன்பமும் பொருளும் ஒருவ னாற் செய்யப்படுவனவென்றுஞ் சொல்லும் உலோகாயதமுதலிய மயக்கநூல்களைத் தெளிந்து, அவற்றிற்கேற்ப ஒழுகுதல். ஞானத்திற்கேதுவாய மெய்ந்நூற்பொருளை யேனும் ஆசிரியனை வழிபட்டன்றி அவனை வஞ்சித்துக் கொள்ளின், அதுவுங் களவா மாகலின், எனைத்தொன்றுமென்றார்.நெஞ்சு களளாமற் காக்கவெனவே, துறந்தார்க்கு விலக்கப்பட்ட கள்ளுதல் கள்ளக்கருதுதலென்பது பெற்றாம். (க)

உ௮உ. உள்ளத்தா லுள்ளலுந் தீதே பிறன்பொருளைக்
கள்ளத்தாற் கள்வே மெனல். உ.

இ - ள். உள்ளத்தால் உள்ளலும்தீதே - குற்றங்களைத் தந்நெஞ்சாற் கருதுதலும் துறநதார்க்குப் பாவம்;—பிறன் பொருளைக் கள்ளத்தால் கள்வேம் எனல - ஆத லால், பிறனொருவன் பொருளை அவன் அறியாவகையால் வஞ்சித்துக்கொள்வேமென்று கருதற்க. எ - று.

உள்ளத்தாலென வேண்டாது கூறினார், அவருள்ளம் ஏனையாருள்ளம் போலாது சிறப்புடைத்தென்பது முடித்தறகு.

இருள் நரகம்; அஃது ஆகுபெயராய்க் காரணத்தின்மேனின்றது. நீங்கியெனத் தொடைநோக்கி மெலிந்து நின்றது; நீங் கவென்பதன் றிரிபெனினுமமையும். மருணீங் கியென்னும் வினையெச்சம் காட்சியவரென்னுங் குறிப்புவினைப்பெயர் கொண்டது. மாசறுகாட்சியென்றது கேவலவுணர்வினை. இதனால் வீடாவது நிரதிசயவின்பமென் பதூஉம், அதற்கு நிமித்தகாரணம் கேவலப் பொருளென்பதூஉம், கூறப்பட்டன.(௨)

௩௫௩. ஐயத்தி னீங்கித் தெளிந்தார்க்கு வையத்தின்
வான நணிய துடைத்து. ௩.

இ - ள். ஐயத்தின் நீங்கித் தெளிந்தார்க்கு - ஐயத்தினின்று நீங்கி மெய்யுணர்ந் தார்க்கு—வையத்தின் வானம் நணியது உடைத்து - எய்திநின்ற நிலவுலகத்தினும் எய்தக்கடவதாய வீட்டுலகம் நணித்தாதலுடைத்து. எ - று.

ஐயமாவது பலதலையாயவுணர்வு. அஃதாவது மறுபிறப்பும், இருவினைப் பயனும், கடவுளும் உளவோ இலவோவென ஒன்றிற்றுணிவு பிறவாது நிற்றல்; பேய்த்தேரோ [illegible] ம்

அதி.—மெய்யுணர்தல்.

புனலோ எனிறே அரவோவெனத் துணியாது நிற்பதும் அது. ஒருவாற்றாற் பிறர் மதங்களைந்து தம்மதநிறுத்தல் எல்லாச்சமயநூல்கட்கும் இயல்பாகலின், அவை கூற நின்ற பொருள்களுள் யாது மெய்யென நிகழுமையத்தினை யோகமுதிர்ச்சியுடையார் தம்மனுபவத்தானீக்கி மெய்புணர்வாராகலின், அவரை ஐயத்தினீங்கித் தெளிந்தா ரென்றும், அவர்க்கு அவ்வனுபவவுணர்வு அடிப்பட்டு வரவரப் பண்டையுலகிய லுணர்வு தேய்ந்துவருமாகலின் அதனைப் பயன்மேலிட்டு வையத்தின்வான நணியது டைத்தென்றுங் கூறினர்; கூறவே, ஐயவுணர்வும் பிறப்பிற்குக் காரணமாதல் கூறப் பட்டது. (௩.)

௩௫௪. ஐயுணர் வெய்தியக் கண்ணும் பயமின்றே
மெய்யுணர் வில்லா தவர்க்கு. ௪.

இ - ள். ஐயுணர்வு எய்தியக்கண்ணும் பயம் இன்றே - செல்லப்படுகின்ற புலன் கள் வேறுபாட்டான் ஐந்தாகியவுணர்வு அவற்றை விட்டுத் தம்வயத்ததாய வழியும், அதனாற் பயனில்லையேயாம்—மெய்யுணர்வு இல்லாதவர்க்கு - மெய்யினையுணர்தலில் லாதார்க்கு. எ - று.

ஐந்தாகியவுணர்வு மனம். அஃதெய்துதலாவது மடங்கி ஒருதலைப்பட்டுத் தார ணைக்கணிற்றல். அங்ஙனநின்றவழியும் வீடு பயவாமையின் பயமின்றென்றார். சிறப் பும்மை எய்துதற்கருமை விளக்கிநின்றது. இவையிரண்டுபாட்டானும் மெய்யுணர் வுடையார்க்கே வீடுண்டென மெய்யுணர்வின் சிறப்புக் கூறப்பட்டது. (௪)

௩௫௫. எப்பொருளெத்தன்மைத் தாயினு மப்பொருள்
மெய்ப்பொருள் காண்ப தறிவு. ௫.

இ - ள். எப்பொருள் எத்தன்மைத்து ஆயினும் - யாதொருபொருள் யாதோ ரியல்பிற்றாய்த் தோன்றினும்,—அப்பொருள் மெய்ப்பொருள் காண்பது அறிவு - அத் தோன்றியவாற்றைக் கண்டொழியாது அப்பொருளின்கணின்று மெய்யாகிய பொரு ளைக் காண்பதே மெய்யுணர்வாவது. எ - று.

பொருடோறும் உலகத்தார் கற்பித்துக்கொண்டு வழங்குகின்ற கற்பனைகளைக் கழித்து,நின்றவுண்மையைக் காண்பதென்றவாறாயிற்று. அஃதாவது கோச்சேரமான் யானைக்கட்சேஎய் மாந்தரஞ்சேரலிரும்பொறை என்றவழி அரசனென்பதோர்சாதி யும், சேரமானென்பதொருகுடியும், வேழநோக்கினையுடையானென்பதோர் வடிவும், சேயென்பதோரியற்பெயரும், மாந்தரஞ்சேரலிரும்பொறையென்பதோர் சிறப்புப் பெயரும், ஒருபொருளின்கட் கற்பனையாகலின், அவ்வாறுணராது நிலமுதல் உயிரீறா கிய தத்துவங்களின்றொகுதியெனவுணர்ந்து,அவற்றைநிலமுதலாகத் தத்தம் காரணங் களுளொடுக்கிக் கொண்டுசென்றாற் காரணகாரியங்களிரண்டுமின்றி முடிவாய் நிற்பத னையுணர்தலாம். எப்பொருளெனப் பொதுமையான் இயங்குதிணையும் நிலைத்திணையு மாகிய பொருள்களெல்லாம் இவ்வாறே புணரப்படும். இதனான் மெய்யுணர்வின இலக்கணங் கூறப்பட்டது.
(௫)

௩௫௬. கற்றீண்டு மெய்ப்பொருள் கண்டார் தலைப்படுவர்
மற்றீண்டு வாரா நெறி. ௬.

இ - ள். ஈண்டுக் கற்று மெய்ப்பொருள் கண்டார் -

இம்மக்கட்பிறப்பின்கண்ணே

உ. பதேசமொழிகளை அனுபவமுடைய தேசிகர்பாற் கேட்டு அதனன் மெய்ப்பொருளை

## ௩௬ம் அதி.—மெய்யுணர்தல்.

௩௦௬

புணர்ந்தவர்—மற்று ஈண்டு வாரா நெறி தலைப்படுவர் - மீண்டு இப்பிறப்பின்கண் வாராத நெறியையெய்துவர். எ - று.

கற்றென்றதனால் பலர்பக்கலினும் பலகாலும் பயிறலும், ஈண்டென்றதனால் வீடு பேற்றிற்குரிய மக்கட்பிறப்பினது பெறுதற்கருமையும் பெற்றும். ஈண்டு வாராநெறி வீட்டுநெறி. வீட்டிற்கு நிமித்தகாரணமாய முதற்பொருளை உணர்தற்கு உபாயம் மூன்று; அவை கேள்வி, விமரிசம், பாவனையென்பன. அவற்றுட்கேள்வி * இதனாற் கூறப்பட்டது.

(௬)

௩௫௭. ஓர்த்துள்ள முள்ள துணரி னொருதலையாப்
பேர்த்துள்ள வேண்டா பிறப்பு. எ.

இ - ள். உள்ளம் ஒருதலையா ஓர்த்து உள்ளது உணரின் - அங்ஙனங்கேட்ட உபதேசமொழிப்பொருளை ஒருவனுள்ளம் அளவைகளானும் பொருந்துமாற்றானுந்தெளிய வாராய்ந்து, அதனன் முதற்பொருளை யுணருமாயின்,—பேர்த்துப் பிறப்பு உள்ள வேண்டா - அவனுக்கு மாறிப் பிறப்புளதாக நினைக்கவேண்டா. எ - று.

ஒருதலையாவோர்த்தென இயையும். அளவைகளும் பொருந்துமாறும் மேலே † புரைத்தாம். இதனால் விமரிசங் கூறப்பட்டது. (எ)

௩௫அ. பிறப்பென்னும் பேதைமை நீங்கச் சிறப்பென்னுஞ்
செம்பொருள் காண்ப தறிவு. அ.

இ - ள். பிறப்பு என்னும் பேதைமை நீங்க - பிறப்பிற்கு முதற்காரணமாய அவிச்சைகெட—சிறப்பு என்னும் செம்பொருள் காண்பது அறிவு - வீட்டிற்கு நிமித்த காரணமாய செவ்வியபொருளைக் காண்பதே ஒருவர்க்கு மெய்யுணர்வாவது. எ - று.

பிறப்பென்னும் பேதைமையெனவும், சிறப்பென்னுஞ் செம்பொருளெனவும்' காரியத்தைக் காரணமாக உபசரித்தார். ஐவகைக் குற்றங்களுள் அவிச்சை யேனைய நான்கிற்குங் காரணமாதலுடைமையின், அச்சிறப்புப்பற்றி அதனையே பிறப்பிற்குக் காரணமாக்கிக்கூறினார், எல்லாப்பொருளினுஞ் சிறந்ததாகலால், வீடு சிறப்பெனப் பட்டது. தோற்றக்கேடுகளின்மையின் நித்தமாய், நோன்மையாற் றன்னையொன்றுங் கலத்தலின்மையிற் றூய்தாய்த், தானெல்லாவற்றையுங் கலந்து நிற்கின்ற முதற்பொருள் விகாரமின்றி எஞ்ஞான்றும் ஒருதன்மைத்தாதல்பற்றி, அதனைச் செம்பொருளென்றார். மேல் மெய்ப்பொருளெனவும் உள்ளதெனவுங் கூறியதூஉம் இதுபற்றி யெனவுணர்க. அதனைக் காண்கையாவது உயிர் தன்னவிச்சைகெட்டு அதனோடொற்றுமையுற இடைவிடாது பாவித்தல்; இதனைச் சமாதியெனவுஞ் சுக்கிலத்தியானமென வுங் கூறுப. உயிர் உடம்பினீங்குங்காலத்து அதனால் யாதொன்று பாவிக்கப்பட்டது அஃது அதுவாய்த் தோன்றுமென்பது எல்லாவாகமங்கட்குந் துணிபாகலின், வீடெய் துவார்க்கு அக்காலத்துப் பிறப்பிற்கேதுவாய பாவனை கெடுதற்பொருட்டுக் கேவலப் பொருளையே பாவித்தல் வேண்டுதலான், அதனை முன்னே பயிறலாய இதனின்மிக்க வுபாயமில்லையென்பதறிக. இதனாற் பாவனை கூறப்பட்டது. (அ)

---

* கேள்வியெனினும், சிரவணமெனினு மொக்கும். விமரிசமெனினும், சிந்தித்தலெனினும், மனனமெனினு மொக்கும். பாவனையெனினும், தெளிதலெனினும், நிதித்தியாசன மெனினு மொக்கும்.

† உசஉ-ம் குறளுரையிற் காண்க.



## ௩௬-ம் அதி.—மெய்யுணர்தல்.

௩௫௯. சார்புணர்ந்து சார்பு கெடவொழுகின் மற்றழித்துச்
சார்தரா சார்தரு நோய்.* ௯.

இ - ள். சார்பு உணர்ந்து சார்பு கெட ஒழுகின் - ஒருவன் எல்லாப்பொருட்குஞ் சார்பாய அச்செம்பொருளையுணர்ந்து இருவகைப்பற்றுமற ஒழுகவல்லனாயின்,—சார் தரும் நோய் அழித்து மற்றுச் சார்தரா - அவனை முன் சாரக்கடவனவாய் நின்ற துன்பங்கள் அவ்வுணர்வொழுக்கங்களை யழித்துப் பின்சாரமாட்டா. எ - று.

ஆகுபெயராற் சாருமிடத்தையும் சார்வனவற்றையுஞ் சார்பென்றார். ஈண்டு ஒழுக்கமென்றது யோகநெறி யொழுகுதலை. அஃது இயமம், நியமம், இருப்பு, உயிர் நிலை, மனவொடுக்கம், தாரணை, தியானம், சமாதியென எண்வகைப்படும். அவற்றின் பரப்பெல்லாம் ஈண்டுரைப்பிற்பெருகும்; யோகநூல்களுட்காண்க. மற்றுச் சார்தரா வெனவியையும். சாரக்கடவனவாய் நின்ற துன்பங்களாவன பிறப்பு அநாதியாய் வருதலின் உயிரான் அளவின்றியீட்டப்பட்ட வினைகளின் பயன்களுள் இறந்த உடம்புகளான் அனுபவித்தனவும் பிறந்தவுடம்பான் முகர்ந்து நின்றனவுமொழியப் பின்னு மனுபவிக்கக் கடவனவாய்க்கிடந்தன. அவை விளக்கின்முன்னிருள்போல் ஞான யோகங்களின் முன்னர்க் கெடுதலான், அழித்துச்சார்தராவென்றார். இதனை ஆருகதர் உவர்ப்பென்ப. பிறப்பிற்குக்காரணமாகலான், நல்வினைப்பயனும் நோயெனப்பட்டது. மேன்மூன்றுபாயத்தானும் பரம்பொருளை யுணரப் பிறப்பறுமென்றார். அஃதறும்வழிக் கிடந்த துன்பங்களெல்லாம் என்செய்யுமென்னுங்காலையாசங்கித்து அவை ஞானயோகங்களின் முதிர்ச்சியுடையவுயிரைச் சாரமாட்டாமையானும் வேறு சார்பின்மையானுங் கெட்டுவிடுமென்பது இதனுற் கூறப்பட்டது. (௯)

௩௬௰. காமம் வெகுளி மயக்க மிவைமூன்ற
னாமங் கெடக்கெடு நோய். ௧0.

இ - ள். காமம் வெகுளி மயக்கம் இவை மூன்றன் நாமம் கெட - ஞானயோகங்களின் முதிர்ச்சியுடையார்க்கு விழைவு, வெறுப்பு, அவிச்சையென்னு மிக்குற்றங்கண் மூன்றனுடைய பெயரும் கெடக்கெடுதலான்,—நோய் கெடும் - அவற்றின் காரியமாய வினைப்பயன்கள் உளவாகா. எ - று.

அநாதியாய அவிச்சையும், அதுபற்றி யானெனமதிக்கும் அகங்காரமும், அது பற்றி எனக்கிதுவேண்டுமென்னும் அவாவும், அது பற்றி அப்பொருட்கட்செல்லு மாசையும், அதுபற்றி அதன்மறுதலைக்கட்செல்லுங்கோபமுமென வடநூலார் குற்றமைந்தென்றார். இவர் அவற்றுள் அகங்காரம் அவிச்சைக்கண்ணும் அவாவுதல் ஆசைக்

---

* இவ்வருமைத்திருக்குறளைத் திருக்கடவூர் உய்யவந்த தேவநாயனார் திருக்களிற்றுப்படியாரிலே "சார்புணர்ந்து சார்பு கெடவொழுகி னென்றதனையாற்—சார்புணர்வுதானே தியான முமாஞ் - சார்பு—கெடவொழுகி னல்ல சமாதியுமாங் கேதப்—படவருவ தில்லைவினைப் பற்று." எனவெடுத்தருளிச்செய்தார். இவ்வுய்யவந்ததேவநாயனார் பெரும்பற்றப்புலியூரில் எழுந்தருளியிருந்தபொழுது தம்மையடைந்த ஓர் தபக்குமாரர்பொருட்டு இந்நூலைச்செய்து, இதன்பெருமையை உலகத்துள்ளார் உணர்த்துமாறு திருவுளங்கொண்டு, திருவம்பலத்திற் சென்று வணங்கி, திருக்களிற்றுப்படியிலே இந்நூலை வைக்குமளவில் அத்திருக்களிற்றானை நிமிர்ந்து இதனைவாங்கிப் பரமகுருமூர்த்தியாகிய நடராசர் திருவடியிலே கொடுத்தமையால், அத்திருப் படைவீட்டிலுள்ள எழுநூறு திருமடத்து முதலிகளும் தில்லைவாழந்தணர் மூவாயிரவரும் மாகே சுரர் எண்பத்தெண்ணாயிரவரும் திருக்கோயிற்றிருத்தொண்டு செய்யும் திருப்பேர் ஏழாயிரத் துத்தொளாயிரவரும் பிறரும் சந்நிதியிலே கூடிநின்று வியப்புற்று, இந்நூற்குத் திருக்களிற்றுப் படியாரெனத் திருநாமஞ்சாத்தினார்களென்றறிக. இது சைவசித்தாந்த சாஸ்திரம் பதினான்கினுளொன்று.

கண்ணுமடங்குதலான், மூன்றென்றார். இடைவராத ஞான யோகங்களின் முன்னர் இக்குற்றங்கண் மூன்றுங் காட்டுத்தீமுன்னர்ப்பஞ்சுத்துய்போலுமாகலின், அம்மிகுதி தோன்ற இவை மூன்றனுமங்கெடவென்றார். இழிவு சிறப்பும்மை விகாரத்தாற்றொக் கது. கெடவென்பது எச்சத்திரிபு. நோயென்பது சாதியொருமை. காரணமாய அக் குற்றங்களைக் கெடுத்தார் காரியமாகிய இருவினைகளைச் செய்யாமையின், அவர்க்கு வரக்கடவ துன்பங்களுமில்லையென்பது இதனாற் கூறப்பட்டது. முன்கிடந்த துன்பங்களும் மேல் வரக்கடவ துன்பங்களுமில்லாதல் மெய்யுணர்வின் பயனாகலின், இவை யிரண்டுபாட்டும் இவ்வதிகாரத்தவாயின. இவ்வாற்றானே மெய்யுணர்ந்தார்க்கு நிற் பன எடுத்தவுடம்பும் அதுகொண்ட வினைப்பயன்களுமே யென்பது பெற்றாம். (௧0)

---

## ௩௭ம் அதி.—அவாவறுத்தல்.

அஃதாவது முன்னும்பின்னும் வினைத்தொடர்பறுத்தார்க்கு கவேநின்ற உடம்பும் அதுகொண்ட வினைப்பயன்களும் நின்றுஃமயின்,வேதனைபற்றி ஒரோவழித் துறக் கப்பட்ட புலன்கண்மேற் பழைய பயிற்சிவயத்தான் நினைவு செல்லுமன்றே, அந்நினை வும் அவிச்சையெனப் பிறவிக்குவித்தாமாகலின், அதனை இடைவிடாது மெய்ப்பொரு ளுணர்வானறுத்தல். அதிகாரமுறைமையும் இதனானே விளங்கும்.

> ௩௬௧. அவாவென்ப வெல்லா வுயிர்க்குமெஞ் ஞான்றுந்
> தவாஅப் பிறப்பீனும் வித்து. ௧.

இ - ள். எல்லாவுயிர்க்கும் எஞ்ஞான்றும் தவாப் பிறப்பு ஈனும் வித்து - எல்லா வுயிர்கட்கும் எக்காலத்தும் கெடாதுவருகின்ற பிறப்பினை விளைவிக்கும் வித்து—அவா என்ப - அவாவென்று சொல்லுவர் நூலோர்.

எ - று.

உடம்பு நீங்கிப்போங்காலத்து அடுத்தவினையும், அதுகாட்டுங்கதிநிமித்தங்களும், அக்கதிக்கணவாவும் உயிரின்கண் முறையே வந்துநிற்ப, அறிவை மோகம் மறைப்ப, அவ்வுயிரை அவ்வவா அக்கதிக்கட் கொண்டுசெல்லுமாகலான், அதனைப் பிறப்பீனும் வித்தென்றும், கதிவயத்தாலுளதாய அவ்வுயிர்வேறுபாட்டினும் அவை தன்மைதிரியும் உற்சர்ப்பிணி அவசர்ப்பிணி * யென்னுங்காலவேறுபாட்டினும் அது வித்தாதல்வேறு படாமையின் எல்லாவுயிர்க்கு மெஞ்ஞான்றுமென்றும், இஃது எல்லாச்சமயங்கட்கு மொத்தலான் என்பவென்றுங் கூறினார். இதனாற் பிறப்பிற்கு அவா வித்தாதல் கூறப்பட்டது.
(க).

௩௬௨. வேண்டுங்கால் வேண்டும் பிறவாமை மற்றது
வேண்டாமை வேண்ட வரும். † உ.

இ - ள். வேண்டுங்கால் பிறவாமை வேண்டும் - பிறப்புத்துன்பமாதலறிந்தவன் ஒன்றை வேண்டிற் பிறவாமையை வேண்டும்,—அது வேண்டாமை வேண்ட வரும் - அப்பிறவாமை தான் ஒருபொருளையும் அவாவாமையை வேண்ட அவனுக்குத் தானே யுண்டாம். எ - று.

---

* உற்சர்ப்பிணியாவது உலகம் வாழ்நாள் போகமுதலியவற்றான் வளர்பிறைபோலப் பெருகுங்காலம். அவசர்ப்பிணியாவது அஃது அவற்றான் தேய்பிறைபோலச் சுருங்குங்காலம்.

† இவ்வருமைத்திருக்குறள் திருக்களிற்றுப்படியாரிலே "வேண்டுங்கால் வேண்டும் பிறவாமை யென்றமையால்—வேண்டுமஃதே யொன்றும் வேண்டினது—வேண்டாமை வேண்டவரு மென்றமையால் வேண்டுக—வேண்டாமை வேண்டுமவன் பால்." எனவெடுத் தருளிச்செய்யப்பட்டது.

அநாதியாகத் தான் பிறப்புப் பிணி மூப்பிறப்புக்களாற்றுன்பமுற்று வருகின்ற மையையுணர்ந்தவனுக்கு ஆசை இன்பத்தின்கண்ணேயாகலிற் பிறவாமையைவேண்டு மென்றும், ஈண்டைச் சிற்றின்பங்கருதி ஒருபொருளையவாவின் அது பிறப்பீனும் வித் தாய்ப் பின்னும் முடிவில்லாத துன்பமே விளைத்தலின் அது வேண்டாமை வேண்ட வருமென்றுங் கூறினர். பிறவாமையின் சிறப்புக் கூறிப் பின் அது வரும்வழி கூறத் தொடங்குகின்றமையின், மற்று வினைமாற்றின்கண் வந்தது. (உ)

௩௬௩. வேண்டாமை யன்ன விழுச்செல்வ மீண்டில்லை
யாண்டு மஃதொப்ப தில். ௩.

இ - ள். வேண்டாமை அன்ன விழுச்செல்வம் ஈண்டு இல்லை - ஒருபொருளையும் அவாவாமையையொக்கும் விழுமிய செல்வம் காணப்படுகின்ற இவ்வுலகின்க ணில்லை;—ஆண்டும் அஃது ஒப்பது இல் - இனி அவ்வளவேயன்று, கேட்கப்படுகின்ற துறக்கத்தின் கண்ணும் அதனை யொப்பதில்லை. எ- று.

மக்கள்செல்வமும் தேவர்செல்வமும் மேன்மேனுக்கக் கிழாதலுடைமையின், தனக்கு மேலில்லாத வேண்டாமையை விழுச்செல்வமென்றும், அதற்கு இரண்டில கினுமொப்பதில்லையென்றுங் கூறினர். ஆகமவளவைபோலாது காட்சியளவை எல்லா ரானுந் தெளியப்படுதலின், மக்கள்செல்வம் வகுத்து முற்கூறப்பட்டது. பிறவா மைக்கு வழியாமெனவும், விழுச்செல்வமாமெனவும், வேண்டாமையின் சிறப்பு இவ் விரண்டு பாட்டானுங் கூறப்பட்டது. (௩)

௩௬௪. தூஉய்மை யென்ப தவாவின்மை மற்றது
வாஅய்மை வேண்ட வரும். ௪.

இ - ள். தூஉய்மை என்பது அவாவின்மை - ஒருவர்க்கு வீடென்று சொல்லப்படுவது அவாவில்லாமை;—அது வாய்மை வேண்ட வரும் - அவ்வவாவில்லாமைதான் மெய்ம்மையை வேண்டத் தானே யுண்டாம். எ - று.

வீடாவது உயிர் அவிச்சைமுதலிய மாசு நீங்குதலாகலின், அதனைத் தூய்மை யென்றும், காரணத்தைக் காரியமாக உபசரித்துத் தூய்மையென்பதவாவின்மை யென்றும், மெய்ம்மையுடைய பரத்தை ஆகுபெயரான் மெய்ம்மையென்றுங் கூறினார். மற்று மேலையதுபோல வினைமாற்றின்கண் வந்தது. வேண்டுதல் இடைவிடாது பாவித்தல். அவாவறுத்தல் வீட்டிற்குப் பரம்பரையானன்றி நேரே யேதுவென்பதூஉம் அது வரும்வழியும் இதனாற் கூறப்பட்டன.
(௪)

௩௬௫. அற்றவ ரென்பா ரவாவற்றார் மற்றையா
ரற்றாக வற்ற திலர். ௫.

இ - ள். அற்றவர் என்பார் அவா அற்றார் - பிறவியற்றவரென்று சொல்லப்படுவார் அதற்கு நேரே யேதுவாகியஅவாவற்றவர்கள்,—மற்றையார் அற்றாகஅற்றதிலர்- பிறவேதுக்களற்று அஃதொன்றுமறாதவர்கள், அவற்றாற் சிலதுன்பங்களற்றதல்லது அவர் போற் பிறவியற்றிலர். எ - று.

இதனால் அவாவறுத்தாரது சிறப்பு விதிமுகத்தாலும் கூறப்பட்டது.
எதிர்மறைமுகத்தாலுங்
(௫)

௩௬௬. அஞ்சுவ தோரு மறனே யொருவனை
வஞ்சிப்ப தோரு மவா. ௬.

# ௩௭ம் அதி.—அவாவறுத்தல்.

கூஎ

இ - ள். ஒருவனை வஞ்சிப்பது அவா - மெய்புணர்தலிருகிய காரணங்களெல்லா
மெய்தி அவற்றான் வீடெய்தற்பாலனாய ஒருவனை மறவிவழியாற் புகுந்து பின்னும் பிறப்பின்கண்ணே வீழ்த்துக்கெடுக்க வல்லது அவா.—அஞ்சுவதே அறன் - ஆகலான், அவ்வவாவை அஞ்சிக்காப்பதே துறவறமாவது. எ - று.

ஒருமென்பன அசைநிலை. அநாதியாய்ப் போந்த அவா, ஒரோவழி வாய்மை வேண்டலையொழிந்து பராக்காற் காவானாயின், அஃதிடமாக அவனறியாமற் புகுந்து பழையவியற்கையாய் நின்று பிறப்பினையுண்டாக்குதலான், அதனை வஞ்சிப்பதென்றார். காத்தலாவது வாய்மை வேண்டலை இடைவிடாது பயின்று அது செய்யாமற் பரி கரித்தல். இதனால் அவாவின் குற்றமும் அதனைக் காப்பதே அறமென்பதூஉங் கூறப் பட்டன.
(௬)

௩௬௭. அவாவினை யாற்ற வறுப்பிற் றவாவினை
தான்வேண்டு மாற்றான் வரும். எ.

இ - ள். அவாவினை ஆற்ற அறுப்பின் - ஒருவன் அவாவினையஞ்சித் துவரக் கெடுக்க வல்லனாயின்,—தவா வினை தான் வேண்டும் ஆற்றான் வரும் - அவனுக்குக் கெடாமைக்கேதுவாகிய வினை தான் விரும்புநெறியானேயுண்டாம். எ - று.

கெடாமை பிறவித்துன்பங்களானழியாமை. அதற்கேதுவாகிய வினையென்றது மேற்சொல்லிய துறவறங்களை. வினை சாதியொருமை. தான் விரும்புநெறி மெய்யுணர் நெறி. அவாவினை முற்றவறுத்தானுக்கு வேறறஞ்செய்யவேண்டா, செய்தனவெல்லாம் அறமாமென்பது கருத்து. இதனால் அவாவறுத்தற் சிறப்புக் கூறப்பட்டது. (எ)

ஙகூஅ. அவாவில்லார்க் கில்லாகுந் துன்பமஃ துண்டேற்
றவாஅது மேன்மேல் வரும். அ.

இ - ள். அவா இல்லார்க்குத் துன்பம் இல்லாகும் - அவாவில்லாதார்க்கு வரக் கடவதொருதுன்பமுமில்லை,—அஃது உண்டேல் தவாது மேன்மேல் வரும் - ஒருவற்குப் பிறகாரணங்களெல்லாமின்றி அஃதொன்றுமுண்டாயின், அதனானே எல்லாத் துன்பங்களும் முடிவின்றி இடைவிடாமல் வரும். எ - று.

உடம்பு முகந்துநின்ற துன்பம் முன்பே செய்துகொண்டதாகலின், ஈண்டுத் துன்பமென்றது இதுபொழுது அவாவாற் செய்துகொள்வனவற்றை. தவாதுமேன் மேல் வருமென்றதனான், மூவகைத் துன்பங்களுமென்பது பெற்றாம். இதனால் அவாவே துன்பத்திற்குக் காரணமென்பது கூறப்பட்டது. (அ)

ஙகூகூ. இன்ப மிடையறா தீண்டு மவாவென்னுந்
துன்பத்துட் டுன்பங் கெடின். கூ.

இ - ள். அவா என்னும் துன்பத்துட்டுன்பம் கெடின் - அவாவென்று சொல்லப் படுகின்ற மிக்க துன்பம் ஒருவற்குக் கெடுமாயின்,—ஈண்டும் இன்பம் இடையறாது - அவன் வீடு பெற்றவழியேயன்றி உடம்போடு நின்றவழியும் இன்பமிடையறாது. எ-று.

துன்பத்துட்டுன்பம் எனைத்துன்பங்களெல்லாம் இன்பமாக வருந்துன்பம். வினை வின்கண்ணேயன்றித் தோற்றத்தின்கண்ணும் துன்பமாகலின், இவ்வாறு கூறப்பட்டது. காரணத்தைக் காரியமாக உபசரித்து அவாவென்னுந் துன்பத்துட்டுன்பமென்றும், அதுகெட்டார்க்கு மனந்தமொருது நிரம்பி நிற்றலான் ஈண்டுமின்பமிடையறு க்கூஅ் ஙஅம்

அகி.—லைம்:

தென்றுங் கூறினர். இனி ஈண்டுமென்பதற்குப் பெருகுமென்றுரைப்பாருமுளர். இதனால் அவாவறுத்தார் வீட்டின்பம் உடம்பொடு நின்றே எய்துவரென்பது கூறப் பட்டது. (க)

ருஎ0. ஆரா வியற்கை யவாநீப்பி னந்நிலையே
பேரா வியற்கை தரும். க0.

இ - ள். ஆரா இயற்கை அவா நீப்பின்-ஒருகாலும் நிரம்பாத வியல்பினையுடைய அவாவினை ஒருவன் நீக்குமாயின், - அந்நிலையே பேரா இயற்கை தரும் - அந்நீப்பு அவனுக்கு அப்பொழுதே என்ஞான்றும் ஒருநிலைமையனாமியல்பைக்கொடுக்கும். எ-று.

நிரம்பாமையாவது தாமேயன்றித் தம்பயனும் நிலையாமையின் வேண்டாதன வாய பொருள்களை வேண்டி மேன்மேல் வளர்தல். அவ்வளர்ச்சிக்கு அளவின்மை யின், நீத்தலே தக்கதென்பது கருத்து. களிப்புக் கவற்சிகளும் பிறப்புப்பிணிமூப்பிறப் புக்களும் முதலாயினவின்றி உயிர் நிரதிசயவின்பத்ததாய் நிற்றலின், வீட்டினைப் பேராவியற்கையென்றும், அஃது அவா நீத்தவழிப் பெறுதல் ஒருதலையாகலின் அந் நிலையே தருமென்றுங் கூறினர்: "நன்றாய் ஞானங் கடந்துபோய் நல்லிந் திரிய மெல் லாமீர்த்—தொன்றாய்க் கிடந்த வரும்பெரும்பா ழுலப்பி லதனை யுணர்ந்துணர்ந்து— சென்றாங்கின்பத் துன்பங்கள் செற்றுக்களைந்து பசையற்றா—லன்றே யப்போ தேவீடு மதுவே வீடுவீடாமே." என்பதும் இக்கருத்தேபற்றி வந்தது. இந்நிலைமை யுடையவனை வடநூலார் சீவன்முத்தனென்ப. இதனால் வீடாவது இதுவென்பதூஉம் அஃது அவாவறுத்தார்க்கு அப்பொழுதேயுளதாமென்பதூஉங் கூறப்பட்டன. (க0)

துறவறவியல் முற்றிற்று.

---

இவ்வாற்றான் இம்மை மறுமை வீடென்னுமூன்றனையும்

பயந்தற்சிறப்புடைத் தாய அறங்கூறினார்; இனிப் பொருளுமின்பமுங் கூறுவார், அவற்றின் முதற்காரணமாகிய ஊழின்வலி கூறுகின்றார்.

## ௩அ-ம் அதி.—ஊழ்.

அஃதாவது இருவினைப்பயன் செய்தவனையே சென்றடைதற்கேதுவாகிய நியதி. ஊழ், பால், முறை, உண்மை, தெய்வம், நியதி, விதியென்பன ஒருபொருட் கிளவி. இது பொருளின்பங்களிரண்டற்கும் பொதுவாய் ஒன்றனுள் வைக்கப்படாமையானும், மேற்கூறிய அறத்தோடியையுடைமையானும், அதனிறுதிக்கண் வைக்கப் பட்டது.

௩எ௧. ஆகூழாற் றோன்று மசைவின்மை கைப்பொருள்
போகூழாற் றோன்று மடி. ௧.

இ - ள். கைப்பொருள் ஆகு ஊழால் அசைவின்மை தோன்றும் - ஒருவற்குக் கைப்பொருளாதற்குக் காரணமாகிய ஊழான் முயற்சியுண்டாம்;—போகு ஊழால் மடி தோன்றும் - அஃதழிதற்குக் காரணமாகிய ஊழான் மடியுண்டாம். எ - று.

ஆகூழ் போகூழென்னும் வினைத்தொகைகள் எதிர்காலத்தான் விரிக்கப்பட்டுக் காரணப்பொருளவாய் நின்றன. அசைவு மடி. பொருளினாக்கவழிவுகட்குத் துணைக் காரணமாகிய முயற்சி மடிகளையுந் தானே தோற்றுவிக்குமென்பது கருத்து. (௧)

* திருவாய்மொழி, ௭-ஆம் திருப்பதிகம், ௧.



௩எ௨. பேதைப் படுக்கு மிழவூ ழறிவகற்று
மாகலூ ழுற்றக் கடை. ௨.

இ - ள். இழவு ஊழ் (உற்றக்கடை) அறிவு பேதைப்படுக்கும் - ஒருவனுக்கு எல்லாவறிவுமுளவாயினும் கைப்பொருளிழத்தற்கேதுவாகிய ஊழ் வந்துற்றவிடத்து அஃது அதனைப் பேதையாக்கும்,—ஆகல் ஊழ் உற்றக்கடை அகற்றும் - இனி அவனறிவு சுருங்கியிருப்பினும் கைப்பொருளாதற் கேதுவாகிய ஊழ்வந்துற்றவிடத்து அஃததனை விரிக்கும். எ - று.

கைப்பொருளென்பது அதிகாரத்தான் வந்தது. இழவூழ் ஆகலூழென்பனவிரண்டும் வேற்றுமைத்தொகை. உற்றக்கடை யென்பது மூன்றுங்கூட்டப்பட்டது. இயற்கையானுயவறிவையும் வேறுபடுக்குமென்பதாம். (உ)

௩௭௩. நுண்ணிய நூல்பல கற்பினு மற்றுந்தன்
உண்மை யறிவே மிகும். ௩.

இ - ள். நுண்ணிய நூல் பல கற்பினும்-பேதைப்படுக்கு மூழுடையானொருவன் நுண்ணியபொருள்களையுணர்த்தும் நூல்பலவற்றையுங் கற்றானாயினும்,—மற்றும் தன் உண்மையறிவே மிகும் - அவனுக்குப் பின்னுந் தன்னுழானாகிய பேதைமையுணர்வே மேற்படும். எ - று.

பொருளினுண்மை நூலின்மேலேற்றப்பட்டது. மேற்படுதல் கல்வியறிவைப் பின்னிரங்குதற்காக்கிச் செயலுக்குத் தான்முற்படுதல். "காதன் மிக்குழிக் கற்றவுங் கைகொடா—வாதல் கண்ணகத் தஞ்சனம் போலுமால்" என்பதுமது. செயற்கை யானுய வறிவையுங் கீழ்ப்படுத்துமென்பதாம். (௩)

௩௭௪. இருவே றுலகத் தியற்கை திருவேறு
தெள்ளிய ராதலும் வேறு. ௪.

இ - ள். உலகத்து இயற்கை இருவேறு-உலகத்து ஊழினுயவியற்கை இரண்டு கூறு;—திருவேறு தெள்ளியராதலும் வேறு - ஆதலாற் செல்வமுடையராதலும் வேறு அறிவுடையராதலும் வேறு. எ - று.

செல்வத்தினைப்படைத்தலுங் காத்தலும் பயன்கோடலும் அறிவுடையார்க்கல்ல இயலாவன்றே, அவ்வாறன்றி அறிவுடையார் வறியராகவும் ஏனையார் செல்வராகவுங் காண்டலான், அறிவுடையராதற்காகுமூழ் செல்வமுடையராதற்காகாது. செல்வ முடையராதற்காகுமூழ் அறிவுடையராதற்காகாதென்றதாயிற்று. ஆகவே செல்வஞ் செய்யுங்கால் அறிவாகிய துணைக்காரணமும் வேண்டா வென்பது பெற்றும். (௪)

நஎரு. நல்லவை யெல்லாஅந் தீயவாந் தீயவு
நல்லவாஞ் செல்வஞ் செயற்கு. ரு.

இ - ள். செல்வம் செயற்கு - செல்வத்தையாக்குதற்கு—நல்லவை எல்லாம் தீய வாம் - நல்லவையெல்லாந்தீயவாய் அழிக்கும்,—தீயவும் நல்லவாம் - அதுவேயன்றித் தீயவைதாமும் நல்லவாய் ஆக்கும், ஊழ்வயத்தான். எ - று.

---

* சீவகசிந்தாமணி, கனகமாலையாரிலம்பகம், எக.

கக0 ந-அம் அதி.—ஊழ்

நல்லவை தீயவை யென்பன காலமும், இடனும், கருவியும், தொழிலும் முதலாயவற்றை. ஊழானென்பது அதிகாரத்தாற்பெற்றும். அழிக்குமூழ்உற்றவழிக் கால முதலிய நல்லவாயினும் அழியும், ஆக்குமூழ்உற்றவழி அவை தீயவாயினும் ஆகுமென்ப தாயிற்று. ஆகவே காலமுதலிய துணைக்காரணங்களையும் வேறுபடுக்குமென்பது பெற்றும். (ரு)

நஎசு. பரியினு மாகாவாம் பாலல்ல வுய்த்துச்

சொரியினும் போகா தம.         ௬.

இ - ள். பால் அல்ல பரியினும் ஆகாவாம் - தமக்கூழல்லாத பொருள்கள் வருந் திக்காப்பினும், தம்மிடத்து நில்லாவாம்;—தம உய்த்துச் சொரியினும் போகா - ஊழாற்றமவாயபொருள்கள் புறத்தே கொண்டுபோய்ச் சொரிந்தாலும், தம்மை விட்டுப்போகா. எ - று.

பொருள் களினிலையும் போக்கும் ஊழினானவதல்லது காப்பிகழ்ச்சிகளானாகா வென்பதாம். இவையாறுபாட்டானும் பொருட்குக்காரணமாய ஊழின்வலி கூறப் பட்டது. (௬)

௩௭௭. வகுத்தான் வகுத்த வகையல்லாற் கோடி
தொகுத்தார்க்குந் துய்த்த லரிது.         எ.

இ - ள். கோடி தொகுத்தார்க்கும் - ஐம்பொறிகளான் நுகரப்படும் பொருள்கள் கோடியை முயன்று தொகுத்தார்க்கும்—வகுத்தான் வகுத்த வகையல்லால் துய்த்தல் அரிது - தெய்வம் வகுத்த வகையானல்லது நுகர்தலுண்டாகாது. எ - று.

ஒருயிர் செய்தவினையின் பயன் பிறிதோருயிரின்கட் செல்லாமல் அவ்வுயிர்க்கே வகுத்தலின், வகுத்தானென்றார். "இசைத்தலுமுரிய வேறிடத் தான†." என்பதனான் உயர்திணையாயிற்று. படையாதார்க்கேயன்றிப் படைத்தார்க்குமென்றமையால், உம்மை எச்சவும்மை. வெறுமுயற்சி ‡ களாற் பொருள்களைப் படைத்தலல்லது நுகர்தலாகாது அதற்கு ஊழ்வேண்டுமென்பதாயிற்று. (எ)

௩௭௮. துறப்பார்மற் றுப்புர வில்லா ருறற்பால
வூட்டா கழியு மெனின். ௮.

இ - ள். துப்புரவு இல்லார் துறப்பார் - வறுமையானுகர்ச்சி யில்லாதார் துறக்குங் கருத்துடையராவர்,—உறற்பால ஊட்டா கழியுமெனின் - ஊழ்கள் உறுதற்பாலவாய துன்பங்களை உறுவியாதொழியுமாயின். எ - று.

துறப்பாரென்பது ஒரீற்றெதிர்கால முற்றுச்சொல். தம்மால் விடப்பெறுவன தாமே விடப்பெற்றுவைத்துங் கருத்துவேறுபாட்டாற்றுன்ப முறுகின்றது ஊழின் வலியானென்பது எஞ்சி நிற்றலின், மன் ஒழியிசைக்கண் வந்தது. (௮)

---

* இவ்வாறு அதிகாரத்தால் வருவித்து முடிப்பதனை வடநூலார் அத்யாஹாரமென்பர்.

† தொல்காப்பியம், சொல்லதிகாரம், இடையியல், ௬.

‡ வெறுமுயற்சி - நல்வினை தீவினை யிரண்டினும் படாமுயற்சி. இலக்கணக்கொத்து, வினையியல் பதினேழாஞ் சூத்திரவுரையிற் காண்க.

## ௩௮-ம் அதி.—ஊழ்.



௩௭௯. நன்றாங்கா னல்லவாக் காண்பவ ரன்றாங்கா
லல்லற் படுவ தெவன். ௯.

இ - ள். நன்று ஆங்கால் நல்லவாக் காண்பவர் - நல்வினை விளையுங்கால் அதன் விளைவாய இன்பங்களைத் துய்க்குந்திறன் நாடாது இவை நல்லவென்று இயைந்தனுபவிப்பார்—அன்று ஆங்கால் அல்லற்படுவது எவன் - ஏனைத்தீவினை விளையுங்கால் அதன் விளைவாய துன்பங்களையும் அவ்வாறனுபவியாது துய்க்குந்திறன் நாடி

அல்லலுழப்பது என்கருதி. எ - று.

தாமே முன்செய்துகொண்டமையாலும், ஊட்டாது கழியாமையாலும், இரண்டு மியைந்தனுபவிக்கற்பால; அவற்றுள் ஒன்றற்கு இயைந்தனுபவித்து ஏனையதற்கு அது செய்யாது வருந்துதல் அறிவன்றென்பதாம். இவை மூன்றுபாட்டானும் இன்பத்துன்பங்கட்குக் காரணமாய ஊழின்வலி கூறப்பட்டது. (௯)

௩௮0. ஊழிற் பெருவலி யாவுள மற்றொன்று
சூழினுந் தான்முந் துறும். ௧0.

இ - ள். மற்றொன்று சூழினும் தான் முந்துறும் - தன்னை விலக்குதற் பொருட்டுத் தனக்கு மறுதலையாவதோருபாயத்தைச் சூழினும், தான் அவ்வுபாயமேயாலும் பிறிதொன்றாலும் வழியாக வந்து அச்சூழ்ச்சியின் முற்பட்டு நிற்கும்;—ஊழிற் பெரு வலி யா உள - அதனால் ஊழ்போல மிக்கவலியுடையன யாவையுள. எ - று.

பெருவலி ஆகுபெயர். சூழ்தல் பலருடனும் பழுதறவெண்ணுதல். செய்தற்கே யன்றிச் சூழ்தற்கும் அவதி கொடாதென்றமையின், உம்மை எச்சவும்மை. எல்லாம் வழியாக வருதலுடைமையின், ஊழே வலியதென்பதாம். இதனான் அவ்விருவகை யூழின் வலியும் பொதுவாகக் கூறப்பட்டது. (௧0)

அறத்துப்பால் முற்றிற்று.

# பொருட்பால்.

# அரசியல்.

---

இனி இல்லறத்தின் வழிப்படுவனவாய பொருளின்பங்களுள் இருமையும் பயப்பதாய பொருள் கூறுவானெடுத்துக்கொண்டார். அது தன்றுணைக்காரணமாய அரசனீதி கூறவே யடங்கும். அரசனீதியாவது காவலோடாத்தமுறைமை. அதனை அரசியல், அங்கவியல், ஒழிபியலென மூவகைப்படுத்து, மலர்தலையுலகிற்குயிரெனச் சிறந்த அரசனதியல்பு இருபத்தைந்ததிகாரத்தாற் கூறுவான்றொடங்கி, முதற்கண் இறைமாட்சி கூறுகின்றார்.

## ௩௯ம் அதி.—இறைமாட்சி.

அஃதாவது அவன்றன் நற்குண நற்செய்கைகள். உலகபாலருருவாய் நின்று உலகங்காத்தலின், இறையென்றார்; "திருவுடைமன்னரைக் காணிற் றிருமாலைக் கண் டேனே யென்னும்" என்று பெரியாரும் பணித்தார்.

௩௮௧. படைகுடி கூழமைச்சு நட்பரணா றும்
உடையா னரசரு ளேறு. ௧

இ - ள். படை குடி கூழ் அமைச்சு நட்பு அரண் ஆறும் உடையான் - படையுங் குடியுங் கூழும் அமைச்சும் நட்பும் அரணுமென்று சொல்லப்பட்ட ஆறங்கங்களையு முடையவன்—அரசருள் ஏறு - அரசருள் ஏறுபோல்வான். எ - று.

ஈண்டுக் குடியென்றது அதனையுடைய நாட்டினை. கூழென்றது அதற்கேதுவாய பொருளை. அமைச்சு, நாடு, அரண், பொருள், படை, நட்பென்பதே முறையாயினும், ஈண்டுச் செய்யுளோக்கிப்பிறழவைத்தார்.

ஆறுமுடையானென்றதனால், அவற்றுள் ஒன்றில்வழியும் அரசனீதி செல்லாதென்பது பெற்றாம்; வடநூலார் இவற்றிற்கு அங்க மெனப் பெயர்கொடுத்ததூஉம் அது நோக்கி. ஏறென்பது உபசாரவழக்கு. இதனால் அரசற்கங்கமாவன இவையென்பதூஉம் இவை முற்றுமுடைமையே அவன் வெற்றிக் கேது வென்பதூஉம் கூறப்பட்டன. (௧)

௩அ௨. அஞ்சாமை யீகை யறிவூக்க மிந்நான்கு
மெஞ்சாமை வேந்தற் கியல்பு. ௨.

இ - ள். வேந்தற்கு இயல்பு - அரசனுக்கியல்பாவது—அஞ்சாமை ஈகை அறிவு ஊக்கம் இந்நான்கும் எஞ்சாமை - திண்மையும் கொடையும் அறிவும் ஊக்கமுமென் னும் இந்நான்கு குணமும் இடைவிடாது நிற்றல். எ - று.

---

* திருவுடை மன்னரைக் காணிற் றிருமாலைக் கண்டேனே யென்னும்—உருவுடை வண்ணங்கள் காணி லுலகளந் தானென்று துள்ளும்—கருவுடைத் தேவில்க ளெல்லாங் கடல்வண் ணன் கோயிலே யென்னும்—வெருவிலும் வீழ்விலுமோவாள் கண்ணன் கழல்கள் விரும்புமே— திருவாய்மொழி, ௧௪ம் திருப்பதிகம், ௮.



ஊக்கம் வினைசெய்தற்கண் மனவெழுச்சி. இவற்றுள் அறிவு ஆறங்கத்திற்கு முரித்து, ஈகை படைக்குரித்து, ஏனைய வினைக்குரிய. உயிர்க்குணங்களுள் ஒன்று தோன்ற ஏனையவடங்கிவரும், அவற்றுள் இவையடங்கின், அரசற்குக் கேடுவன பல வாமாகலின், இவை எப்பொழுதுந்தோன்றி நிற்றல் இயல்பாகவேண்டுமென்பார், எஞ்சாமை வே ந்தற்கியல்பென்றார்.

(௨)

௩ ௬௮௩. தூங்காமை கல்வி துணிவுடைமை யிம்மூன்று
நீங்கா நிலனாள் பவற்கு. ௩.

இ - ள். நிலன் ஆள்பவற்கு - நிலத்தினையாளுந் திருவுடையாற்கு—தூங்காமை கல்வி துணிவுடைமை இம்மூன்றும் நீங்கா - அக்காரியங்களில் விரைவுடைமையும் அவையறிதற்கேற்ற கல்வியுடைமையும் ஆண்மையுடைமையுமாகிய இம்மூன்று குணமும் ஒருகாலும் நீங்கா. எ - று.

கல்வியது கூறுபாடு முன்னர்க் கூறப்படும். ஆண்மையாவது ஒன்றினையும் பாராது கடிதிற் செய்வதாகலின், அஃது ஈண்டு உபசாரவழக்காற் துணிவெனப்பட்டது. உம்மை இறந்ததழீஇய வெச்சவும்மை. இவற்றுட் கல்வி அறங்கத்திற்கு முரித்து, ஏனைய வினைக்குரிய. நீங்காவென்பதற்கு மேலெஞ்சாமைக் குரைத்தாங் குரைக்க.

(௩)

௬௮௪. அறனிழுக்கா தல்லவை நீக்கி மறனிழுக்கா
மான முடைய தரசு. ௪.

இ - ள். அறன் இழுக்காது - தனக்கோதிய அறத்தின் வழுவாதொழுகி—அல்லவை நீக்கி - அறனல்லவை தன்னாட்டின்கண்ணும் நிகழாமற் கடிந்து—மறன் இழுக்கா மானம் உடையது அரசு - வீரத்தின் வழுவாத தாழ்வின்மையினை யுடையான் அரசன். எ - று.

அவ்வறமாவது ஓதல், வேட்டல், ஈதலென்னும் பொதுத்தொழிலினும், படைக் கலம் பயிறல், பல்லுயிரோம்பல், பகைத்திறந்தெறுதலென்னுஞ் சிறப்புத்தொழிலி னும், வழுவாது நிற்றல். "மாண்ட—வறநெறி முதற்றே யரசின் கொற்றம்" என்பதனால் இவ்வறம் பொருட்குக் காரணமாதலறிக. அல்லவை கொலை,

களவு முதலாயின. குற்றமாய மானத்தினீக்குதற்கு, மறனிழுக் காமானமென்றார்; அஃதாவது "வீறின்மையின் விலங்காமென மதவேழமு மெறியா—னேறுண்டவர் நிகராயினும் பிறர்மிச்சிலென் றெறியான்—மாறன்மையின் மறம்வாடுமென் றிளையாரையு மெறியா- னறன்மையின் முதியாரையு மெறியா னயி லுழவன்" † எனவும் "அழிபுகர் புறக் கொடை யயில்வே லோச்சான்" ‡ எனவுஞ் சொல்லப்படுவது. அரசு அரசனது தன்மை; அஃது உபசாரவழக்கால் அவன்றன் மேனின்றது. (௪)

௩அ௫. இயற்றலு மீட்டலுங் காத்தலுங் காத்த
வகுத்தலும் வல்ல தரசு. ௫.

இ - ள். இயற்றலும் - தனக்குப் பொருள்கள் வரும் வழிகளை மேன்மேலுளவாக்கலும்—ஈட்டலும் - அங்ஙனம் வந்தவற்றை ஒருவழித்தொகுத்தலும்—காத்தலும் - தொகுத்தவற்றைப் பிறர்கொள்ளாமற் காத்தலும்—காத்த வகுத்தலும் - காத்த

* புறநானூறு, [illegible]. † சீவகசிந்தாமணி, மண்மகளிலம்பகம், [illegible].
‡ புறப்பொருள் வெண்பாமாலை, வஞ்சிப்படலம், ௨௦.

## ௩௯ ம் அதி.—இறைமாட்சி.



வற்றை அறம்பொருளின்பங்களின் பொருட்டு விடுத்தலும்—வல்லது அரசு - வல்லவனே அரசன். எ - று.

ஈட்டல், காத்தல், வகுத்தலென்றவற்றிற்கேற்ப இயற்றலென்பதற்குச் செயப்படுபொருள் வருவிக்கப்பட்டது. பொருள்களாவன மணி, பொன், நெல் முதலாயின. அவை வரும் வழிகளாவன பகைவரையழித்தலும், திறைகோடலும், தன்னாடு தலை

பளித்தலும் முதலாயின. பிறரென்றது பகைவர், கள்வர், சுற்றத்தார், வினைசெய்வார் முதலாயினர். கடவுளர், அந்தணர், வறியோரென்றிவர்க்கும் புகழிற்குக்கொடுத்தலை அறப்பொருட்டாகவும், யானை, குதிரை, படை, நாடு, அரணென்றிவற்றிற்கும் பகையொடு கூடலிற் பிரிக்கப்படுவோர்க்குந் தன்னிற் பிரிதலிற் கூட்டப்படுவோர்க்குங் கொடுத்தலைப் பொருட்பொருட்டாகவும் மண்டபம், வாவி, செய்குன்று, இளமரக்கா முதலிய செய்தற்கும் ஐம்புலன்களானுகர்வனவற்றிற்குங் கொடுத்தலை இன்பப்பொருட்டாகவுங்கொள்க. இயற்றன் முதலிய தவறாமற்செய்தல் அரிதாகலின், வல்லதென்றார். இவை நான்குபாட்டானும் மாட்சியே கூறப்பட்டது. (௫)

**கூஅசு. காட்சிக் கெளியன் கடுஞ்சொல்ல னல்லனேன்**
**மீக்கூறு மன்ன னிலம்.** கூ.

இ - ள். காட்சிக்கு எளியன் - முறைவேண்டினார்க்குங் குறைவேண்டினார்க்குங் காண்டற்கெளியனாய்—கடுஞ்சொல்லன் அல்லனேல் - யாவர்மாட்டுங் கடுஞ்சொல்ல னல்லனுமாயின்,—மன்னன் நிலம் மீக் கூறும் - அம்மன்னனது நிலத்தை எல்லா நிலங்களினும் உயர்த்துக்கூறும் உலகம். எ - று.

முறைவேண்டினார் வலியரானலிவெய்தினர். குறைவேண்டினார் வறுமையுற்றிரர் தார். காண்டற்கெளிமையாவது பேரத்தாணிக்கண் அந்தணர் சான்றோருள்ளிட்டாரோடு செவ்வியுடையனாயிருத்தல். கடுஞ்சொல் கேள்வியினும் வினையினுங் கடியவாய சொல். நிலத்தை மீக் கூறுமெனவே, மன்னனை மீக்கூறுதல் சொல்லவேண்டா வாயிற்று. மீக்கூறுதல் இவன் காக்கின்ற நாடு பசி பிணி பகைமுதலியவின்றி யாவர்க்கும் பேரின்பந்தருதலிற் றேவருலகினும் நன்றென்றல். உலகமென்றுமெழுவாய் வருவிக்கப்பட்டது.
(௬)

கூஅஎ. இன்சொலா லீத்தளிக்க வல்லாற்குத் தன்சொலாற்
றான்கண் டனைத்திவ் வுலகு. எ.

இ - ள். இன்சொலால் ஈத்து அளிக்க வல்லார்கு - இனிய சொல்லுடனே ஈத லைச்செய்து அளிக்கவல்ல அரசனுக்கு—இவ்வுலகு தன்சொலால் தான் கண்டனைத்து- இவ்வுலகந் தன்புகழோடு மேவித் தான் கருதியவளவிற்றும். எ - று.

இன்சொல் கேள்வியினும் வினையினும் இனியவாய சொல். ஈதல் வேண்டு வார்க்கு வேண்டுவன கொடுத்தல். அளித்தல் தன்பரிவாரத்தானும் பகைவரானும் நலிவுபடாமற் காத்தல். இவை அரியவாகலின் வல்லாற்கென்றும், அவன் மண்முழுது மாளுமாகலின் இவ்வுலகென்றுங் கூறினர். கருதியவளவிற்றுதல் கருதியபொருளெல் லாஞ்சுரத்தல்.
(எ)

கூஅஅ. முறைசெய்து காப்பாற்று மன்னவன் மக்கட்
கிறையென்று வைக்கப் படும். அ.

இ - ள். முறைசெய்து காப்பாற்றும் மன்னவன் - தான் முறை செய்து பிறர் நலியாமற் காத்தலையுஞ் செய்யுமரசன்,—மக்கட்கு இறை என்று வைக்கப் [illegible]

[illegible]ம் அதி.—கல்வி.

படும் - பிறப்பான் மகனேயாயினும், செயலான் மக்கட்குக் கடவுளென்று வேறு வைக்கப்படும். எ - று.

முறை அறனூலும் நீதினூலுஞ் சொல்லும் நெறி. பிறரென்றது மேற்சொல்லி யானை. வேறுவைத்தல் மக்களிற்பிரித்து உயர்த்துவைத்தல். (அ)

கூஅகூ. செவிகைப்பச் சொற்பொறுக்கும் பண்புடை வேந்தன்
கவிகைக்கீழ்த் தங்கு முலகு. கூ.

இ - ள். சொல் செவி கைப்பப் பொறுக்கும் பண்பு உடை

வேந்தன் - இடிக்குந் துணையாயினார் சொற்களைத் தன்செவி பொறாதாகவும் வினைவுநோக்கிப் பொறுக்கும் பண்புடைய அரசனது—கவிகைக்கீழ்த் தங்கும் உலகு-குடை நிழற்கண்ணே தங்கும் உலகம். எ - று.

செவிகைப்பவென்றசற் கேற்ப இடிக்குந் துணையாரென்பது வருவிக்கப்பட்டது. நாவின்புலத்தைச் செவிமேலேற்றிக் கைப்பவென்றார். பண்புடைமை விசேடவுணர் வினனுதல். அறநீதிகளிற்றவறுமையின், மண்முழுதுந் தானேயாளுமென்பதாம். (௯)

**௩௯0. கொடையளி செங்கோல் குடியோம்ப னான்கு
முடையானாம் வேந்தர்க் கொளி.** ௧0.

இ - ள். கொடை - வேண்டுவார்க்கு வேண்டுவன கொடுத்தலும்—அளியாவர்க்குத் தலையளி செய்தலும்—செங்கோல் - முறைசெய்தலும்—குடி ஓம்பல் - தளர்ந்த குடிகளைப் பேணலுமாகிய—நான்கும் உடையான் - இந்நான்குசெயலையு முடையவன்—வேந்தர்க்கு ஒளியாம் - வேந்தர்க்கெல்லாம் விளக்காம். எ - று.

தலையளி முகமலர்ந்தினியகூறல். செவ்வியகோல்போறலின், செங்கோலெனப் பட்டது குடியோம்பலெனவெடுத்துக் கூறினமையால், தளர்ச்சி பெற்றும்; அஃதாவது ஆறிலொன்றாய பொருள்ளையும் வறுமை நீங்கியவழிக் கொள்ளவ்வேண்டின் அவ்வாறு கோடலும், இழத்தல்வேண்டின் இழத்தலுமாம். சாதிமுழுதும் விளக்கலின் விளக்கென்றார். ஒளி ஆகுபெயர். இவையைந்துபாட்டானும் மாட்சியும் பயனும் உடன் கூறப்பட்டன. (௧0)

---

## ௪0 ம் அதி.—கல்வி.

அஃதாவது அவ்வரசன் தான் கற்றற்குரிய நூல்களைக் கற்றல். அவையாவன

அறனாலும், நீதியாலும், யானை, குதிரை, தேர், படைக்கலமென்றிவற்றினூல்களும் முதலாயின. அரசன் அறிவுடையனாயக்கால் தன்னுயிர்க்கேயன்றி மன்னுயிர்க்கும் பயன்படுதலனோக்கி, இஃதரசியலுள் வைக்கப்பட்டதாயினும், யாவர்க்கும் உறுதி பயத்தற்சிறப்புடைமையிற் பொதுப்படக் கூறுகின்றார். மேல் 'தூங்காமை கல்வி' எனத் தோற்றுவாய்செய்த மாட்சியை விரித்துக் கூறுகின்றமையின், இஃதிறைமாட்சியின் பின் வைக்கப்பட்டது.

௩௯௧. கற்க கசடறக் கற்பவை கற்றபி
னிற்க வதற்குத் தக. ௧.

இ - ள். கற்பவை கசடு அறக் கற்க - ஒருவன் கற்கப்படுநூல்களைப் பழுதறக் கற்க;—கற்றபின் அதற்குத் தக நிற்க - அங்ஙனங்கற்றால் அக்கல்விக்குத்தக அவை சொல்லுகின்ற நெறிக்கண்ணே நிற்க. எ - று.

## ௪௰ ம் அதி.—கல்வி.

கல்வி

கற்பவையென்றதனுன், அறம்பொருளின்பம் வீடென்னு முறுதிப்பொருளுணர்த்துவனவன்றிப் பிறபொருளுணர்த்துவன சின்னூட்பல்பிணிச் சிற்றறிவினர்க்கு ஆகா வென்பது பெற்றாம். கசடறக் கற்றலாவது விபரீதவையங்களை நீக்கி மெய்ப்பொருளை நல்லோர் பலருடனும் பலகாலும் பயிறல். நிற்றலாவது இல்வாழ்வுழிக் "கருமமு முன்படர்ப் போகமுந் துவ்வாத்—தருமமுந் தக்கார்க்கே செய்" தலினும், துறந் துழித் தவத்தான் மெய்புணர்ந்து அவாவறுத்தலினும், வழுவாமை. சிறப்புடை மகற் காயிற் கற்றல்வேண்டுமென்பதூஉம், அவனாற் கற்கப்படுநூல்களும், அவற்றைக் கற்கு மாறும், கற்றதனாற் பயனும் இதனாற் கூறப்பட்டது. (௧)

௩௯௨. எண்ணென்ப வேனை யெழுத்தென்ப விவ்விரண்டுங்
கண்ணென்ப வாழு முயிர்க்கு. ௨.

இ - ள். எண் என்ப ஏனை எழுத்து என்ப இவ்விரண்டும் - அறியாதார் எண்ணென்று சொல்லுவனவும் மற்றையெழுத்தென்று சொல்லுவனவுமாகிய கலைகளிரண்டினையும் - வாழும் உயிர்க்குக் கண் என்ப - அறிந்தார் சிறப்புடையுயிர்கட்குக் கண்ணென்று சொல்லுவர். எ - று.

எண்ணென்பது கணிதம். அது கருவியுஞ் செய்கையுமென இருவகைப்படும்; அவை ஏரம்பமுதலிய நூல்களுட்காண்க. எழுத்தெனவே, அதனோடொற்றுமையுடைய சொல்லுமடங்கிற்று. இவ்விருதிறமும், அறமுதற்பொருள்களைக் காண்டற்குக் கருவியாகலின், கண்ணெனப்பட்டன. அவை கருவியாதல் "ஆதிமுதலொழிய வல்லாதனவெண்ணி—னீதி வழுவா நிலைமையவான் - மாதே—யறமார் பொருளின்பம் வீடென் றிவற்றின்—றிறமாமோ வெண்ணிறந்தாற் செப்பு." "எழுத்தறியத் தீரு மிழிதகைமை தீர்ந்தான்—மொழித்திறத்தின் முட்டறுப்பா னாகு - மொழித்திறத்தின்— முட்டறுத்த நல்லோன் முதனூற் பொருளுணர்ந்து—கட்டறுத்து வீடுபெ றும்." இவற்றானறிக. என்பவென்பவற்றுள், முன்னையவிரண்டும் அஃறிணைப்பன்மைப்பெயர்; பின்னது உயர்திணைப்பன்மை வினை. அறியாதார் அறிந்தாரென்பன வருவிக்கப்பட்டன. சிறப்புடையுயிரென்றது மக்களுயிருள்ளும் உணர்வுமிகுதியுடையதனை. இதனாற் கற்கப்படுநூல்கட்குக் கருவியாவனவும் அவற்றதின்றியமையாமையுங் கூறப்பட்டன. (உ)

௩௯௩. கண்ணுடைய ரென்பவர் கற்றோர் முகத்திரண்டு
புண்ணுடையர் கல்லா தவர். ௩.

இ - ள். கண் உடையர் என்பவர் கற்றோர் - கண்ணுடையரென்று உயர்த்துச் சொல்லப்படுவோர் கற்றவரே;—கல்லாதவர் முகத்து இரண்டு

புண் உடையர்-மற்றைக் கல்லாதவர் முகத்தின்கண் இரண்டு புண்ணுடையர், கண்ணிலர். எ - று.

தேயமிடையிட்டவற்றையுங் காலமிடையிட்டவற்றையுங்காணும் ஞானக்கண்ணுடைமையிற் கற்றாரைக் கண்ணுடையரென்றும், அஃதின்றி நோய் முதலியவற்றாற் றுன்பஞ்செய்யும் ஊனக்கண்ணேயுடைமையிற் கல்லாதவரைப் புண்ணுடையரென்றுங் கூறினார். மேற்கண் ணென்மையுணர நின்ற ஊனக்கண்ணின் மெய்ம்மை கூறிய வாற்றான், பொருணூல்களையும் கருவிநூல்களையுங் கற்றாருயர்வும் கல்லாதாரிழிவும் இதனாற்றொகுத்துக் கூறப்பட்டன. (௩)

௩௯௪ உவப்பத் தலைக்கூடி யுள்ளப் பிரிதல்
அனைத்தே புலவர் தொழில். ௪.

* நாலடியார், அறிவுடைமை.



இ - ள். உவப்பத் தலைக் கூடி உள்ளப் பிரிதல் அனைத்தே - யாவரையும் அவருவக்குமாறு தலைப்பெய்து இனி இவரை யாமெங்ஙனங் கூடுதுமென நினையுமாறு நீங்குதலாகிய அத்தன்மைத்து—புலவர் தொழில் - கற்றறிந்தாரது தொழில். எ - று.

தாம் நல்வழியொழுகல் பிறர்க்குறுதிகூறலென்பன இரண்டுந் தொழிலென ஒன்றாயடங்குதலின், அத்தன்மைத்தென்றார். அத்தன்மை அப்பயனைத்தருந்தன்மை. நல் லொழுக்கங் காண்டலானும், தமக்கு மதுரமுமுறுதியுமாய கூற்றுக்கள் நிகழ்வெதிர் வுகளின் இன்பம் பயத்தலானும், கற்றார்மாட்டு எல்லாருமன்புடையராவரென்பதாம். இதனாற் கற்றாருயர்வு வகுத்துக்கூறப்பட்டது. (௪)

௩௯௫. உடையார்மு னில்லார்போ லேக்கற்றுங் கற்றார்
கடையரே கல்லா தவர். ௫.

இ - ள். உடையார்முன் இல்லார்போல் ஏக்கற்றும் கற்றார் - "பிற்றை நிலைமுனியாது கற்றல் நன்று" * தலான், செல்வர்முன் நல்கூர்ந்தார் நிற்குமாறுபோலத் தாமும் ஆசிரியர்முன் ஏக்கற்றுநின்றுங் கற்றார் தலையாயினார்;—கல்லாதவர் கடையரே - அந்நிலைக்கு நாணிக் கல்லாதவர் எஞ்ஞான்றும் இழிந்தாரேயாவர். எ - று.

உடையார் இல்லாரென்பன உலகவழக்கு. ஏக்கறுதல் ஆசையாற்றாழ்தல். கடைய ரென்றதனான் அதன் மறுதலைப்பெயர் வருவிக்கப்பட்டது. பொய்யாய மானநோக்கி மெய்யாய கல்வியிழந்தார் பின்னொருஞான்றும் அறிவுடையராகாமையின், கடையரே யென்றார். இதனாற் கற்றாரதுயர்வுங் கல்லாதாரதிழிவுங் கூறப்பட்டது. (௫)

௩௯௬. தொட்டனைத் தூறு மணற்கேணி மாந்தர்க்குக்
கற்றனைத் தூறு மறிவு. ௬.

இ - ள். மணற்கேணி தொட்டனைத்து ஊறும் - மணலின்கட்கேணி தோண்டிய அளவிற்றாகவூறும்;—மாந்தர்க்கு அறிவு கற்றனைத்து ஊறும்-அதுபோல மக்கட்கறிவு கற்றவளவிற்றாகவூறும்' எ - று.

ஈண்டுக் கேணியென்றது அதன்கணீரை. அளவிற்றாகவென்றது அதனளவுஞ் செல்லவென்றவாறு. சிறிது கற்றதனையான் அமையாது மேன்மேற் கற்றல்வேண்டு மென்பதாம். இஃது ஊழ் மாறுகொள்ளாவழியாகலின், மேல் "உண்மையறிவே மிகும்†" என்றதனோடு மலையாமையறிக. (௬)

௩௯௭. யாதானு நாடாமா லூராமா லென்னொருவன்
சாந்துணையுங் கல்லாத வாறு. ௭.

இ - ள். யாதானும் நாடாம் ஊராம் - கற்றவனுக்குத் தன்னுடைத் தன்னூருமே யன்றி யாதானுமொருநாடும் நாடாம், யாதானுமோரூரும் ஊராம்;—ஒருவன் சாந் துணையும் கல்லாதவாறு என் - இங்ஙனமாயின் ஒருவன் தானிறக்குமளவுங் கல்லாது கழிகின்றது என்கருதி! எ - று.

உயிரோடு சேறலிற் சாந்துணையுமென்றார். பிறர்நாடுகளும் ஊர்களுந் தமபோல
உற்றுப் பொருட்கொடையும் பூசையும் உவந்து செய்தற்கேதுவாகலிற் கல்விபோலச் சிறந்தது பிறிதில்லை, அதனையே எப்பொழுதுஞ் செய்கவென்பதாம். (எ)

* புறநானூறு, [illegible]. † திருக்குறள், [illegible].

## சுசும் அதி.—கல்லாமை.

கக்கூ

[illegible]. ஒருமைக்கட் டான்கற்ற கல்வி யொருவற்
கெழுமையு மேமாப் புடைத்து. அ.

இ - ள். ஒருவற்கு - ஒருவனுக்கு—தான் ஒருமைக்கண் கற்ற கல்வி - தானொரு பிறப்பின்கட்கற்ற கல்வி—எழுமையும் ஏமாப்பு உடைத்து - எழுபிறப்பிலுஞ்சென்று உதவுதலையுடைத்து. எ - று.

வினைகள்போல உயிரின்கட்கிடந்து அது புக்குழிப் புகுமாகலின், எழுமையு மேமாப்புடைத்தென்றார். எழுமை மேலே கூறப்பட்டது. உதவுதல் நன்னெறிக்க ணுய்த்தல்.
(அ)

கசுசு. தாமின் புறுவ துலகின் புறக்கண்டு
காமுறுவர் கற்றறிந் தார். கூ.

இ - ள். தாம் இன்புறுவது உலகு இன்புறக் கண்டு -

தாயின்புறுதற்கு எ.எவா
றிய கல்விக்கு உலகமின்புறுதலால் அச்சிறப்பு நோக்கி—கற்றறிந்தார் கற்றறிந்தார் பின்னும் அதனையே விரும்புவர். எ - று.

காமுறுவர் -

தாமின்புறுதலாவது நிகழ்வின்கட் சொற்பொருள்களின் சுவை நுகர்வாலும், புகழ் பொருள் பூசை பெறுதலாலும், எதிர்வின்கண் அறம் வீடு பயத்தலாலும், அத னுன் இடையறுதலின்ப மெய்துதல். உலகின்புறுதலாவது இம்மிக்காரோடு தலைப் பெய்து அறியாதனவெல்லாம் அறியப்பெற்றேமென்றும், "யாண்டுபலவாக நரையில மாயினேம்" மென்றுமுவத்தல். செல்வமாயின், ஈட்டல் காத்தல் இ ழுத்தலென்றிவற் றூற் றுன்புறுதலும் பலரையும் பகையாக்கலுமுடைத்தென அறிந்து அதனைக் காமுறு மையிற் கற்றறிந்தாரென் றும், கரும்பயிறற்குக் கூலிபோலத் தாமின்புறுதற்கு உல கின்புறுதல் பிறவாற்றானின்மையின் அதனையே காமுறுவரென் றுங் கூறினர். (க)

௪00. கேடில் விழுச்செல்வங் கல்வி யொருவற்கு
மாடல்ல மற்றை யவை. ௧0.

இ - ள். ஒருவற்குக் கேடு இல் விழுச்செல்வம் கல்வி - ஒருவனுக்கு அழிவில் லாத சிரிய செல்வமாவது கல்வி—மற்றையவை மாடு அல்ல - அஃதொழிந்த மணியும் பொன்னு முதலாயின செல்வமல்ல. எ - று.

அழிவின்மையாவது தாயத்தார், கள்வர், வலியர், அரசரென்றிவராற் கொள்ளப் படாமையும், வழிபட்டார்க்குக் கொடுத்துழிக் குறையாமையுமாம். சீர்மை தக்கார் கண்ணே நிற்றல். மணி பொன் முதலியவற்றிற்கு இவ்விரண்டுமின்மையின்,அவற்றை மாடல்லவென்றார். இவையைந்துபாட்டானுங் கல்வியது சிறப்புக் கூறப்பட்டது. ()

## சக ம் அதி.—கல்லாமை.

அஃதாவது கற்றலைச்செய்யாமை; என்றது அதனிலுயவிழிபினை. கல்விச் சிறப்பு மேல் விதிமுகத்தாற் கூறியதனையான் முற்றுப்பெருமைநோக்கி, எதிர்மறை முகத்தாலுங் கூறுகின்றதாகலின், இது கல்வியின்பின் வைக்கப்பட்டது.

௪0௧. அரங்கின்றி வட்டாடி யற்றே நிரம்பிய
நூலின்றிக் கோட்டி கொளல். க.

---

* கஉ-ம் குறளுரையிற் காண்க. † புறநானூறு, ௧௩௧.





இ - ள் அரங்கு இன்றி வட்டு ஆடியற்று - அரங்கினையிழையாது வட்டாடினாற் போலும்—நிரம்பிய நூல் இன்றிக் கோட்டிகொளல் - தானிரம்புதற்கேதுவாகிய நூல்களைக்கல்லாது ஒருவன் அவையின்கணொன்றனைச் சொல்லுதல். எ - று.

அரங்கு வகுத்ததானம். வட்டாடல் உண்டையுருட்டல். இவை "கட்டளை யன்ன வட்டரங் கிழைத்துக்—கல்லாச் சிறுஅர் நெல்லிவட் டாடும்*" என்பதனானறிக. நிரம்புதல் அறியவேண்டுவனவெல்லாமறிதல். கோட்டியென்பது ஈண்டாகுபெயர். "புல்லாவெழுத்திற் பொருளில் வறுங்கோட்டி†" என்புழிப்போல. சொல்லும் பொருளும் நெறிப்படாவென்பதாம். (க)

௪0௨. கல்லாதான் சொற்கா முறுதல் முலையிரண்டு
மில்லாதான் பெண்காமுற் றற்று. உ.

இ - ள். கல்லாதான் சொற் காமுறுதல் - கல்வியில்லா தானொருவன் அவையின் கணொன்றுசொல்லுதலை அவாவுதல்—முலையிரண்டும் இல்லாதாள் பெண் காமுற் றற்று - இயல்பாகவே முலையிரண்டுமில்லாதாளொருத்தி பெண்மையை அவாவினாற் போலும். எ - று.

‡ "இனைத்தெனவறிந்த சினை" யாகலின், தொகையொடு முற்றும்மைகொடுத் தார். சிறிதுமில்லாதாளென்பதாம். அவாவியவழிக்கடைபோகாது, போகினும் நகை விளைக்கு மென்பதாயிற்று.

(உ)

சா0௩. கல்லா தவரு நனிநல்லர் கற்றார்முற்
சொல்லா திருக்கப் பெறின். ௩.

இ - ள். கல்லாதவரும் நனி நல்லர் - கல்லாதாரும் மிகநல்லராவர்,—கற்றார்முன் சொல்லாது இருக்கப்பெறின் - தாமே தம்மையறிந்து கற்றாரவையின்கண் ஒன்றனை யுஞ் சொல்லாதிருத்தல் கூடுமாயின். எ - று.

உம்மை இழிவுசிறப்பும்மை. தம்மைத்தாமறியாமையின் அது கூடாதென்பார் பெறினென்றும், கூடின் ஆண்டுத் தம்மைவெளிப்படுத்தாமையானும், பின் கல்வியை விரும்புவராகலானும் நனி நல்லரென்றுங்கூறினார். இவைமூன்றுபாட்டானுங் கல்லா தார் அவைக்கட் சொல்லுதற்குரியரன்மை கூறப்பட்டது.

(௩)

சா0௪. கல்லாதா னொட்பங் கழியநன் றாயினுங்
கொள்ளா ரறிவுடை யார். ௪.

இ - ள். கல்லாதான் ஒட்பங் கழிய நன்றாயினும் - கல்லாதவனதொண்மை ஒரோ வழி மிக நன்றாயிருப்பினும்,—அறிவுடையார் கொள்ளார் - அறிவுடையார் அதனை யொண்மையாகக் கொள்ளார். எ - று.

* ஈன்பருந் துயவும் வான்பொரு நெடுஞ்சினைப்—பொரியரை வேம்பின் புள்ளிநிழற்—கட்டளை யன்ன வட்டரங்கிழைத்துக்—கல்லாச் சிறாஅர் நெல்லிவட்டாடும்—வில்லே ருழவர் வெம் முனைச் சீறூர்ச்—சுரன்முதல் வந்த வுரன்மாய் மாலை—புள்ளினெ னல்லனோ யானே புள்ளிய— வினைமுடி த் தன்ன
இனியோள்—பணைமாண் சுடரோடு படர்பொழு தெனவே—நற்றிணை, ௩.

† புல்லா வெழுத்திற் பொருளில்வறுங் கோட்டி—கல்லா வொருவனுரைப்பவுங் கண்ணோடி—நல்லார் வருந்தியுங் கேட்பரே மற்றவன்—பல்லாரு ணாணல் பரிந்து—நாலடியார் மேன்மக்கள்.

‡ தொல்காப்பியம், சொல்லதிகாரம், கிளவியாக்கம், ௧௧.

## ௪௧ம் அதி.—கல்லாமை.

க௨க

ஒண்மை அறிவுடைமை. அது நன்றாகாது, ஆயிற்றாயினும் ஏரலெழுத்துப்போல் வதோர் விழுக்காடாகலின், நிலைபெற்ற நூலறிவுடையார் அதனை மதியாரென்பதாம்.

௪0௫. கல்லா வொருவன் றகைமை தலைப்பெய்து
சொல்லாடச் சோர்வு படும். ௫

இ - ள். கல்லா ஒருவன் தகைமை - நூல்களைக் கல்லாதவொருவன் யானறிவுடையேனெனத் தன்னை மதிக்கு மதிப்பு—தலைப்பெய்து சொல்லாடச் சோர்வு படும் - அவற்றைக்கற்றவன் கண்டு உரையாடக் கெடும். எ - று.

கற்றவனென்பது வருவிக்கப்பட்டது. யாதானுமோர்வார்த்தை சொல்லுந் துணையுமே நிற்பது, சொல்லியவழி வழுப்படுதலின், அழிந்துவிடுமென்பதாம். இவை யிரண்டுபாட்டானுங் கல்லாதார தியற்கையறிவின்குற்றங் கூறப்பட்டது. (௫)

௪0௬. உளரென்னு மாத்திரைய ரல்லாற் பயவாக்

களர்னையர் கல்லாதவர். கூ.

இ-ன். கல்லாதவர் - கல்லாதவர்—உளர் என்னும் மாத்திரையர் அல்லால் - காணப்படுதலான் இலரல்லர் உளமரன்று சிலர் சொல்லுமளவினராதலன்றி—பய வாக் களர் அனையர் - தமக்கும் பிறர்க்கும் பயன்படாமையால் விளையாத களர்நிலத் தோடொப்பர். எ-று.

களர் தானும் பேணற்பாடழிந்து உயிர்கட்கும் உணவு முதலிய உதவாதது போலத் தாமும் நன்குமதிக்கற்பாடழிந்து பிறர்க்கும் அறிவு முதலிய உதவாரென்ப தாம். இதனாற் கல்லாதாரது பயன்படாமை கூறப்பட்டது. (சு)

ச0எ. நுண்மா ணுழைபுல மில்லா னெழினலம்
மண்மாண் புனைபாவை யற்று. எ.

இ-ன். நுண் மாண் நுழை புலம் இல்லான் எழில் நலம்- நுண்ணிதாய் மாட்சிமைப்பட்டுப் பலநூல்களினுஞ்சென்ற அறிவு இல்லாதவனுடைய எழுச்சியும் அழகும்—மண் மாண் புனை பாவை யற்று - சுதையான் மாட்சிமைப்படப் புனைந்த பாவையுடைய எழுச்சியும் அழகும்போலும். எ-று.

அறிவிற்கு மாட்சிமையாவது பொருள்களைக் கடிதிற் காண்டலும் மறவாமையும் முதலாயின. பாவை ஆகுபெயர். "உருவின்மிக்கதோ ருடம்பது பெறுதலுமரிது†" ஆகலான் எழினலங்களும் ஒருபயனேயெனினும், நூலறிவில்வழிச் சிறப்பிலவென்ப தாம். இதனான் அவர் வடிவழகாற் பயனின்மை கூறப்பட்டது. (எ)

ச0அ. நல்லார்கட் பட்ட வறுமையி னின்னாதே
கல்லார்கட் பட்ட திரு. அ.

இ-ன். நல்லார்கண் பட்ட வறுமையின் இன்னாது - கற்றார் மாட்டுநின்ற வறுமையினுமின்னாது—கல்லார்கண் பட்ட திரு- கல்லாதாமாட்டுநின்ற செல்வம். எ-று. • "நந்த

---

வாருயிர் வண்டுசென் னடைவழி யெழுத்தாய்—வந்து வீழ்வ வீழும்" என்பூர திருவிளையாடற்புராணத்திலும். சமணரைக் கழுவேற்றபடலம், சுo.

† கருவி மாமழை கலைபெயல் பொழிந்தென வழிநா—ளருவி போற்பொருடர் தருதலை வரும்பிணி பழவட்—கருவிற் காய்ந்திய கட்டலைப் படிமையிற் பழையபா—வருவின்மிக்கதோ ரூடம்பது பெறுதலு மரிதே—சீவகசிந்தாமணி, முத்திஇலம்பகம், ௪சே.

க௪உ. சஉ ம் அதி.—கேள்வி.

இழிவுசிறப்பும்மை விகாரத்தாற்றொக்கது. தத்தநிலையினன்றி மாறிநிற்றலால் தாமிடுக்கட்படுதலும் உலகிற்குத் துன்பஞ்செய்தலும் இரண்டற்குமொக்குமாயினும், திருக் கல்லாரைக்கெடுக்க, வறுமை நல்லாரைக் கெடாதுநிற்றலான், வறுமையினுந் திருவின்னாதென்றார். இதனால் அவர் திருவின்குற்றங் கூறப்பட்டது. (அ)

சoகூ. மேற்பிறந்தா ராயினுங் கல்லாதார் கீழ்ப்பிறந்துங்
கற்றா ரனைத்திலர் பாடு. கூ.

இ - ள். கல்லாதார் மேற்பிறந்தார் ஆயினும் - கல்லாதார் உயர்ந்தசாதிக்கட்பிறந் தாராயினும்—கீழ்ப்பிறந்தும் கற்றார் அனைத்துப்பாடு இலர் - தாழ்ந்தசாதிக்கட் பிறந்துவைத்துங் கற்றாரது பெருமையளவிற்றாய பெருமையிலர். எ - று.

உடலோடொழியுஞ் சாதியுயர்ச்சியினும் உயிரோடு செல்லுங் கல்வியுயர்ச்சி சிறப்புடைத்தென்பதாம். இதனால் அவர்சாதியுயர்ச்சியாற் பயனின்மை கூறப் பட்டது. (கூ)

சகo. விலங்கொடு மக்க ளனைய ரிலங்குநூல்
கற்றாரோ டேனை யவர். கo.

இ - ள். விலங்கொடு மக்கள் அனையர் - விலங்கோடு நோக்க மக்கள் எத்துணை நன்மையுடையர் அத்துணைத்தீமையுடையர்—இலங்கு

நூல் கற்ருரோடு ஏனையவர் - விளங்கியநூலைக் கற்ருரோடு நோக்கக் கல்லாதவர். எ - று.

விலங்கு, நூல் சாதிப்பெயர். விளங்குதல் மேம்படுதல். விலங்கின் மக்கட் கேற்றமாய உணர்வுமிகுதி காணப்படுவது கற்ருர்கண்ணேயாகலின், கல்லாதாரும் அவரும் ஒத்த பிறப்பினரல்லரென்பதாம். மயக்கவிரனிறை. இதனுல் அவர் மக்கட் பிறப்பாற பயனெய்தாமை கூறப்பட்டது.

(கo)

---

## சஉ ம் அதி.—கேள்வி.

அஃதாவது கேட்கப்படு நூற்பொருள்களைக் கற்றறிந்தார் கூறக்கேட்டல்.

கற்றவழி அதனிறுயவறிவைவலியுறுத்தலானும், கல்லாதவழியும் அதனைப்புண்டாக்குதலானும் இது கல்வி கல்லாமைகளின்பின வைக்கப்பட்டது.

சகக: செல்வத்துட் செல்வஞ் செவிச்செல்வ மச்செல்வஞ்
செல்வத்து ளெல்லாந் தலை. க.

இ - ள். செல்வத்துட்செல்வம் செவிச்செல்வம் - ஒருவற்குச் சிறப்புடைய செல்வமாவது செவியான்வருஞ்செல்வம்,—அச்செல்வம் செல்வத்துள் எல்லாம் தலை அச்செல்வம் பிறசெல்வங்க ளெல்லாவற்றினுந் தலையாகலான். எ - று

செவியான்வருஞ்செல்வம் கேள்வியான்
வங்கள் பொருளான் வருவன. அவை

எல்லாப்பொருளையுமறிதல். பிற செல்
நிலையாவாகலானும்; தான்பவினைவின

வாகலானும், இது தலையாயிற்று. அவற்றையொழித்து இதனையே செய்கவென்பது குறிப்பெச்சம்.
(௪)

௪௧௨. செவிக்குண வில்லாத போழ்து சிறிது
வயிற்றுக்கு மீயப் படும். ௨.

## ௪௨ ம் அதி.—கேள்வி.

௪௧௨.

இ - ள்: செவிக்கு உணவு இல்லாத போழ்து - செவிக்குணவாகிய கேள்வியில் லாதபொழுது—வயிற்றுக்கும் சிறிது ஈயப்படும் - வயிற்றுக்குஞ் சிறிதுணவு இடப்படும். எ - று.

சுவைமிகுதியும் பிற்பயத்தலுமுடைய கேள்வியுள்ள பொழுது வெறுக்கப்படுதலான் இல்லாதபோழ்தென்றும், பெரிதாயவழித் தேடற்றுன்பமேயன்றி நோயுக்கா மமும் பெருகுதலாற் சிறிதென்றும், அதுதானும் பின்னிருந்து கேட்டற்பொருட்டாக லான் ஈயப்படுமென்றுங் கூறினர். ஈதல் வயிற்றதிழிவுதோன்ற நின்றது. இவை யிரண்டு பாட்டானும் கேள்வியது சிறப்புக் கூறப்பட்டது.
(௨)

௪௧௩. செவியுணவிற் கேள்வி யுடையா ரவியுணவி
னான்றாரோ டொப்பர் நிலத்து. ௩.

இ - ள். செவியுணவிற் கேள்வி உடையார் - செவியுணவாகிய கேள்வியினை யுடையார்;—நிலத்து அவியுணவின் ஆன்றாரோடு ஒப்பர் - நிலத்தின்கண்ணராயினும், அவியுணவினையுடைய தேவரோ டொப்பர். எ - று.

ரம்

செவியுணவு செவியானுண்ணுமுணவு. அவ்வழிக்கண்வந்த இன்சாரியையது வகைவலித்துநின்றது. அவியாகியவுணவு தேவர்க்கு வேள்வித்தீயிற்கொடுப்பன. அறி

வானிறைந்தமையான் ஆன்றுமென்றும், துன்பமறியாமையாற் றேவரோடொப்ப ரென்றுங் கூறினர். இதனால் அதனையுடையாரது சிறப்புக் கூறப்பட்டது. (௩)

சகச. கற்றில னாயினுங் கேட்க வஃதொருவற்
கொற்கத்தி னூற்றாந் துணை. ௪.

இ - ள். கற்றிலன் ஆயினும் கேட்க - உறுதி நூல்களைத் தான் கற்றிலனாயினும்

அவற்றின் பொருள்களைக் கற்றறிந்தார்சொல்லக்கேட்க,—அஃது ஒருவற்கு ஒற்கத்தின் ஊற்றாம் துணை - அக்கேள்வி ஒருவனுக்குத் தளர்ச்சிவந்துழிப் பற்றுக்கோடாந் துணையாகலான். எ - று.

உம்மை கற்கவேண்டுமென்பது பட நின்றது. தளர்ச்சி வறுமையானாதல் அறிவின்மையானாதல் இழுக்கப்பட்டுழி மனந்தளர்தல். அதனைக் கேள்வியுடைய அறிவு நீக்குமாகலின், ஊற்றாந்துணையென்றார். ஊன்றென்னுமாகுபெயர்ன்னகரம் திரிந்து நின்றது. (௪)

சகரு. இழுக்க லுடையுழி யூற்றுக்கோ லற்றே
யொழுக்க முடையார்வாய்ச் சொல். ரு.

இ - ள். இழுக்கல் உடை உழி ஊற்றுக்கோல் அற்று - வழுக்குநிலையுடைய சேற்றுநிலத்து இயங்குவார்க்கு ஊன்றுகோல்போலுதவும்—ஒழுக்கம் உடையார் வாய்ச் சொல் - காவற்சாகாமைப்பார்க்கு ஒழுக்கமுடையார் வாயிற்சொற்கள். எ - று.

அவாய்நிலையான் வந்த உவமையடையாற் பொருளடை வருவிக்கப்பட்டது. ஊற்றுயிய கோல்போலுதவுதல் தளர்ந்துழி அதனை நீக்குதல். கல்வியுடையரேனும் ஒழுக்கமில்லாதார் அறிவிலராகலின், அவர் வாய்ச்சொற் கேட்கப்படாதென்பது தோன்ற ஒழுக்கமுடையார்வாய்ச்சொல்லென்றார். வாயென்பது நீச்சொலறியாமையாகிய சிறப்புணர நின்றது. அவற்றைக் கேட்கவென்பது குறிப்பெச்சம். (ரு)

சகசு. எனைத்தானு நல்லவை கேட்க வனைத்தானு
மான்ற பெருமை தரும். சு.

இ - ள். எனைத்தானும் நல்லவைகேட்க - ஒருவன்சிறிதாயினும் உறுதிப்பொருள் களைக் கேட்க,—அனைத்தானும் ஆன்ற பெருமை தரும் - அக்கேள்வி அத்துணையாயி னும் நிறைந்த பெருமையைத் தரும் ஆகலான். எ - று.

எனைத்து அனைத்து என்பன கேட்கும்பொருண்மேலுங் காலத்தின்மேலும் நின் றன. அக்கேள்வி மலைழத்துளிபோல வந்திண்டி எல்லாவறிவுகளையுமுளவாக்கலின், சிறிதென்றிகழற்க வென்பதாம். (சு)

சஉஎ. பிழைத்துணர்ந்தும் பேதைமை சொல்லாரிழைத்துணர்ந்
தீண்டிய கேள்வி யவர். எ.

இ - ள். பிழைத்த உணர்ந்தும் பேதைமை சொல்லார் - பிறழவுணர்ந்தவழியும், தமக்குப் பேதைமை பயக்குஞ் சொற்களைச் சொல்லார்—இழைத்து உணர்ந்து ஈண் டிய கேள்வியவர் - பொருள்களைத் தாமும் நுண்ணிதாகவாராய்ந்தறிந்து அதன்மே லும் ஈண்டிய கேள்வியினையுடையார். எ - று.

பிழைப்பவென்பது திரிந்துநின்றது. பேதைமை ஆகுபெயர். ஈண்டுதல் பலவாற் றான் வந்து நிறைதல். பொருள்களின் மெய்ம்மையைத் தாமுறிந்து அறிந்தாரோ டொப்பிப்பதுஞ் செய்தார் தாமதகுணத்தான் மயங்கினாராயினும், அவ்வாறல்லது சொல்லாரென்பதாம். இவைநான்குபாட்டானுங் கேட்டார்க்கு வருநன்மை கூறப் பட்டது. (எ)

சஉஅ. கேட்பினுங் கேளாத் தகையவே கேள்வியாற்
றோட்கப் படாத செவி. அ.

இ - ள். கேட்பினும் கேளாத் தகையவே - தம்புலமாய ஓசை மாத்திரத்தைக் கேட்குமாயினுஞ் செவிடாந் தன்மையவேயாம்— கேள்வியால் தோட்கப்படாத செவி -

கேள்வியாற்றுளைக்கப்படாத செவிகள். எ - று.

ஏகாரம் தேற்றத்தின்கண் வந்தது. ஓசைமாத்திரத்தான் உறுதியெய்தாமையிற் கேளாத்தகையவென்றும் மனத்தின்கண் நூற்பொருள் நுழைதற்கு வழியாக்கலிற் கேள்வியைக் கருவியாக்கியும் கூறினார். பழைய துளை துளையன்றென்பதாம். (அ)

சகசு. நுணங்கிய கேள்விய ரல்லார் வணங்கிய
வாயின ராத லரிது. கூ.

இ - ள். நுணங்கிய கேள்வியர் அல்லார் - நுண்ணிதாகிய கேள்வியுடையரல்லாதார்—வணங்கிய வாயினர் ஆதல் அரிது - பணிந்த மொழியினையுடையராதல் கூடாது. எ - று.

கேட்கப்படுகின்ற பொருளினது நுண்மை கேள்விமேலேற்றப்பட்டது. வாய் ஆகுபெயர். பணிந்தமொழி பணிவைப் புலப்படுத்திய மொழி. கேளாதார் உணர் வின்மையாற் றம்மைவியந்து கூறுவரென்பதாம். அல்லாவென்பதூஉம் பாடம். (கூ)

சஉ0. செவியிற் சுவையுணரா வாயுணர்வின் மாக்க
ளவியினும் வாழினு மென். க0.

இ - ள். செவியிற் சுவை உணரா வாய் உணர்வின் மாக்கள் - செவியானுகரப் படுஞ் சுவைகளையுணராத வாயுணர்வினையுடையமாக்தர்—அவியினும் வாழினும் என் - சாவினும் வாழினும் உலகிற்கு வருவதென்னை. எ - று.

## சஉ ம் அதி.—அறிவுடைமை.

கஉரு

செவியானுகரப்படுஞ்சுவைகளாவன சொற்சுவையும்,

பொருட்சுவையும்: அவற்றுட் சொற்சுவை குணம், அலங்காரமென இருவகைத்து. பொருட்சுவை காமம், நகை, கருணை, வீரம், உருத்திரம் அச்சம், இழிப்பு, வியப்பு, சாந்தமென ஒன்பது வகைத்து. அவையெல்லாம் ஈண்டுரைப்பிற் பெருகும். வாயுணர்வென்பது இடைப் பதங்கெடாக்குநின்ற மூன்றாம்வேற்றுமைத்தொகை: அது வாயாலுகரப்படுஞ் சுவைகளையுணரும் உணர்வெனவிரியும். அவை கைப்பு, கார்ப்பு, புளிப்பு, உவர்ப்பு, துவர்ப்பு, தித்திப்பென ஆறாம். செத்தாலிழப்பதும் வாழ்ந்தாற் பெறுவதுமின்மையின், இரண்டு மொக்குமென்பதாம். வாயுணர்வினென்று பாடமோதுவாருமுளர். இவை மூன்றுபாட்டானுங் கேளாதவழிப்படுங் குற்றங் கூறப்பட்டது.

---

## ௪௩ம் அதி.—அறிவுடைமை.

அஃதாவது கல்வி கேள்விகளையுடைய அறிவோடு உண்மையறிவுடையனாதல். அதிகாரமுறைமையும் இதனானே விளங்கும்.

௪௨௧. அறிவற்றங் காக்குங் கருவி செறுவார்க்கு
முள்ளழிக்க லாகா வரண். ௧.

இ - ள். அறிவு அற்றம் காக்கும் கருவி - அரசர்க்கு அறிவென்பது இறுதிவாராமற் காக்குங் கருவியாம்,—செறுவார்க்கு அழிக்கலாகா உள் அரணும் - அதுவேயுமன்றிப் பகைவர்க்கு அழிக்கலாகாத உள்ளரணுமாம். எ - று.

காத்தல் முன்னறிந்து பரிகரித்தல். உள்ளரண் உள்ளாயவரண்; உள்புக்கழிக்க லாகா அரணென்றுமாம். இதனால் அறிவினது சிறப்புக் கூறப்பட்டது. (௧)

௪௨௨. சென்ற விடத்தாற் செலவிடா தீதொரீஇ
நன்றின்பா லுய்ப்ப தறிவு. ௨.

இ - ள். சென்ற இடத்தால் செல விடா - மனத்தை அதுசென்ற

பயின்றாளொரு தவமுது மகளைவிட்டு, அவளால் உரிமையுள்† ஒருத்தி நின்னைக்கண்டு வருத்தமுற்றுக் கூட்டுவிக்கவேண்டுமென்று என்னை விடுத்தாள் அவனைக் கூடுவையாயின் நினக்குப் பேரின்ப மேயன்றிப் பெரும்பொருளும் கைகூடுமெனக் குளுறமேவாது சொல்லுவித்தல். அச்சவுபதையாவது ஒருசிறுமித்தன்மேலிட்டு அமைச்சனால் ஏனையோரை அவனில்லின் கணழைப்பித்து, இவர் அறைபோவாரென நகுக் குழீஇயினாரென்று தான் காவல் செய்து, ஒருவனால் இவ்வரசன் நம்மைக் கொல்வான் சூழ்கின்றமையின் அதனை நாம் முற்படச்செய்து நமக்கினியவரசனொருவனை வைத்தல் ஈண்டை யாவார்க்கு மியைந்தது நின்கருத்தென்னையெனக் குளுறமேவாது சொல்லுவித்தல். இந்நான்கினுந் திரிபில னாயவழி எதிர்காலத்துந் திரிபிலனெனக் கருதலளவையாற் றெளியப்படுமென்பதாம். இவ்வடநூற்பொருண்மை‡யையுட்கொண்டு இவ்வோதியதறியாது பிறரெல்லாம் இதனை உயிரச்சமெனப் பாடந்திரித்துத் தத்தமக்குத் தோன்றியவாறேயுரைத்தார்.

௫0௨. குடிப்பிறந்து குற்றத்தி னீங்கி வடுப்பரியு
நாணுடையான் கட்டே தெளிவு. ௨.

இ - ள். குடிப் பிறந்து - உயர்ந்த குடியிற் பிறந்து—குற்றத்தின் நீங்கி - குற்றங் களினின்று நீங்கி—வடுப் பரியும் நாண் உடையான் கட்டே தெளிவு - தமக்கு வடு வருங்கொலென் றஞ்சாநிற்கும் நாணுடையவன கண்ணதே அரசனது தெளிவு. எ-று.

குற்றங்களாவன மேலரசனுக்குச் சொல்லியவகையாறும், மடி மறப்பு, பிழைப் பென்றிவைமுதலாயவுமாம. நாண் இழிதொழில்களின் மனஞ்செல்லாமை. இவை பெரும்பான்மையும் தக்கோர்வாய்க் கேட்டலாகிய ஆகமவளவையாற்றெறிவன. இந்நான்குமுடையவனையே தெளிகவென்பதாம. (௨)

௫0௩. அரியகற் றாசற்றார் கண்ணுந் தெரியுங்கா
லின்மை யரிதே வெளிறு. ௩.

---

* உபதை—சோதனை. † உரிமை - அரசன்மனைவியர்.

‡ இவ்வுபதை நான்கும் சாணக்கியபாத அர்த்தசாஸ்திரம் முதற்பகுதி ௧0-ம்

# ருகம் அதி.—தெரிந்துதெளிதல்.

கசுரு

இ - ள். அரிய கற்று ஆசு அற்றார் கண்ணும் - கற்றற்கரிய நூல்களைக் கற்றுமேற் சொல்லிய குற்றங்களற்றார்மாட்டும் —தெரியுங்கால் வெளிறு இன்மை அரிது - நுண் ணிதாகவாராயுமிடத்து வெண்மையில்லாமை அரிது. எ - று.

வெண்மை அறியாமை; அஃது இவர்மாட்டுளதாவது மனத்தது நிலையாமையான் ஒரோவழியாகலின், தெரியுங்காலென்றார். காட்சியளவையாற்றெரிந்தால் அதுவுமில் லாதாரே தெளியப்படுவரென்பது குறிப்பெச்சம். இவ்வளவைகளான் இக்குணமுங் குற்றமுந்தெரிந்து குணமுடையாரைத் தெளிகவென்பது இவை மூன்றுபாட்டானுங் கூறப்பட்டது.
(க)

ருா௪. குணநாடிக் குற்றமு நாடி யவற்றுண்
மிகைநாடி மிக்க கொளல். ௪.

இ - ள். குணம் நாடி - குணங்குற்றங்களுள் ஒன்றேயுடையார் உலகத்தின்மையின் ஒருவன் குணங்களையாராய்ந்து,—குற்றமும் நாடி - வினைக்குற்றங்களையுமாராய்ந்து,—அவற்றுள் மிகை நாடி - பின் அவ்விருபகுதியுள்ளு மிக்கவற்றையுமாராய்ந்து,—மிக்க கொளல் - அவனை அம்மிக்கவற்றானேயறிக. எ - று.

மிகையுடையவற்றை மிகையென்றார். அவையாவன தலைமையானுக பன்மை யானுக உயர்ந்தன. அவற்றானறிதலாவது குணமிக்கதாயின் வினைக்குரியனென்றும், குற்றமிக்கதாயின் அல்லனென்றுமறிதல். குணமேயுடையார் உலகத்தரியராகலின், இவ்வகை யாவரையுந் தெளிகவென்பது இதனாற் கூறப்பட்டது.

ருoரு. பெருமைக்கு மேனைச் சிறுமைக்நுந் தத்தங்
கருமமே கட்டளைக் கல். ரு.

இ - ன். பெருமைக்கும் ஏனைச்சிறுமைக்கும் கட்டளைக்கல் - பிறப்புக் குணம் அறிவென்பனவற்றான் மக்களெய் வம் பெருமைக்கும் ம ற்றைச்சிறுமைக்கும் உரைகல் லாவது —தத்தம் க ருமமே - தா ' தாஞ்செய்யுங்கருமமே, பிறிதில்லை. எ - று.

இஃதேகதேசவுருவகம். மக்களது பெருமையுஞ் சிறுமையுந் தப்பாமலறியலுறு வார்க்குப் பிற கருவிகளுமுளவாயினும்,முடிந்தகருவி செயலென்பது தேற்றேகாரத் தாற் பெற்றும். இதனுற் குணங் குற்றங்கள் நாடற்குக் கருவி கூறப்பட்டது. (ரு)

ருoசு. அற்றாரைத் தேறுத லோம்புக மற்றவர்
பற்றிலர் நாணர் பழி. சு.

இ - ன். அற்றாரைத் தேறுதல் ஓம்புக - சுற்றமில்லாரைத் தெளிதலையொழிக;— அவர் மற்றப் பற்று இலர் - அவர் உலகத்தோடு தொடர்பிலர்,—பழிநாணர் - ஆகலாற் பழிக்கஞ்சார். எ - று.

பற்றிலரென்பதனுல் சுற்றமென்பது வருவிக்கப்பட்டது. உலகத்தார் பழிப்பன வொழிதற்கும் புகழ்வன செய்தற்குமேதுவாகிய உலகநடையியல்பு சுற்றமில்லா தார்க்கு இன்மையின், அவர் தெளியப்படாரென்பதாம். (சு)

ருoஎ. காதன்மை கந்தா வறிவறியார்த் தேறுதல்
பேதைமை யெல்லாந் தரும். எ.

இ - ன். காதன்மை கந்தா அறிவு அறியார்த் தேறுதல் - அன்புடைமை பற்றுக் கோடாகத் தமக்கறியவேண்டுவன அறியாதாரைத் தெளிதல்—பேதைமை எல்லாம் தரும் - அரசனுக்கு எல்லாவறியாமையையுங் கொடுக்கும். எ - று. [illegible]

ருசு ம் அதி—தெரிந்துவினையாடல்.

தன்கேண் அன்பிடையின்ற அன்புபற்றி அரசன் அறிவிலார்மேல் வினையை வைப்பின், அஃது அவர் அறிவின்மையாற் கெடும்; கெட்டால் அவர்க்கு அதுவேயன்றி வினைக்குரியாரை அறியாமை, மேல்வினையறியாமை முதலிய அவனுக்கு அறியாமை பலவுமுளவாம் என்பதாம்.
(எ)

௫0அ தேரான் பிறனைத் தெளிந்தான் வழிமுறை
தீரா இடும்பை தரும். அ.

இ - ள். பிறனைத் தேரான் தெளிந்தான் - தன்னொடியைபுடையனல்லாதானைப் பிறப்புமுதலியவற்றானும் செயலானும் ஆராயாது தெளிந்த அரசனுக்கு—வழிமுறை தீரா இடும்பை தரும் - அத்தெளிவு தன் வழிமுறையினும் நீங்காத துன்பத்தைக் கொடுக்கும். எ - று.

இயைபு தன் குடியொடு தொடர்ந்தமரபு இதனானே அதுவும் வேண்டுமென்பது பெற்றும். தெளிதல் அவன்கண்ணே வினையை வைத்தல். அவ்வினை கெடுதலால்தன் குலத்துப் பிறந்தாரும் பகைவர்கைப்பட்டுக் கீழாய் விடுவரென்பதாம். நான்கனுருபு விகாரத்தாற்றொக்கது.
(அ)

௫0௯. தேறற்க யாரையுந் தேராது தேர்ந்தபின்
தேறுக தேறும் பொருள். கூ.

இ - ள். யாரையும் தேராது தேறற்க - யாவரையும் ஆராயாது தெளியாதொழிக;—தேர்ந்தபின் தேறும் பொருள் தேறுக - ஆராய்ந்தபின் தெளியும்பொருட்களை ஐயுறாதொழிக. எ - று.

தேறற்கவென்ற பொதுமையான் ஒருவினைக்கண்ணும் தெளியலாகாதென்பது பெற்றும். ஈண்டுத் தேறுகவென்றது தாற்பரியத்தால் ஐயுறவினது விலக்கின் மேனின்றது.

தேறும்பொருளென்றது அவரவராற்றற்கேற்ற வினைகளை. பொருள் ஆகுபெ யர்.
(௯)

௫௱௰. தேரான் றெளிவுந் தெளிந்தான்க ணையுறவுந்
தீரா விடும்பை தரும். ௧௰.

இ - ள். தேரான் தெளிவும் - அரசன் ஒருவனையாராயாது தெளிதலும்—தெளிந் தான்கண் ஐயுறவும் - ஆராய்ந்து தெளிந்தவன்மாட்டு ஐயப்படுதலும் இவ்விரண்டும்— தீரா இடும்பை தரும் - அவனுக்கு நீங்காத துன்பத்தைக்கொடுக்கும். எ - று.

வினைவைத்தபின் ஒருதவறு காணுதுவைத்து ஐயுறுமாயின், அதனை அவனறிந்து இனி இது நில்லாதென்னுங்கருத்தான் அவ்வினையை நெகிழ்த்துவிடும், அதுவேயன் றிப்பகைவரால் எளிதிற் பிரிக்கவும்படும், ஆகலாற் றெளிந்தான்கண் ஐயுறவுமாகா தாயிற்று. தெளிவிற்கெல்லை கூறியவாறு. இவையிரண்டுபாட்டாலும், தெளியப்படாதார் இவரென்பதூஉம், அவரைத் தெளிந்தாற்படுமிழுக்கும், தெளிவிற்கெல்லையும் கூறப்பட்டன.
(௧௰)

---

## ௫௨ம் அதி.—தெரிந்துவினையாடல்.

அஃதாவது அத்தெளியப்பட்டாரை அவர் செய்வனவல்ல வினைகளையறிந்து அவற்றின்கண்ணேயாளுந்திறம். அதிகாரமுறைமையும் இதனானே விளங்கும்.

## ௫௨ம் அதி.—தெரிந்துவினையாடல்.

௫௱௰௧

௫கக. நன்மையுந் தீமையு நாடி நலம்புரிந்த
தன்மையா னாளப் படும். க.

இ - ள். நன்மையும் தீமையும் நாடி - அரசன் முதற்கண் ஒருவினையைத் தன் கண்வைத்தால், அதன்கணுவனவும் ஆகாதனவுமாய செயல்களையாராய்ந்தறிந்து— நலம் புரிந்த தன்மையான் - அவற்றுள் ஆவனவற்றையே விரும்பிய வியல்பினையுடை யான்—ஆளப்படும் - பின் அவனாற் சிறந்த வினைகளிலேயாளப்படும். எ - று.

தன்னையுரிமையறிதற்பொருட்டு அகம்புறங்கட்கு நடுவாயதோர் வினையை அர சன்றன்கண்வை வத்தவழி அதன்கண் ஆ ஏ்செயல்களையேசெய்தவன்பின்னும்அவ்வியல் பினனாதல்பற்றி அகமாய வினைக்கண் ே ணயா ள ப்படுவெ னன் பதா யி ற்று . பு ரி ந்தவெ ன்ற இறந்தகாலத்தான், முன்னுரிமையறிதற்பொருட்டு வைத்த வினையாதல் பெற்றாம்.(க)

௫கஉ. வாரி பெருக்கி வளம்படுத் துற்றவை
யாராய்வான் செய்க வினை. உ.

இ - ள். வாரி பெருக்கி - பொருள்வருவாயில்களை விரியச்செய்து—வளம் படுத்து - அப்பொருளாற் செல்வங்களை வளர்த்து—உற்றவை ஆராய்வான் - அவ்வா யில்கட்கும் பொருட்குஞ் செல்வங்கட்கு முற்ற இடை யூறுகளை நாடோறுமாராய்ந்து நீக்கவல்லவன்—வினை செய்க - அரசனுக்கு வினைசெய்க. எ - று.

வாயில்களாவன மேல் இறைமாட்சியுள் "இயற்றலும்*" என்புழி புரைத்தனவும் உழவு, பசுக்காவல், வாணிகமென்னும் வார்த்தைபு†மாம். செல்வங்களாவன ஆண் டுப் பொருளுமின்பமுமாக உரைக்கப்பட்டன. இடையூறுகளாவன அரசன் வினை செய்வார், சுற்றத்தார், பகைவர், கள்வரென்றிவரான் வரு நலிவுகள். (உ)

௫௬௩. அன்பறிவு தேற்ற மவாவின்மை யிந்நான்கு
நன்குடையான் கட்டே தெளிவு. ௩.

இ - ள். அன்பு - அரசன்மாட்டன்பும்—அறிவு - அவனுக்காவனவறியுமறி வும்—தேற்றம் - அவைசெய்தற்கட் கலங்காமையும்—அவாவின்மை - அவற்றாற் பொருள் கைபுற்றவழி அதன்மேலவாவின்மையுமாகிய—இந்நான்கும் நன்கு உடை யான்கட்டே தெளிவு - இந்நான்கு குணங்களையும் நிலைபெறவுடையான் மேலதே வினையை விட்டிருக்குந் தெளிவு. எ - று.

இந்நான்கு நன்குடைமை இவன் செய்கின்ற வினைக் கண் யாதுமாராயவேண்டுவ தில்லையென்று அரசன்றெளிதற்கேதுவாகலின், அவனை அதன் பிறப்பிடனுக்கிக்கூறி னார். இவை மூன்றுபாட்டானும் ஆட்குரியானதிலக்கணங் கூறப்பட்டது. (௩)

௫௬௪. எனைவகையாற் றேறியக் கண்ணும் வினைவகையான்
வேறாகு மாந்தர் பலர். ௪.

இ - ள். எனைவகையான் தேறியக்கண்ணும் - எல்லாவகையாலுமாராய்ந்து தெளிந்து வினை வைத்தபின்னும்—வினைவகையான் வேறாகும் மாந்தர் பலர் - அவ் வினையினியல்பானே வேறுபடுமாந்தர் உலகத்துப் பலர். எ - று.

---

* திருக்குறள், ௩அ௪. † வார்த்தை - விர்த்தி, தொழில்.

௩௪

௫௰௨ ம் அதி.—தெரிந்துவினையாடல்.

கட்டியக்காரன்போல அரசவின்பத்தினை வெஃகி விகாரப்படுவதல்லது அத னைக் குற்றமென்றொழிந்து தம்மியல்பினிற்பார் அரியராகலின், வேறுமார்த்தர் பல ரென்றார். வினை வைப்பதற்குமுன் எல்லாக்குணங்களுமுடையராய் வைத்தபின் விகா ரப்படுவோரை இடையாயதொருவினையை வைத்தறிந்து ஒழிக்கவென்பதாம். இதனுன் தெருவங்கயாவொழிக்கப்படுவோர் இவரென்பது கூறப்பட்டது. (எ)

ருகூ. அறிந்தாற்றிச் செய்கிற்பாற் கல்லால் வினைதான்
சிறந்தானென் றேவற்பாற் றன்று. ரு.

இ - ள். அறிந்து ஆற்றிச் செய்கிற்பாற்கு அல்லால்-செய்யுமுபாயங்களையறிந்து செயலானும் இடையூறுகளானும் வருந்துன்பங்களைப்பொறுத்து முடிவுசெய்யவல்லா

னையல்லது—வினைதான் சிறந்தான் என்று ஏவற்பாற்றன்று - வினைதான் இவன் மாட்டு அன்புடையனென்று பிறனொருவனையேவுமியல்புடைத்தன்று. எ - று.

செய்கிற்பாற்கென்பது
நம
பான் முடியாதெனை இதனுல்

வேற்றுமைமயக்கம். அறிவாற்றல்களானல்லது அல்
வினையினதியல்பு கூறப்பட்டது. (ஞ

ருகசு. செய்வானை நாடி வினைநாடிக் காலத்தோ
டெய்த வுணர்ந்து செயல். கூ.

இ - ள். செய்வானை நாடி - முதற்கண்ணே செய்வான திலக்கணத்தை ராய்ந்து,—வினை நாடி - பின் செய்யப்படும் வினையினதியல்பை யாராய்ந்து;—கால தோடு எய்த உணர்ந்து செயல் - பின் அவனையும் அதனையும் காலத்தோடு படுதது பொருந்தவறிந்து அவனை அதன்கண் ஆட்கொள்ச்செய்க. எ - று.

செய்வானதிலக்கணமும் வினையினதியல்பும் மேலே கூறப்பட்டன. காலத்தோ டெய்தவுணர்தலாவது இக்காலத்து இவ்விலக்கணமுடையான் செய்யின் இவ்வி னைப்பயனை முடியுமென்று கூட்டியுணர்தல். (

இ-ள். வினைக்கண் வினையுடையான்கேண்மை-எப்பொழுதுந் தன்வினையின் கண்ணே முயறலையுடையான் அவ்வுரிமையாற்றனக்குக் கேளாயொழுகின்ற தன் மையை—வேறாக நினைப்பானைத் திரு நீங்கும் - அது பொறாதார்சொற்கேட்டு அரசன் மாறுபடக் கருதுமாயின், திருமகள் அவனைவிட்டு நீங்கும். எ - று.

கேளாயொழுகின்ற தன்மையாவது தான் பிறனாய் நில்லாது கேளிர்செய்யு முரிமையெல்லாஞ் செய்தொழுகுதல். அவனை அவமதிப்பாகக்கொண்டு செறக்கருது மாயிற் பின்னொருவருமுட்பட்டு முயல்வாரில்லையாம், ஆகவே, தன்செல்வங்கெடு மென்பது கருத்து. இந்நான்குபாட்டானும் ஆடற்குரியானையாளுந்திறங் கூறப் பட்டது. (௯)

௫௨௰. நாடோறு நாடுக மன்னன் வினைசெய்வான்
கோடாமை கோடா துலகு. ௰.

இ-ள். வினை செய்வான் கோடாமை உலகு கோடாது - வினைசெய்வான் கோடாதொழிய உலகங் கோடாது;—மன்னன் நாடோறும் நாடுக - ஆதலான் அரசன் அவன்செயலை நாடோறு மாராய்க. எ - று.

அஃதொன்றனையுமாராயவே அதன்வழித்தாய உலகமெல்லா மாராய்ந்தானும் அதனால் அவனுரிமை அழியாமற் றன்னுள்ளே யாராய்ந்து போதுகவென்பதாம். இதனான் ஆணைவழிச்செய்வது கூறப்பட்டது. (௰)

---

## ௫௩ம் அதி.—சுற்றந்தழால்.

அஃதாவது அரசன் தன்கிளைஞரைத் தன்னினீங்காமல் அணைத்தல். வினை செய்வாரைக் கூறி ஏனைசுற்றங்கூறுகின்றாராகலின் இது தெரிந்து வினையாடலின் பின் வைக்கப்பட்டது.

௫௨௧. பற்றற்ற கண்ணும் பழைமைபா ராட்டுதல்
சுற்றத்தார் கண்ணே யுள. ௧.

இ-ள். பறறு அற்ற கண்ணும் பழைமை பாராட்டுதல் - ஒருவன் செல்வக்
தொலைந்து வறியனுயவழியும், விடாது தம்மோடு அவனிடைப் பழைமையை யெடுத்துக்
கொண்டாடு' மியல்புகள — சுற்றத்தார்கண்ணே உள - சுற்றத்தார்மாட்டே உளவா
வன.' எ - று.

சிறப்புமின்மை வறியனுயவழிப் பாராட்டப்படாமை விளக்கி

நின்றது. பழைமை பற்றுக்காலத்துத் தமக்குச் செய்த உபகாரம்.
பிறரெல்லாம் அவன் பற்றற்ற பொழுது தாமும் அவனுடு
பறறுவராகலின், ஏகாரம் தேற்றத்தின்கண் வந்தது, இதனுற்
சுற்றத்தது சிறப்புக் கூறப்பட்டது.
(க)

இஉஉ. விருப்பறுச் சுற்ற மியையி னருப்பறு
ஆக்கம் பலவுந் தரும். உ.

இஉம் அதி—சுற்றந்தழால்.

இ - ள். விருப்பு அறுச் சுற்றம் இயையின் - அன்பறுத சுற்றம்
ஒருவற்கெய்து மாயின்,—அருப்பு அறு ஆக்கம் பலவும் தரும் - அஃது
அவற்குக் கிளைத்தலறுத செல்வங்கள் பலவற்றையுங் கொடுக்கும். எ -
று.

உட்பகையினீக்குதற்கு விருப்பறுச்சு ற்றமென்றும், தானே
வளர்க்குமொருதலை யாய செல்வத்தினீக்குதற்கு அருப்பறுவாக்
கமென்றும், விசேடித்தார். தொடை நோக்கி விகாரமா யிற்று.
இயையினென்பது அதனருமை விளக்கி நின்றது. ஆக்க மென்பது
ஆகுபெயர். பலவுமென்றது அங்கங்களாறினையுநோக்கி. பலர்கூடி

வளர்த் தலின், அவை மேன்மேற் கிளைக்குமென்பது கருத்து. (உ)

௫௨௩. அளவளா வில்லாதான் வாழ்க்கை குளவளாக்
கோடின்றி நீர்நிறைந் தற்று. ௩.

இ - ள். அளவளாவு இல்லாதான்வாழ்க்கை-அச்சுற்றத்தோடு நெஞ்சுகலத்தவில் லாதவன் வாழ்க்கை—குள வளாக் கோடு இன்றி நீர் நிறைந்தற்று - குளப்பரப்புக் கரையின்றி நீர்நிறைந்தாற்போலும். எ - று.

சுற்றத்தோடென்பது அதிகாரத்தான் வந்தது. நெஞ்சுகலப்புத் தன்னளவும் அதனளவுமுசாவுதலான் வருவதாகலின், அளவளாவென்பது ஆகுபெயர். வாழ்க்கை யென்றதூஉம் அதற்கேதுவாய செல்வங்களை. நிறைதலென்னும் இடத்துநிகழ்பொருளின் றொழில் இடத்தின்மேனின்றது. சுற்றமில்லாதான் செல்வங்கள் தாங்குவாரின் மையிற் புறத்துப் போமென்பதாம். (௩)

௫௨௪. சுற்றத்தாற் சுற்றப் படவொழுகல் செல்வந்தான்
பெற்றத்தாற் பெற்ற பயன். ௪.

இ - ள். செல்வம் பெற்றத்தான் பெற்ற பயன் - செல்வம் பெற்றவதனால் ஒருவன் பெற்ற பயனாவது—சுற்றத்தான் தான் சுற்றப்பட ஒழுகல் - தன்சுற்றத்தால் தான் சூழப்படுமவகை அதனைத் தழீஇ யொழுகுதல். எ - று.

பெற்றவென்பதனுள் அகரமும் அதனுனென்பதனுள் அன்சாரியையும் தொடை நோக்கி விகாரத்தாற் றொக்கன. இவ்வொழுக்குப் பகையின்றி அரசாடற் கேதுவாக லின், இதனைச் செல்வத்திற்குப் பயனென்றார். இவைமூன்றுபாட்டானும் சுற்றந்

தழால் செல்வத்திற்கேதுவும் அரணும் பயனுமாமென்பது கூறப்பட்டது. (௭)

௫௨௫. கொடுத்தலு மின்சொலு மாற்றி னடுக்கிய
சுற்றத்தாற் சுற்றப் படும். ௫.

இ - ள். கொடுத்தலும் இன்சொலும் ஆற்றின்-ஒருவன் சுற்றத்திற்குவேண்டுவன கொடுத்தலையும் இன்சொற்சொல்லுதலையும் வல்லனாயின்,—அடுக்கிய சுற்றத்தான் சுற்றப்படும் - தம்மிற்றொடர்ந்த பலவகைச் சுற்றத்தானே சூழப்படும். எ - று.

இரண்டும் அளவறிந்தாற்றுதலரிதென்பதுதோன்ற, ஆற்றினென்றார். தம்மிற் றொடர்தலாவது சுற்றத்ததுசுற்றமும் அதனது சுற்றமுமாய் அவற்றாற் பிணிப்புண்டு வருதல். இவ்வுபாயங்களை வடநூலார் தானமுஞ் சாமமுமென்ப. (௫)

௫௨௬. பெருங்கொடையான் பேணான் வெகுளி யவனின்
மருங்குடையார் மாநிலத் தில். ௬.

# ௫௩ம் அதி.—சுற்றந்தழால்.

கதிரி

இ - ள். பெருங்கொடையான் வெகுளி பேணான் - ஒருவன்மிக்க கொடையையுடையனுமாய் வெகுளியை விரும்பானுமாயின்,—அவனின் மருங்கு உடையார் மா நிலத்து இல் - அவன்போலக் கிளையுடையார் இவ்வுலகத்தில்லை. எ - று.

மிக்கொடை ஒன்றானும் வறுமையெய்தாமற் கொடுத்தல். விரும்பாமைஇஃதர சற்கு வேண்டுவதொன்றென்று அளவிறந்து செய்யாமை. (௬)

௫உஎ. காக்கை கரவா கரைந்துண்ணு மாக்கமு
மன்னநீ ரார்க்கே யுள. எ.

இ - ள். காக்கை கரவா கரைந்து உண்ணும்-காக்கைகள் தமக்கிரையாயினகண் டவழி மறையாது இனத்தையழைத்து அதனோடுங்கூடவுண்ணாநிற்கும்;—ஆக்கமும் அன்ன நீரார்க்கே உள-சுற்றத்தாலெய்தும் ஆக்கங்களும் அப்பெற்றித்தாய இயல்பினையுடையார்க்கே உளவாவன. எ - று.

அவ்வாக்கங்களாவன பகையின்மையும், பெருஞ்செல்வமுடைமையும் முதலாயின. எச்சவும்மையான் அறமுமின்பமுமேயன்றிப் பொருளுமெய்துமென்பது பெறுதும். அப்பெற்றித்தாயவியல்பென்றது தாம் நுகர்வனவெல்லாம் அவரும் நுகருமாறு வைத்தல்.
(எ)

௫உஅ. பொதுநோக்கான் வேந்தன் வரிசையா நோக்கி
னதுநோக்கி வாழ்வார் பலர். அ.

இ - ள். பொது நோக்கான் வேந்தன் வரிசையா நோக்கின் - எல்லாரையும் ஒரு தன்மையராக நோக்காது அரசன் தத்தந்தகுதிக்கேற்ப நோக்குமாயின்,—அது நோக்கி வாழ்வார் பலர் - அச்சிறப்புநோக்கி அவனைவிடாது வாழுஞ்சுற்றத்தார் பலர். எ - று.

உயர்ந்தார் நீங்குதனோக்கிப் பொதுநோக்கை விலக்கி, எல்லாரும் விடாதொழுகுதனோக்கி வரிசைநோக்கை விதித்தார்.
இந்நான்குபாட்டானுஞ் சுற்றந்தழுவுமுபாயங் கூறப்பட்டது.
(அ)

௫உகூ. தமராகித் தற்றுறந்தார் சுற்ற மமராமைக்
காரண மின்றி வரும். கூ.

இ-ள். தமராகித் தற்றுறந்தார் சுற்றம் - முன்றமராய்வைத்துத் தன்னோடு அமராது யாதானுமொரு காரணத்தாற் றன்னைப் பிரிந்துபோயவர் பின்னும்வந்துசுற் றமாதல்—அமராமைக் காரணம் இன்றி வரும் - அவ்வமராமைக்காரணம் தன்மாட் டில்லையாகத் தானேயுளதாம். எ-று.

அமராமைக் காரணமின்றியென்றதனான், முன் அஃதுண்டாய்த் துறத்தல் பெற்றாம்: அஃதாவது அரசன்றனெறிகெடவொழுகல் வெறுப்பனசெய்தலென்றிவைமுதலியவற்றான் வருவது. ஆக்கம் வருவிக்கப்பட்டது. இயற்கையாகவே அன்புடையராய சுற்றத்தார்க்குச் செயற்கையான் வந்த நீக்கம் அதனையொழிய ஒழியும், ஒழிந்தால் அவர்க்கன்புசெய்துகொள்ளவேண்டா, பழையவியல்பாய் நிற்குமென்பார், வரு மென்றார்.
(௯)

௫௱௩௰. உழைப்பிரிந்து காரணத்தின் வந்தானை வேந்த
னிழைத்திருந் தெண்ணிக் கொளல். ௰. [illegible]

[illegible]

இ-ள். உழைப் பிரிந்து காரணத்தின் வந்தானை - காரணமின்றித் தன்னிடத்து நின்றும் பிரிந்துபோய்ப் பின் காரணத்தின் வந்தானை — வேந்தன் இழைத்திருந்து எண்ணிக் கொளல் - அரசன் அக்காரணத்தின் செய்தமைத்து ஆராய்ந்து தழீஇக்கொள்க. எ-று.

வாளா உழைப்பிரிந்தென்றமையின், பிரிதற்குக் காரணமின்மை பெற்றாம்: வந்தபின் தக்காரணத்தைச் செய்யாதவழிப் பின்னும் பிரிந்துபோய்ப் பகையோடேகூடுமாகலின்

இரங்கிவிடுமென்றார். இவை மூன்று பாட்டானும் பொச்சாப்புடையார்க்கு வரு மேதங் கூறப்பட்டது. (௩)

௫௩௬. இழுக்காமை யார்மாட்டு மென்றும் வழுக்காமை
வாயி னதுவொப்ப தில். ௬.

இ - ள். இழுக்காமை யார்மாட்டும் என்றும் வழுக்காமை வாயின் - அரசர்க்கு மறவாமைக்குணம் யாவர்மாட்டும் எக்காலத்தும் ஒழிவின்றி வாய்க்குமாயின்,—அது ஒப்பது இல் - அதனை யொக்கும் நன்மை பிறிதில்லை. எ - று.

வினைசெய்வார்
யார்மாட்டுமென்றும்,

சுற்றத்தாரென்றும் தம்பாலார்கண்ணும் ஒப்பவேண்டுதலின்
தாம் பெருமையனாறும் சுருங்கியனான்றும் ஒப்புவேண்டுத
லினென்றுமென்றும்,எல்லாக்காரியங்களினும் ஒப்பவேண்டுதலின் வழுக்காமையென்றும் கூறினர். வாயினென்பது முதனிலைத்தொழிற்பெயரடியாகவந்த வினையெச்சம். வாய்த்தல் நேர்படுதல். (௬)

௫௩௭. அரியவென் றாகாத வில்லைபொச் சாவாக்
கருவியாற் போற்றிச் செயின். ௭.

# கூ அ ௫௩ ம் அதி.—பொச்சாவாமை.

இ - ள். அரிய என்று ஆகாத இல்லை-இவை செய்தற்கரியனவென்று சொல்லப்பட்டு ஒருவற்கு முடியாத காரியங்களில்லை,—பொச்சாவாக் கருவியான் செயின் - மறவாத மனத்தானே எண்ணிச் செய்யப்பெறின். எ - று.

பொச்சாவாத என்பதனிறுதிநிலை விகாரத்தாற்றொக்கது. அந்தக்கரணமாகலிற் கருவியென்றார். இடைவிடாத நினைவும் தப்பாத சூழ்ச்சியுமுடையார்க்கு எல்லாம் எளிதின் முடியுமென்பதாம். இவையிரண்டுபாட்டானும் பொச்சாவாமையது சிறப்புக் கூறப்பட்டது. (எ)

௫௩௮. புகழ்ந்தவை போற்றிச் செயல்வேண்டுஞ் செய்யா
இகழ்ந்தார்க் கெழுமையு மில். அ.

இ - ள் புகழ்ந்தவை போற்றிச் செயல்வேண்டும் - நீதிநூலுடையார் இவை அரசர்க்குரியனவென்று உயர்த்துக்கூறிய செயல்களைக் கடைப்பிடித்துச் செய்க,—செய் யாது இகழ்ந்தார்க்கு எழுமையும் இல் - அங்ஙனஞ்செய்யாது மறந்தவர்க்கு எழுமை யினும் நன்மையில்லையாகலான். எ - று.

அச்செயல்களாவன † மூவகையாற்றலும், நால்வகையுபாயமும், ஐவகைத்தொ ழிலும், அறுவகைக்குணமும் முதலாய செயல்கள். சாதிதருமமாகிய இவற்றின் வழீஇயோர்க்கு உள்ளது நிரயத்துன்பமேயாகலின், எழுமையுமில்லென்றார். எழுமை ஆகுபெயர். இதனாற் பொச்சாவாது செய்யவேண்டுவன கூறப்பட்டன. (அ)

௫௩௯. இகழ்ச்சியிற் கெட்டாரை யுள்ளுக தாந்தம்
மகிழ்ச்சியின் மைந்துறும் போழ்து. கூ.

இ - ள். தம் மகிழ்ச்சியின் தாம் மைந்து உறும் போழ்து - அரசர் தம்மகிழ்ச்சிக் கட் டாம் வலியுறும்பொழுது,—இகழ்ச்சியின் கெட்டாரை உள்ளுக - முற்காலத்து அதனுய சோர்வாற் கெட்டவர்களை நினைக்க. எ- று.

காரணங்களோடு அவர்க்குளதாய உரிமையை மகிழ்ச்சிமேலேற்றித்

தம்மகிழ்ச்சி யினென்றும், இகழ்ச்சியுங் கேடும் உடன்றோன்றுமாகலின் மகிழ்ச்சியின் மைந்துறும் போழ்தென்றுங் கூறினார். கெட்டாரை உள்ளவே, காமும் அவ்வாறே கெடுதுமென்று அதன்கண் மைந்துறுரென்பது கருத்து. எண்ணுகவென்று பாடமோதுவாருமுளர்.()

> ௫௪0. உள்ளிய தெய்த லெளிதுமன் மற்றுந்தா
> னுள்ளிய துள்ளப் பெறின். ௧0.

---

* பொச்சாவாக்கருவி எனபதற்குப பொச்சாவாமையாகிய கருவியெனப் பொருள்கோடலே சிறப்பு. அது தொல்காப்பியத்து வினையியலின் "நிலனும்பொருளும்" என்னும் முப்பத் தேழாஞ்சூத்திரத்துரையிலே சேனாவரையர் "நின்முகங்காணுமருந்தினேன் என்புழிக் காட்சி யை மருந்தெனறாராகலிற் காணுமருந்தெனபது வினைப்பெயர் கொண்டதாம். பொச்சாவாக் கருவியாற் போற்றிச்செயின என்புழிப்பொச்சாவாக்கருவி என்பதும் அது" எனக்கூறுமாற் றுணர்க. இலக்கணவிளக்க நூலாசிரியரும் இலக்கணவிளக்கச் சூறாவளியார்க்கும் இதுவே கருத்தென்க.

† மூவகையாற்றல் அறிவு, ஆண்மை, பெருமை என்பன; நால்வகை உபாயம் கொடுத்தல், இன்சொற்சொல்லல், வேறுபடுத்தல், ஒறுத்தல் என்பன; ஐவகைத்தொழில் மேற்சேறல், அரண்முற்றல், கோடல், பொருதல், வேறல் என்பன; அறுவகைக்குணம் நட்பாக்கல், பகை யாக்கல், மேற்சேறல், இருத்தல், பிரிதல், கூட்டலென்பன. இவற்றுள் மூவகையாற்றலை சகசு-ம குறளுரையிலும், நால்வகை உபாயத்தை சகஎ-ம் குறளுரையிலும், ஐவகைத்தொழிலை சகஉ, சஎஎ-ம் குறளுரையிலும், அறுவகைக்குணத்தை சஅ௯-ம் குறளுரையிலும் காண்க.

## ௫௫-ம் அதி.—செங்கோன்மை.

கதிக

இ - ள். தான் உள்ளியது எய்தல் எளிது மன்-அரசனுக்குத் தானெய்த நினைத்த பொருளை அந்நினைத்த படியே எய்துதல்

எளிதாம்.—மற்றும் உள்ளியது உள்ளப் பெறின் - பின்னும் அதனையே நினைக்கக்கூடுமாயின். எ - று.

அது கூடாதென்பது ஒழிந்து நின்றமையின், மன் ஒழியிசைக்கண்வந்தது. அதனையே நினைத்தலாவது மறவியின்றி அதன்கண்ணே முயறல். இவை யிரண்டுபாட்டானும் பொச்சாவாமைக்கு உபாயங் கூறப்பட்டது. (௰)

---

## ருரு ம் அதி.—செங்கோன்மை.

அஃதாவது அரசனுற் செய்யப்படும் முறையினது தன்மை. அம்முறை ஒரு பாற்கோடாது செவ்வியகோல்போறலிற் செங்கோலெனப்பட்டது. வடநூலாரும் தண்டமென்றார். அது சோர்வில்லாத அரசனுற் செயற்பாலதாகலின், இது பொச்சாவாமையின்பின் வைக்கப்பட்டது.

ருசக. ஓர்ந்துகண் ணோடா திறைபுரிந் தியார்மாட்டுந்
தேர்ந்துசெய் வஃதே முறை. க.

இ - ள். ஓர்ந்து - தன்கீழ் வாழ்வார் குற்றஞ்செய்தால் அக்குற்றத்தை யாடி— யார்மாட்டும் கண்ணோடாது - யாவர்மாட்டுங் கண்ணோடாது—இறை புரிந்து - நடுவு நிலைமையைப் பொருந்தி—தேர்ந்து - அக்குற்றத்திற்குச் சொல்லிய தண்டத்தை நூலோரோடு மாராய்ந்து— செய்வஃதே முறை - அவ்வளவிற்ருகச் செய்வதே முறையாம். எ - று.

நடுவுநிற்றல் இறைக்கியல்பாகலின் அதனையிறையென்றும், உயிரினுஞ் சிறந்தார் கண்ணுமென்பார் யார்மாட்டுமென்றுங் கூறினர். இறைமை இறையெனவும், செய்வது செய்வஃதெனவும் நின்றன. இதனுற் செங்கோன்மையதிலக்கணங் கூறப்பட்டது. ()

ருசஉ. வானோக்கி வாழு முலகெல்லா மன்னவன்
கோனோக்கி வாழுங் குடி. உ.

இ - ள். உலகு எல்லாம் வான் நோக்கி வாழும் - உலகத்துயிரெல்லாம் மழை யுளதாயின் உளவாகாநிற்குமேயெனினும்,—குடி மன்னவன் கோல் நோக்கி வாழும்- குடிகள் அரசன் செங்கோலுளதாயின் உளவாகா நிற்கும். எ - று.

நோக்கிவாழ்தல் இன்றியமையாமை . வானினாயவுணவை வானென்றும், கோலினாய ஏமத்தைக் கோலென்றுங் கூறினார். அவ்வேமமில்வழி உணவுளதா யினுங் குடி கட்கு அதனாற்பயனில்லையென்பதாம்.
(௨)

ருசங. அந்தணர் நூற்கு மறத்திற்கு மாதியாய்
நின்றது மன்னவன் கோல். ௩.

இ - ள். அந்தணர் நூற்கும் அறத்திற்கும் ஆதியாய் நின்றது - அந்தணர்க்குரித் தாய வேதத்திற்கும் அதனாற் சொல்லப்பட்ட அறத்திற்குங் காரணமாய் நிலைபெற்றது—மன்னவன் கோல் - அரசனாற் செலுத்தப்படுகின்ற செங்கோல். எ - று.

அரசர் வணிகரென்னுமேனையோர்க்கு முரித்தாயினும், தலைமைபற்றி அந்தணர் நூலென்றார். "மாதவர் நோன்பு மடவார் கற்புங்—காவலன் காவல*" லன்றித் தங்

---

* மணிமேகலை, இருபத்திரண்டாவது சிறைசெய்தகாதை, உ0அ, உ0௯.

 ருரு ம் அதி.—செங்கோன்மை.

காவலரன் ஆகலின், ஈண்டறமென்றது அவைபொழிக்தலற்றை. வேதமும் அறமும் அரசனியாயினுஞ் செங்கோலில்வழி நடவாவாகலின், அதனை அவற்றிற்காதியென்றும், அப்பெற்றியே தனக்காதியாவது பிறிதில்லையென்பார் நின்றதென்றுங்கூறினார். இவ்விரண்டுபாட்டானுஞ் செங்கோலது சிறப்புக் கூறப்பட்டது. (௩)

ருசச குடிதழீஇக் கோலோச்சு மாநில மன்னன்
அடிதழீஇ நிற்கு முலகு. ச

இ - ள். குடிதழீஇக் கோல் ஓச்சும் மாநிலமன்னன் அடி - தன்குடிகளையுமணைத்துச் செங்கோலையுஞ் செலுத்தும் பெருநிலவேந்தனடியை—தழீஇ நிற்கும் உலகு - பொருந்தி விடார் உலகத்தார். எ - று.

அணைத்தல் இன்சொற்சொல்லுதலும், தளர்ந்தழி வேண்டுவன கொடுத்தலும் முதலாயின. இவ்விரண்டனையும் வழுவாமற்செய்வான் நிலமுழுதுமாளுமாகலின் அவனை மாநிலமன்னனென்றும், அவன்மாட்டியாவரும் நீங்காவன்பினராவராகலின் அடிதழீஇ நிற்குமுலகென்றும், கூறினர்.
(ச)

ருசரு. இயல்புளிக் கோலோச்சு மன்னவ னாட்ட
பெயலும் விளையுளுந் தொக்கு. ரு.

இ - ள். பெயலும் விளையுளும் தொக்கு - பருவமழையும் குன்றாதவிளைவும் ஒருங்கு கூடி—இயல்புளிக் கோல் ஓச்சும் மன்னவன் நாட்ட - நூல்கள் சொல்லிய இயல்பால் செங்கோலைச் செலுத்துமரசனது நாட்டின்கண்ணவாம். எ - று.

உளியென்பது மூன்றாவதன்பொருள்படுவதோரிடைச்சொல். வானும் நிலனுஞ் சேரத் தொழிற்பட்டு வளஞ்சுரக்குமென்பதாம்.
(ரு)

ருசசு. வேலன்று வென்றி தருவது மன்னவன்
கோலதூஉங் கோடா தெனின். சு

இ - ள். மன்னவன் வென்றி தருவது வேல் அன்று கோல் - மன்னவனுக்குப் போரின்கண் வென்றியைக் கொடுப்பது அவனெறியும் வேலன்று கோல்,—அதூஉம் கோடாது எனின் - அஃதும் அப்பெற்றித்தாவது தான் கோடாதாயின். எ - று.

கோல்செவ்விதாயவழியே வேல் வாய்ப்பதென்பார் வேலன்றென்றார்; "மாண்ட வறநெறி முதற்றே யரசின் கொற்றம்*" என்றா பிறரும். கோடாதென்பது பாட மாயின் கருவியின்றொழில் வினைமுதன்மேனின்றதாக வுரைக்க. (௬)

இசள. இறைகாக்கும் வையக மெல்லா மவனை
முறைகாக்கும் முட்டாச் செயின் எ.

இ - ள். வையகம் எல்லாம் இறை காக்கும் - வையகத்தையெல்லாம் அரசன் காக்கும்;—அவனை முறை காக்கும் - அவன்றன்னை அவனது செங்கோலே காக்கும்,— முட்டாச் செயின் - அதனை முட்டவத்தழியும் முட்டாமற்செலுத்தவனாயின். எ - று.

முட்டாமற் செலுத்தியவாறு மகனை முறைசெய்தான் † கண்ணும் தன்கை குறைத்தான் ‡ கண்ணுங் காண்க. முட்டாதெ ன்பதன் இறுதிநிலை விகாரத்தாற்

* புறநானூறு, ௫௫.
† மனுநீதிகண்டசோழன். பெரியபுராணம், ௨௦, வழக்குரைகாதை, ௫௰-௫௫.
‡ பொற்கைப்பாண்டியன். சிலப்பதிகாரம், ௨௩, கட்டுரைகாதை, ௪௨-௫௩. ௫ ௩

இரு ம் அதி.—செங்கோன்மை.

கக்க

செருக்கது. இவை நான்குபாட்டானும் அதனைச் செலுத்தினெய்தும் பயன் கூறப் பட்டது.
(எ)

இசஅ. எண்பதத்தா னோரா முறைசெய்யா மன்னவன்
றண்பதத்தாற் றானே கெடும். அ.

இ - ள். எண்பதத்தான் ஓரா முறை செய்யா மன்னவன் -

முறைவேண்டினார்க்கு எளிய செவ்வியையுடையனும் அவர் சொல்லியவற்றை நூலோர் பலரோமொராய்ந்து நின்றவுண்மைக்கொப்ப முறை செய்யாதவரசன்—தண்பதத்தான் தானே கெடும் - தாழ்ந்த பதத்திலே நின்று தானே கெடும். எ - று.

எண் பதத்தானென்னும் முற்றுவினையெச்சமும், ஓராவென்னும் வினையெச்சமும், செய்யாவென்னும் பெயரெச்சவெதிர்மறையுட் செய்தல்வினை கொண்டன. தாழ்ந்த பதம் பாவமும் பழியுமெய்திநிற்குமிலே. "அல்லவைசெய்தாற் கற க கூற்றம்" ஆக வின், பகைவரின்றியுங்கெடுமென்றார். இதனான் முறைசெலுத்தாதானது கேடு கூறப்பட்டது.

(அ)

௫௪௯. குடிபுறங் காத்தோம்பிக் குற்றங் கடிதல்
வடுவன்று வேந்தன் றொழில். ௯.

இ - ள். குடி புறங்காத்து ஓம்பிக் குற்றம் கடிதல் - குடிகளைப் பிறர் நலியாமற் காத்துத் தானும நலியாது பேணி, அவர் மாட்டுக் குற்றநிகழின் அதனை யொறுப்பா னொழித்தல்—வேந்தன் வடு அன்று தொழில் - வேந்தனுக்குப் பழியன்று, தொழிலாகலான். எ - று.

துன்பஞ்செய்தல், பொருட்கோடல், கோறலென ஒறுப்பு மூன்று; அவற்றுள் ஈண்டைக்கேய்துவன முனையவென்பது குற்றங்கடிதலென்பனுற பெற்றும். தன் கீழ் வாழ்வாரை யொறுத்தல் அறனன்மையின் வடுவாமென்பதனை யாசங்கித்து, அஃது தாகாது, அரசனுக்கு அவரை அக்குற்றத்தினீக்கித் தூயராக்குதலுரு சாதிதரும மென்றார்.

(கூ)

௫௫௦. கொலையிற் கொடியாரை வேந்தொறுத்தல் பைங்கூழ்
களைகட் டதனொடு நேர். ௰.

தம்மேற்கொண் டொழுகு வாரினுங்கொடியன்—அலைமேற்கொண்டு அல்லவை செய்து ஒழுகும் வேந்து - பொருள் வெஃகிக் குடிகளையலைத்தற்றொழிலைத் தன்மேற் கொண்டு முறையல்லவற்றைச் செய்தொழுகும் வேந்தன். எ - று.

அவர் செய்வது ஒருபொழுதைத் துன்பம், இவன் செய்வது எப்பொழுதுந் துன்பமாமென்பதுபற்றி, அவரினுங் கொடியனென்றார். பான்மயக்குறழ்ச்சி வேந்தென் பது உயர்திணைப்பொருட்கண்வந்த அஃறிணைச்சொல். அலை கொலையினுங் கொடிதென்பதாயிற்று. (௧)

௫௫௨. வேலொடு நின்றா னிடுவென் றதுபோலுங்
கோலொடு நின்றா னிரவு. ௨.

இ - ள். வேலொடு நின்றான்-ஆறலைக்குமிடத்துத் தனியே வேல்கொண்டு நின்ற கள்வன்—இடு என்றது போலும்-ஆறுசெல்வானை நின்கைப்பொருடாவென்று வேண் டுதலோ டொக்கும்—கோலொடு நின்றான் இரவு - ஒறுத்தற்றொழிலோடு நின்றவரசன் குடிகளைப் பொருள் வேண்டுதல். எ - று.

வேலொடு நின்றானென்றதனாற் பிறரொடு நில்லாமையும், இரவென்றதனால் இறைப்பொருளன்மையும், பெற்றாம். தாராக்கால் ஒறுப்பலென்னுங் குறிப்பினனாகலின், இரவாற்கோடலும் கொடுங்கோன்மையாயிற்று. இவையிரண்டுபாட்டானுங் கொடுங்கோன்மையது குற்றங் கூறப்பட்டது. (௨)

௫௫௩. நாடொறு நாடி முறைசெய்யா மன்னவ
னாடொறு நாடு கெடும். ௩.

இ - ள். நாடொறும் நாடி முறை செய்யா மன்னவன் - தன்னாட்டு நிகழுந் தீமைகளை நாடோறுமாராய்ந்து அதற்கேற்க முறைமையைச் செய்யாதவரசன்— நாடொறும் நாடு கெடும் -

நாடோறும் நாடிழக்கும். எ - று.

அரசனுக்கு நாடு உறுப்பாகலின், அதன்வினை அவன்மேனின்றது. இழத்தல் பய னெய்தாமை. மன்னவனும் நாடொறுங் கெடுமென்றுரைப்பாருமுளர். (௩)

௫௫௪. கூழுங் குடியு மொருங்கிழக்குங் கோல்கோடிச்
சூழாது செய்யு மரசு. ௪.

இ - ள். சூழாது கோல் கோடிச் செய்யும் அரசு - மேல் விளைவதெண்ணாது முறைதப்பச் செய்யுமரசன்—கூழும் குடியும் ஒருங்கு இழக்கும் - அச்செயலான் முன்னீட்டிய பொருளையும் பின்னீட்டுதற்கேதுவாகிய குடிகளையுஞ் சேரவிழக்கும். எ - று.

கோடலென்பது திரிந்து நின்றது. முன்னீட்டியபொருள் இன்ற பாட்டாற் கூறுப.
இழத்தற்கேது வரு
(௪)

## ௫௬ம் அதி.—கொடுங்கோன்மை.

[illegible]

௫௫௫. அல்லற்பட் டாற்றா தழுதகண்ணீ ரன்றே
செல்வத்தைத் தேய்க்கும் படை. ௫.

இ - ள். அல்லற்பட்டு ஆற்றாது அழுத கண்ணீர் அன்றே - அரசன் முறைசெய் யாமையாற் குடிகள் துன்பமுற்று அதனைப் பொறுக்கமாட்டாது அழுத கண்ணீ ரன்றே—செல்வத்தைத் தேய்க்கும் படை - அவன் செல்வத்தைக் குறைக்குங் கருவி. எ - று.

அழுதகண்ணீர் அழுதலான் வந்த கண்ணீர். செல்வமாகிய

மாத்தையென்றமை யின், இஃதேகதேசவுருவகம். அல்லர்படுத்திய பாவத்தது தொழில் அதற்கேது வாகிய கண்ணீர்மேனின்றது. அக்கண்ணீரிற் கொடிது பிறிதின்மையின், செல்வங் கடிதிற்றேயுமென்பது கருத்து.
(௫)

௫௬௬. மன்னர்க்கு மன்னுதல் செங்கோன்மை யஃதின்றேன்
மன்னுவா மன்னர்க் கொளி. ௬.

இ - ள். மன்னர்க்கு மன்னுதல் செங்கோன்மை - அரசர்க்குப் புகழ்கடாம் நிலை பெறுதல் செங்கோன்மையானும்;—அஃது இன்றேல் மன்னர்க்கு ஒளி மன்னுவாம் - அச்செங்கோன்மையில்லையாயின், அவர்க்கு அப்புகழ்கடாம் உளவாகா. எ - று.

விகாரத்தாற்றொக்க மூன்றுவது விரித்து ஆக்கம் வருவித்துரைக்கப்பட்டது. மன்னுதற்கேது புகழாதல் "இந்நிலத்து மன்னுதல் வேண்டி னிசைநடுக" என்பது னுமறிக. மன்னுமை ஒருகாலு நிலையாமை. பழிக் கப்பட்டால் ஒளி மன்னுவாம், ஆகவே, தாமுமன்னுரென்பதாயிற்று. வென்றி கொடை முதலிய வேறுக்களாற புகழ் பகுதிப்படுதலின் , பன்மையாற் கூறினர். அவையெல்லாம் செங்கோன்மையில் வழி இலவாமென்பதாம். இவைநான்குபாட்டானும் கொடுங்கோலனுயினுன் எய்துங் குற்றங் கூறப்பட்டது.
(௬)

௫௬௭. அளியின்மை ஞாலத்திற் கெற்றற்றே வேந்த
னளியின்மை வாழு முயிர்க்கு. ௭.

இ - ள். அளியின்மை ஞாலத்திற்கு எற்று - மழையில்லாமை வையத்து வாழு முயிர்கட்கு எவ்வகைத் துன்பம் பயக்கும்,—அற்றே வேந்தன் அளியின்மை வாழும் உயிர்க்கு - அவ்வகைத்துன்பம் பயக்கும் அரசன் றண்ணளியில்லாமை அவனுட்டு வாழுங் குடிகட்கு. எ - று.

சிறப்புப்பற்றித் துளியென்பது மழைமேனின்றது; உயிரென்பது குடிகண்மே னின்றது. மேல் வானோக்கிவாழு மென்றதனை எதிர்மறை முகத்தாற் கூறியவாறு.(எ)

௫௫அ. இன்மையி னின்னா துடைமை முறைசெய்யா
மன்னவன் கோற்கீழ்ப் படின். அ.

இ - ள். முறை செய்யா மன்னவன் கோற்கீழ்ப் படின் - முறைசெய்யாத அரசனது கொடுங்கோலின்கீழ் வாழின்,—இன்மையின் உடைமை இன்னாது - யாவர்க்கும் பொருளின்மையினும் உடைமை இன்னாது. எ - று.

தனக்குரிய பொருளோடு அமையாது மேலும் வெஃகுவோனது நாட்டுக் கைக்கோள யாப்புண்டல் முதலிய வருவது பொருளுடையார்க்கே யாகலின், அவ்வுடைமை

* நான்மணிக்கடிகை.

௫௭-ம் அதி[illegible]வெருவந்தசெய்யாமை.

இன்மையினுமின்னாதாயிற்று இவ்விரண்டு பட்டாலும் அவனாட்டு வாழ்வார்க்கு வருங்குற்றம் கூறப்பட்டது.
(அ)

௫௫௯. முறைகோடி மன்னவன் செய்யி னுறைகோடி
யொல்லாது வானம் பெயல் கூ.

இ - ள். மன்னவன் முறை கோடிச் செய்யின் - மன்னவன் தான் செய்யும் பொருளை முறை தப்பச் செய்யுமாயின்,—உறை கோடி வானம் பெயல் ஒல்லாது - அவனாட்டுப் பருவமழை இன்றாம்வகை மேகம் பொழிதலைச்செய்யாது. எ - று.

இரண்டிடத்துங் கோடவென்பன திரிந்தின்றன.

உறைகோடுதலாவது பெய் பருவத்துப் பெய்யாமை. அதற்கேது வருகின்ற பாட்டாற் கூறுப. (௯)

௫௬௦. ஆபயன் குன்று மறுதொழிலோர் நூன்மறப்பர்
காவலன் காவா னெனின். ௬௦.

இ - ள். காவலன் காவான் எனின் - காத்தற்குரிய அரசன் உயிர்களைக் காவா னாயின்—ஆ பயன் குன்றும் - அறனில்லாத அவனாட்டுப் பசுக்களும் பால்குன்றும்,— அறுதொழிலோர் நூல் மறப்பர்-அந்தணரும் நூல்களை மறந்துவிடுவர். எ - று.

ஆபயன் ஆவாற்கொள்ளும் பயன். அறுதொழிலாவன ஓதல், ஓதுவித்தல், வேட்டல், வேட்பித்தல், ஈதல், ஏற்றலெனவிவை. பசுக்கள் பால்குன்றியவழி அவியின்மை யானும், அது கொடுத்தற்குரியார் மந்திரகற்பமென்பன ஓதாமையானும், வேள்வி நடவாதாம்; ஆகவே, வானம் பெய்யவேல்லாமென்பதாயிற்று. இவை யிரண்டு பாட்டானும் அவனாட்டின்கணிகழ்வது கூறப்பட்டது.
(௬௦)

---

## ௫௭-ம் அதி.—வெருவந்தசெய்யாமை.

அஃதாவது குடிகளஞ்சுவனவாகிய கொடுந்
தொழில்களைச் செய்யாமை. அவை செய்தல்
இஃததன்பின் வைக்கப்பட்டது.
* பிறரஞ்சுவதும் தானஞ்சுவதுமாய
கொடுங்கோன்மைப்பாற்படுதலின்,

௫௬௧. தக்காங்கு நாடித் தலைச்செல்லா வண்ணத்தா
லொத்தாங் கொறுப்பது வேந்து. ௧.

இ - ள். தக்காங்கு நாடி - ஒருவன் தன் னின்மெலியார்மேற் சென்றவழி அதனை நடுவாக ஆராய்ந்து—தலைச்செல்லாவண்ணத்தால

ஒத்தாங்கு ஒறுப்பது வேந்து - பின்னும் அது செய்யாமற்பொருட்டு அவனை அக்குற்றத்திற்கொப்ப ஒறுப்பானே அரசனாவான். எ - று.

தக்காங்கு ஒத்தாங்கென்பன ஒருசொல். தகுதியென்பது நடுவுநிலைமையாதல் "தகுதி யெனவொன்று நன்றே†" என்பதனானுமறிக. இதனானே தக்காங்கு நாடாமையும், பிறிதோர்காரணம்பற்றி மிகவொறுத்தலும், குடிகளஞ்சும் வினையாதல் பெறும். (க)

ருசுஉ. கடிதோச்சி மெல்ல வெறிக நெடிதாக்க
நீங்காமை வேண்டு பவர். உ.

---

* பகுதி - மந்திரிமுதலியவர்கள். † குறள், ககக.

## ருஎம் அதி.—வெருவந்தசெய்யாமை.

இ - ள். கடிது ஓச்சி - அஃதொத்தாங்கொறுத்தல் தொடங்குங்கால் அளவிறப் பச்செய்வார்போற் றொடங்கி,—மெல்ல எறிக - செய்யுங்கால் அளவிறவாமற் செய்க—ஆக்கம் நெடிது நீங்காமை வேண்டுபவர் - ஆக்கந் தம்மைவிட்டு நெடிதுநீங்காமை வேண்டுவோர். எ - று.

கடிதோச்சல் குற்றஞ்செய்வார் அதனை யஞ்சுதற் பொருட்டும், மெல்லவெறிதல் யாவரும் வெருவாமைப்பொருட்டுமாம். தொடங்கினவளவிற் குறைதல்பற்றி மென்மை கூறப்பட்டது. ஓச்சுதல் எறிதலென்பனவிரண்டும் உவமைபற்றி வந்தன. இவையிரண்டுபாட்டானும் குடிகள் வெருவந்த செய்யாமைய தியல்பு கூறப்பட்டது.

௫௬௩. வெருவந்த செய்தொழுகும் வெங்கோல னாயி
னொருவந்த மொல்லைக் கெடும். ௩.

இ - ள். வெருவந்த செய்து ஒழுகும் வெங்கோலன் ஆயின் - குடிகள் வெருவிய செயல்களைச் செய்து நடக்கும் வெங்கோலனுமாயின்,—ஒருவந்தம் ஒல்லைக் கெடும் - அரசன் ஒருதலையாகக் கடிதிற் கெடும். எ - று.

வெங்கோலனென்பது ஈண்டு வாளா பெயராய் நின்றது. ஒருவந்தம், ஒருதலை, ஏகாந்தமென்பன ஒருபொருட்கிளவி. அச்செயல்களு ங் கேடுகளும் முன்னர்க் கூறப்படும். (௩.)

௫௬௪. இறைகடிய னென்றுரைக்கு மின்னாச்சொல் வேந்த
னுறைகடுகி யொல்லைக் கெடும். ௪.

இ - ள். இறை கடியன் என்று உரைக்கும் இன்னாச்சொல் வேந்தன் - குடிக ளான் நம்மிறைவன் கடியனென்று சொல்லப்படும் இன்னாதசொல்லையுடைய வேந்தன்—உறை கடுகி ஒல்லைக்கெடும் - ஆயுளுக்குறைந்து செல்வமுங் கடிதினிழக்கும். எ - று.

நெஞ்சு நொந்து சொல்லுத லான், இன்னாமை பயப்பதாய சொல்லை இன்னாச் சொல்லென்றார். உறையென்பது முதனிலைத் தொழிற்பெயர். அஃது ஈண்டாகுபெய ராய் உறைதலைச்செய்யும் நாண்மேனின்றது. அது குறைதலாவது அச்சொல்லில்லா தார்க்கு உள்ளதிற் சுருங்குதல்.
(௪)

௫௬௫. அருஞ்செவ்வி யின்னா முகத்தான் பெருஞ்செல்வம்
பேஎய்கண் டன்ன துடைத்து. ௫.

இ - ள். அருஞ்செவ்வி இன்னாமுகத்தான் பெருஞ்செல்வம் -

தன்னைக் காண வேண்டுவார்க்குக் காலமரியனாய்க் கண்டால் இன்னாத முகத்தினையுடையானது பெரியசெல்வம்—பேய் கண்டன்னது உடைத்து - பேயாற் காணப்பட்டாற்போல்வதொரு குற்றமுடைத்து. எ - று.

எனவே, இவை யிரண்டும் வெருவந்த செய்த லாயின. இவை செய்வானைச் சார் வாரின்மையின், அவ னது செல்வ ந் தனக்கும் பிறர்க்கும் பயன்படா தென்பதுபற்றிப் பேய்கண்டன்னதுடைத்தென்றார். காணுதல் தன்வயமாக்குதல். (௫)

௫௬௬. கடுஞ்சொல்லன் கண்ணில னாயி னெடுஞ்செல்வ
நீடின்றி யாங்கே கெடும். ௬. [illegible]

௫௭ம் அதி.—வெருவந்தசெய்யாமை.

இ - ள். கடுஞ்சொல்லன் கண் இலன் ஆயின் - அரசன் கடியசொல்லையுமுடையனாய்க் கண்ணோட்டமுமிலனாயின்,—நெடுஞ் செல்வம் நீடு இன்றி ஆங்கே கெடும் - அவனது பெரிய செல்வம் நீடுதலின்றி அப்பொழுதே கெடும். எ - று.

“வெட்டன் கடுஞ்சொன் மிருதண்ட —ஞ் சூதுபொரு—ளீட்டங்கட் காமமோ டேழு” எனப்பட்ட விதனங்களுட் கடுஞ்சொல்லையும் மிருதண்டத்தையும் இவர் இவ்வெருவந்தசெய்தலுளடக்கினர். கண் ஆகுபெயர். இவை செய்தபொழுதே கெடுஞ்சிறுமைத்தன்றாயினு மென்பார், நெடுஞ்செல்வமென்றார். நீடுதல் நீட்டித்தல்.

௫௬௭. கடுமொழியுங் கையிகந்த தண்டமும் வேந்த
னடுமுரண் டேய்க்கு மரம். ௭.

இ - ள். கடுமொழியும் கையிகந்த தண்டமும் - கடிய சொல்லும்

குற்றத்தின் மிக்க தண்டமும்—வேந்தன் அழுமரண் தேய்க்கும் அரம் - அரசனது பகை வெல்லு தற்கேற்ற மாறுபாடாகிய இரும்பினைத் தேய்க்கும் அரமாம். எ - று.

கடுமொழியாற்றானையுங் கையிகந்த தண்டத்தாற்றேசமுங் கெட்டு மூரண் சுருங்கி வருதலின் அவற்றை அரமாக்கி, திண்ணிதாயினுந் தேயுமென்றற்கு அழுமரணை இரும்பாக்கினர். ஏகதேசவுருவகம். அரமென்பதனைத் தனித்தனி கூட்டுக. இவை மயர்தபாட்டாலும், செவ் வியின்மை, இன்னாமுகமுடைமை, கண்ணோட்டமின்மை, கடுஞ்சொற்சொல்லல், கையிகந்ததண்டமென்றிவைகள் குடிகளஞ்சும் வினையென்ப தூஉம், இவை செய்தான் ஆயுளும் அழுமரணுஞ் செல்வமு மிழக்குமென்பதூஉங் கூறப்பட்டன.
(எ)

௫௬௮. இனத்தாற்றி யெண்ணாத வேந்தன் சினத்தாற்றிச்
சீறிற் சிறுகுந் திரு. அ.

இ - ள். இனத்து ஆற்றி எண்ணாத வேந்தன் - காரியத்தைப்பற்றி வந்த வெண்ணத்தை அமைச்சர்மேல்வைத்து அவரோடு தானுமெண்ணிச் செய்யாதவரசன்— சினத்து ஆற்றிச் சீறின் - அப்பிழைப்பாற் றன்காரியர் தப்பியவழித் தன்னைச் சின மாகிய குற்றத்தின்கண்ணே செலுத்தி அவரை வெகுளுமாயின்,—திருச் சிறுகும் - அவன்செல்வம் நாடோறுஞ் சுருங்கும். எ - று.

அரசர்பாரம்பொறுத்தய்த்த லொப்புமையான் அமைச்சரை இனமென்றும், தான் பின் பிழைப்பாதலறிந்து அமையாது அதனை அவர்மேலேற்றி வெகுளின் அவர் வெரீஇ நீங்குவர்; நீங்கவே, அப் பிழைப்புத் தீருமாறும் அப்பாரமினிதுய்க்குமாறும் இலனுமென்பது நோக்கித் திருச்சிறுகுமென்றுங் கூறினர். இதனாற் பகுதியஞ்சும் வினையும் அது செய்தானெய்துங் குற்றமுங் கூறப்பட்டன.
(அ)

௫௬௯. செருவந்த போழ்திற் சிறைசெய்யா வேந்தன்
வெருவந்து வெய்து கெடும். ௯.

இ - ள். சிறை செய்யா வேந்தன் - செரு வருதற்குமுன்னே தனக்குப் புகலாவ தோரரண் செய்துகொள்ளாதவரசன்—செருவந்த போழ்தில் வெருவந்து வெய்து கெடும் - அது வந்தகாலத்து ஏமமின்மையான் வெருவிக் கடிதிற்கெடும். எ - று.

---

* இவ்வாறு ஒருமைப்படாமை வாக்கியம்பதமாகத் தனித்தனி கூட்டி முடிப்பதனைத் தேர்வடமிழுப்பார்போலப் பிரதிபேதந்தாக்குவ பெரும்பா வடநூலார்.

## ௫௮-ம் அதி.—கண்ணோட்டம்.

**கருத்**

பகையைவெருவிச் சேர்ந்தார்க்கிரங்குதலித் தமியனாய்த் தானும்வெருவி அப்பகை யைத்தருமென்பதாம். இதனால் தானஞ்சும் வினையும் அது செய்தானெய்தும் பயனும் கூறப்பட்டன. (௯)

௫௭௦. கல்லார்ப் பிணிக்கும் கடுங்கோ லதுவல்ல
தில்லை நிலக்குப் பொறை ௧௦.

இ - ள். கடுங்கோல் கல்லார்ப் பிணிக்கும் - கடுங்கோலனாயவரசன் நீதிநூல் முதலிய கல்லாதாரைத் தனக்குப் பகுதியாகக் கூட்டாநிற்கும்;—அதுவல்லது நிலக்குப் பொறை இல்லை - அக்கூட்டமல்லது நிலத்திற்கு மிகையாய பாரம் பிறிதில்லை. எ - று.

கடுங்கோலென்பது ஈண்டு மிக்க தண்டத்தின்மேற்றன்றி அதனைச் செய்வான் மேற்று. அவன் அது செய்தற்கியைவாரையல்லது கூட்டாமையிற் கல்லார்ப்

பிணிக்குமென்றும், ஈனையவற்றையெல்லாம் பொறுக்கின்றவியல்பாகலின் நிலத்திற் குப் பொறை அதுவல்லதில்லையென்றுங் கூறினர். நிலக்கென்பது செய்யுள்விகாரம். இதனல் வெருவந்த செய்தலின் குற்றங் கூறப்பட்டது. (௰)

---

## ருஅ ம் அதி.—கண்ணோட்டம்.

அஃதாவது தன்னெடு பயின்றாரைக் கண்டால் அவர் கூறியன மறுக்கமாட் டாமை. இஃது அவர்மேற் கண்சென்றவழி நிகழ்வதாகலின், அப்பெயர்த்தாயிற்று. மேல் வெருவந்தசெய்யாமையுட் கூறியவதனையே சிறப்புப்பற்றி விரித்துக்கூறுகின்ற மையின், இஃததன்பின் வைக்கப்பட்டது.

ருஎக. கண்ணோட்ட மென்னுங் கழிபெருங் காரிகை
யுண்மையா னுண்டிவ் வுலகு. க.

இ - ள். கண்ணோட்டம் என்னும் கழி பெருங்காரிகை உண்மையான்-கண்ணோட் டமென்று சொல்லப்படுகின்ற சிறப்புடையவழகு அரசர்மாட்டு உண்டாகலான்,— இவ்வுலகு உண்டு-இவ்வுலகமுண்டாகாநின்றது. எ - று.

கழிபெருங்காரிகையென்புழி ஒருபொருட்பன்மொழி இவ்வுயிரழகது சிறப்புணர நின்றது. இவ்வழகு அதற்குறுப்பாகலின், உண்மையானென நிலைபெறுங்கூறினர். இன்மை வெருவந்தசெய்தலாகலின் அவர்நாட்டு வாழ்வார் புலியையடைந்த புல்வாய் எம்போன்று ஏமஞ்சாராமைபற்றி, இவ்வுலகுண்டென்றார். (க)

ருஎஉ. கண்ணோட்டத் துள்ள துலகிய லஃதிலா
ருண்மை நிலக்குப் பொறை. உ.

இ - ள். உலகியல் கண்ணோட்டத்து உள்ளது - உலகநடை

கண்ணோட்டத்தின் கண்ணே நிகழ்வது—அஃது இலார் உண்மை நிலக்குப் பொறை-ஆகலான், அக்கண்ணோட்டமில்லாதார் உளராதல் இந்நிலத்திற்குப் பாரமாதற்கே, பிறிதொன்றற்கு அன்று. எ - று.

உலகநடையாவது ஒப்புரவுசெய்தல்,புறந்தருதல்,பிழைத்தன பொறுத்தலென்றிவை முதலாயின. அவைநிகழாமையால் தமக்கும் பிறர்க்கும் பயன்படாரென்பதுபற்றி, நிலக்குப்பொறையென்றார். ஆதற்கென்பது சொல்லெச்சம். இவையிரண்டுபாட்டானும் கண்ணோட்டத்தது சிறப்புக் கூறப்பட்டது.

(௩) [illegible] ௫௮-ம் அதி—கண்ணோட்டம்.

௫௭௩. பண்ணென்னும் பாடற் கியைபின்றேற் கண்ணென்னும்
கண்ணோட்ட மில்லாத கண். ௩

இ - ள். பண் என்னும் பாடற்கு இயைபு இன்றேல் - பண் என்னபயத்ததாம் பாடற்றொழிலோடு பொருந்துதலின்றாயின்! —கண் என்னும் கண்ணோட்டம் இல்லாத கண் - அதுபோலக் கண் என்னபயத்ததாம் கண்ணோட்டமில்லாதவிடத்து! எ - று.

பண் கண்ணென்பன சாதிப்பெயர். பண்களாவன பாலையாழ்முதலிய நூற்று மூன்று. பாடற்றொழில்களாவன யாழின்கண் வார்தல் முதலியவெட்டும்*, பண்ணல் முதலியவெட்டும்†, மிடற்றின்கண் எடுத்தல், படுத்தல், நலிதல், கம்பிதம், குடிலமென்னுமைந்தும், பெருவண்ணம், இடைவண்ணம், வனப்புவண்ணமுதலியவண்ணங் களெழுபத்தாறுமாம். இவற்றோடியையாதவழிப் பண்ணாற்பயனில்லாதவாறுபோலக் கண்ணோட்டத்தியையாதவழிக் கண்ணாற்பயனில்லையென்பதாம். கண் சென்றவழி நிகழ்தல்பற்றி அதனை யிடமாக்கினார். இறுதிக்கட் கண்ணென்பதனைக் "கண்ணகன் ஞாலம்‡" என்புழிப்போலக் கொள்க. (௩)

௫௭௪. உளபோன் முகத்தெவன் செய்யு மளவினாற்
கண்ணோட்ட மில்லாத கண். ௪.

இ - ள். முகத்து உளபோல் எவன் செய்யும் - கண்டார்க்கு முகத்தின்கண் உள போறற்றோன்றலல்லது வேறென்ன பயனைச் செய்யும் - அளவினான் கண்ணோட்டம் இல்லாத கண் - அளவிறவாத கண்ணோடுதலையுடையவல்லாத கண்கள் எ - று.

தோன்றலல்லதென்னுஞ்சொற்கள் அவாய்நிலையான்வந்தன. கழிகண்ணோட்டந் நீக்குதற்கு, அளவினானென்றார். ஒருபயனையுஞ் செய்யாவென்பது குறிப்பெச்சம்.

௫௭௫. கண்ணிற் கணிகலங் கண்ணோட்ட மஃதின்றேற்
புண்ணென் றுணரப் படும். ௫.

இ - ள். கண்ணிற்கு அணி கலம் கண்ணோட்டம்-ஒருவன் கண்ணிற்கு அணியுங் கலமாவது கண்ணோட்டம்,—அஃது இன்றேல் புண் என்று உணரப்படும்-அக்கல மில்லையாயின் அஃதறிவுடையாரால் புண்ணென்றறியப்படும். எ - று.

வேறணிகலமின்மையிற் கண்ணிற்கணிகலமென்றும், கண்ணாய்த்தோன்றினும் நோய்களானும் புலன்பற்றலானுந் துயர்விளைத்தனோக்கிப் புண்ணென்றுணரப்படுமென்றுங் கூறினார். இவை மூன்றுபாட்டானும் ஓடாது நின்ற கண்ணின்குற்றங் கூறப்பட்டது.
(௫)

௫௭௬. மண்ணோ டியைந்த மரத்தனையர் கண்ணோ
டியைந்துகண் ணோடா தவர். ௬.

* வார்தல் முதலிய இசைக்கரணமெட்டாவன - வார்தல், வடித்தல், உந்தல், உறழ்தல், உருட்டல், தெருட்டல், அள்ளல், பட்டடை என்பன.

† பண்ணல் முதலிய கலைத்தொழிலெட்டாவன - பண்ணல், பரிவட்டணை, ஆராய்தல், தைவரல், செலவு, விளையாட்டு, கையூழ், குறும்போக்கு என்பன.

௨ ‡ சீவகம். ௧.

## ௫௮-ம். அதி.—கண்ணோட்டம்.

[illegible]

இ-ள். கண்ணோடு இயைந்து கண்ணோடாதவர் - இயைதற்குரிய கண்ணோடு பொருந்திவைத்து அஃதோடாதவர் — மண்ணோடு இயைந்த மரத்து அனையர் - இயக்கின்றாராயினும் மண்ணோடு பொருந்திநிற்கின்ற மரத்தினையொப்பர். எ-று.

ஓடாதவரென்புழிச் சினைவினை முதன்மேனின்றது. மரமுங் கண்ணோடியைந்து கண்ணோடாமையின், இது தொழிலுவமம். இதனைச் சுதைமண்ணோடு கூடிய மரப்பாவையென்றுரைப்பாருமுளர். அஃதுரையன்மை காணப்படுங்கண்ணன்றி அதனுண் மறைந்து நிற்கின்ற ஒருசாருன்வீட்டாற் கூறினமையாலும், "மரக்கண்ணோ மண்ணாள்வார் கண்ணென் — றிரக்கண்டாய்" என்பதனானுமறிக. (௬)

௫௭௭. கண்ணோட்ட மில்லவர் கண்ணிலர் கண்ணுடையார்
கண்ணோட்ட மின்மையு மில். ௭.

இ - ள். கண்ணோட்டம் இல்லவர் கண் இலர் - கண்ணோட்ட

யில்லாதவர் கண் ணுடையருமல்லர்;— கண் உடையார் கண்ணோட்டம் இன்மையும் இல் - கண்ணுடை யவர் கண்ணோட்டமிலராதலு மில்லை. எ - று.

கண்ணுடையாராயிற் காட்சிக்கண்ணே அஃதோமென்பதுபற்றிக் கண்ணோட்ட மில்லவர் கண்ணிலரெனக் கூறிப் பின் அதனையெதிர்மறைமுகத்தான் விளக்கினர். உம்மை இறந்ததுதழீஇய வெச்சவும்மை. இவையிரண்டுபாட்டாலுங் கண்ணோடாதார திழிபு கூறப்பட்டது.

(எ)

௫எஅ. கருமஞ் சிதையாமற் கண்ணோட வல்லார்க்
குரிமை யுடைத்திவ் வுலகு. அ.

இ - ள். கருமம் சிதையாமல் கண்ணோட வல்லார்க்கு - முறைசெய்தலாகிய தந்தொழிலழியாமற் கண்ணோட வல்ல வேந்தர்க்கு—உரிமை உடைத்து இவ்வுலகு - உரித்தாந்தன்மையுடைத்து இவ்வுலகம். எ - று.

தம்மொடு பயின்றார் பிறரையிடுக்கண்செய்துழி அவரைக் கண்ணோடியொறுத்தார்க்கு முறை சிதைதல் மேல் "ஓர்ந்துகண்ணோடாது" என்ற முறையிலக்கணத் தானும் பெற்றாம். முறை சிதையவரும்வழிக் கண்ணோடாமையும் வாராவழிக் கண்ணோடலும் ஒருவற்கியல்பாதலருமையிற் கண்ணோடவல்லார்கென்றும், அவ்வியல் புடையார்க்கு உலகமுழுதும் எஞ்ஞான்றுஞ்செறலின் உரிமையுடைத்தென்றுங் கூறினார். இதனாற் கண்ணோடுமாறு கூறப்பட்டது. (அ)

௫எகூ. ஒறுத்தாற்றும் பண்பினார் கண்ணுங்கண் ணோடிப்
பொறுத்தாற்றும் பண்பே தலை. கூ.

இ - ள். ஒறுத்தாற்றும் பண்பினார்கண்ணும் - தம்மையொறுக்குமியல்புடையாரிடத்தும்—கண்ணோடிப் பொறுத்தாற்றும் பண்பே தலை-கண்ணோட்டமுடையராய்க் குற்றத்தைப் பொறுக்குமியல்பே அரசர்க்குத் தலையாயவியல்பாவது. எ - று.

பண்பினாரென்றதனால் அவர்பயிற்சி பெற்றாம். ஒறுத்தாற்றும், பொறுத்தாற்று மென்பன ஒருசொன்னீர.
(௯)

---

* [illegible] நற்றிணை.
† குறள். [illegible]



## ௫௯-ம் அதி.—ஒற்றாடல்

௫௮௰. பெயக்கண்டு நஞ்சுண் டமைவர் நயத்தக்க
நாகரிகம் வேண்டு பவர். ௮௰.

இ - ள். நஞ்சு பெயக் கண்டும் உண்டு அமைவர் - பயின்றார் தமக்கு நஞ்சிடக் கண்டுவைத்தும் கண் மறுக்கமாட்டாமையின் அதனையுண்டு பின்னுமவரோடு மேவுவர்—நயத்தக்க நாகரிகம் வேண்டுபவர் - யாவரானும் விரும்பத்தக்க கண்ணோட்டத் தினை வேண்டுபவர். எ - று.

நாகரிகமென்பது கண்ணோட்டமாதல் "முந்தை யிருந்து நட்டோர் கொடுப்பின்— நஞ்சு முண்பர் நனிநா கரிகர்" என்பதனானுமறிக. அரசர் அவரையொறுத்து கண்ணோடற்பாலது தம்மாட்டுக் குற்றஞ்செய்தவழியென்பது இவ்விரண்டுபாட்டானுங் கூறப்பட்டது.
(௮௰)

## ௫௯ம் அதி.—ஒற்றாடல்.

அஃதாவது பகை, நொதுமல், நட்பென்னும் மூன்றுதிறத்தார்மாட்டும் நிகழ்வனவறிதற்கு ஒற்றரையாளுதல். மேற்சொல்லிய இலக்கணத்தனாய அரசனுக்குத் தன்னாடு செலுத்துங்காலும் பிறர்நாடு கொள்ளுங்காலும் வேண்டுவன கூறுகின்றாராகலின், அவ்விருமைக்கும் இன்றியமையாததாய இது முன்வைக்கப்பட்டது.

௫அக. ஒற்று முரைசான்ற நூலு மிவையிரண்டுந்
தெற்றென்க மன்னவன் கண். ௧.

இ - ள். ஒற்றும் உரை சான்ற நூலும் இவை இரண்டும் - ஒற்றும் புகழமைந்த நீதிநூலுமாகிய இவையிரண்டனையும்—மன்னவன் கண் தெற்றென்க - அரசன் தன் கண்ணிரண்டெனவுமாகத் தெளிக. எ - று.

ஒற்றுத் தன்கண் செல்லமாட்டாத பரப்பெல்லாஞ்சென்று கண்டு ஆண்டு நிகழ்வனவெல்லாமுணர்த்தலானும், நூல் அந்நிகழ்ந்தவற்றிற்குத் தன்னுணர்வு செல்லமாட்டாத வினைகளெல்லாஞ் சொல்லியுணர்த்தலானும், இவ்விரண்டனையுமே தனக்கு ஊனக்கண்ணும் ஞானக்கண்ணுமாகத் துணிந்துகொண்டொழுக வென்பதாம். ஒற்றினை ஒற்றென்றார், வேந்தனை வேந்தென்றாற்போல. தெற்றென்க வென்பது தெற்றென்பது முதனிலையாக வந்த வியங்கோள். அது தெற்றெனவென்னுஞ் செயவெனெச்சத்தானறிக. இதனால் ஒற்றினது சிறப்புக் கூறப்பட்டது. (௧)

௫அ௨. எல்லார்க்கு மெல்லா நிகழ்பவை யெஞ்ஞான்றும்
வல்லறிதல் வேந்தன் றொழில. ௨.

இ - ள். எல்லார்க்கும் நிகழ்பவை எல்லாம் எஞ்ஞான்றும் வல் அறிதல் - எல்லார்கண்ணும் நிகழ்வனவெல்லாவற்றையும் நாடோறும்

ஒற்றான் விளைந்தறிதல்— வேந்தன் தொழில் - அரசனுக்குரிய தொழில். எ - று.

எல்லார்க்குமென்றது மூன்றுதிறத்தாரையும். நான்காவது ஏழாவதன்பொருட் கண்வந்தது. நிகழ்வனவெல்லாமென்றது நல்லவுந்தீயவுமாய சொற்களையுஞ் செயல்களையும். அவை நிகழ்ந்தபொழுதே அவனறிதருதக்க அளியாகத் தெறலாகச் செய்ய வேண்டுதலின் வல்லறிதலென்றும், அவ்விருதொழிற்கும் அறிதல் காரணமாகலின்

---

* [illegible]



அதனையே யுபசாரவழக்காற் றொழிலென்றுங் கூறினார். ஒற்றென்பது அதிகாரத்தான் வந்தது. இதனால் ஒற்றினது பயன் கூறப்பட்டது. (௨)

௫௮௩. ஒற்றினா னொற்றிப் பொருடெரியா மன்னவன்
கொற்றங் கொளக்கிடந்த தில். ௩.

இ - ள். ஒற்றினான் ஒற்றிப் பொருள் தெரியா மன்னவன் - ஒற்றினானே எல்லார்கண்ணும் நிகழ்ந்தவற்றை ஒற்றுவித்து அவற்றானெய்தும் பயனையாராயாதவரசன்—கொற்றம் கொளக் கிடந்தது இல் - வென்றியடையக்கிடந்தது வேறொருநெறியில்லை. எ - று.

அந்நிகழ்ந்தனவும் பயனும் அறியாது பகைக்கெளியனாதல் பிறிதிற்றீராமையின், கொற்றங்கொளக்கிடந்ததில்லென்றார். இதற்குக் கொளக்கிடந்ததொரு வென்றி யில்லை யென்றுரைப்பினுமமையும். இதனால் அத்தொழில் செய்யாதவழி வருங்குற்றங் கூறப்பட்டது.

(கூ)

ருஅச. வினைசெய்வார் தஞ்சுற்றம் வேண்டாதா ரென்றாங்
கனைவரையு மாராயவ தொற்று. ச.

இ - ள். தம் வினை செய்வார் சுற்றம் வேண்டாதார் என்ற அனைவரையும் ஆராய் வது - தங்காரியஞ் செய்வார், சுற்றத்தார், பகைவரென்று சொல்லப்பட்டஅனைவரை யும் சொற்செயல்களானாராய்வானே—ஒற்று - ஒற்றனாவான். எ - று.

தம்மென்றது அரசனையுளப்படுத்தி. அவனுக்குக் காரியஞ்செய்வார் செய்வனவும், சுற்றத்தார் தன்னிடத்தும் நாட்டிடத்துஞ் செய்வனவும், பகைவர் தன்னற்ற மாராய்தலும் மேற்சேறப்படுதலும் முன் னிடுத் தன்னிடத்துச் செய்வனவுமறிந்து, அவற்றிற்கேற்றன செய்யவேண்டுதலின், இம்மூவகையாரையும் எஞ்சாமலாராய வேண்டுமென்பார், அனைவரையுமாராய்வ தொறறென்றார். (ச)

ருஅரு. கடாஅ வுருவொடு கண்ணஞ்சா தியாண்டு
முகாஅமை வல்லதே யொற்று. ரு.

இ - ள். கடா உருவொடு - ஒற்றப்பட்டார் கண்டால் ஐயுறாதவடிவோடு பொருந்தி—கண் அஞ்சாது - அவர் ஐயுற்றறியலுறிற் செயிர்த்து நோக்கிய அவர்கண் ணிற்கஞ்சாது நின்று—யாண்டும் உகாமை வல்லதே ஒற்று - நான்குபாயமுஞ் செய் தாலும் மனத்துக்கொண்டவற்றை உமிழாமை வல்லவனே ஒற்றனாவான். எ - று.

கடாவென்பது கடுக்குமென்னும் பெயரெச்சத்தெதிர்மறை. ஐயுறாத வடிவாவன பார்ப்பார், வணிகர் முதலாயினா வடிவு.
(ரு)

ருஅசு. துறந்தார் படிவத்த ராகி யிறந்தாராய்

தென்செயினுஞ் சோர்வில தொற்று. கூ.

இ - ள். துறந்தார் படிவத்தர் ஆகி இறந்து ஆராய்ந்து - முற்றத்துறந்தாராயும் விரதவொழுக்கினராயும் உள்புகுதற்கரியவிடங்களெல்லாம் உள்புக்கு ஆராயவேண்டு வன வாராய்ந்தறிந்து—என் செயினும் சோர்வு இலது ஒற்று - ஆண்டையார் ஐயுற்றுப் பிடித்து எல்லாத்துன்பமுஞ்செய்து கேட்டாலும் தன்னை வெளிப்படுத்தாதவனே ஒற் றனுவான். எ - று.

அகல இடம் ஆகி.—இற்றுடன்;

விரதவொழுக்கம் தீர்த்தயாத்திரை முதலாயின. செயினுமென்பது அறிவோர் ரொன்று செய்வாரின்மை விளக்கி நின்றது. மேல் நால்வகையுபாயத்தினுஞ் சோர் வின்மைசொல்லிவைத்து ஈண்டுத் தண்டத்தைப் பிரித்துக்கூறியது அதனது பொறுத் தற்கருமைச்சிறப்பு நோக்கி. இதனுட் படிவமென்றதனை வேடமாக்கித் துறந்தார் வேடத்தாராகியென்றுரைப்பாருமுளர்.
(கூ)

ருஅஎ மறைந்தவை கேட்கவற் றாகி யறிந்தவை
ஐயப்பா டில்லதே யொற்று. எ.

இ - ள். மறைந்தவை கேட்க வற்று ஆகி - ஒற்றப்பட்டார் மறையச்செய்த செயல்களை அவர்க்குள்ளாயினாராற் கேட்க வல்லனாய்—அறிந்தவை ஐயப்பாடு இல் லதே ஒற்று - கேட்டறிந்த செயல்களிற் பின் ஐயப்படாது துணியவல்லவனே ஒற்ற னுவான். எ - று.

மறைந்தவை சொல்லுவாரையறிந்து, அவரயிராமற்சென்றொட்டித் தாமே சொல்லும்வகை அதற்கேற்ற சொல்லாக செயலாக முன்னே விளைத்து, அத்தொடர் பாற்கேட்குகா

லும் உறுதார்போன்றுநின்று கேட்கவேண்டுதலிற் கேட்கவற்றுகி யென்றும், கேட்டறிந்தவறறைத் தானேயையுற்றுவந்து சொல்லின் அரசனுல் அவற் றிறகேற்ற வினை செய்யலாகாமையின் ஐயப்பாடில்லதே யென்றுங்கூறினுர். இவை நான்குபாட்டானும் ஒற்றின இலக்கணம கூறப்பட்டது. (எ)

ருஅஅ. ஒற்றொற்றித் தந்த பொருளையு மற்றுமோ
ரொற்றினு லொற்றிக் கொளல். அ.

இ - ள். ஒறறு ஒற்றித் தந்தபொருளையும் - ஓரொற்றன் ஒற்றிலக்தறிவித்தகாரி யத்தன்னையும்—மற்றும ஓரொற்றினுல் ஒறறிகொளல் - பிறனுெரொற்றனுலும் ஒறறு வித்து ஒப்புமை கண்டுகொள்க. எ - று.

ஒற்றப்பட்டாரோடொத்துநின்று மாறுபடக்கூறலுங் கூடுமாக லின், ஒருவன் மாற்றக தேறப்படாதென்பதாம். (அ)

ருஅக. ஒற்றொற் றுணராமை யாள்க வுடன்மூவர்
சொறறொக்க தேறப் படும். க.

இ - ள். ஒற்று ஒற்று உணராமை ஆள்க - ஒற்றரையாளுமிடத்து ஒருவனையொரு வனறியாமலாளக;—உடன மூவர் சொல் தொக்க தேறப்படும் - அஙஙனமாண்ட வொறறாமூவரை ஒருபொருணமேல் வேறுவேறுவிட்டால் அம்மூவர்சொல்லும்பயனு லொததனவாயின, அது மெய்யென்று தெளியபபடும். எ - று.

ஆயினென்பது வருவிக்கப்பட்டது. ஒருவனையொருவனறியிற் றம்முளியைந்து ஒப்பககூறுவராகலின உணராமையாளகவெனறும, மூவர்கரு கெஞ்சொறறுமைப்படு தலும பட்டால ரீயிற்றலுமகூடாமையிற தேறப்படுமெனறுமகூறினுர். இதனுனே அஃதொத்திலவாயிற பினலுமாராய்கவெனபதாஉம் பெற்றும். (க)

௫௯௰. சிறப்பறிய வொற்றின்கட் செய்யற்க செய்யிற்
புறப்படுத்தா னாகு மறை. ௰.

இ-ள். ஒற்றின்கண் சிறப்பு அறியச் செய்யற்க - மறைந்தவையறிந்து கூறிய ஒற்றின்கட்செய்யுஞ்சிறப்பினை அரசன் பிறரறியச் செய்யாதொழிக;—செய்யின்மறை

## ௬௰ ம் அதி.—ஊக்கமுடைமை.

திரை:

புறப்படுத்தான் ஆகும் - செய்தானாயிற் றன்னகத்தடக்கப்படும் மறையைத் தானே புறத்திட்டானாம். எ-று.

மறையாவது அவனொற்றனையதுஉம், அவன் கூறியதுஉமாம். சிறப்புப்பெற்ற விவன் யாவனென்றும் இது பெறுதற்குக் காரணம் யாதென்றும் வினவுவாரும் இறுப்பாரும் அயலாராகலின், புறப்படுத்தானாகுமென்றார். இவைமூன்றுபாட்டானும் ஒற்றனை யாளுமாறும், அவரானிகழ்ந்தனவறியுமாறும், அறிந்தாற் சிறப்புச் செய்யு மாறுங் கூறப்பட்டன.

(௬௦)

---

## ௬௰ ம் அதி.—ஊக்கமுடைமை.

அஃதாவது மனம் மெலிதலின்றி வினைசெய்தற்கட் கிளர்ச்சியுடைத்தாதல். ஒற்றரான் நிகழ்ந்தனவறிந்து அவற்றிற்கேற்ற வினைசெய்வானுக்கு இஃதின்றியமையாமையின், ஒற்றாடலின்பின் வைக்கப்பட்டது.

௫௯௧. உடைய ரெனப்படுவ தூக்கமஃ தில்லா
ருடைய துடையரோ மற்று. ௧.

இ - ள். உடையர் எனப்படுவது ஊக்கம் - ஒருவரை உடையரென்று சொல்லச் சிறந்தது ஊக்கம்;—அஃது இல்லார் மற்று உடையது உடையரோ - அவ்வூக்கமில்லா தார் வேறுடையதுதானும் உடையராவரோ, ஆகார். எ - று.

வேறுடையதென்றது முன்னெய்தின் ஈ பொருளை. உம்மை விகாரத்தாற்றொக் கது. காக்குமாற்றலிலராகலின், அதுவுமிழப்ப ரென்பதாம். (க)

ருகஉ. உள்ள முடைமை யுடைமை பொருளுடைமை
நில்லாது நீங்கி விடும். உ.

இ - ள். உள்ளம் உடைமை உடைமை - ஊக்கமுடைமையே ஒருவனுக்கு நிலை நின்ற உடைமையாவது;—பொருள் உடைமை நில்லாது நீங்கிவிடும் - மற்றைப் பொருளுடைமை நிலைநில்லாது நீங்கிப்போம். எ - று.

உள்ளம் ஆகுபெயர். ஊக்கம் உள்ளத்துப் பண்பாகலின், அதற்கு நிலைநிற்றலும், பொருள் உடம்பினும் வேறாய் அழிதன்மாலைத்தாகலின் அதற்கு நிலை நில்லாமையுங் கூறினார். கூறவே, அஃது உடைமையன்றென்பது பெறப்பட்டது. (உ)

ருகங. ஆக்க மிழந்தேமென் றல்லாவா ரூக்க
மொருவந்தங் கைத்துடை யார். ௩.

இ - ள். ஆக்கம் இழந்தேம் என்று அல்லாவார் - இழந்தாராயினும் யாம் கைப் பொருளையிழந்தேமென் றலமரார்—ஒருவந்தம் ஊக்கம் கைத்து உடையார் - நிலை பெற்ற ஊக்கத்தைக் கைப்பொருளாக வுடையார். எ - று.

ஆக்கம் ஆகுபெயர். ஒருவந்தமாய வூக்கமென்க. கைத்து கையகத்தாயபொருள்: "கைத்துண்டாம் போழ்தே கரவா தறஞ் செய்ம்மின்*" என்றார் பிறரும். அல்லா

காமைக்கேது வருகின்ற பாட்டாற் கூறுப.

(க)

* மற்றறிவா நல்வினை யாமிளைய மென்னாது—கைத்துண்டாம் போழ்தே கரவா தறஞ்செய்மின்—முற்றி யிருந்த கனியொழியத் தீவளியா—னற்கா யுதிர்தலு முண்டு—நாலடியார், இளமை நிலையாமை.



## சுO ம் அதி.—ஊக்கமுடைமை.

ருகச. ஆக்க மதர்வினாய்ச் செல்லு மசைவிலா
ஊக்க முடையா னுழை. ச.

இ - ள். அசைவு இலா ஊக்கம் உடையானுழை - அசைவில்லாத ஊக்கத்தை யுடையான்மாட்டு—ஆக்கம் அதர் வினாய்ச் செல்லும் - பொருள் தானே வழிவினவிக்கொண்டு செல்லும். எ - று.

அசைவின்மை இடுக்கண் முதலியவற்றாற் றளராமை. வழிவினவிச் சென்று சார் வார்போலத் தானே சென்று சாருமென்பார், அதர்வினாய்ச்செல்லுமென்றார். எய்தி நின்ற பொருளினும் அதற்குக் காரணமாயவூக்கஞ் சிறந்ததென்பது இவை நான்கு பாட்டானுங் கூறப்பட்டது. (ச)

ருகரு. வெள்ளத் தனைய மலர்நீட்ட மாந்தர்தம்
முள்ளத் தனைய துயர்வு. ரு.

இ - ள். வெள்ளத்து அனைய மலர் நீட்டம் - நின்ற நீரினளவினவாம் நீர்ப்பூக் களின்றாளினது நீளங்கள்,—மாந்தர்தம் உள்ளத்து அனையது உயர்வு - அதுபோல் மக்கடம்மூக்கத்தளவினதாம் அவருயர்ச்சி. எ - று.

மலர் ஆகுபெயர். நீர் மிக்க துணையும் மலர்த்தாள் நீளுமென்பது

பட, வென்னத் தனையவென்றார். இவ்வுவமையாற்றலான் ஊக்கமிக்க துணையும் மக்களுயர்வரென்பது பெறப்பட்டது. உயர்தல் பொருள்படைகளான் மிகுதல். (௫)

௫௬௬. உள்ளுவ தெல்லா முயர்வுள்ளன் மற்றது
தள்ளினுந் தள்ளாமை நீர்த்து. ௬.

இ - ள். உள்ளுவது எல்லாம் உயர்வு உள்ளல் - அரசாயினோர் கருதுவதெல் லாம் தம்முயர்ச்சியையே கருதுக;—அது தள்ளினும் தள்ளாமை நீர்த்து - அவ் வுயர்ச்சி பால்வகையாற் கூடிற்றில்லையாயினும், அக்கருத்துத் தள்ளாமை நீர்மை புடைத்து. எ - று.

உம்மை தள்ளாமை பெரும்பான்மையாதல் விளக்கிற்று. தள்ளியவழியுந் தாளாண் மையிற் றவறின்றி நல்லோராற் பழிக்கப்படாமையின், தள்ளாவியற்கைத்தென்பதாம். மேல் உள்ளத்தனையதுயர்வு என்றதனையே வற்புறுத்தியவாறு. (௬)

௫௬௭. சிதைவிடத் தொல்கா ருரவோர் புதையம்பிற்
பட்டுப்பா டூன்றுங் களிறு. எ.

இ - ள். களிறு புதை அம்பின் பட்டுப் பாடு ஊன்றும் - களிறு புதையாகிய அம்பாற் புண்பட்டவிடத்துத் தளராது தன்பெருமை யை நிலைநிறுத்தும்;—உரவோர் சிதைவிடத்து ஒல்கார் - அதுபோல ஊக்கமுடையார் தாங்கருதிய உயர்ச்சிக்குச் சிதைவு வந்தவிடத்துத்தளராது தம்பெருமையை நிலைநிறுத்துவர். எ - று.

புதை அம்புக்கட்டு: பன்மை கூறியவாறு. பட்டாலென்பது பட்டெனத் திரிந்து நின்றது. ஒல்காமை களிற்றுடனும், பாடூன்றுதல் உரவோருடனும், சென்றியைந்தன. தள்ளினுந்தவருதள்ளியது

முடிப்பரென்பதாம். இவை மூன்றுபாட்டானும் ஊக்க முடையாரதுயர்ச்சி கூறப்பட்டது.

(எ) ஊக்கம் அறி.—மடியின்மை. களஞ

இகஅ. உள்ள மிலாதவ ரெய்தா ருலகத்து
வள்ளிய மென்னுஞ் செருக்கு. அ.

இ - ள். உள்ளம் இலாதவர் - ஊக்கமில்லாதவரசர்—உலகத்து வள்ளியம் என் னும் செருக்கு எய்தார் - இவ்வுலகத்தாருள் யாம் வண்மையுடையேமென்று தம்மைத் தா மதித்தலைப் பெறுர். எ - று.

ஊக்கமில்லையாகவே, முயற்சி, பொருள், கொடை, செருக்கு இவைமுறையே இலவாமாகலின், செருக்கெய்தாரென்றார். கொடைவென்றியினுய வின்பம் தமக்கல் லது பிறர்க்குப் புலனுகாமையின் தன்மையாற் கூறப்பட்டது. (அ)

ருகக. பரியது கூர்ங்கோட்ட தாயினும் யானை
வெரூஉம் புலிதாக் குறின். கூ.

இ - ள். பரியது கூர்ங்கோட்டது ஆயினும் - எல்லாவிலங்கினுந் தான் பெருடம் பினது அதுவேயுமன்றிக் கூரிய கோட்டையுமுடையதாயினும்,—யானை புலி தாக்கு றின் வெரூஉம் - யானை தன்னைப் புலியெதிர்ப்படின் அதற்கஞ்சும். எ - று.

பெருடம்பான் வலிமிகுதி கூறப்பட்டது. புலியின்மிக்க மெய்வலியுங் கருவிச் சிறப்புமுடைத்தாயினும் யானை ஊக்கமின்மையான் அஃதுடைய அதற்கஞ்சமென்ற இது, பகைவரின் மிக்க மெய்வலியுங் கருவிச்சிறப்புமுடையராயினும் அரசர் ஊக்க மிலராயின் அஃதுடையவரசர்க்கஞ்சுவரென்பது தோன்றநின்றமையின், பிறிது மொழிதல்.
(கூ)

௬00. உரமொருவற் குள்ள வெறுக்கையஃ தில்லார்
மரமக்க ளாதலே வேறு. ௧0.

இ - ள். ஒருவற்கு உரம் உள்ள வெறுக்கை - ஒருவற்குத் திண்ணியவறிவாவது ஊக்கமிகுதி;—அஃது இல்லார் மரம் - அவ்வூக்கமிகுதியில்லாதார் மக்களாகார், மரங்களாவார்;—மக்களாதலே வேறு - சாதிமரங்களோடு இம்மரங்களிடை வேற்றுமை வடிவு மக்கள்வடிவே; பிறிதில்லை. எ - று.

உரமென்பது அறிவாதல் "உரனென்னுந் தோட்டியான்*" என்பதனானுமறிக. மரமென்பது சாதியொருமை. மக்கட்குள்ள நல்லறிவுங் காரியமுயற்சியுமின்மை பற்றி மரமென்றும், மரத்திற்குள்ள பயன்பாடின்மைபற்றி மக்களாதலே வேறென்றுங் கூறினார். பயன் பழமுதலியவும், தேவர்கோட்டம், இல்லம், தேர், நாவாய் கட்டு உறுப்பாதலும் முதலிய. இவைமூன்றுபாட்டானும் ஊக்கமில்லாதாரதிழிபு கூறப்பட்டது. (௧0)

## ௬௧ம் அதி.—மடியின்மை.

அஃதாவது கருதியன செய்யுங்காற் சோம்புதலில்லாமை. ஊக்கமுடை யார்க்கு ஒரோவழிக் குணவயத்தான் மடி வருதனோக்கி, இஃது ஊக்கமுடைமையின் பின் வைக்கப்பட்டது.

௬0௧. குடியென்னுங் குன்றா விளக்க மடியென்னு
மாசூர மாய்ந்து கெடும். ௧.

* குறள், ௨௪.



இ - ள். குடி என்னும் குன்று விளக்கம் - தான் பிறந்த குடியாகிய

விளக்கு—மடி என்னும் மாசு ஊர மாய்ந்து கெடும் - ஒருவன் மடியாயெ கத்திப்போம். எ - று.
இருளடா

உலகமுள்ளதுணையும் இடையறாது தன்னுட்பிறந்தாரை விளக்குதலிற் குடியைக்குன்றாவிளக்கமென்றும், தாமதகுணத்தான் வருதலின் மடியை மாசென்றும், அஃது ஏனையிருள்போலாது அவ்விளக்கைத் தானடர்ந்து மாய்க்கும் வலியுடைமையின் மாசூரமாய்ந்துகெடுமென்றுங் கூறினார். கெடுதல் பெயர்வழக்குமில்லையாதல். (௧)

௬0௨. மடியை மடியா வொழுகல் குடியைக்
குடியாக வேண்டு பவர். உ.

இ - ள். குடியைக் குடியாக வேண்டுபவர் - தாம் பிறந்த குடியை மேன்மே லுயரும் நற்குடியாக வேண்டுவோர்—மடியை மடியா ஒழுகல் - மடியை மடியாகவே கருதி முயற்சியோடொழுகுக. எ - று.

முயற்சியோடென்பது அவாய்நிலையான் வந்தது. நெருப்பிற் கொடியது பிறிதின்மையிற் நெருப்பை நெருப்பாகவே கருதுகவென்றாற்போல மடியிற்றீயது பிறிதின்மையிற் பின்னும் அப்பெயர் தன்னானே கூறினார். அங்ஙனங்கருதி யதனைக் கடிந்து முயன்றொழுகவே தாமுயர்வர், உயரவே, குடியுயருமென்பார், குடியைக் குடியாக வேண்டுபவரென்றார். அங்ஙனமொழுகாக்காற் குடியழியுமென்பது கருத்து. இனி மடியாவென்பதனை வினையெச்சமாக்கிக் கெடுத்தொழுகுக வென்றுரைப்பாருமுளர்.()

௬0௩. மடிமடிக் கொண்டொழுகும் பேதை பிறந்த
குடிமடியுந் தன்னினு முந்து. ௩.

இ - ள். மடி மடிக்கொண்டு ஒழுகும் பேதை பிறந்த குடி—விடத்தகுவதாய மடியைத் தன்னுள்ளே கொண்டொழுகும் அறிவில்லாதான் பிறந்தகுடி—தன்னினும் முந்து மடியும் - அவன்றன்னினும் முந்துறவழியும். எ - று.

அழிவு தருவதனை அகத்தே கொண்டொழுகுதலிற் பேதையென்றும், அவனாற் புறந்தரப்படுவதாகலிற் குடி தன்னினுமுந்துற அழியுமென்றுங் கூறினர். ஆக்கத்திற் பிற்படினும் அழிவின் முற்படுமென்பதாம். (௩)

௬௦௪. குடிமடிந்து குற்றம் பெருகு மடிமடிந்து
மாண்ட வுஞற்றி லவர்க்கு. ௪.

இ - ள். மடி மடிந்து மாண்ட உஞற்று இலவர்க்கு - மடியின்கண்ணே வீழ்தலாற் சிறந்த முயற்சி இலராயினார்க்கு—குடி மடிந்து குற்றம் பெருகும் - குடியும் மடிந்து குற்றமும் பல்கும். எ - று.

மடிந்தெனத் திரிந்துநின்ற வினையெச்சம் இலவென்னுங் குறிப்புவினைப்பெயர் கொண்டது. குற்றங்கள் முன்னர்க் கூறுப. இவை நான்குபாட்டானும் மடியின் தீமை கூறப்பட்டது. (௪)

௬௦௫. நெடுநீர் மறவி மடிதுயி னான்குங்
கெடுநீரார் காமக் கலன். ௫.

## ௬௧ம். அதி.—மடியின்மை.

கள்ள

இ - ள். மடி நெடுநீர் மறவி துயில் நான்கும் - மடியும் விரைந்துசெய்வதனை நீட்டித்துச்செய்யுமியல்பும் மறப்பும் துயிலுமாகிய இந்நான்கும்—கெடும் நீரார் காமக் கலன் - இறக்குமியல்பினையுடையார் விரும்பியேறும் மரக்கலம். எ - று.

முன்னிற்கற்பாலதாய மடி செய்யுளாகலின் இடை நின்றது. நெடுமையாகிய காலப்பண்பு அதன்கணிகழ்வதாய செயன்மேனின்றது. காலநீட்டத்தையுடைய செயன்முதல் மூன்றும் தாமதகுணத்திதரேன்றி உடனிகழ்வனவாகலின், மடியோடு ஒருங்கெண்ணப்பட்டன. இறக்குமியல்பு நாளுவத்தல். இவை

துன்புறுவோர்க்கு இன் புறத்துவபோன்று காட்டி அவர் விரும்பிக்கொண்டவழித் துன்பத்திடை வீழ்த் தலின், ஈனுலவத்தார்க்கு ஆக்கம் பயப்பதுபோன்றுகாட்டி அவர் விரும்பியேறிய வழிக் கடலிடை வீழ்க்குங் கலத்தினை யொக்குமென்னும் உவமைக்குறிப்புக் காமக்கலனென்னுஞ் சொலலாற பெறப்பட்டது இதற்கு விரும்பிப் பூணுமாபரணமென் றுரைப்பாருமுளர்.
(௬)

௬0௬. படியுடையார் பற்றமைந்தக் கண்ணு மடியுடையார்
மாண்பய னெய்த லரிது. ௬.

இ - ள். படி உடையார் பற்று அமைந்தக்கண்ணும் - நிலமுழுதுமாண்டாரது செல்வம் தானே வந்தெய்தியவிடத்தும்—மடி உடையார் மாண் பயன் எய்தல் அரிது- மடியுடையார் அதனான் மாண்டபயனை எய்துதலில்லை. எ - று.

உம்மை எய்தாமை விளக்கின்றது. மாண்பயன் பேரின்பம். அச்செல்வம் அழி யாமறகாக்கும முயற்சியினமையின் அழியும், அழியவே, தந்துன்பங்காவதன்பதாம்; இதற்கு நிலமுழுதுமுடையவேந்தர் துணையாதல் கூடியவிடத்துமென்றுரைப் பாருமுளர்.
(௬)

௬0௭. இடிபுரிந் தெள்ளுஞ்சொற் கேட்பர் மடிபுரிந்து
மாண்ட வுஞற்றி லவர். ௭.

இ - ள். மடி புரிந்து மாண்ட உஞற்று இலவர் - மடியை விரும்புதலான் மாண்ட முயற்சி யில்லாதார்—இடி புரிந்து எள்ளும் சொற் கேட்பர் - தற்சார்ந்தார் முன் கழறு தலை மிகச்செய்து அதனுறபயன் காணுமையிற் பின் இகழ்ந்து சொல்லுஞ் சொல்லைக் கேட்பர். எ - று.

இடியென்னும் முதனிலைத்தொழிற்பெயரான், சுட்டாரென்பது பெறும். அவரிகழ்ச்சி சொல்லவே, பிறரிகழ்ச்சி சொல்லாமையே

முடிந்தது. அவற்றிற்கெல்லாம் மாறுசொல்லு மாற்றலின்மையின், கேட்பரென்றார். (அ)

கூ0அ. மடிமை குடிமைக்கட் டங்கிற்றன் றொன்னார்க்
கடிமை புகுத்தி விடும். அ.

இ - ள். மடிமை குடிமைக்கண் தங்கின் - மடியினது தன்மை குடிமையுடை யான்கண்ணே தங்குமாயின்,—தன் ஒன்னார்க்கு அடிமை புகுத்திவிடும் - அஃதவனைத் தன் பகைவர்க்கு அடியனார்தன்மையை யடைவித்துவிடும், எ - று.

மடியினதுதன்மை காரியக்கேடு. குடிமை குடிசெய்தற்றன்மை அஃது அதனை யுடையவரசன்மேலேறுதல், தன்னொன்னார்க்கென்றதனான் அறிக. அடியனார்தன்மை தாழ்ந்தின்றேவல்கேட்டல். இவை பட்டன.

நான்குபாட்டானும் மடிமைக்குற்றங்கள் கூறப் க்ள் ஆ் க்உ ம்
(அ)

## அகூ.—ஆள்வினையுடைமை.

கூ0கூ. குடியாண்மை யுள்வந்த குற்ற மொருவன்
மடியாண்மை மாற்றக் கெடும். கூ.

இ - ள். ஒருவன் மடி ஆண்மை மாற்ற - ஒருவன் தன்மடியாளுந் தன்மையை யொழிக்கவே,—குடி ஆண்மையுள் வந்த குற்றம் கெடும் - அவன் குடியுள்ளும் ஆண் மையுள்ளும் வந்த குற்றங்கள் கெடும். எ - று.

மடியாளுந்தன்மை மடியு டைமைக்கேதுவாய தாமதகுணம். குடியாண்மை யென்பது உம்மைத்தொகை. அவற்றின்கண் வந்தகுற்றமென்றது மடியானன்றி முன்னே பிறகாரணங்களான் நிகழ்ந்தவற்றை. அவையும் மடியாண்மையை யமாற்றி

முயற்சியுடையனுக நீங்குமென்பதாம்.
(க)

சுகா. மடியிலா மன்னவ னெய்து மடியளந்தான்
றாஅய தெல்லா மொருங்கு. க0.

இ - ள். அடி அளந்தான் தாயது எல்லாம் - தன்னடியனவானே எல்லாவுலகையு மளந்த இறைவன் கடந்த பரப்புமுழுதையும்—மடி இலா மன்னவன் ஒருங்கு எய் தும் - மடியிலாதவரசன் முறையானன்றி ஒருங்கேயெய்தும். எ - று.

அடியளந்தானென்றது வாளா பெயராய் நின்றது. தாவியதென்பது இடைக் குறைந்து நின்றது. எப்பொழுதும் வினையின்கண்ணே முயறலின், இடையீடின்றி யெய்துமென்பதாம். இவையிரண்பொட்டானும் மடியிலாதான் எய்தும்பயன் கூறப் பட்டது. (க0)

---

## சுஉ ம் அதி.—ஆள்வினையுடைமை.

அஃதாவது இடைவிடாத மெய்ம்முயற்சியுடையனுதல். அஃது ஆளும் வினை யெனக் காரியத்தாற் கூறப்பட்டது. மடிகெடுத்தாலும் வினைமுயறசியானன்றியானப் படாமையின், இது மடியின்மையின் பின் வைக்கப்பட்டது.

சுகக. அருமை யுடைத்தென் றசாவாமை வேண்டும்
பெருமை முயற்சி தரும். க.

இ - ள். அருமை உடைத்து என்று அசாவாமை வேண்டும் - தஞ்சிறுமை நோக்கி யாமிவ்வினைமுடித்தலருமையுடைத்தென்று கருதித் தளராதொழிக,—பெருமை முயற்சி தரும் - அது முடித்தற்கேற்ற பெருமையைத் தமக்கு முயற்சியுண்டாக் கும். எ- று.

சிறுமைநோக்கி யென்பது பெருமை தருமென்றதனானும்,

வினைமுடித்தலென் பது அதிகாரத்தானும், வருவிக்கப்பட்டன. விடாதுமுயலத் தாம் பெரியராவர், ஆகவே, அரியனவும் எளிதின் முடியுமென்பதாம். (௧)

௬௧௨. வினைக்கண் வினைகெட லோம்பல் வினைக்குறை
தீர்ந்தாரிற் றீர்ந்தன் றுலகு. ௨.

இ - ள். வினைக்குறை தீர்ந்தாரின் உலகு தீர்ந்தன்று - வினையாகிய

குறையைச்
செய்யாது விட்டாரை உலகம் விட்டது;—வினைக்கண் வினைகெடல்
லால், செய்யப்படும் வினைக்கட்டவிர்த்திருத்தலை யொழிக. எ - று.

ஓம்பல் - ஆத

## ௬௨ ம் அதி.—ஆள்வினையுடைமை.

கள்கீ

குறை இன்றியமையாப்பொருள். அது "பயக்குறை யில்லைதாம் வாழுநாளே*" என்பதனானுமறிக. இதற்கு வினைசெய்யவேண்டுங் குறையை நீங்கினரினீங்கிற் றென் றுரைப்பாருமுளர்.
(௨)

௬௧௩. தாளாண்மை யென்னுந் தகைமைக்கட் டங்கிற்றே
வேளாண்மை யென்னுஞ் செருக்கு. ௩.

இ - ள். தாளாண்மை என்னும் தகைமைக்கண் தங்கிற்று - முயற்சியென்று சொல்லப்படுகின்ற உயர்ந்த குணத்தின்க ண்ணே நிலைபெற்றது—வேளாணமை என் னும் செருக்கு - எல்லார்க்கு முபகாரஞ்செய்தலென்னும் மேம்பாடு. எ - று.

பொருள்கைகூடுதலான் உபகரித்தற்குரியார்

முயற்சியுடையாரென்பார் அவலக் குணங்கண்மேல் வைத்தும், அது பிறாமாட்டிலலேயெனபார் தவிற்றலேயெனறுங் கூறினர். இவை மூன்றுபாட்டாலும முயற்சியது சிறப்புக் கூறப்பட்டது. (அ)

**கூகச. தாளாண்மை யிலலாதான் வேளாண்மை பேடிகை**
**வாளாணமை போலக கெடும. ச.**

இ - ள். தாளாண்மை இல்லாதான் வேளாண்மை - முயற்சி இல்லாதவன் உபகாரியாந்தன்மை—பேடி கை வாள் ஆண்மை போலக் கெடும - படைகண்டாலஞ்சும் பேடி அதனிடைத் தன்கையில் வாளை ஆளுந்தறறனமைபோல இலலையாம். எ - று.

ஆளென்பது முதனிலைத்தொழிற்பெயர். பேடி வாளைப்பணி கோடற்கருத் துடையளாயினும் அது தன்னச்சத்தான் முடியாத வாறுபோல முயற்சியில்லாதான் பலர்க்குமுபகாரித்தற்கருத்துடையனாயினும் அது தன் வறுமையான முடியாதென்ப தாம். வாளாண்மையென்பதற்கு வாளாற்செய்யுமாண்மையென்றுரைப்பாருமுளர். இதனான் அஃதிலலாதானது குற்றங் கூறப்பட்டது. (ச)

**கூரு. இன்பம் விழையான் வினைவிழைவான் றன்கேளிர்**
**துன்பந் துடைத்தூன்றுந் தூண். ரு.**

இ - ள். இன்பம் விழையான் வினை விழைவான் - தனக்கின்பத்தை விரும்பானாய் வினைமுடித்தலையே விரும்புவான்—தன்கேளிர் துன்பந் துடைத்து ஊன்றும் தூண் - தன்கேளிராகிய பாரத்தினைத் துன்பத்தனை நீக்கி அதனைத் தாங்குந் தூணாம். எ - று.

இஃதேகதேசவுருவகம். ஊன்றுமென்றது அப்பொருட்டாதல் "மதலையாய் மற்றதன் வீழூன்றி யாங்கு†" என்பதனானுமறிக. சுற்றத்தார் கட்டாரது வறுமையுந் தீர்த்து அவரைப் பேக மஞ்செய்யு மாற்றலையுடையனும் மனவே,

தன்னைக்கூறல் வேண்டாவாயிற்று. காரியத்தை விழையாது காரணத்தை விழைவான் எல்லாப்பயனும் எய்துமென்றதனால், காரணத்தை விழையாது காரியத்தை விழைவான் யாதுமெய்தானென்பது பெறலும். இதனால் அஃதுடையானது நன்மை கூறப்பட்டது. (௫)

௬௧௬. முயற்சி திருவினை யாக்கு முயற்றின்மை
　　　யின்மை புகுத்தி விடும். ௬.

---

* புறநானூறு, ௩௫-ம் குறளில் மேலெடுத்துக் காட்டினும்.
† சினைபட்ட வால மரத்தை—மதலையாய் மற்றதன் வீழூன்றி
யாங்குக்—குதலைமை
தந்தைகட் டோன்றிற்றான் பெற்ற—புதல்வன் மறைப்பக் கெடும்—நாலடியார்,
தாளாண்மை, [illegible]
ம். ஆள்வினையுடைமை.

இ - ள். முயற்சி திருவினை ஆக்கும் - அரசர்மாட்டுளதாய முயற்சி அவரது செல்வத்தினை வளர்க்கும்;—முயற்று இன்மை இன்மை புகுத்திவிடும் - அஃதில்லாமை வறுமையை யடைவித்துவிடும். எ - று.

செல்வம் அறுவகையங்கங்கள். வறுமை அவற்றின் வறியராதல். அதனை யடைவிக்கவே, பகைவரானழிவரென்பது கருத்து. (௬)

௬௧௭. மடியுளாண் மாமுகடி யென்ப மடியிலான்
　　　றாளுளா டாமரையி னாள். ௭.

இ - ள். மா முகடி மடி உளாள் - கரியசேட்டை ஒருவன் மடியின்கண்ணே யுறையும்;—தாமரையினாள் மடி இலான் தாள் உளாள் என்ப - திருமகள் மடியிலாதானது முயற்சிக்கண்ணே யுறையுமென்று

சொல்லுவர் அறிந்தோர். எ- று.

பாவத்தின் கருமை அதன்பயனாய முகடிமேலேற்றப்பட்டது. மடியும் முயற்சியு முடையார்மாட்டு இலவை அவை தமமேலவைத்துக் கூறினர். இவையிரண்டோட்டா னும அவ்விருமைக்குமேறு கூறப்பட்டது. (எ)

கூஅ. பொறியின்மை யார்க்கும் பழியன் றறிவறிந்
தாள்வினை யின்மை பழி. அ.

இ - ள். பொறி இன்மை யார்க்கும் பழியன்று - பயனைத்தருவதாய விதியில் லாமை ஒருவற்கும் பழியாகாது;—அறிவு அறிந்து ஆள்வினை இன்மை பழி - அறிய வேண்டியவற்றையறிந்து வினைசெய்யாமையே பழியாவது. எ - று.

அறியவேண்டுவன வலி முதலாயின. தெய்வமிலையாவழி ஆள்வினையுடைமை யாற் பயனில்லையென்பாரை நோக்கி, உலகம் பழவினைபற்றிப் பழியாது ஈண்டைக் குறறமுடைமைபற்றியே பழிப்பதென்றார். அதனால் விடாது முயலகவென்பது குறிப் பெசசம். (அ)

கூக. தெய்வத்தா னாகா தெனினு முயற்சிதன்
மெய்வருத்தக் கூலி தரும். கூ.

இ - ள். தெய்வததான் ஆகாது எனினும்-முயன்ற வினை பால்வகையாற் கருதிய பயனைத் தாராதாயினும்,—முயற் சி தன்மெய் வருத்தக் கூலி தரும் - முயற்சி தனக் கேடமாய உடம்பு வருநதிய வருத்தத்தின் கூலியளவு தரும், பாழாகாது. எ - று.

தெய்வத்தானாயவழித் தன்னளவின் மிக்க பயனைத்தருமென்பது உம்மையாற் பெற்றாம். இருவழியும பாழாகலின்மையின் தெய்வநோக்கியிராது முயல்கவென்பது கருத்து. (கூ)

கஉ0. ஊழையு முப்பக்கங் காண்ப ருலைவின்றித்

தாழா துஞற்று பவர். ௰.

இ - ள். ஊழையும் உப்பக்கம் காண்பர் - பயனை விலக்குவதாய ஊழினையும் புறங்காண்பர்—உலைவு இன்றித் தாழாது உஞற்றுபவர் - அவ்விலக்கிற் கிளையாது வினையைத் தாழ்வற முயல்வார். எ - று.

தாழ்வறுதல் சூழ்ச்சியினும், வலிமுதலியவறிதலினும், செயலினுங் குற்றமறுதல். ஊழ் ஒருகாலாக இருகாலாகவல்லது விலக்கலாகாமையிற் பலகால் முயல்வார் பய

௬௩-ம் அதி.—இடுக்கணழியாமை.

[illegible]

னெய்துவ ரென்பார், உப்பக்கங்காண்பரென்றார். தெய்வத்தா
னிடுக்கண்வரினும் முயற்சி விடற்பாலதன்றென்பது இவை
மூன்றுபாட்டானுங் கூறப்பட்டது. (௨௦)

---

## ௬௩-ம் அதி.—இடுக்கணழியாமை.

அஃதாவது வினையின்கண் முயல்வான் தெய்வத்தானாக, பொருளின்மையானாக, மெய்வருத்தத்தானாகத் தனக்கிடுக்கண் வந்தவழி, அதற்கு மனங்கலங்காமை. அதிகாரமுறைமையும் இதனானே விளங்கும்.

௬௨௧. இடுக்கண் வருங்கா னகுக வதனை
யடுத்தூர்வ தஃதொப்ப தில். ௧.

இ - ள். இடுக்கண் வருங்கால் நகுக - ஒருவன் வினையாற்றனக்கிடுக்கண் வருமிடத்து அதற்கழியாது உண்மகிழ்க;—அதனை அடுத்து ஊர்வது அஃது ஒப்பது இல் - அவ்விடுக்கணை மேன்மேலடரவல்லது அம்மகிழ்ச்சிபோல்வது

பிறிதில்லையாக லான். எ - று.

வினை இனிது முடிந்தழி நிகழற்பாலதாய மகிழ்ச்சியை அதற்கிடையே இடுக்கண் வருவழிச் செய்யவே, அவன் அழிவின்றி மனவெழுச்சியான் அதனைத்தள்ளி அக் குறை முடிக்குமாற்றலுடையனுமாகலின், அதனையடுத்தூர்வதஃதொப்பதில்லென்றார்.

கஉஉ. வெள்ளத் தனைய விடும்பை யறிவுடையா
னுள்ளத்தி னுள்ளக் கெடும். உ.

இ - ள். வெள்ளத்து அனைய இடும்பை - வெள்ளம்போலக் கரையிலவாய இடும் பைகளெல்லாம்,—அறிவுடையான் உள்ளத்தின் உள்ளக் கெடும் - அறிவுடையவன் தன்னுள்ளத்தான் ஒன்றனை நினைக்க, அத்துணையானே கெடும். எ - று.

இடும்பையாவது உள்ளத்து ஒரு கோட்பாடேயன்றிப் பிறிதில்லையென்பதூஉம் அது மாறுபடக்கொள்ள நீங்குமென்பதூஉம் அறிதல்வேண்டுதலின், அறிவுடையா னென்றும், அவ்வுபாயத்தெண்மை தோன்ற உள்ளத்திலுள்ளவென்றுங் கூறினார். இவையிரண்டுபாட்டானும் வழிநுைய இடுக்கணால் அழியாமைக்கு உபாயங் கூறப் பட்டது.
(உ)

கஉக. இடும்பைக் கிடும்பை படுப்ப ரிடும்பைக்
கிடும்பை படாஅ தவர். க.

இ - ள். இடும்பைக்கு இடும்பை படாதவர் - வினைசெய்யுங்கால் அதற்கிடையே வந்த துன்பத்திற்கு வருந்தாதவர்—இடும்பைக்கு இடும்பை படுப்பர் - அத்துன்பந் தனக்குத் தாந்துன்பம் விளைப்பர். எ - று.

வருந்துதல் இளைத்து விடநினைத்தல்.
லவே வினை முற்றுப்பெற்றுப் பயன்படும்,

மனத்திட்பமுடையராய் விடாது முய
படவே, எல்லாவிடும்பையுமிலவாமாக

வின், இடும்பைக்கிடும்பை படுப்பரென்றார்.
வாறே கொள்க. சொற்பொருட்பின்வருநிலை.

வருகின்றபாட்டிரண்டிலும் இதற்கிவ்
(௪)

௬௨௪. மடுத்தவா யெல்லாம் பகடன்ன துற்ற
விடுக்க ணிடர்ப்பா டுடைத்து. ௪.

க்ஷுஉ ௬௨ ம் அதி.—இடுக்கணழியாமை.

இ - ள். மடுத்த வாய் எல்லாம் பகடு அன்னான் - விலங்கு வெள்ளிடங்களெல்லா வற்றிலுஞ் சகடமீர்க்கும் பகடுபோல வினையை யெடுத்துக்கொண்டு உய்க்கவல்லானை—உற்ற இடுக்கண் இடர்ப்பாடு உடைத்து-வந்துற்ற இடுக்கண் தானே இடர்ப்படுதலையுடைத்து. எ - று.

மடுத்தவாயெல்லாமென்பது பொதுப்பட நின்றமையின், சகடத்திற்கு அளற்று நிலமுதலியவாகவும், வினைக்கு இடையூறுகளாகவுங் கொள்க. பகடு மருங்கொற்றியும் மூக்கூன்றியும் தாடவழ்ந்தும் * அரிதினுய்க்குமாறுபோலத் தன்மெய்வருத்தம் நோக்காது முயன்றுய்ப்பானென்பார், பகடன்னனென்றார்.
(௪)

௬௨௫. அடுக்கி வரினு மழிவிலா னுற்ற
விடுக்க ணிடுக்கட் படும். ௫.

இ - ள். அடுக்கி வரினும் - இடைவிடாது மேன்மேல் வந்தனவாயினும்,—அழிவிலான் உற்ற இடுக்கண் இடுக்கட்படும் -

தன்னுள்ளக்கோட்பாடு விடாதான் உற்ற விடுக்கண்டாம் இடுக்கணிலே பட்டுப்போம். எ - று.

ஒன்றே பலகால் வருதலும் வேறுபட்டன விராய்வருதலுமடங்க, அடுக்கெவினு மென்றார். அழிவென்னுங்காரணப்பெயர் காரியத்தின்மேனின்றது. இவை மூன்று பாட்டானும் தெய்வத்தானுயதற்கழியாமை கூறப்பட்டது. (௬)

௬௨௬. அற்றேமென் றல்லற் படுபவோ பெற்றேமென்
றோம்புத றேற்றா தவர். ௬.

இ - ள். அற்றேம் என்று அல்லற்படுபவோ - வறுமைக்காலத்து யாம் வறிய மாயினேமென்று மனத்தாற் றுயருழப்பரோ—பெற்றேம் என்று ஓம்புதல் தேற்றா தவர் - செல்வக்காலத்து இது பெற்றேமென்று இவறுதலையறியாதார். எ - று.

பெற்றவழி இவறுமை நோக்கி அற்றவழியும் அப்பகுதி விடாதாகலின், அல்லற் பாடில்லையாயிற்று. இதனுற் பொருளின்மையானு யதற்கு அழியாமையும் அதற்கு பாயமுங் கூறப்பட்டன.

(௬)

௬௨௭. இலக்க முடம்பிடும்பைக் கென்று கலக்கத்தைக்
கையாறாக் கொள்ளாதா மேல். எ.

இ - ள். உடம்பு, இடும்பைக்கு இலக்கம் என்று - காற்கதியினுமுள்ள வுடம்புகள் இடும்பையென்னும் வாளுக்கிலக்கென்று தெளிந்து,—கலக்கத்தைக்கையாறாக்கொள் ளாதாம் மேல் - தம்மேல் வந்த இடும்பையை இடும்பையாகக் கொள்ளார் அறிவுடை யார். எ - று.

ஏகதேசவுருவகம். உடம்பு சாதிப்பெயர். கலக்கமென்னுங் காரியப்பெயர் கார ணத்தின்மேனின் றது. கையாறென்பது

ஒருசொல்; இதற்கு ஒழுக்கநெறியென் றுரைப்பாருமுளர். இயல்பாகக் கொள்வரென்பது குறிப்பெச்சம். (எ)

கூஉஅ. இன்பம் விழையா னிடும்பை யியல்பென்பான்
துன்ப முறுத லிலன். அ.

---

* வேதசிந்தாமணி, முத்திபிலம்பகம், கஅக.

## ௬௩ ம் அதி—[illegible].

கூஅ.

இ - ள். இன்பம் விழையான் இடும்பை இயல்பு என்பான் - தன்னுடம்பிற்கு இன்பமாயவற்றை விரும்பாதே வினையாலிடும்பை பெய்துதல் இயல்பென்று தெளிந்திருப்பான்—துன்பம் உறுதல் இலன் - தம்முயற்சியாற் றுன்பமுறுன். எ - று.

இன்பத்தை விழையினும், இடும்பையை யியல்பென்னாது காக்கக்கருதினும், துன் பம் விளைதலின், இவ்விரண்டுஞ் செய்யாதானைத் துன்பமுறுதலிலனென்றார். (அ)

கூஉகூ இன்பத்து ளின்பம் விழையாதான் றுன்பத்துட்
டுன்ப முறுத லிலன். கூ.

இ - ள். இன்பத்துள் இன்பம் விழையாதான் - வினையாற்றனக்கின்பம் வந்துழி அதனை யனுபவியாநின்றே மனத்தான் விரும்பாதான்—துன்பத்துள் துன்பம் உறுதல் இலன் - துன்பம் வந்துழியும் அதனை யனுபவியாநின்றே மனத்தான் வருந்தான். எ - று.

துன்பம் முயற்சியான் வருமிடிக் கண். இரண்டையும் ஒருதன்மையாகக் கோட லின், பயன்களுமிலவாயின. (கூ)

௩௯.௦. இன்னாமை யின்ப மெனக்கொளி னாகுந்தன்
னொன்னார் விழையுஞ் சிறப்பு. ௪௦.

இ - ள். இன்னாமை இன்பம் எனக் கொளின் - ஒருவன் வினை செய்யுமிடத்து முயற்சியான் வருந்துன்பந்தன்னையே தனக்கின்பமாகக் கற்பித்துக்கொள்வனாயின்,— தன் ஒன்னார் விழையும் சிறப்பு ஆகும் - அதனாற் றன்பகைவர் நன்குமதித்தற்கேது வாய வுயர்ச்சியுண்டாம். எ - று.

துன்பந்தானும் உயிர்க்கியல்பன்றிக் கணிகமாய் மனத்திடை நிகழ்வதோர் கோட்பாடாகலின், அதனை மாறுபடக்கொள்ளவே, அதற்கழிவின்றி மனமகிழ்ச்சி யுடையனும் அதனாற் றொடங்கியவினை முடித்தேவிமொற்றலுடையனுமென்பது கருத்து. இவை நான்குபாட்டானும் மெய்வருத்தத்தானயதற்கு அழியாமையும் அதற்குபாயமுங் கூறப்பட்டன.
(௪௦)

அரசியல் முற்றிற்று.

# அங்கவியல்.

இனி முறையானே அரசியனடாத்துதற்கண் ஒன்றற்கொன்று துணையாய அங்கங்களாற்றலியல்பு முப்பத்திரண்டதிகாரத்தாற் கூறுவானெடுத்துக்கொண்டு,அவை யாறனுள்ளும் "காவற் சாகாடு கைத்தற்*" என் அவ்வாசற்கினையாய அமைச்சனியல்பு பத்ததிகாரத்தாற் கூறுவான்றொடங்கி, முதற்கண் அமைச்சுக் கூறுகின்றார்.

## ௬௪ம் அதி.—அமைச்சு.

அஃதாவது அமைச்சனது தன்மை: என்றது அவன்றன் குணங்களையுஞ் செயல்களையும்.

---

* புறநானூறு, ௧௮௫.

௬௩௧. கருவியுங் காலமுஞ் செய்கையுஞ் செய்யு
மருவினையு மாண்ட தமைச்சு.

இ - ள். கருவியும் - வினைசெய்யுங்கால் அதற்கு வேண்டிய கருவிகளும்—காலமும் - அதற்கேற்றகாலமும்—செய்கையும் - அது செய்யுமாறும் செய்யும் அருவினையும் - அவ்வாற்றிற்செய்யப்படும் அவ்வரிய வினைதானும்—மாண்டது அமைச்சு - வாய்ப்ப வெண்ண வல்லவனே அமைச்சனாவான். எ - று.

கருவிகள் தானையும் பொருளும். காலம் அது தொடங்குங்காலம். செய்கை யெனவே, அது தொடங்குமுபாயமும், இடையூறுநீக்கி முடிவுபோக்குமாறும் அடங்கின. சிறிய முயற்சியாற் பெரிய பயன்றருவதென்பார், அருவினையென்றார். இவை யைந்தனையும் வடநூலார் மந்திரத்திற்கங்கமென்ப. (௧)

௬௩௨. வன்கண் குடிகாத்தல் கற்றறித லாள்வினையோ
டைந்துடன் மாண்ட தமைச்சு. ௨

இ - ள். வன்கண் - வினைசெய்தற்கண் அசைவின்மையும்—குடிகாத்தல் - குடிகளைக் காத்தலும்—கற்று அறிதல் - நீதிநூல்களைக் கற்றுச் செய்வன தவிர்வனவறிதலும்—ஆள்வினை - முயற்சியும்—ஐந்துடன் மாண்டது அமைச்சு - மேற்சொல்லிய அவ்வங்கங்களைந்துடனே திருந்தவுடையானே அமைச்சனாவான். எ - று.

எண்ணொடு தொக்கது. அவ்வைந்தெனச் சுட்டு வருவிக்க. இந்நான்கனையும் மேற் கூறியவற்றோடு தொகுத்துக் கூறியது, அவையு மிவற்றோடு கூடியே மாட்சிமைப்பட வேண்டுதலானும், அவற்றிற்கு ஐந்தென்னுந்தொகை பெறுதற்கும். இனி இதனை யெண்ணிய வற்றிற்கே தொகையாக்கிக் குடிகாத்தலென்பதனைக் குடிப்பிறப்பும் அதனையொழுக்கத்தாற் காத்தலுமெனப் பகுப்பாரும், கற்றறிதலென்பதனைக் கற்றலும் அறிதலுமெனப் பகுப்பாருமுளர். அவர்

உடனென்பதனை முற்றும்மைப்பொருட் டாக்கியும், குடியென்பதனை ஆகுபெயராக்கியும் இடர்ப்படுப. (உ)

கஉக. பிரித்தலும் பேணிக் கொளலும் பிரிந்தார்ப்
பொருத்தலும் வல்ல தமைச்சு. க.

இ - ள். பிரித்தலும் - வினை வந்தழிப் பகைவர்க்குத் துணையாயினாரை அவரிற் பிரிக்கவேண்டிற் பிரித்தலும்—பேணிக்கொளலும் - தம்பாலாரை அவர்பிரியாமற் கொடை இன்சொற்களாற் பேணிக்கொள்ளுதலும்—பிரிந்தார்ப் பொருத்தலும் - முன்னே தம்மினர் தம்பாலாரினும் பிரிந்தாரை மீண்டும் பொருத்தவேண்டிற் பொருத்தலும்—வல்லது அமைச்சு - வல்லவனே அமைச்சனுவான். எ - று.

இவற்றுள் அப்பொழுதை நிலைக்கேற்ற செயலறிதலும் அதனை அவரறியாமல் ஏற்றவுபாயத்தாற் கடைப்பிடித்தலும் அரியவாதனோக்கி, வல்லதென்றார். வடநூலார் இவற்றுட் பொருத்தலைச் சந்தியென்றும், பிரித்தலை விக்கிரகமென்றுங் கூறுப. (க)

கஉச. தெரிதலுந் தேர்ந்து செயலு மொருதலையாச்
சொல்லலும் வல்ல தமைச்சு. ச.

இ - ள். தெரிதலும் - ஒருகாரியச்செய்கை பலவாற்றுற் றோன்றின் அவ [illegible] ஆவதாராய்ந்தறிதலும் —தேர்ந்து செயலும் - அதுசெய்யுங்கால் வாய்க்குந்திறனு[illegible] செய்தலும்—ஒருதலையாச்சொல்லலும் - சிலரைப் பிரித்தல் பொருத்தல்செய[illegible]

[illegible] ம் அதி—அமைச்சு.

அவர்க்கு இதுவே செயற்பாலதென்று துணிவுபிறக்குமவகை சொல்லுதலும்—வல்லது அமைச்சு - வல்லவனே அமைச்சனுவான். எ - று.

தெரிதல் செயன்மேலதாயிற்று, வருகின்றது அதுவாகலின். (௪)

கூகூ௫. அறனறிந் தான்றமைந்த சொல்லானெஞ் ஞான்றுந்
திறனறிந்தான் றேர்ச்சித் துணை. ௫.

இ - ள். அறன் அறிந்து ஆன்று அமைந்த சொல்லான் - அரசனாற் செய்யப்படும் அறங்களையறிந்து தனக்கேற்ற கல்வியானிறைந்தமைந்த சொல்லையுடையனாய்—எஞ்ஞான்றும் திறன் அறிந்தான் - எக்காலத்தும் வினை செய்யுந்திறங்களையறிந்தான்— தேர்ச்சித் துணை - அவற்குச் சூழ்ச்சித்துணையாம். எ - று.

தன னர்சன சுருஙகயகாலததும் பெருகியகாலததும் இடைநிகராயகாலத்து மமல பார், ம ருரு ல ழயயனரா. சொல்லா ல னனபதன நூலவுருபின்பொருட்டாய ஆயருபா கவுயபபாருமுனரா. இவை யைந்துபாடடாலும அமைச்சரது குணத் தன மை கூறபபடடது. (௫)

கூகூ௬. மதிநுட்ப நூலோ டுடையார்க் கதிநுட்பம்
யாவுள முன்னிற் பவை. ௬.

இ - ள். மதிநுட்பம் நூலோடு உடையார்க்கு - இயற்கையாகிய நுண்ணறிவைச் செயற்கையாகிய நூலறிவோடு உடையராய அமைச்சர்க்கு—அதிநுட்பம் முன் நிற்பவை யா உள - மிக நுட்பத்தையுடைய சூழ்ச்சிகளாய முன்னிற்பன யாவையுள! எ - று.

மதிநுட்பமெனபது யினமொழிநிலையல். அது தெய்வந்தரவேண்டுதலின் முற் கூறப்பட்டது. [illegible]

அமைச்சனுக்கு முறைமை. எ - று.

அறியென்பது முதனிலைத்தொழிற்பெயர். கோறல் தான்செய்யாமை மேலும் இகழ்ந்தகூறுதல். உழையிருந்தானெனப்பெயர்கொடுத்தார், அமாத்தியரென்னும் வடமொழிப்பெயர்க்கும் பொருண்மை அதுவாகலின். கூறுதி கூறுக்கால் அவனதிறு இயெய்தற்குற்றத்தை உலகந் தன்மேலேற்றுமென்பார், கூறல்கடனென்றார். இவையி ரண்டுபாட்டானும் அவர்செயல் கூறப்பட்டது.
(அ)

௬௩௯. பழுதெண்ணு மந்திரியிற் பக்கத்துட் டெவ்வோ
ரெழுபது கோடி யுறும். ௯.

இ - ள். பக்கத்துள் பழுது எண்ணும் மந்திரியின் - பக்கத்திருந்து பிழைப்ப வெண்ணும் அமைச்சனொருவனில்—ஓரெழுபதுகோடி தெவ் உறும்-அரசனுக்குஎதிர் நிற்பார் ஓரெழுபதுகோடி பகைவருறுவர். எ - று.

எழுபது கோடியென்றது மிகப்பலவாய வெண்ணிற்கொன்று காட்டியவாறு. வெளிப்படநிற்றலான் அவர் காக்கப்படுவர், இவன் உட்பகையாய் நிற்றலாற் காக்கப் படானென்பதுபற்றி, இவவாறுகூறினர். எழுபதுகோடிமடங்கு நல்லரென்றுரைப் பாரும், எழுபதுகூறு நலியென்று பாடமோதுவாருமுளர்.
(௯)

௬௪௦. முறைப்படச் சூழ்ந்து முடிவிலவே செய்வர்
திறப்பா டிலாஅ தவர். ௰.

இ - ள். முறைப்படச் சூழ்ந்தும் முடிவிலவே செய்வர் - செய்யப்படும் வினை களை முன் அடைவுபடவெண்ணிவைத்தும், செய்யுங்கால் அவை முடிவிலவாகவே செய்யாநிற்பர்—திறப்பாடு இலாதவர் - முடித்தற்கேற்ற கூறுபாடில்லாதார். எ - று.

அக்கூறுபாடாவன வந்த வந்த விடையூறுகட்கு ஏற்றவேற்ற பரிகா ரமறிந்து செய்தலும், தாக்ஷிண்ணியராதலுமாம். பிழையாமலெண்ண வல்லராய்வைத்தும் செய் தமுடிக் கமாட்டாருமுளரென்பதாம். இவைவிசேஷ்போட்டாலும் அமைச்சருள் விடப் படுவோரது குற்றங் கூறப்பட்டது. (௪0)

---

## ௬ம் அதி.—சொல்வன்மை.

அஃதாவது தான் கருதிய வினை முடியுமாற்றால் அமைச்சிய னடத்தற்கேது வாய சொற்களைச் சொல்ல வல்லனுதல். மேல் "ஒருதலையாச் சொல்லலும் வல்லர்" தென்றதனையே சிறப்புப்பற்றி விரித்துரைக்கின்றமையின், இஃது அமைச்சின் பின் வைக்கப்பட்டது.

௬௪௧. நாநல மென்னு நலனுடைமை யந்நலம்
யாநலத் துள்ளதூஉ மன்று. ௧.

இ - ள். நாநலம் என்னும் நலன் உடைமை - அமைச்சர்க்கு இன்றியமையாத குணமாவது சான்றோரான் நாநலமென்று சிறப்பித்துச் சொல்லப்படும் நலத்[illegible]

---

* அமாத்தியரென்பதனுள் அமா என்பதற்குப்பொருள் அண்மை.

† நிருக்குறள், ௬௩௪.

## ௬௫ ம் அதி.—சொல்வன்மை.

[illegible]

புடையராதல்,—அந்நலம் யாநலத்து உள்ளதூஉம் அன்று - அந்நலம்

பிறர்க்கும் பிற நலமெல்லாவற்றினும் அடங்குவதன்றி மிக்கதாகலான். எ - று.

நாவானுளதாய நலமென விரியும். இந்நலம் உலகத்தைத் தம்வயத்ததாக்கும் அமைச்சர்க்கு வேறாகவேண்டுமென்னும் நீதிநூல் வழக்குப்பற்றி நாநலமென்னுநல னென்றும், பிறர்க்கும் இதுபோற்சிறந்தது பிறிதின்மையான் அந்நலம் யாநலத்துள்ள தூஉமன்றென்றுங் கூறினார். பிரித்தல் பொருத்தல் முதலிய தொழிலில்லாதார்க்கும் இஃதின்றியமையாதாயபின் அத்தொழிலார்க்குக் கூறவேண்டுமோவென்பது கருத்து.

௬௪௨. ஆக்கமுங் கேடு மதனால் வருதலாற்
காத்தோம்பல் சொல்லின்கட் சோர்வு. ௨.

இ - ள்: ஆக்கமுங் கேடும் அதனால் வருதலால் - தம்மரசற்கும் அங்கங்கட்கும் ஆக்கவழிவுகள் தஞ்சொல்லான் வருமாகலான்,— சொல்லின்கண் சோர்வு காத்து ஓம்பல் - அப்பெற்றித்தாய சொல்லின்கட் சோர்தலை அமைச்சர் தங்கணிகழாமற் போற்றிக்காக்க. எ - று.

ஆக்கத்திற்கேதுவாய நற்சொல்லையும் கேட்டிற்கேதுவாய தீச்சொல்லையும் சொல் லாதலொப்புமைபற்றி அதனாலென்றார். செய்யுளாகலின், சுட்டுப்பெயர் முன்வந்தது. பிறர் சோர்வுபோலாது உயிர்கட்கெல்லாம் ஒருங்குவருதலால், காத்தோம்பலென்றார். இவையிரண்டுபாட்டானும் இஃது இவர்க்கின்றியமையாதென்பது கூறப்பட்டது. (௨)

௬௪௩. கேட்டார்ப் பிணிக்குந் தகையவாய்க் கேளாரும்
வேட்ப மொழிவதாஞ் சொல். ௩.

இ - ள். கேட்டார்ப் பிணிக்கும் தகை அவாய் - நட்பாயேற்றுக்கொண்டாரைப் பின் வேறுபடாமற் பிணிக்குங் குணங்களை அவாவி— கேளாரும் வேட்ப மொழிவது - மற்றைப் பகையாய் ஏற்றுக்கொள்ளாதாரும் பின் அப்பகைமையொழிந்து நட் பினைவிரும்பும்வண்ணஞ் சொல்லப்படுவதே—சொல்லாம் - அமைச்சர்க்குச் சொல்லாவது. எ - று.

அக்குணங்களாவன வழுவின்மை, சுருங்குதல், விளங்குதல், இனிதாதல், விழுப்பயன்றருதலென்றிவை முதலாயின. அவற்றை யவாவுதலாவது சொல்லுவான் குறித்தனவேயன்றி வேறு நுண்ணுணர்வுடையோர் கொள்பவற்றின்மேலும் நோக்குடைத்தாதல். அவாவென்னுஞ் செய்தெனெச்சம் மொழிவதென்னுஞ் செயப்பாட்டுவினை கொண்டது. இனிக் கேட்டார் கேளாரென்பதற்கு நூல் கேட்டார் கேளாதாரெனவும், வினவுவார் வினவாதாரெனவுமுரைப்பாருமுளர். தகையவாயென்பதற்கு எல்லாருந் தகுதியையுடையவாயென்றுரைத்தார்; அவர் அப்பன்மை மொழிவதென்னும் ஒருமையோடு இயையாமை நோக்கிற்றிலர். இதனாற் சொல்லின திலக்கணங் கூறப்பட்டது. (௩.)

௬௪௪. திறனறிந்து சொல்லுக சொல்லை யறனும்
பொருளு மதனினூஉங் கில். ௪.

இ - ள். சொல்லைத் திறன் அறிந்து சொல்லுக - அப்பெற்றித்தாய சொல்லை அமைச்சர் தம்முடையவுங் கேட்பாருடையவுமாய திறங்களையறிந்து சொல்லுக,— அதனின் ஊங்கு அறனும் பொருளும் இல் - அவ்வனஞ் சொல்லுதற்கு மேற்பட்ட அறனும் பொருளுமில்லையாகலான். எ - று.

அத்திறங்களாவன குடிப்பிறப்பு, கல்வி, ஒழுக்கம், செல்வம், உருவம், பருவ மென்பனவற்றுன்வரு ம் தகுதிவேறுபாடுகள். அவற்றையறிந்து சொல்லுதலாவது அவற்குற் றமக்கும் அவர்க்குமுளவாய எற்றத்தாழ்வுகளையறிந்து அவ்வம்மரபாற் சொல்லுதல். அஃது உலகத்தோடொட்டவொழுகலையும் இனிமையையும் பயத்த லின் அறனுயிற்று. தங்காரியமுடித்தலிற் பொருளாயிற்று. அறனும்பொருளுமெனக் காரணத்தைக் காரியமாக்கிக் கூறினுர். (ச)

கூசரு. சொல்லுக சொல்லைப் பிறிதோர்சொ லச்சொல்லை
வெல்லுஞ்சொ லின்மை யறிந்து. ரு.

இ - ள். சொல்லைப் பிறிது ஓர்சொல் வெல்லும் சொல் இன்மை அறிந்து-தாஞ் சொல்லக்கருதிய சொல்லைப் பிறிதோர்சொல்லாய் வெல்லவல்லதொருசொல் இல்லா மையறிந்து,—அச்சொல்லைச் சொல்லுக - பின் அச்சொல்லைச் சொல்லுக. எ - று.

பிறிதோாசொல் மாறுராது மறுதலைசசொல். வெல்லுதல் குணங்களான் மிகு தல். அதுவே வெல்லச்சொல்லுகவெனபதாம். இனிப் பிறிதோர்சொல் வெல்லுஞ் சொல்லெனச் செவ்வெண்ணுககி, ஒத்தசொல்லும் மிக்கசொல்லுமுளவாகாமற்சொல் லுகவெனறுரைப்பாருமுளர். இது சொறபொருட்பின்வருகிலே. (ரு)

கூசகூ. வேட்பததாஞ் சொல்லிப பிறர்சொற் பயன்கோடன்
மாட்சியின் மாசறுரர் கோள. கூ.

இ - ள். வேட்பத் தாம் சொல்லிப் பிறர் சொற்பயன் கோடல்-பிறர்க்குத் தாஞ்சொல்லுங்கால் அவர் பின்னுங் கேட்டலை விரும்புமாறு சொல்லி,அவர் தமக்குச் சொல்லுங்கால அச்சொலலின்பயனைக கொணடெ ாழிதல்—மாட்சியின் மாசு அறுரர் கோள - அமைச்சியலுட் குற்றமற்றாரது துணிபு. எ - று.

பிறாசொறகளுட் குற்றமுளவாயினும அவை கோக்கியகழா

இனிதாதல் கேட்டார்க்கின்பம் பயத்தல். சொல்லுதல்வல்லான் நூறாயிரவருளொருவன் என்ற வடமொழிபற்றிப் பெறினென் றார். ஈண்டுக் கேட்டல் ஏற்றுக்கோடல். இவை யிரண்டாட்டானும் அவ்வாற்றாற் சொல்லுதல் வல்லாரது சிறப்புக் கூறப்பட்டது. (அ)

கூசக. பலசொல்லக் காமுறுவர் மன்றமா சற்ற
சிலசொல்ல றேற்றா தவர். கூ.

இ - ள். மாசு அற்ற சில சொல்லல் தேற்றாதவர் - குற்றமற்றனவாய்ச் சிலவாய வார்த்தைகளை அவ்வாற்றாற் சொல்லுதலை யறியாதார்—பல சொல்லக் காமுறுவர் - பலவாய வார்த்தைகளைத் தொடுத்துச் சொல்ல விரும்புவர். எ - று.

குற்றம் மேற்சொல்லிய குணங்கட்கு மறுதலையாயின. இடைவிடாது பல சொல்லுதலையுஞ் சொல்வன்மையென்று விரும்புவாருமுளர், அவர் இவ்வாறு சொல்ல மாட்டாதாரே, வல்லார் அதுசெய்யாரென யாப்புறுப்பார், மன்றவென்றார். (கூ)

கூ௫0. இணரூழ்த்து நாறா மலரனையர் கற்ற
துணர விரித்துரையா தார். க0.

இ - ள். கற்றது உணர விரித்து உரையாதார்-கற்றுவைத்த நூலைப் பிறரறியும் வண்ணம் விரித்துரைக்கமாட்டாதவர்—இணர் ஊழ்த்தும் நாறா மலர் அனையர் - கொத்தின்கண்ணே மலர்ந்துவைத்தும் நாறாத பூவையொப்பர். எ - று.

செவ்விபெற மலர்ந்துவைத்தும் நாற்றமில்லாத பூச் சூடப்படாதவாறுபோல நூலைக் கற்றுவைத்துஞ் சொல்லமாட்டாதார் நன்குமதிக்கப்படாரென்றலைமயின், இது தொழிலுவமமாயிற்று. இவை இரண்டாட்டானும் அது மாட்டாதாரதிழிபு கூறப்பட்டது. (க0)

## ௬௰௬ ம் அதி.—வினைத்தூய்மை.

அஃதாவது செய்யப்படும் வினைகள் பொருளேயன்றி அறமும் புகழும் பயத்து நல்லவாதல். சொல்லேயன்றிச் செயலும் நன்றாகவேண்டுமென்கின்றமையின், இது சொல்வன்மையின்பின் வைக்கப்பட்டது.

௬௱௫௰௧. துணைநல மாக்கந் தரூஉம் வினைநலம்
வேண்டிய வெல்லாந் தரும். ௧.

இ-ள். துணை நலம் ஆக்கம் தரூஉம் - ஒருவனுக்குத் துணையது நன்மை செல்வமொன்றனையுங்கொடுக்கும்;—வினை நலம் வேண்டிய எல்லாம் தரும் - அவ்வளவன்றி வினையது நன்மை அவன் வேண்டியன யாவற்றையுங்கொடுக்கும். எ-று.

வேண்டியவெல்லாமென்றது இம்மைக்கண் அறம் பொருளின்பமுதலாயவற்றையும் மறுமைக்கட்டான்விரும்பிய பதங்களையும். இதனாற் காரணப்பேர் துணைநன்மையினுங் கருதப்படும் வினைநன்மை சிறந்ததென வினைத்தூய்மையது சிறப்புக் கூறப்பட்டது.

(க)

* சொற்றுணைக்கண் ௬௫௨-ம் திருக்குறளுரையிற் காண்க.

௬௰௬ ம் அதி.—வினைத்தூய்மை.

௬௱௫௰௨. என்று மொருவுதல் வேண்டும் புகழொடு
நன்றி பயவா வினை. ௨.

இ-ள். புகழொடு நன்றி பயவா வினை - தம்மரசனுக்கு இம்மைக்கட் புகழும் மறுமைக்கண் அறமும் பயவாத வினைகளை — என்றும் ஒருவுதல் வேண்டும் - அமைச்சர்க்கு எக்காலத்துமொழிதல்வேண்டும். எ-று.

பெருகல், சுருங்கல், இடைநிற்ற லென்னும் நிலைவேறுபாடு காலத்தான் வருதலின், என்றுமென்றார். வேண்டுமென்பது ஈண்டு இன்றியமையாதென்னும் பொருட்டு.

௬௫௩. ஓஒதல் வேண்டு மொளிமாழ்குஞ் செய்வினை
ஆஅது மென்னு மவர். ௩.

இ-ள். ஆதும் என்னுமவர் - மேலாகக்கடவேமென்று கருதுவார் — ஒளிமாழ்கும் வினை செய் ஓதல்வேண்டும் - தம்மொளிகெடுதற்குக் காரணமாய வினையைச் செய்தலைத் தவிர்க. எ-று.

ஓதல்வேண்டுமென்பது ஒருசொன்னீர்மைத்து. ஓவுதலென்பது குறைந்துநின்றது. ஒளி தாமுளகாலத்து எல்லாராலும் நன்குமதிக்கப்படுதல். செய்யென்னும் முதனிலைத்தொழிற்பெயர் மாற்றப்பட்டது. அன்றிச் செய்வினையென வினைத்தொகையாக்கியவழிப் பொருளின்மையறிக. ஒளி கெடவருவது ஆக்கமன்றென்பதாம். (௩)

௬௫௪. இடுக்கட் படினு மிளிவந்த செய்யார்
நடுக்கற்ற காட்சி யவர். ௪.

இ-ள். இடுக்கட்படினும் இளிவந்த செய்யார் - தாமிடுக்கணிலேபடவரினும், அது தீர்தற்பொருட்டு முன் செய்தார்க்கு இளி வந்த வினைகளைச்செய்யார் — நடுக்கற்ற காட்சியவர் - நடுக்கமற்ற தெளிவினையுடையார். எ-று.

சிறிதுபோழ்திற் கழிவதாய இடுக்கணோக்கி என்றுநின்றுங்கழியாதவிழிவு எய்தற்பாலதன்றென்பதூஉம் அஃதெய்தினும் வருவது வருமென்பதூஉம் தெளிவாராகலால், செய்யாரென்றார். (௪)

௬௫௫. எற்றென் றிரங்குவ செய்யற்க செய்வானேல்
மற்றன்ன செய்யாமை நன்று. ௫.

இ-ள். எற்று என்று இரங்குவ செய்யற்க - யான் செய்தது

குழலியும் பசியான்
வருந்துமெல்லேக்கண் தீயனபலவுஞ்செய்தாயினும் புறந்தருகவென்னும் அறநூற்
பொதுவிதி பொருணூல்வழி யொழுகுதலும் அரசர் தொழிற்குரியாதலும் நன்கு
மதிக்கற்பாருடைய அமைச்சர்க்கெய்தாமைபற்றி, இவ்வாறு கூறினர்.இவையிரண்டு
பாட்டாலும் பாவமும் பழியும் பயக்கும் வினை செய்யற்க வென்பது
கூறப்பட்டது. ()

கூறுஎ. பழிமலைந் தெய்திய வாக்கத்திற் சான்றோர்
கழிநல் குரவே தலை. எ.

இ - ன். பழிமலைந்து எய்திய ஆக்கத்தின் - சாலாதார்
தீயவினைகளைச் செய்து அதனாற் பழியைத் தம்மேற்கொண்டு பெற்ற
செல்வத்தின்—சான்றோர் கழி நல் குரவே தலை -
அதுமேற்கொள்ளாத சான்றோரனுபவிக்கும் மிக்க நல்குரவே
உயர்ந்தது. எ - று.

நிலையாத செல்வத்தின் பொருட்டு நிலையின பழியை
மேற்கோடல் சால்போ டையயாமையின், சான்றோர்கழி நல்குரவே
தலையென்றார். (எ)

கூறுஅ. கடிந்த கடிந்தொரார் செய்தார்க் கவைதா
முடிந்தாலும் பீழை தரும். அ.

இ - ன். கடிந்த கடிந்து ஒரார் செய்தார்க்கு - நூலோர்
கடிந்தவினைகளைத் தாமுங்கடிந்தொழியாது பொருளைக்கிச்செய்த
அமைச்சர்க்கு—அவைதாம் முடிந் தாலும் பீழை தரும் - அவை
தூயவன்மையின் முடியா, ஒருவாற்றான் முடியினும் பின் றுன்பத்தையே
கொடுக்கும். எ - று.

முடிதல் கருதியபொருடருதல். பீழைதருதலாகிய பொருளின்றொழில் அதற்குக்
காரணமாய வினைகண்மேலேற்றப்பட்டது. (அ)

கூ௫௯. அழக்கொண்ட வெல்லா மழப்போ மிழப்பினும்
பிற்பயக்கு நற்பா லவை. ௯.

இ - ள். அழக் கொண்ட எல்லாம் அழப் போம் - ஒருவன் தீவினைகளைச் செய்து பிறரிரங்கக் கொண்ட பொருளெல்லாம் இம்மையிலே அவன்ருனிரங்கப்போகாநிற்கும்; — நற்பாலவை இழப்பினும் பிற்பயக்கும் - மற்றைத் தூயவினையான் வந்த பொருள்கள் முன்னிழந்தாறாயினும் அவனுக்குப் பின்னர் வந்து பயன் கொடுக்கும். எ - று.

பின்னெனவே, மறுமையுமடங்கிற்று. பொருள்களான் அவற்றிற்குக் காரண மாய வினைகளையெல்லாம் கூறியவாறு. (௯)

---

# கசஉ ஊ ம் அதி—வினைத்திட்பம்.

கசுo. சலத்தாற் பொருள்செய்தே மார்த்தல் பசுமட்
கலத்துணீர் பெய்திரீ இயற்று. ௧o.

இ - ள். சலத்தால் பொருள் செய்து ஏமார்த்தல் - அமைச்சன் தீயவினைகளாற் பொருள்படைத்து அதனால் அரசனுக்கேமஞ்செய்தல்—பசுமட்க லத்துள் நீர் பெய்து இரீஇயற்று - பசியமட்கலத்துள்ளே நீரைப்பெய்து அதற்கேமஞ்செய்ததனோடொக்கும். எ - று.

முன் ஆக்கம் பயப்பனபோற்றோன்றிப் பின்னழிவே பயத்தலால், அவை சலமெனப்பட்டன. ஏமார்த்தலென்பது ஏமார்த்தலென்றாயிற்று. ஏமத்தையடையப்பண்ணுதலென்றவாறு. இருத்துதல் நெடுங்காலமிருப்பச்செய்தல். அரசனும்பொருளும் சேரப்போமென்பதாம். பிறரெல்லாம் ஏமாத்தலென்று பாடமோதி, அதற்கு மகிழ்த லென்றும், இரீஇயற்றென்பதற்கு வைத்தாற்போலு மென்

றமுரைத்தார்; அவர் அவை தன்வினையும் பிறிதின்வினையுமாய் உவமையிலக்கணத்தோடு மாறுகோடல் நோக்கிற் றிலர். இவைநான்குபாட்டானும் அதற்குக் காரணம் கூறப்பட்டது. (௬0)

---

## ௬௭ ம் அதி.—வினைத்திட்பம்.

அஃதாவது அத்தூய வினை முடிப்பானுக்கு வேண்டுவதாய மனத்திண்மை. அதிகாரமுறைமையும் இதனனே விளங்கும்.

௬௬௧. வினைத்திட்ப மென்ப தொருவன் மனத்திட்ப
மற்றைய வெல்லாம் பிற. ௧.

இ - ள். வினைத்திட்பம் என்பது ஒருவன் மனத்திட்பம் - வினைசெய்தற்கட்டின்மையென்று சொல்லப்படுவது அதனை முடித்தற்குரியானொருவன் மனத்ினது திண்மை;—மற்றைய எல்லாம் பிற - அஃதொழிந்தனவெல்லாம் அதற்குத் திண்மை யென்று சொல்லப்படா, எ - று.

ஒழிந்தனவாவன படை, அரண், நட்பு முதலியவற்றின் றிண்மைகள். அவையும் அதற்கு வேண்டுவனவாய் இனமாகலின் மற்றையவென்றும், வேண்டினும் அஃதில் வழிப் பயனிலவாகலிற் பிறவென்றுங் கூறினர். இதனல் வினைத்திட்பமாவது இன்ன தென்பது கூறப்பட்டது. (௧)

௬௬௨. ஊறொரா லுற்றபி னொல்காமை யிவ்விரண்டி
னாறென்ப ராய்ந்தவர் கோள். ௨.

இ - ள். ஆய்ந்தவர் கோள் - முன் நீதியாராய்ந்த அமைச்சரது துணிபு—ஊறு ஒரால் உற்றபின் ஒல்காமை இவ்விரண்டின் ஆறு என்பர் - பழுதபடும் வினைகளை செய்யாமையும் செய்யும்வினை தெய்வத்தாற்பழுதபட்டவழி அதற்குத் தளர் மாகிய இவ்விரண்டன்

வழியென்பர் நூலோர். எ - று.

தேவர்க்கும் அசுரர்க்கும் அமைச்சுப்பூண்ட வியாழ வெள்ளிகளது துணிபு தொகுத்துப் பின் *நீதிநூலுடையார் கூறியவாறு கூறுகின்றமையின், ஈண்டு வினை, தூய்மையும் உடன்கூறினார். உறுதலுடையதனை முன் கூறென்றமையின், உற்றபினென்றும், இவ்விரண்டின்கண்ணே பட்டதென்பார் இரண்டினாறென்றுங்கூறினார். ஆறென்பாரெனப் பாடமோதுவாருமுளர்; அஃது ஒல்காமையென்னுமெண்ணோடு இரண்டென்னுந் தொகையோடும் இயையாமை அவரறிந்திலர்.

---

* ஈண்டு நீதிநூலுடையார் என்றது சாணக்கியரையும் காமந்தகரையும்.

## ௬௭ ம் அதி.—வினைத்திட்பம்.

கக்கு

௬௬௩. கடைக்கொட்கச் செய்தக்க தாண்மை யிடைக்கொட்கி
னெற்றா விழுமந் தரும். ௩.

இ - ள். கடைக் கொட்கச் செய்தக்கது ஆண்மை - செயப்படும் வினையை முடிவின்கட் புலப்படும்வகை முன்னெல்லாம் மறைத்துச் செய்வதே திட்பமாவது;— இடைக் கொட்கின் எற்றாவிழுமம் தரும் - அங்ஙனமன்றி இடையே புலப்படுமாயின் அப்புலப்பாடு செய்வானுக்கு நீங்காத இடும்பையைக் கொடுக்கும். எ - று.

மறைத்துச் செய்வதாவது அங்கமைந்துமெண்ணியவாறு பிறரறியாமலும்; தானறிந்தனவும், தன்னிங்கிதம், வடிவு, செயல், சொற்களான் அவருய்த்துணராமலும் அடக்கிச் செய்தல். அத்திட்பம், ஆண்டன்மையான் வருதலின், ஆண்மையெனப்பட்டது. எற்றாவிழுமமாவன பகைவர் முன்னறிந்து அவ்வினையை விலக்குதல்,

செய் வானே விலக்குதல் செய்வாராகலின், அவற்றான் வருவன. விழுமம் சாதிப்பெயர். இவையிரண்டோட்டாலும் அதனது பகுதி கூறப்பட்டது. (௩)

கககச. சொல்லுதல் யார்க்கு மெளிய வரியவாஞ்
சொல்லிய வண்ணஞ் செயல். ௪.

இ - ள். சொல்லுத ல் யார்க்கும் எளிய—யாம் இவ்வினையை இவ்வாற்றாற் செய்து மென நிரல்படச்
சொல்லுதல் யாவர்க்குமெளிய;—சொல்லிய வண்ணம் செயல் அரிய வாம் - அதனே அவ்வாறறுமுனெ செயதல் யாவர்க்கு மரியவாம். எ - று.
சொல்லுதல், செயலென்பன சாதிப்பெயர்.
அரியவற்றையெண்ணிச்சொல்லு தல் இட்பமல்லாதாரகுமயறவின, எளியவென்றார். இதனல அதனதருமை கூறப் பட்டது. (௪)

கககரு. வீறெய்தி மாண்டார் வினைத்திட்பம் வேந்தன்க
ணூறெய்தி யுள்ளப் படும். ரு.

இ - ள். வீறு எய்தி மாண்டார் வினைத்திட்பம் - எண்ணத்தாற் சிறப்பெய்திப் பிறவிலக்கணங்களாலும மாட்சிமைப்பட்ட அமைச்சரது வினைதிட்பம்,—வேந்தன் கண் ஊறு எய்தி உள்ளப்படும - வேந்தன்கண்ணே உறுதலெய்யதலான், எல்லா ராலும் நன்குமதிக்கப்படும. எ - று.
வேந்தன்கணூறெய்தல் எய்த்தவினை அதனான் முற்றுப்பெற்றுச் செல்வமும் புகழும் அவனகண்ணவாதல. எயதலாயினபது ஈரிந்து னைறது. உள்ளல மதிப்பான் மறவாமை. இதனால் அதன்சிறப் புக் கூறப்பட்டது. (ரு)

கககசு. எண்ணிய வெண்ணியாங் கெய்துப வெண்ணியார்
திண்ணிய ராகப் பெறின். சு.

இ-ள். எண்ணிய எண்ணியாங்கு எய்துப - தாமெய்த எண்ணிய பொருள்களை எல்லாவற்றையும் அவ்வெண்ணியவாறே எய்துவர்:— எண்ணியார் திண்ணியராகப் பெறின் - எண்ணியவர் அவற்றிற்கு வாயிலாகிய வினைக்கட் டிண்மையுடையராகப் பெறின். எ-று.

எளிதினெய்துபவென்பார், எண்ணியாங்கெய்துப வென்றார். அவர் அவ்வாறல்ல தென்றமையிற் றிண்ணியராகவே வினைமுடியும், அது முடிய அவையாவையும் கைகூடுமென்பது கருத்து. இதனால் அஃதுடையாரெய்தும் பயன் கூறப்பட்டது. (௬)

## ௬௭ம். அதிகாரம்—வினைத்திட்பம்.

௬௬௭. உருவுகண் டெள்ளாமை வேண்டு முருள்பெருந்தேர்க்
கச்சாணி யன்னா ருடைத்து. ௭.

இ-ள். உருள் பெருந்தேர்க்கு அச்சு ஆணி அன்னார் உடைத்து - உருளாகின்ற பெரிய தேர்க்கு அச்சின்கணாணிபோல வினைக்கட்டிண்ணியாரையுடைத்து உலகம்;— உருவு கண்டு எள்ளாமை வேண்டும் - அதனால் அவரை வடிவின் சிறுமைநோக்கி இகழ்தலையொழிக. எ-று.

சிறுமை, எள்ளாமைவேண்டுமென்பதனானும், உவமையானும் பெற்றாம். அச்சு உருள் கோத்த மரம். ஆணி உருள் கழலாது அதன்கடைக்கட் செருகுமது. அது வடிவாற்சிறிதாயிருந்தே பெரிய பாரத்தைக் கொண்டெய்க்குந்திட்பமுடைத்து, அதுபோல, வடிவாற்சிறியராயிருந்தே பெரிய வினைகளைக் கொண்டெய்க்குந் திட்பமுடைய அமைச்சருமுளர், அவரை அத்திட்பநோக்கி அறிந்துகொள்க வென்பதாம். இதனால் அவரை யறியுமாறு கூறப்பட்டது.
(௭)

௬௬௮. கலங்காது கண்ட வினைக்கட் டுளங்காது

தூக்கங் கடிந்து செயல். அ.

இ - ள். கலங்காது கண்ட வினைக்கண் - மனந்தெளிந்து செய்வதாகத் துணிந்த வினையின்கண்—துளங்காது தூக்கம் கடிந்து செயல் - பின்னசைதலின்றி நீட்டித்தலையொழிந்து செய்க. எ - று.

கலங்கியவழி ஒழிவதும் செய்வதுபோற் றோன்றுமாகலின், தெளிந்து பலகாலாராய்ந்து தாஞ்செய்வதாக வோர்த்த வினையைக் கலங்காது கண்டவினையென்றார். துளங்காமை திட்பமுடைமை. (அ)

௬௬௯. துன்ப முறவரினுஞ் செய்க துணிவாற்றி
இன்பம் பயக்கும் வினை. கூ.

இ - ள். துன்பம் உற வரினும் - முதற்கண் மெய்ம்முயற்சியாற் றமக்குத் துன்பம் மிக வருமாயினும்,—இன்பம் பயக்கும் வினை துணிவு ஆற்றிச் செய்க - அது நோக்கித் தளராது முடிவின்கண் இன்பம் பயக்கும் வினையைத் திட்பமுடையராய்ச் செய்க. எ - று.

துணிவு கலங்காமை. அஃதுடையார்க்கல்லது கணிகமாய முயற்சித்துன்ப நோக்காது நிலையுதலுடைய * பரிணமவின்ப மதனை நோக்கிச் செய்தல் கூடாமையின் துணிவாற்றிச்செய்கவென்றார். இவையிரண்டுபாட்டாலும் அவர் வினைசெய்யுமாறு கூறப்பட்டது. (கூ)

௬௭௦. எனைத்திட்ப மெய்தியக் கண்ணும் வினைத்திட்பம்
வேண்டாரை வேண்டா துலகு. ௰.

இ - ள். வினைத்திட்பம் வேண்டாரை - வினைத்திட்பத்தை இது நமக்குச் சிறந்ததென்று கொள்ளாத அமைச்சரை,—எனைத்திட்பம் எய்தியக்கண்ணும் - ஒழிந்த திட்பமெல்லாமுடையராயவிடத்தும்,—வேண்டாது உலகு - நன்குமதியார் உயர்ந்தோர். எ - று.

மனத்தின்கட் டிட்பமில்லாதார்க்குப் படை, அரண், நட்பு முதலியவற்றின் திட்பங்களெல்லாம் உளவாயினும், வினை முடியாதாம், ஆகவே, அவையெல்லாம் கெடு

* பரிணமவின்பம் - முடிவிலுளதாகுமின்பம்.

கருத்து

மென்பதுபற்றி உலகு வேண்டாதென்றார். இதனால்
வினைத்திட்பமில்லாதவரதிழிபு கூறப்பட்டது.
(௰)

---

## ௬அம் அதி.—வினைசெயல்வகை.

அஃதாவது அத்திட்பமுடையவமைச்சன்
அவ்வினையைச்செய்யுந்திறம். அதிகாரமுறைமையும் இதனானே
விளங்கும்.

௬௭௧. சூழ்ச்சி முடிவு துணிவெய்த லத்துணிவு
தாழ்ச்சியுட் டங்குத றீது. ௧.

இ - ள். சூழ்ச்சி முடிவு துணிவு எய்தல் -
விசாரத்திற்கெல்லையாவது விசாரிக்கின்றான் இனி இது தப்பாதென்னுந்
துணிவினைப் பெறுதல்;—அத்துணிவு தாழ்ச்சியுள் தங்குதல்
தீது-அவ்வனந் துணிவுபெற்ற வினை பின் நீட்டிப்பின்கட்டங்குமாயின்,
அது குற்றமுடைத்து. எ - று.

சூழ்ச்சிமுடிவு துணிவெய்தலெனவே, துணிவெய்துமளவுஞ்
சூழவேண்டுமென் பது பெற்றாம். பின்னர்த் துணிவு ஆகுபெயர்.
நீட்டிப்பு செய்யுங்கா லத்துச் செய் யாமை. அஃதான்வழிக்
காலக்கழிவாகலானும் பகைவா அறிந்தழித்தலானும் முடியா மையின்,
அதனைத் தீதென்றார்.

(௧)

கஎஉ. தூங்குக தூங்கிச் செயற்பால தூங்கற்க
தூங்காது செய்யும் வினை. உ.

இ - ள். தூங்கிச் செயற்பால தூங்குக - நீட்டித்துச் செய்யும் பகுதியவாய வினைகளுள் நீட்டிக்க;—தூங்காது செய்யும் வினை தூங்கற்க - நீட்டியாது செய்யும் வினைகளுள் நீட்டியாதொழிக. எ - று.

இருவழியும் இறுதிக்கட்டொக்க ஏழாவது விரிக்கப்பட்டது. இருவகை வினைகளும் வலியானும் காலத்தானும் அறியப்படும். மாறிச்செயின், அவை வாயாவென் பது கருத்து. மேற்றூங்காலமயனரூர்*, ஈண்டதனைப் பகுத்துக் கூறினர். இவை யிரண்டுபாட்டானும் பொதுவகையால வினைசெயுந்திறங் கூறப்பட்டது. (உ)

கஎங. ஒல்லும்வா யெல்லாம் வினைநன்றே யொல்லாக்காற்
செலலுமவாய நோக்கச செயல். ங.

இ - ள். ஒல்லும் வாய் எல்லாம் வினை நன்று - வினைசெய்யுங்கால் இயலுமிடத்தெல்லாம் போராதசெய்தல் நன்று,—ஒல்லாக்கால் செல்லும் வாய் நோக்கிச் செயல் அஃதியலாவிடத்து ஏனை மூன்றுபாயத்துள்ளும் அது முடிவதோருபாயநோக்கிச் செய்க. எ - று.

இயலுமிடம் பகையிற் றன்வலியுடைய காலம். அக்காலத்துத்தண்டமே நன்றென் றூர், அஞ்சுவது அதறகேயாகலின். இயலாவிடம் ஒத்தகாலமும மெலியகாலமும. அவ் விரண்டு காலத்தும் சாம பேத தானங்களுள் அது முடியுமுபாயத்தாற செய்கவ்வென் றூர், அவை ஒன்றுதொன்று வேறுபாடுடையவேனும், உடம்படுத்தறபயத்தாற றம்மு ளொக்குமாகலின். இதனுள் வலியான், ஒப்பான், மெலியானென விலை மூவகைத்
தென்பதூஉம், அவற்றுள் வலியது சிறப்பும், கூறப்பட்டன. (ஈ)

---

* திருக்குறள், கஅ௬.

௬௭௬. முடிவு மிடையூறு முற்றியாங் கெய்தும்
படுபயனும் பார்த்துச் செயல். ௬.

இ - ள். முடிவும் - வினைசெய்யுங்கால் அது முடிதற்குள தாம் முயற்சியும் — இடையூறும் - அதற்கு வருமிடையூறும் — முற்றியாங்கு எய்தும் படுபயனும் - அது நீங்கி முடிந்தாற் றானெய்தும் பெரும்பயனும் — பார்த்துச் செயல் - சீர்தூக்கிச் செய்க. எ - று.

முடிவு ஆகுபெயர். முயற்சியிடையூறுகளதளவிற் பயனதளவு பெரிதாயிற் செய்க வென்பதாம்.
(௬)

௭௭௭. செய்வினை செய்வான் செயன்முறை யவ்வினை
யுள்ளறிவா னுள்ளங் கொளல். ௭.

இ - ள். செய்வினை செய்வான் செயன்முறை-அவ் வாற்றாற் செய்யப்படும் வினையைத் தொடங்கினான் செய்யுமுறையாவது — அவ்வினை உள் அறிவான் உள்ளம் கொளல் - அதனுளப்பாட்டினை யறிவான் கருத்தினைத் தானறிதல். எ - று.

அவ்வாறென்பது பொருண் முதலியவெண்ணலையும் முடிவுமுதலிய அக்கலையும். உள்ளறிவான் முன்செய்து போந்தவன். அவன் கருத்து அவன் செய்து போந்த உபாயம். அதனை யறியவே, தானும் அதனாற்செய்து பயனெய்துமென்பதாம்.
நான்குபாட்டானும் ஒப்பான் செய்யுந்திறங் கூறப்பட்டது.
(௭)

௬௮ம் அதி.—ஞா.ஆ.

௬௭௮. வினையான் வினையாக்கிக் கோடல் நனைகவுள்
யானையால் யானையாத் தற்று. ௮.

இ - ள். வினையான் வினை ஆக்கிக்கோடல் - செய்கின்றவினையாலே அன்னது பிறிதுமோர்வினையை முடித்துக்கொள்க;—நனைகவுள் யானையால் யானை யாத்தற்று - அது மதத்தானனைந்த கபோலத்தினையுடைய யானையாலே அன்னது பிறிதுமோர் யானையைப்பிணித்ததனோ டொக்கும். எ - று.

பிணித்தற் கருமை தோன்ற நனைகவுளென்பது பின்னுங் கூட்டப்பட்டது. தொடங்கிய வினையானே பிறிதுமோர்வினையை முடித்தற் குபாயமாமாறு எண்ணிச் செய்க, செய்யவே, அம்முறையான் எல்லாவினையும் எளிதின் முடியுமென்பதாம். (௮)

௬௭௯. நட்டார்க்கு நல்ல செயலின் விரைந்ததே
யொட்டாரை யொட்டிக் கொளல். ௯.

இ - ள். நட்டார்க்கு நல்ல செயலின் விரைந்ததே - வினைசெய்வானற் றன்னட் டார்க்கு இனியவற்றைச் செய்தலினும் விரைந்து செய்யப்படும்—ஒட்டாரை ஒட்டிக் கொளல் - தன் பகைவரோடு ஒட்டாரைத் தனக்கு நட்பாக்கிக் கோடல். எ - று.

அவ்வினை வாய்த்தற்பயத்தவாய இவ்விரண்டும் பகைவர்க்குத் தன்மெலிவு புலனாவதன்முன்னே செய்கவென்பார், விரைந்த தென்றார். விரைந்து செய்யப்படுவ தென் றவாறு. வினைசெய்யுந் திறமாதலிற் பகைவரோ டொட்டாராயிற்று. தன்னொட்டார் பிறருட் கூடாமல் மாற்றிவைத்த லெனினு மமையும். (௯)

௬௮௦. உறைசிறியா ருண்ணடுங்க லஞ்சிக் குறைபெறிற்
கொள்வர் பெரியார்ப் பணிந்து. ௧௦.

இ - ள். உறை சிறியார் - அரணுமிடனுஞ் சிறியராய அமைச்சர்;— உள் நடுக்கல் அஞ்சி - தம்மின்வலியராய் எதிர்ந்தவழித் தம்பகுதி நடுக்கலையஞ்சி,—குறை பெறின் பெரியார்ப் பணிந்து கொள்வர்

- அக்கிலக்கு வேண்டுவதாய சந்து கூடுமாயின், அவ ரைத் தாழ்ந்து அதனையேற்றுக் கொள்வர். எ - று.

இடம் காமம் அரணும். அவற்றது சிறுமை ஆள்வார் மேலேற்றப்பட்டது. மெலி யாரோடு சந்திக்கு வலியார் இயைத லரிதாகலின், பெறினென்றார். அடி யிலே மெலி யராயினர் தம்பகுதிபு மன்சிரீங்கின் முதலொடுங் கெடுவராகலின், அது வாராமற் சிறிது கொடுத்துஞ் சந்தினை யேற்றுக்கொள்க வென்பதாம். பணிதல் மாணமுடை யார்க்குக் கருத்தன்மையின், கொள்வரென உலகியலாற் கூறினர். இவைமூன்றுபாட் டானும் மெலியான் செய்யுந்திறங் கூறப்பட்டது. (கo)

---

## கூக ம் அதி.—தூது.

அஃதாவது சந்தி விக்கிரகங்கட்கு வேற்றுவேந்தரிடைச்செல்வாரது தன்மை, அவ்விரண்டனையும் மேல் வினைசெயல்வகை யென்றமையின், இஃததன்பின்வைக்கப் பட்டது. தான் வகுத்துக்கூறுவான், கூறியது கூறுவானெனத் தூது இருவகைப் படும். அவருள் முன்னேன் அமைச்சரோ டொப்பானுகலானும், பின்னேன் அவனிற் காற்கூறு குணங் குறைந்தோ னுகலானும், இஃதமைச்சியலாயிற்று.

கூஅக. அன்புடைமை யான்ற குடிப்பிறத்தல் வேந்தவாம்
பண்புடைமை தூதுரைப்பான் பண்பு. க.

கூஅ கூக ம் அதி—தூது.

இ - ள். அன்பு உடைமை-தன் சுற்றத்தார்மாட்டு அன்புடையனுதலும்—ஆன்ற குடிப்பிறத்தல் - அமைச்சுப் பூணற்கமைந்த குடியின்கட்பிறத்தலும்—வேந்து அவாம் பண்பு உடைமை - அரசர்சாதி விரும்பும் பண்புடையனுதலும்—தூது உரைப்பான் பண்பு - தூதுவார்த்தை சொல்வானுக் கிலக்கணம். எ - று.

முன்னையவிரண்டனுனும், முறையே சுற்றத்தார்க்குத் தீங்குவாராமற்றன்பேணி யொழுகலும், தன்முன்னோர் அதியல் கேட்டறிதலும் பெற்றாம். வேந்தவாம்பண்பு உடைமை முன்னர் மன்னரைச் சேர்ந்தொழுகற்கட் பெறப்படும். அதனுல் வேற்றரச ரும் அவன் வயத்தராதல் பெறுதும்.
(௧)

௬அ௨. அன்பறி வாராய்ந்த சொல்வன்மை தூதுரைப்பார்க்
இன்றி யமையாத மூன்று. ௨.

இ - ள். அன்பு - தம்மரசன் மாட்டன்புடைமையும்—அறிவு - அவனுக்கு ஆவன வறியுமறிவுடைமையும்—ஆராய்ந்த சொல்வன்மை - அவற்றை வேற்றரசரிடைச் சொல்லுங்கால் ஆராய்ந்து சொல்லுதல் வன்மையுமென—தூது உரைப்பார்க்கு இன்றியமையாத மூன்று - தூதுரைக்க வுரியார்க்கு இன்றியமையாத குணங்கள் மூன்று. எ - று.

ஆராய்தல் அவற்றிற் குடம்படுஞ் சொற்களைத் தெரிதல். இன்றி யமையாத மூன் றெனவே, அமைச்சர்க்குச் சொல்லிய பிறகுணங்களும் வேண்டுமென்பது பெற்றாம். இவை யிரண்டுபாட்டானும் இருவகையார்க்கும் பொதுவிலக்கணங் கூறப்பட்டது. ()

௬அ௩. நூலாரு ணூல்வல்ல னாகுதல் வேலாருள்
வென்றி வினையுரைப்பான் பண்பு. ௩.

இ - ள். வேலாருள் வென்றி வினை உரைப்பான் பண்பு - வேலையுடைய வேற் றரசரிடைச் சென்று தன்னரசனுக்கு வென்றிதரும் வினையைச் சொல்லுவானுக்கு இலக்கணமாவது—நூலாருள் நூல் வல்லன் ஆகுதல் - நீதிநூலையுணர்ந்த அமைச்ச ரிடைத் தான் அந்நூலை வல்லனாதல். எ - று.

கொறன்மாலையரென்பது தோன்ற வேலாரென்றும், தூது வினை இரண்டு மடங்கவென்றிவினை யென்றுங் கூறினர். வல்லனாதல் உணர்வுமாத்திர முடையராய அவர் முன் வருக்குமாற்றலுடையனாதல்.
(௩.)

௬அ௪. அறிவுரு வாராய்ந்த கல்வியிம் மூன்றன்
செறிவுடையான் செல்க வினைக்கு. ௪.

இ - ள். அறிவு - இயற்கையாகிய வறிவும்—உரு - கண்டார் விரும்புந் தோற்றப் பொலிவும்—ஆராய்ந்த கல்வி - பலரோடும் பலகாலு மாராயப்பட்ட கல்வியுமென— இம்மூன்றன் செறிவு உடையான் - நன்குமதித்தற் கேதுவாய இம்மூன்றனது கூட்டத்தை யுடையான்—வினைக்குச் செல்க - வேற்றுவேந்தரிடைத் தூது வினைக்குச் செல்க. எ - று.

இம்மூன்றும் ஒருவன்பாற் கூடுதலரிதாகலின், செறிவுடையானென்றார். இவற்றான் நன்குமதிப்புடையனாகவே, வினை இனிதுமுடியு மென்பது கருத்து. (௪)

௬அ௫. தொகச்சொல்லித் தூவாத நீக்கி நகச்சொல்லி
நன்றி பயப்பதாந் தூது. ௫.

* தூதியல் - சந்திவிக்கிரகம்.



இ - ள். தொகச் சொல்லி - வேற்றரசர்க்குப் பல காரியங்களைச் சொல்லும் வழிக் காரணவகையாற் றொகுத்துச்சொல்லியும்—தூவாத நீக்கி நகச் சொல்லி - இன்னாத காரியங்களைச் சொல்லும்வழி வெய்ய சொற்களை நீக்கி இனிய சொற்களான் மனமகிழச் சொல்லியும்—நன்றி பயப்பது தூதாம் - தன்னரசனுக்கு நன்மையைப் பயப்பவனே தூதனாவான். எ - று.

பலகாரியங்கட் குடம்படாதார் பரம்பரையான் அவற்றிற்குக் காரணமாய தொன்றைச்சொல்ல அதனால் அவை விளையுமாறுய்த்துணர வருமையானுஞ் சுருக்கத் தானு முடம்படுவர், இன்னாதவற்றிற் குடம்படாதார் தம்மன மகிழச்சொல்ல அவ் வின்னாமை காணாது

உடம்படுவோராதலின், அவ்விருவாற்றானும் தன்காரியம் தவறாமல் முடிக்கவல்லா னென்பதாம். எண்ணும்மைகள் விகாரத்தாற்றொக்கன. (௬)

௬அ௬. கற்றுக்கண் ணஞ்சான் செலச்சொல்லிக் காலத்தாற்
றக்க தறிவதாந் தூது. ௬.

இ - ள். கற்று - நீதிநூல்களைக் கற்று—செலச் சொல்லி - தான் சென்றகருமத்தைப் பகைவேந்தர் மனங்கொளச் சொல்லி—கண் அஞ்சான் - அவர் செயிர்த்து நோக்கின் அந்நோக்கிற் கஞ்சாது—காலத்தால் தக்கது அறிவது தூதாம் - காலத்தோடு பொருந்த அது முடிக்கத்தக்க வுபாயமறிவானே தூதனாவான். எ - று.

அவ்வுபாய மறிதற்பொருட்டு நீதிநூற்கல்வியும், அதனானன்றிப் பிறிதொன்றான் முடியுங்காலம் வரின் அவ்வாறு முடிக்கவேண்டுதலிற் காலத்தாற்றக்கதறிதலும், இலக்கணமாயின. (௭)

௬அஎ. கடனறிந்து காலங் கருதி யிடனறிந்
தெண்ணி யுரைப்பான் றலை. எ.

இ - ள். கடன் அறிந்து - வேற்றரசரிடத்துத் தான்செய்புமுறைமை யறிந்து— காலம் கருதி - அவர்செவ்வி பார்த்து —இடன் அறிந்து-சென்ற கருமஞ் சொல்லுதற் கேற்ற இடமறிந்து—எண்ணி - சொல்லுமாற்றை முன்னே விசாரித்து—உரைப்பான் தலை - அவ்வாறு சொல்லுவான் தூதரின் மிக்கான். எ - று.

செய்புமுறைமையாவது அவர்நிலையும் தன்னரசனிலையும் தன்னிலையும் நோக்கி அவற்றிற்கேற்பக் காணுமுறைமையும் சொல்லுமுறைமையும் முதலாயின. செவ்வி தன்சொல்லை யேற்றுக்கொள்ளும் மனமகிழ்ச்சி. அது காலவயத்ததாகலிற் காலமென்றார். இடம் தனக்குத் துணையாவாருடனாயவிடம். எண்ணுதல் தான் அது சொல்லு மாறும் அதற்கு அவர்சொல்லு முத்தரமும் அதற்குப் பின்றான்

சொல்லுவனவுமாக இவ்வாற்றான் மேன்மேற் றூனே கற்பித்தல். வடநூலார் இவ்விருவகையாருடன் ஓலை கொடுத்து நிற்பாரையுங் கூட்டித் தூதரைத் தலை, இடை, கடையென்று வகுத்துக்கூறி னாராகலின், அவர்மதமுந்தோன்றத் தலையென்றார். தூதென்பது அதிகாரத்தான் வந்தது. இவையிரண்டுபாட்டானும் தான் வகுத்துக்கூறுவானதிலக்கணங் கூறப்பட்டது.

கஅஅ. தூய்மை துணைமை துணிவுடைமை யிம்மூன்றின்
வாய்மை வழியுரைப்பான் பண்பு. அ.

இ - ள். வழி உரைப்பான் பண்பு - தன்னரசன் வார்த்தையை அவன் சொல்லிய வாறே வேற்றரசர்க்குச் சென்று சொல்லுவானதிலக்கணமாவன—தூய்மை-பொருள் காமங்களாற் றூயனாதலும்—துணைமை-தனக்கு அவரமைச்சர் துணையார்தன்மை யும்—துணிவுடைமை-துணிதலுடைமையும்—இம்மூன்றின் வாய்மை - இம்மூன்றோடு கூடிய மெய்ம்மையுமென விவை. எ - று.

உ.எ

## உ௦௦ எ௦ ம் அதி.—மன்னரைச்சேர்ந்தொழுகல்:

பொருள் காமங்கள் பற்றி வேறுபடக் கூறாமைப்பொருட்டுத்-தூய்மையும், தன்னரசனுக்கு உயர்ச்சிகூறியவழி எம்மனோர்க் கஃதியல்பெனக்கூறி அவர் வெகுளி தீர்க்குதற்பொருட்டுத் துணைமையும், இது சொல்லின் இவர்தீதுசெய்வரென் றொழியாமைப்பொருட்டுத் துணிவுடைமையும், யாவரானுந் தேறப்படுதற்பொருட்டு மெய்ம்மையும், வேண்டப்பட்டன. இன் ஒடுவின்பொருட்கண் வந்தது. (அ)

கஅகூ. விடுமாற்றம் வேந்தர்க் குரைப்பான் வடுமாற்றம்
வாய்சோரா வன்க ணவன். கூ.

இ - ள். விடு மாற்றம் வேந்தர்க்கு உரைப்பான் - தன்னரசன் சொல்லிவிட்ட வார்த்தையை வேற்றரசர்க்குச் சென்று சொல்லவுரியான்—வடு மாற்றம் வாய்சோரா வன்கணவன் - தனக்கு

வளுமேதத்திற்கஞ்சி அவனுக்குத் தாழ்வான வார்த்தையை வாய்சோர்ந்துஞ் சொல்லாத திண்மையை யுடையான். எ- று.

தாழ்வு சாதிதருமமன்மையின், வடுவென்றார். வாய்சோராவெனக் காரியல் கார ணத்தளடக்கப்பட்டது.
(௯)

௬௯0. இறுதி பயப்பினு மெஞ்சா திறைவற்
குறுதி பயப்பதாந் தூது. ௰.

இ - ள். இறுதி பயப்பினும் எஞ்சாது - அவ்வார்த்தை தன்னுயிர்க்கிறுதி தருமா யினும் அதற்கஞ்சி யொழியாது—இறைவற்கு உறுதிபயப்பது தூதாம் - தன்னரசன் சொல்லியவாறே அவனுக்கு மிகுதியை வேற்றரசரிடைச் சொல்லுவானே தூதுவான். எ - று.

இறுதிபயப்பினு மென்றதனால், ஏனைய பயத்தல் சொல்லவேண்டாவாயிற்று. இவை மூன்றுபாட்டானுங் கூறியது கூறுவானதிலக்கணங் கூறப்பட்டது. (௰)

---

## எ0 ம் அதி.—மன்னரைச்சேர்ந்தொழுகல்.

அஃதாவது அமைச்சர் அரசரைப் பொருந்தி யொழுகுமாறு. இது, வேந் தவாம் பண்புடைமை ௪ யென மேலே வேண்டப்பட்டமையின், தூதின்பின் வைக் கப்பட்டது.

௬௯௧. அகலா தணுகா தீக்காய்வார் போல்க
இகல்வேந்தர்ச் சேர்ந்தொழுகு வார். ௧.

இ - ள். இகல் வேந்தர்ச் சேர்ந்து ஒழுகுவார் - மாறுபடுதலையுடைய அரசரைச் சேர்ந்தொழுகும் அமைச்சர்—அகலாது அணுகாது தீக்காய்வார் போல்க - அவரை மிக நீங்குவதும் மிகச் செறிவதுஞ்

செய்யாது தீக்காய்வார்போல இடைநிலத்திலே நிற்க. எ - று.

கடிதின் வெகுளுந் தன்மையரென்பது தோன்ற, இகல்வேந்தரென்றார். மிகவகலிற் பயன் கொடாது மிகவணுகின் அவமதித்துச் சீறும் வேந்தர்க்கு, மிகவகலிற் குளிர் நீக்காது மிகவணுகிற் சுடுவதாய தீயோடொத்தாய தொழிலுவமம் பெறப் பட்டது.

(க)

* திருக்குறள், கஅக.



## எ0ம் அதி.—மன்னரைச்சேர்ந்தொழுகல்.

சுகூ௨. மன்னர் விழைப விழையாமை மன்னரான்
மன்னிய வாக்கந் தரும். உ.

இ - ள். மன்னர் விழைப விழையாமை - தம்மாற் சேரப்பட்ட மன்னர் விரும்பு வனவற்றைத் தாம் விரும்பாதொழிதல்—மன்னரான் மன்னிய ஆக்கம் தரும்- அமைச்சர்க்கு அவரானே நிலைபெற்ற செல்வத்தைக் கொடுக்கும். எ - று.

ஈண்டு விழைபவென்றது அவர்க்குச் சிறப்பாக வுரியவற்றை. அவை அரசர்ப்படு வன, ஒப்பனை, மேனமையுடையவை முதலாயின. இவற்றை ஒப்பிடக் கருதித் தாம் விழையாதொழியவே, அவர்களும் உவந்து அவர்தாமே எல்லாச் செல்வமும் நல்குவரென்பது கருத்து. எனவே, அவற்றை விரும்பிற் கேடுதரு மென்பதாம். (உ)

சுகூ௩. போற்றி னரியவை போற்றல் கடுத்தபின்
றேற்றுதல் யார்க்கு மரிது. ௩.

இ - ள். போற்றின் அரியவை போற்றல் - அமைச்சர் தம்மைக் காக்கக் கருதின் அரிய பிழைகள் தமகணுவாராமற் காக்க,—கடுத்தபின் தேற்றுதல் யார்க்கும் அரிது- அவற்றை வந்தனவாகக்கேட்டு அவ்வரசா

மற்று வினை மாற்றினகண் வாதது.
(௬)

௬௯௬. குறிப்பறிந்து காலங் கருதி வெறுப்பில
வேண்டுப வேட்பச் சொலல். ௬.

உ௦௨

## ௭௦ ம் அதி.—மன்னரைச்சேர்ந்தொழுகல்.

இ - ள். குறிப்பு அறிந்து - அரசனுக்குக் காரியஞ்சொல்லுங்கால் அப்பொழுது நிகழ்கின்ற அவன் குறிப்பினையறிந்து —காலம் கருதி-சொல்லுதற்கேற்ற காலத்தை யும்நோக்கி,—வெறுப்பு இல வேண்டுப வேட்பச் சொலல்-வெறுப்பிலவுமாய் வேண் டுவனவுமாய காரியங்களை அவன் மனம் விரும்பும்வகை சொல்லுக. எ - று.

குறிப்புக் காரியத்தின்கணன்றிக் காமவெகுளி யுள்ளிட்டவற்றி னிகழ்வழியும் அதற்கேலாக்காலத்துஞ் சொல்லுதல் பயனின்றாகலிற் குறிப்பறிந்து காலங்கருதி யென்றும், அவனுடம்படாதன முடிவுபோகாமையின் வெறுப்பிலவென்றும், பயனில் லவும் பயன்சுருங்கியவுஞ் செய்தல் வேண்டாமையின் வேண்டுப வென்றும், அவற்றை இனியவாய்ச சுருங்கி விளங்கிய பொருளவாய சொற்களாற் சொல்லுகவென்பார் வேட்புச சொலலென்றுங் கூறினர். (௬)

௬௯௭. வேட்பன சொல்லி வினையில வெஞ்ஞான்றுங்
கேட்பினுஞ் சொல்லா விடல். ௭.

இ - ள். வேட்பன சொல்லி-பயன் பெரியனவுமாய் அரசன் விரும்புவனவு மாய காரியங்களை அவன் கேட்டிலனாயினுஞ் சொல்லி,—எஞ்ஞான்றும் வினை இல கேட்பினுஞ் சொல்லாவிடல் - எஞ்ஞான்றும பயனிலவாயவற்றைத் தானே கேட்டா லுஞ் சொல்லாதுவிடுக. எ - று.

வினையிலவெனவுங் கேட்பினுமெனவும் வந்த சொற்களான், அவற்றின் மறு தலைசொற்கள் வருவிக்கப்பட்டன. வினையான் வருதலின வினையென்றும், வறுமைக் காலமுமடங்க எஞ்ஞான்று மென்றுங் கூறினர். சொல்லுவனவுஞ் சொல்லாதனவும் வகுத்துக் கூறியவாறு. இவைநான்குபாட்டாலும் சிறப்புவகையாற கூறப்பட்டது. ()

கூஅ. இளைய ரினமுறைய ரென்றிகழார் நின்ற
வொளியோ டொழுகப் படும். அ.

இ - ள். இளையர் இன முறையர் என்று இகழார் - இவர் எம்மினிளையரென்றும் எமக்கின்ன முறையினையுடையரென்றும் அரசரையவமதியாது,—நின்ற ஒளியோடு ஒழுகப்படும் - அவர்மாட்டு நின்றவொளியோடு பொருந்த ஒழுகுதல் செயப்படும். எ - று.

ஒளி—உறங்காநிற்கவுந் தாமுலகங்காக்கின்ற அவர் ஞெய் பொருந்தவொழுகலாவது அவர் கடவுளரு தாம் கடவுட்டன்மை. * அத மககளுமாயொழுகுதல்.
அவவொளியாற பேரகபபட்ட விளமையும் முறைபுமபற்றி இகழுவராயின, தாமும் போககபபடுவரெனபது கருதது. (அ)

கூகூ. கொளப்பட்டே மென்றெண்ணிக் கொள்ளாத செய்யார்
துளக்கற்ற காட்சி யவர். கூ.

இ - ள். கொளப்பட்டேம் என்று எண்ணிக்கொள்ளாத செய்யார் - அரசனால் யாம் நன்குமதிக்கப் பட்டேமென்று கருதி அவன் விரும்பாதவற்றைச் செய்யார்— துளக்கு அற்ற காட்சியவர் - நிலைபெற்ற வறிவினையுடையார். எ - று.

* உறவத் மாயிறு மன்னவன தன்மெனுவி—கறங்கு மதனடிமர் லவ யகல காகுமா— விறவரு கணைணிமை பாரவிழித தேமிருஷ—தறங்கள் வெல்வ வதனபுறம் காக்கலரா—சேகளிர் தாமணி, காமகனிலமபகம, கஞ்ச.

## எ௰ம் அதி.—குறிப்பறிதல்.

உ௫௪

கொள்ளாதனசெய் தழிவெய்தவர் கொளப்பாட்டிருக்குப்பின் றம்மை வேறொரு வராகக் கருதவராகலின், முன்னேயராகவே கருதி யஞ்சியொழுகுவாரைத் தனக் கற்ற காட்சியவரென்றார். (௯)

௭00. பழைய மெனக்கருதிப் பண்பல்ல செய்யுங்
கெழுதகைமை கேடு தரும். ௧0.

இ - ள். பழையம் எனக் கருதிப் பண்பு அல்ல செய்யும் கெழுதகைமை - அரச னுக்கு யாம் பழையமெனக் கருதித் தமக்கியல்பல்லாதவற்றைச் செய்யுமுரிமை— கேடு தரும் - அமைச்சர்க்குக் கேட்டினைப் பயக்கும். எ - று.

அவன் பொறுத செறும்பொழுதின் அப்பழமைநோக்கிக் கண்ணோடாது உயிரை வௌவுதலான், அவன்வேண்டாதன செய்தற்கேதுவாய கெழுதகைமை கேடுதருமென்றார். இவைமூன்றுபாட்டாலும் பொறுப்பரென்று அரசா வெறுப்பன செய்யற்கவென்பது கூறப்பட்டது. (௧0)

---

## எ௧ம் அதி.—குறிப்பறிதல்.

அஃதாவது அரசர் கருதியவதனை அவர் கூறாமலறிதல். இது

மன்னரைச் சேர்ந்தொழுகற்கு இன்றியமையாததாகலின், அதன்பின் வைக்கப்பட்டது.

௭௦௧. கூறாமை நோக்கக் குறிப்பறிவா னெஞ்ஞான்று
மாறாநீர் வையக் கணி. க.

இ-ள். குறிப்புக் கூறாமை நோக்கி அறிவான் - அரசனுற் குறித்த கருமத்தை அவன் கூறவேண்டாவகை அவன்முகத்தானும் கண்ணானும்நோக்கி அறியுமமைச்சன், எஞ்ஞான்றும் மாறா நீர் வையக்கு அணி - எஞ்ஞான்றும் வற்றாத நீரால்சூழப்பட்ட வையத்துள்ளார்க்கு ஓராபரணமாம். எ-று.

ஒட்பமுடையனும் எல்லார்க்கும் அழகுசெய்தலான், வையக்கணியென்றார். குறிப்பும் வையமும் ஆகுபெயர். வையத்திற்கென்பது விகாரப்பட்டு நின்றது. (க)

௭௦௨. ஐயப் படாஅ தகத்த துணர்வானைத்
தெய்வத்தோ டொப்பக் கொளல். உ.

இ-ள். அகத்தது ஐயப்படாது உணர்வானை - ஒருவன் மனத்தின்கணிகழ்வதனை ஐயப்படாது ஒருதலையாகவுணரவல்லானை—தெய்வத்தோடு ஒப்பக் கொளல்-மகனேயாயினும், தெய்வத்தோடொப்ப நன்குமதிக்க. எ-று.

உடம்பு முதலியவற்றான் ஒவ்வானாயினும் பிறர் நினைத்ததுணருந் தெய்வத் தன்மையுடைமையின் தெய்வத்தோடொப்ப வென்றார். (உ)

௭௦௩. குறிப்பிற் குறிப்புணர் வாரை யுறுப்பினுள்
யாது கொடுத்துங் கொளல். ௩.

இ-ள். குறிப்பின் குறிப்பு உணர்வாரை - தங்குறிப்பு நிகழுமாறறிந்து அதனாற் பிறர்குறிப்பறியுந்தன்மையாரை,—உறுப்பினுள் யாது கொடுத்தும் கொளல் - அரசர் தம்முறுப்புக்களுள் அவர் வேண்டுவதொன்றனைக் கொடுத்தாயினும், தமக்குத் துணையாகக் கொள்க. எ-று.

பயனில்லையென்பதாம். இவை இரண்டு பாட்டானும் குறிப்பறியாரிழிபு கூறப்பட்டது. (௫)

எ0௬ அடுத்தது காட்டும் பளிங்குபோ னெஞ்சங்
கடுத்தது காட்டு முகம். ௬.

இ - ள். அடுத்தது காட்டும் பளிங்குபோல் - தன்னையடுத்த பொருளது நிறத்தைத் தானே கொண்டு காட்டும் பளிங்குபோல,— நெஞ்சம் கடுத்தது முகம் காட்டும் - ஒருவன் நெஞ்சத்து மிக்கதனை அவன் முகம் தானே கொண்டு காட்டும். எ - று.

அடுத்ததென்பது ஆகுபெயர். கடுத்ததென்பது கடியென்னு முரிச்சொலடியாய் வந்த தொழிற்பெயர். உவமம் ஒருபொருள் பிறிதொருபொருளின் பண்பைக்கொண்டு தோற்றுதலாகிய தொழிலுவமை வந்தது. (௬)

எ0எ. முகத்தின் முதுக்குறைந்த துண்டோ வுவப்பினுங்
காயினுந் தான்முந் துறும். எ.

இ - ள். உவப்பினும் காயினும் தான் முந்துறும் - உயிர் ஒருவனையுவத்தலானும் காய்தலானுமுற்றன, தானறிந்து அவற்றினைக்கண் அதனின் முற்படும் தெரிவிக்குமாகலான்,— முகத்தின் முதுக்குறைந்தது உண்டோ - முகம்போல அறிவுமிக்கது பிறிதுண்டோ இல்லை. எ - று.

உயிர்க்கே அறிவுள்ளது ஐம்பூதங்களானியன்ற முகத்திற்கில்லையென்பாரை நோக்கி, உயிரது கருத்தறிந்து அஃதறிவதற்கு முன்னே மலர்தலும் காய்தலுஞ் செய்யும் வல்லான், உண்டென மறுப்பார் போன்று, குறிப்பறிதற்குக் கருவி கூறியவாறு. (எ)

## எஉ ம் அதி.—அவையறிதல்.

உ0௬

எ0அ முகநோக்கி நிற்க வமையு மகநோக்கி
யுற்ற துணர்வார்ப் பெறின். அ

இ - ள். அகம் நோக்கி உற்றது உணர்வார்ப் பெறின் - குறையுறவானும் தன் மனத்தைக் குறிப்பானறிந்து தானுற்றதனைத் தீர்ப்பாரைப் பெறின் — முகம் நோக்கி நிற்க அமையும் - அவர் தன்முகம் நோக்கும்வகை தானும் அவர்முகநோக்கி அவ்வெல்லைக்கணிற்க வமையும். எ - று.

உணர்வாரெனக் காரியத்தைக் காரணமாக்கிக் கூறினர். அவ்வெல்லையைக் கடந்து சொல்லுமாயின் இருவர்க்கும் [illegible]மைபா மாகலி ன். அ து வேண்டாவென்பதாம். குறையுறவானியல்பு கூறுவார்போன் று கருவி கூறியவாறு. இவை மூன்று பாட்டானுங் குறிப்பறிதற்கருவி முகமென்பது கூறப்பட்டது. (அ)

எ0கூ. பகைமையுங் கேண்மையுங் கண்ணுரைக்குங் கண்ணின்
வகைமை யுணர்வார்ப் பெறின். கூ.

இ - ள். கண்ணின் வகைமை உணர்வார்ப் பெறின் - வேந்தர் நோக்கு வேறுபாட்டின்றன்மையை அறியவல்ல அமைச்சரைப்பெறின்,—பகைமையும் கேண்மையும் கண் உரைக்கும் - அவர்க்கு மனத்துக்கிடந்த பகைமையையும் கேண்மையையும் வேற்று வேந்தர் சொல்லிற்றிலராயினும் அவர் கண்களே சொல்லும் எ - று.

இறுதிக்கட் கண் ஆகுபெயர். நோக்குவேறுபாடாவன வெறுத்தநோக்கமும் உவந்தநோக்கமும். உணர்தல் அவற்றை அவ்வக் குறிகளானறிதல். (கூ)

எக0. நுண்ணிய மென்பா ரளக்குங்கோல் காணுங்காற்
கண்ணல்ல தில்லை பிற. க0.

இ - ள். நுண்ணியம் என்பார் அளக்கும் கோல் - யாம் நுண்ணறிவுடையே மென்றிருக்கும் அமைச்சர் அரசர்கருத்தினை யளக்குங் கோலாவன—காணுங்கால் கண்ணல்லது பிற இல்லை - ஆராயுமிடத்

அவர்கண்ணல்லது பிறவில்லை. எ - று.

அறிவுண்மை அஃதுடையார்மேலே சேறப்பட்டது இங்ஙனம், வடிவு, தொழில், சொல்லென்பன முதலாகப் பிறர்களுக்குத்தனக்குமளவைகள் பல, அவையெல்லாம் முன்னறிந்தவழி அவரான் மறைக்கப்படும். நோக்கம் மனத்தொழிலாதலான் ஒன்றும் மறைக்கப்படாதென்பதுபற்றி, அதனையே பிரித்துக் கூறினார். இனி அவைக்குச்சோ என்று பாடமோதி, நுண்ணியமென்றிருக்கும் அமைச்சரை அரசனுக்குங்கோலாவது கண்ணெனவுரைத்து, தன்வெகுளிநோக்கால் அவர் வெகுடற்குறிப்பறிகவென்பது கருத்தாக்குவாருமுளர். இவையிரண்டுபாட்டானும் நுண்கருவி நோக்கென்பது கூறப்பட்டது.
(௭0)

---

## ௭௨ ம் அதி.—அவையறிதல்.

அஃதாவது அரசனோடிருந்த அவையினதியல்பையறிதல். காரியஞ்சொல்லுங்கால் அவன் குறிப்பறிதலேயன்றி இதுவும் வேண்டுதலின், இஃததன்பின் வைக்கப்பட்டது.

௭௧௧. அவையறிந் தாராய்ந்து சொல்லுக சொல்லின்
தொகையறிந்த தூய்மை யவர். க. ௨௮௪

௭௨ ம் அதி.—அவையறிதல்.

இ - ள். சொல்லின் தொகை அறிந்த தூய்மையவர் - சொல்லின் குழுவினை யறிந்த தூய்மையினையுடையார்—அவை அறிந்து ஆராய்ந்து சொல்லுக - தாமொன்று சொல்லுங்கால் அப்பொழுதையவையினையறிந்து ஆராய்ந்து சொல்லுக. எ - று.

சொல்லின்குழுவெனவே, செஞ்சொல், இலக்கணைச்சொல், குறிப்புச்சொல்லென் னும் மூவகைச்சொல்லுமடங்கின. தூய்மை

அவற்றுள் தமக்காகாதனவொழித்து ஆவன கோடல். அவையென்றது ஆண்டுதனளவை. அது மிகுதி, ஒப்பு, தாழ்வென மூவகைத்து. அறிதல் தம்மொடு தூக்கியறிதல். ஆராய்தல் இவ்வவைக்கட்சொல்லுங் காரியம் இது. சொல்லுமாறிது, சொன்னால் அதன்முடிவிதுவென்று இவை யுன்னிட் டவையாராய்த ல்.
(க)

எகஉ. இடைதெரிந்து நன்குணர்ந்து சொல்லுக சொல்லி
னடைதெரிந்த நன்மை யவர். உ.

இ - ள். சொல்லின் நடைதெரிந்த நன்மையவர் - சொற்களினடையினை ஆராய்ந் தறிந்த நன்மையினையுடையார் —இடைதெரிந்து நன்கு உணர்ந்து சொல்லுக - அவைக்கண் ஒன்றுசொல்லுங்கால் அதன்செவ்வியையாராய்ந்தறிந்து வழுப்படாமல் மிகவுந்தெளிந்துசொல்லுக. எ - று.

சொற்களினடையாவது அம்மூவகைச் சொல்லும் செம்பொருள், இலக்கணைப் பொருள், குறிப்புப்பொருளென்னும் பொருள்களைப் பயக்குமாறு. செவ்வி கேட்டற் கண் விருப்புடைமை. வழு சொல்வழுவும் பொருள்வழுவும். இவையிரண்டுபாட்டானும் ஒன்று சொல்லுங்கால் அவையறிந்தே சொல்லவேண்டுமென்பது கூறப்பட்டது.

எகங. அவையறியார் சொல்லல்மேற் கொள்பவர் சொல்லின்
வகையறியார் வல்லதூஉ மில். ங.

இ - ள். அவை அறியார் சொல்லல் மேற்கொள்பவர் சொல்லின் வகை அறி யார் - அவையினதளவையறியாது ஒன்று சொல்லுதலைத் தம்மேற்கொள்வார் அச் சொல்லுதலின் கூறுபாடும் அறியார்,—வல்லதூஉம் இல்-கற்றுவல்ல கலையும் அவர்க் கில்லை. எ - று.

அம்மூவகைச்சொற்களால் வருஞ் சொல்லுதல்வகைமை கேட்பாருணர்வு வகைமைபற்றி வருதலாற் சொல்லின்வகையறியா ரென்றும், இஃதறியார் யாது மறியாரென்று

எல்லாராலுமிகழப்படுதலின் வல்லதூஉமில்லென்றுங்கூறினர். இதனால் அவையறியாக்கால் வருங்குற்றங் கூறப்பட்டது. (௩)

எகச. ஒளியார்முன் னொள்ளிய ராதல் வெளியார்முன்
வான்சுதை வண்ணங் கொளல். ச.

இ - ள். ஒளியார்முன் ஒள்ளியர் ஆதல் - அறிவானொள்ளியாரவைக்கட் டாமு மொள்ளியராக,—வெளியார்முன் வான்சுதை வண்ணம் கொளல் - ஏனை வெள்ளையரவைக்கட் டாமும் வாலிய சுதையினிறத்தைக் கொள்க. எ - று.

ஒள்ளியாரென்றது மிக்காரையும் ஒத்தாரையும். அது விகாரத்தால் ஒளியாரென நின்றது. ஒள்ளியராதல் தந்நூலறிவுஞ் சொல்வன்மையுந்தோன்ற விரித்தல். அவை

---

* செஞ்சொல், இலக்கணைச்சொல், குறிப்புச்சொல்லென்பனவற்றை முறையே வாசகம், லக்ஷகம், வியஞ்சகம் எனவும்; † அவை பொருளை உணர்த்தும் வகையினை முறையே அபிதை, இலக்கணை, வியஞ்சனாவிருத்தியெனவும் கூறுவர் வடநூலார்.

## எ௨ ம் அதி.—அவையறிதல். உ.௦௪

அறியாத புல்லரை வெளியாரென்றது வயிரமின்மை நோக்கி வெளிதென்னும் வழக்குப் பற்றி. அவர் மதிக்கும்வகை அவரினும் வெள்ளையுடையராகவென்பார், வான்சுதை வண்ணங்கொளலென்றார். அவையளவறிந்தார் செய்யுந்திறம் இதனாற் றொகுத்துக் கூறப்பட்டது. முன்னர் விரித்துக்கூறுப. (௪)

எகரு. நன்றென்ற வற்றுள்ளு நன்றே முதுவருண்
முந்து கிளவாச் செறிவு. ரு.

இ - ள். நன்று என்றவற்றுள்ளும் நன்றே - ஒருவற்கு இது நன்றென்று சிறப்பித்துச்சொல்லப்பட்ட குணங்களெல்லாவற்றுள்ளும் நன்றே—முதுவருள் முந்து கிளவாச் செறிவு - தம்மின் மிக்காரவைக்கண் அவரின் முற்பட்டு ஒன்றினைச் சொல்லாதவடக்கம். எ - று.

தங்குறைவும் அவர்மிகுதியும் முந்துகிளந்தாற்படுமிழுக்குங் கிளவாக்காலெய்து நன்மையும் அறிந்தேயடங்கினமையின், அவ்வடக்கத்தினை நன்றென்றவற்றுள்ளுநன்றென்றார். முன்கிளத்தலையே விலக்கினமையின், உடன்கிளத்தலும் பின்கிளத்தலுமா மென்பது பெற்றாம். இதனான் மிக்காரவைக்கட்செய்யுந்திறங் கூறப்பட்டது. (ரு)

எகசு. ஆற்றி னிலைதளர்ந் தற்றே வியன்புல
மேற்றுணர்வார் முன்ன ரிழுக்கு. சு.

இ - ள். ஆற்றின் நிலை தளர்ந்தற்று-வீடெய்தற்பொருட்டு நன்னெறிக்கணின்றா னொருவன் அந்நெறியினின்றும் நிலை தளர்ந்து வீழ்ந்தாலொக்கும் — வியன் புலம் ஏற்று உணர்வார்முன்னர் இழுக்கு-அகன்ற நூற்பொருள்களையுட்கொண்டு அவற்றின் மெய்ம்மையுணரவல்லாரவைக்கண் வல்லானொருவன் சொல்லிழுக்குப்படுதல். எ-று.

நிலைதளர்ந்து வீழ்தல் “உரனென்னுந் தோட்டியானோரைந்துங்கா” த்தொழுகியான் பின்னிழுக்கிக் கூடாவொழுக்கத்தனாதல். பயனிழத்தலேயன்றி இகழவும்படு மென்பதாம். இதனான் அதன்கணிழுக் கியவழிப் படுங்குற்றங் கூறப்பட்டது. (சு)

எஎ. கற்றறிந்தார் கல்வி விளங்குங் கசடறச்
சொற்றெரிதல் வல்லா ரகத்து எ.

இ - ள். கசடு அறச் சொற்றெரிதல் வல்லாரகத்து - வழுப்படாமற் சொற்களை யாராய்தல் வல்லாரவைக்கட்சொல்லின்,—

கற்று அறிந்தார் கல்வி விளங்கும் - பல நூல்களையுங்கற்று அவற்றினுடைய பயனையறிந்தாரது கல்வி யாவர்க்கும் விளங்கித் தோன்றும். எ - று.

சொல்லினென்பது அவாய்நிலையான் வந்தது. ஆண்டே சொல்லுகவென்பதாம்.

எகஅ. உணர்வ துடையார்முற் சொல்லல் வளர்வதன்
பாத்தியு ணீர்சொரிந் தற்று. அ.

இ - ள். உணர்வது உடையார்முன் சொல்லல் - பிறருணர்த்தலின்றிப் பொருள் களைத் தாமேயுணரவல்ல அறிவினையுடையாரவைக்கட் கற்றார் ஒன்றினைச் சொல்லுதல்—வளர்வதன் பாத்தியுள் நீர்சொரிந்தற்று - தானே வளர்வதொரு பயிர் நின்ற பாத்திக்கண் நீரினைச் சொரிந்தாற்போலும். எ - று.

௪௩௪ எஉ ம். அவையஞ்சாமை.

இ - ள். வன்கண்ணரல்லார்க்கு வாளொடு என் - வன்கண்ணுமையுடையரல்லாதார்க்கு வாளோடென்ன விளைபுண்டு—நுண்ணவை அஞ்சுபவர்க்கு நூலொடு என்- அதுபோல நுண்ணியாரதவையை யஞ்சுவார்க்கு நூலோடென்ன விளைபுண்டு. எ-று.

இருந்தாரது நுண்மை அவைமேலேற்றப்பட்டது. நூற்குரியரல்லரென்பதாம்.()

எஉஎ. பகையகத்துப் பேடிகை யொள்வா ளவையகத்
தஞ்சு மவன்கற்ற நூல். எ.

இ - ள். பகையகத்துப் பேடி கை ஒள்வாள் - எறியப்படும் பகைநடுவண் அதனை யஞ்சும் பேடி பிடித்த கூர்வாளை யொக்கும்—அவையகத்து அஞ்சுமவன் கற்ற நூல் - சொல்லப்படும்

அவைக்கண் அதனை யஞ்சுமவன் கற்றநூல். எ - று.

பேடி பெண்ணியல்புமிக்கு ஆணியல்புமுடையவன்.
களமும்வாய்த்துத் தானும் நன்றாயிருந்ததேயாயினும் பிடித்தவன் குற்றத்தால் வான் சிறப்பின்றாயினாற்போல, அவையும் வாய்த்துத் தானும் நன்றாயிருந்ததேயாயினுங் கற்றவன் குற்றத்தால் நூல் சிறப்பின்றாயிற்று.
(எ)

எஉஅ. பல்லவை கற்றும் பயமிலரே நல்லவையு
ணன்கு செலச்சொல்லா தார். அ.

இ - ள். நல்லவையுள் நன்கு செலச் சொல்லாதார் - நல்லாரிருந்தவவைக்கண் நல்லசொற்பொருள் களைத் தம்மச்சத்தான் அவர்க்கேற்கச் சொல்லமாட்டாதார்—பல் அவை கற்றும் பயம் இலரே - பல நூல்களைக் கற்றாராயினும் உலகிற்குப் பயன்படுதலிலர். எ - று.

அறிவார்முற்சொல்லாமையிற் கல்வியினுண்மையறிவாரில்லையென்பதாம். இனிப் பயமிலரென்பதற்குக் கல்விப்பயனுடையரல்லரென்றுரைப்பாருமுளர். (அ)

எஉகூ. கல்லா தவரிற் கடையென்ப கற்றறிந்து
நல்லா ரவையஞ்சு வார். கூ.

இ - ள். கற்று அறிந்தும் நல்லார் அவை அஞ்சுவார் - நூல்களைக் கற்றுவைத்தும் அவற்றாற் பயனறிந்துவைத்தும் நல்லாரிருந்த அவையினையஞ்சி ஆண்டுச் சொல்லாதாரை—கல்லாதவரின் கடை என்ப - உலகத்தார் கல்லாதவரினும் கடையரென்று சொல்லுவர். எ - று.

அக்கல்வியறிவுகளாற்பயன் றாமெய்தாது பிறரையெய்துவிப்பதுஞ்செய்யாது கல்வித்துன்பமே யெய்துவித்தலின், கல்லாதவரிற் கடையென உலகம்பழிக்குமென்பதாம்.

இ - ள். தள்ளா விளையுளும் - குன்றாத விளையுளைச் செய்வோரும்—தக்காரும் - அறவோரும்—தாழ்வு இலாச் செல்வரும் - கேடில்லாத செல்வமுடையோரும்—சேர்வது நாடு - ஒருங்கு வாழ்வதே நாடாவது. எ - று.

மற்றையுயர்திணைப் பொருள்களோடுஞ் சேர்தற்றொழிலோடும் இயையாமையின், விளையுளென்பது உழவர்மேனின்றது. குன்றாமை எல்லாவுணவுகளும் நிறைவுள வாதல். இதனான் வாழ்வார்க்கு வறுமையின்மை பெறப்பட்டது. அறவோர் துறந்தோர், அந்தணர் முதலாயினர். "நற்றவஞ்செய் வார்க்கிடந் தவஞ்செய்வார்க்கு மஃ திடம்" என்றார் பிறரும். இதனால் அழிவின்மை பெறப்பட்டது. கேடில்லாமை வழங்கத்தொலையாமை. செல்வர் கலத்தினுங் காலினும் அரும்பொருடரும் வணிகர். இதனால் அரசனுக்கும் வாழ்வார்க்கும் பொருள் வாய்த்தல் பெறப்பட்டது. (க)

௭௩௨. பெரும்பொருளாற் பெட்டக்க தாகி யருங்கேட்டா
லாற்ற விளைவது நாடு. உ.

இ - ள். பெரும்பொருளால் பெட்டக்கது ஆகி - அளவிறந்த பொருளுடைமை யாற் பிறதேயத்தாராலும் விரும்பத்தக்கதாய்—அருங்கேட்டால் ஆற்றவிளைவது நாடு - கேடின்மையோடு கூடி மிக விளைவதே நாடாவது. எ - று.

அளவிறப்புப் பொருள்களது பன்மைமேலும் தனித்தனி அவற்றின் மிகுதிமேலும் நின்றது. கேடாவது மிக்கபெயல், பெயலின்மை, எலி, விட்டில், கிளி, அரசண்மையென்றிவற்றான் வருவது. "மிக்கபெய லோடுபெய லின்மையெலி விட்டில்கிளி - யக்கணர சண்மையோ டாறு." இவற்றை வடநூலார் ஈதிகளென்ப. இவற்றுள் முன்னையவற்றதின்மை அரசனறத்தானும், பின்னையதின்மை அவன்முறைத்தானும், வரும். இவ்வின்மைகளான் மிக விளைவதாயிற்று. (உ)

எகங. பொறையொருங்கு மேல்வருங்காற் றாங்கி யிறைவற்
கிறையொருங்கு நேர்வது நாடு. ௩.

இ - ள். பொறை ஒருங்கு மேல்வருங்கால் தாங்கி - பிறநாடுகள் பொறுத்த பார மெல்லாம் ஒருங்கே தன்கண்வருங்கால் அவற்றைத் தாங்கி—இறைவற்கு இறை

---

* நற்ற வஞ்செய் வார்க்கிடந் தவஞ்செய் வார்க்கு மஃதிடம்—நற்பொ ருள்செய் வார்க்கிடம் பொருள்செய் வார்க்கு மஃதிடம்—வெற்ற வின்பம் விழைவிப்பான் விண்ணுவந்து வீழ்ந்ததென—மற்ற நாடு வட்ட மாக வைகு மற்ற நாடரோ—சீவகசிந்தாமணி, நாமகளிலம்பகம், ௭௮.



ஒருங்கு நேர்வது நாடு - அவன்மேற்றன்னரசனுக்கு இறைப்பொருள் முழுவதையும் உடம்பட்டுக்கொடுப்பதே நாடாவது. எ - று.

பாரங்கள் மக்கட்டொகுதியும் ஆன் எருமை முதலிய விலங்குத் தொகுதியும். தாங்குதல் அவை தத்தந்தேயத்துப் பகை வந்திறுத்ததாக, அரசு கோல்கோடியதாக, உணவின்மையானாகத் தன்கண் வந்தால் அவ்வத்தேயங்களைப்போல இனிதிருப்பச் செய்தல். அச்செயலால் இறையைக் குறைபடுத்தாது தானே கொடுப்பதென்பார் இறையொருங்கு நேர்வதென்றார்.
(௩)

எ௧௪. உறுபசியு மோவாப் பிணியுஞ் செறுபகையுஞ்
சேரா தியல்வது நாடு. ௪.

இ - ள். உறு பசியும் - மிக்க பசியும்—ஓவாப் பிணியும் - நீங்காத நோயும்— செறுபகையும் சேராது - புறத்து நின்றுவந் தழிவுசெய்யும் பகையுமின்றி—இயல் வது நாடு - இனிது நடப்பதே நாடாவது. எ - று.

உறுபசி உழவருடைமையானும் ஆற்றவினைதலானும் சோராதாயிற்று. ஓவாப்பிணி நீக் காற்று மிக்ககுளிர் வெப்பங்களும் நகரப்பமெவற்றது நிமையுமின்மையிற் சோரா தாயிற்று. செறுபகை அரசனுற்றலும கிலைப்படையும் அடவியும் அரணுமுடைமையிற் சோராதாயிற்று. (௪)

எ௩௫. பல்குழுவும் பாழ்செய்யு முட்பகையும் வேந்தலைக்குங்
கொலகுறும்பு மில்லது நாடு. ௫.

இ - ள். பல் குழுவும் - சங்கேதவயத்தான் மாறுபட்டுக் கூடும் பலகூட்ட மும்— பாழ் செய்யும் உட்பகையும் - உடனுறையாநின்றே பாழாகச் செய்யுமுட்பகையும்— வேந்து அலைக்கும் கொல் குறும்பும் இல்லது நாடு - அளவுவந்தால் வேந்தனையலைக் குங் கொல்வினைக்குறும்பரு மில்லாததே நாடாவது. எ - று.

சங்கேதம் சாதிபற்றியும் கடவுள் பற்றியும் பலர்க்குனதாமொருமை. உட்பகை ஆறலைப்பார், கள்வர், குறளைகூறுவார் முதலியமக்களும, பனறி, புலி, காடி முதலிய விலங்குகளும். உட்பகை குறும்பென்பன ஆகுபெயர். இம்மூன்றும் அரசனாலும் வாழ் வாராலும கடியப்பட்டு நடப்பதே நாடென்பதாம். (௫)

எ௩௬. கேடறியாக் கெட்ட விடத்தும் வளங்குன்றா
நாடென்ப நாட்டிற் றலை. ௬.

இ - ள். கேடு அறியா - பகைவராற் கெடுதலறியாததாய்—கெட்டவிடத்தும் வளம் குன்றுநாடு - அரிதிற்கெட்டதாயினும் அப்பொழுதுந் தன்வளங்குன்றாத நாட்டினை—நாட்டின் தலை என்ப - எல்லாநாட்டினுந் தலையென்றுசொல்லுவர் நூலோர். எ - று.

அழியாத குன்றாதவென்னும் பெயரெச்சங்களினிறுதிகிலேகன் விகாரத்தாற்றொக் கன. கேடறியாமை அரசனாற்றலாலுங் கடவுட்பூசையறங்களென்றிவற்றது செய லாலும் வரும், வளம் ஆகரங்களிற்பவெனவும் வயலினுந் தண்டலையினும் விளைவனவு மாம். குன்றாமை அவை செய்யவேண்டாமல் இயல்பாகவேபுனலாயும் முன்னிட்டப் பட்டெக்குறைவறுதல். இவையாறுபாட்டாலும் நாட்டிலக்கணங் கூறப்பட்டது. (ச)

எ உஎ. இருபுனலும் வாய்ந்த மலையும் வருபுனலும்

வல்லரணு நாட்டிற் குறுப்பு. ரு.

எசம் அதிகாரம். உகரு

இ - ள். இருபுனலும் - கீழ்நீர் மேனீரெனப்பட்ட தண்ணீரும்—வாய்ந்தமலை யும் - வாய்ப்புடைத்தாய மலையும்—வருபுனலும் - அதனினின்றும் வருவதாய நீரும்— வல்லரணும் - அழியாத ஈகரியும்—நாட்டிற்கு உறுப்பு - நாட்டிற்கவயவமாம். எ - று.

ஈண்டுப் புனலென்றது தூரவு கே ணிகளும் ஏரிகளும் ஆறுகளுமாகிய ஆதாரங்களை. அவயவமாதற்குரியன அவையேயாகலின். அவற்றான் வானம் வறப்பினும் வள னுடைமை பெறப்பட்டது இடையதன் றியொருபுடையதாகலும், தன்வளந் தரு தலும் மாரிக்கணுண்டநீர் கோடைக்கணுமிழ்தலுமுடைமைபற்றி வாய்ந்த மலையென் றார். அரண் ஆகுபெயர். இதனான் அதனவயவ ங் கூறப்பட்டது. (எ)

எகஅ. பிணியின்மை செல்வம் விளைவின்ப மேம

மணியென்ப நாட்டிற்கிவ் வைந்து. அ.

இ - ள். பிணியின்மை செல்வம் விளைவு இன்பம் ஏமம் இவ்வைந்து - நோயின் மையுஞ் செல்வம் விளைதல் இன்பம் காவலென்றிவை புடைமையுமாகிய இவ் வைந்தினையும்—நாட்டிற்கு அணி என்ப - நாட்டிற்கழகென்று சொல்லுவர் நூலோர். எ - று.

பிணியின்மை கிலகலத்தான் வருவது. செல்வம் மேற்சொல்லியன.

இன்பம் விழவும் வேள்வியுஞ் சான்றோருமுடைமையானும், நுகர்வனவுடைமையானும், நிலநீர்களது நன்மையானும், வாழ்வார்க்கு உண்ணிகழ்வது. காவலெனவே அரசன்காவலும் வாழ்வோர் காவலும் அரண்காவலு மடங்கின. பிறதேயங்களிலுள்ளாரும் விழைந்து பின் அவையுள்ளாமைக்கேதுவாய அதனழகு இதனாற் கூறப்பட்டது. (அ)

எகக. நாடென்ப நாடா வளத்தன நாடல்ல
நாட வளந்தரு நாடு. கூ.

இ - ள். நாடா வளத்தன நாடு என்ப - தங்கண்வாழ்வார்தேடி வருந்தாமல் அவர்பாற்றானே யடையுஞ் செல்வத்தையுடையவற்றை நூலோர் நாடென்று சொல்லுவர்;—நாட வளம் தரும் நாடு நாடு அல்ல - ஆதலாற் றேடிவருந்தச் செல்வமடைவிக்கும் நாடுகள் நாடாகா. எ - று.

நாடுதல் இருவழியும் வருத்தத்தின்மேனின்றது. "பொருள் செய்வார்க்குமஃ திடம்" என்றார் பிறரும். நூலோர் விதிபற்றி எதிர்மறைமுகத்தாற் குற்றங்கூறிய வாறு. இவ்வாறன்றி பின், அனுவாதமாம்.

என்பவென்பதனைப் பின்னுங்கூட்டி இருபொருள்பட வுரைப் (கூ)

எசo. ஆங்கமை வெய்தியக் கண்ணும் பயமின்றே
வேந்தமை வில்லாத நாடு. கo.

இ - ள். வேந்து அமைவு இல்லாத நாடு - வேந்தனோடு மேவுதலில்லாத நாடு— ஆங்கு அமைவு எய்தியக் கண்ணும் பயம் இன்றே - மேற்சொல்லிய குணங்களெல்லா வற்றினும் நிறைந்திருந்ததாயினும் அவற்றாற் பயனுடைத்தன்று. எ - று.

வேந்தமைவெனவே, குடிகள் அவன்மாட்டன்புடையாதலும் அவன்றான் இவர் மாட்டருளுடையனாதலும் அடங்கின. அவை யில்வழி வாழ்வோரின்மையின், அவற் றாற் பயனின்றாயிற்று. இவையிரண்போட்டாலும் அதன்குற்றங் கூறப்பட்டது. (கo)

* மேலே உசச-ம் பக்கத்திற்காட்டிய சுற்றவருசெய்வார்க்கிடம் என்னுஞ் செய்யுளின் உள்ளது.

## எரு-ம் அதிகாரம்.—அரண்.

இனி அக்காட்டிற்றுப்பாயபடைக்குமாயினும் பகைவராலிறுக்கப்பட்ட வக்குழி அஃது தனக்கும் அரசன்றனக்கும் ஏமமாதற்சிறப்புப்பற்றிப் பிறிதொன்றாக வேறாய் பட்ட அரண் இவ்வதிகாரத்தாற் கூறுகின்றார்.

எசக. ஆற்று பவர்க்கு மரண்பொரு ளஞ்சித்தற்
போற்று பவர்க்கும் பொருள். க.

இ - ள். ஆற்றுபவர்க்கும் அரண் பொருள் - மூவகையாற்றலுமுடையராய்ப் பிறர் மேற் செல்வார்க்கும் அரண் சிறந்தது;—அஞ்சித் தற்போற்றுபவர்க்கும் (அரண்) பொருள் - அவையின்றித் தம்மேல் வருவார்க்கஞ்சித் தன்னையேயடைவார்க்கும் அரண்சிறந்தது. எ - று.

பிறர்மேற் செல்லுங்கால் உரிமை பொருள் முதலியவற்றைப் பிறனொருவன் வெளவாமல் வைத்துச் செல்லவேண்டுமாகலானும், அப்பெருமை தொலைந்திறந்த வக்குழிக் கடலுள்ளுடைகலத்தார்போன்று ஏமங்காணாதிறுவராகலானும், ஆற்றுபவர்க்கும் போற்றுபவர்க்கும் அரண் பொருளாயிற்று. ஆற்றலுடையராயினும் அரணில்வழி அழியும் பாலராகலின், அவரை முற்கூறினார். இதனால் அரணினது சிறப்புக் கூறப்பட்டது. (க)

எசஉ. மணிநீரு மண்ணு மலையு மணிநிழற்
காடு முடைய தரண். உ.

இ - ள். மணி நீரும் மண்ணும் மலையும் அணிநிழற்காடும்

உடையது அரண் - மணிபோலு நிறத்தினையுடைய நீரும் வெள்ளிடை நிலமும் மலையும் குளிர்ந்த நிழலையுடைய காடுமுடையதே அரணாவது. எ - று.

எஞ்ஞான்றும் வற்றாத நீரென்பார் மணிநீரென்றும், நீருநிழலுமில்லா மருநில மென்பார் மண்ணென்றும், செறிந்த காடென்பார் அணிநிழற்காடென்றுங் கூறினார். மதிற்புறத்து மருநிலம்பகைவர் அரண்பற்றாமைப்பொருட்டு. நீரரண், நிலவரண், மலையரண் காட்டரணென இயற்கையுஞ் செயற்கையுமாய இந்நான்கானுஞ் சூழப்படுவது அரணென்பதாம்.
(உ.)

௭௪௩. உயர்வகலந் திண்மை யருமையிந் நான்கின்
அமைவர ணென்றுரைக்கு நூல். ௩.

இ - ள். உயர்வு அகலம் திண்மை அருமை இந்நான்கின் அமைவு - உயர்ச்சியும்
அகலமுந் திண்மையும் அருமையுமென்று சொல்லப்பட்ட இந்நான்கின் மிகுதியையுடைய மதிலை—அரண் என்று உரைக்கும் நூல் - அரணென்று சொல்லுவர் நூலோர். எ - று.

அமைவு நூலென்பன ஆகுபெயர். உயர்வு ஏணியெய்தாதது. அகலம் புறத்தோர்க்கு அகழலாகா அடியகலமும், அகத்தோர்க்கு நின்று வினைசெய்யலாந் தலையகலமும். திண்மை கல்லிட்டிகைகளாற் செய்தலிற் குத்தப்படாமை. அருமை பொறிகளான் அணுகற்கருமை. பொறிகளாவன "வளைவிற் பொறியு மயிற்பொறி நிலையுங்—கருவிர லூகமுங் கல்லுமிழ் கவணும்—பரிவுறு வெந்நெயும் பாகடு குழிசியும்—காய்பொன் னுலையுங் கல்லிடு

## உ௯௩ எசு ம் அதி.—பொருள்செயல்வகை.

*எசஅ. முற்றாற்றி முற்றி யவரையும் பற்றாற்றிப்*
*பற்றியார் வெல்வ தரண்.* அ.

இ - ள். முற்று ஆற்றி முற்றியவரையும் - தானைப்பெருமையாற் சூழ்தல்வல்ல ராய் வந்து சூழ்ந்த புறத்தோரையும்—பற்றியார் பற்று ஆற்றி வெல்வது அரண் - தன்னைப்பற்றியவகத்தோர்தாம் பற்றியவிடம் விடாதே நின்று பொருது வெல்வதே அரணாவது. எ - று.

உம்மை சிறப்பும்மை. பற்றின்கண்ணேயாற்றியெனவிரியும். பற்று ஆகுபெயர். வெல்வதென உடையார்தொழில் அரண்மேனின்றது. பெரும்படையானைச் சிறுபடை யான் பொறுத்து நிற்குந் துணையயன்றி வெல்லுமியல்பினதென்பதாம். இதற்குப் பிறிதுரைப்பாருமுளர். இவையேழுபாட்டாலும் அதனிலக்கணங் கூறப்பட்டது. ()

*எசக. முனைமுகத்து மாற்றலர் சாய வினைமுகத்து*
*வீறெய்தி மாண்ட தரண்.* ௯.

இ - ள். முனைமுகத்து மாற்றலர் சாய வினைமுகத்து வீறு எய்தி - போர்தொடங் கினவளவிலே பகைவர் கெடும்வண்ணம் அகத்தோர் செய்யும் வினைவேறுபாடுக ளான் வீறுபெற்று—மாண்டது அரண் - மற்றும் வேண்மோட்சியையுடையதே அரணாவது. எ - று.

தொடக்கத்திற் கெட்டார் பின்னுங் கூடிப் பொருதல் கத்துச்சாயவென்றார். வினைவேறுபாடுகளாவன பகைவர்

கூடாமையின், முனைமு
தொடங்கிய போரினை

பறித்து எய்தல், எறிதல், குத்துதல், வெட்டுதலென்றிவை முதலாய வினைகளுள் அதனைச் சாய்ப்பனசெய்தல். மற்றும் வேண்மொட்சியென்றது புறத்தோரறியாமற் புகுதல் போதல் செய்தற்குக் கண்ட சுருங்கைவழி முதலாயின வுடைமை. (௯)

௭௫0. எனைமாட்சித் தாகியக் கண்ணும் வினைமாட்சி
இல்லார்க ணில்லது அரண். ௧0.

இ - ள். அரண் - அரண்,—எனைமாட்சித்து ஆகியக்கண்ணும் - மேற்சொல்லப் பட்ட மாட்சியெல்லாமுடைத்தாய விடத்தும்,—வினைமாட்சி இல்லார்கண் இல்லது - வினைசெய்தற்கண் மாட்சியில்லாதார்மாட்டு அவையிலதாம். எ - று.

வாளாவிருத்தலும் அளவறியாது செய்தலும் ஏலாதது செய்தலுமெல்லாம் அடங்க வினைமாட்சியில்லாரென்றும், ஏற்றவினையை யளவறிந்துசெய்து காவாக்கால் அம்மாட்சிகளாற் பயனின்றி யழியுமென்பார் அவையுடைத்தன்றென்றுங் கூறினார். இவை யிரண்டுபாட்டானுங் காப்பாரையின்றியமையாதென்பது கூறப்பட்டது. (௧0)

---

## ௭௬ம் அதி.—பொருள்செயல்வகை.

இனிப் பெரும்பான்மையும் நாட்டானும் அரணானும் ஆக்கவும் காக்கவும் படுவ தாய பொருளைச் செய்தலின்றிறம் இவ்வதிகாரத்தாற் கூறுகின்றார்.

௭௫௧. பொருளல் லவரைப் பொருளாகச் செய்யும்
பொருளல்ல தில்லை பொருள்.

௭௬ம் அதி.—பொருள்செயல்வகை.

இ - ள். பொருள் அல்லவரைப் பொருளாகச் செய்யும் பொருளல்லது - ஒரு பொருளாக மதிக்கப்படாதாரையும் படுவாராகச் செய்யவல்ல பொருளையொழிய— பொருள் இல்லை - ஒருவனுக்குப் பொருளாவதில்லை. எ - று.

மதிக்கப்படாதார் அறிவிலாதார், இழிகுலத்தார். இழிவு சிறப்பும்மை விகாரத் தாற்றொக்கது. மதிக்கப்படுவாராகச் செய்தல் அறிவுடையாரும் உயர்குலத்தாரும் அவர்பாற்சென்று நிற்கப் பண்ணுதல். அதனால் ஈட்டப்படுவது அதுவே பிறிதில்லை யென்பதாம். (க)

எருஉ. இல்லாரை யெல்லாரு மெள்ளுவர் செல்வரை
யெல்லாருஞ் செய்வர் சிறப்பு.* உ.

இ - ள். இல்லாரை எல்லாரும் எள்ளுவர் - எல்லாநன்மையு முடையராயினும் பொருளில்லாரை யாவருமிகழ்வர்,—செல்வரை எல்லாரும் சிறப்புச் செய்வர் - எல் லாத்தீமையுமுடையராயினும் அஃதுடையாரை யாவருமுயரச்செய்வர். எ - று.

உயரச்செய்தல் தாந்தாழ்ந்து நிற்றல். இகழ்தற்கண்ணுந் தாழ்தற்கண்ணும் பகைவர், நட்டார், நொதுமலரென்னும் மூவகையாருமொத்தலின், யாவருமென்றார். பின் னுங் கூறியது அதனை வலியுறுத்தற்பொருட்டு. (உ)

எருங. பொருளென்னும் பொய்யா விளக்க மிருளறுக்கு
மெண்ணிய தேயத்துச் சென்று. ங.

இ - ள். பொருள் என்னும் பொய்யா விளக்கம் - பொருளென்று எல்லாராலுஞ் சிறப்பிக்கப்படும் நந்தாவிளக்கு—எண்ணியதேயத்துச் சென்று இருள் அறுக்கும்— தன்னைச் செய்தவர்க்கு அவர் நினைத்த தேயத்துச் சென்று பகையென்னுமிருளைக் கெடுக்கும். எ - று.

எல்லார்க்கும் எஞ்ஞான்றும் இன்றியமையாததாய் வருதல்

பற்றிப் பொய்யா விளக்கமென்றும், எனை விளக கோடு இதனிடை வேற்றுமைதோன்ற எண்ணியதேயத் துச்சென்றென்றும கூறினார். ஏகதேசவுருவகம். இவைமூன்றுபாட்டானும் பொருளது சிறப்புக் கூறப்பட்டது. (௩)

எருச. அறனீனு மின்பமு மீனுந் திறனறிந்து
தீதின்றி வந்த பொருள்.

இ - ள். திறன் அறிந்து தீது இன்றி வந்த பொருள் * செய்யுந்திறத்தினையறிந்து அரசன் கொடுங்கோன்மையிலனாக உளதாயபொருள்—அறன் ஈனும் இன்பமும் ஈனும் - அவனுக்கு அறத்தைபுங்கொடுக்கும், இன்பத்தைபுங்கொடுக்கும். எ - று.

செய்யுந்திறம் தான் பொருள்செய்தற்குரிய நெறி. இலனாகவென்பது இன்றி யெனத் திரிந்துநின்றது. செங்கோலனென்று புகழப்படுதலாலும் கடவுட்பூசை தானங்களாற் பயனெய்தலாலும் அறனீனுமென்றும், நெடுங்காலநின்று துய்க்கப்படு தலான் இன்பமுமீனுமென்றுங் கூறினார். அதனான் அத்திறத்தானீட்டுக வென்பதாம்.

எருரு. அருளொடு மன்பொடும் வாராப் பொருளாக்கம்
புல்லார் புரள விடல். (௫)

---

* இத்திருக்குறள் சேரமான்பெருமாணாயனார் திருக்கைலாய ஞானவுலாவில் எடுத்தாளப்பட்டது.

[illegible] ...ம் அதி—பொருள்செயல்வகை.

இ - ள். அருளொடும் அன்பொடும் வாராப் பொருள் ஆக்கம் - தான்குடிகண் மாட்டுச் செய்யுமருளோடும் அவர் தன்மாட்டுச் செய்யுமன்பொடுங்கூடி வாராதபொருளீட்டத்தை—புல்லார் புரளவிடல்

- அரசர் பொருள்தாறு கழியவிடே. எ - று.

அவற்றோடு கூடிவருதலாவது ஆறிலொன்றாய் வருதல். அவ்வாறு வாராத பொரு ளீட்டம் பசுமட்கலத்துணீர்போலச் செய்தானையுங்கொண்டிறத்தலின், அதனைப் புலவரொன்றொழியாது புரளவிடலென்றுங் கூறினர். (௪)

௭௫௬. உறுபொருளு முல்கு பொருளுந்தன் னொன்னார்த்
தெறுபொருளும் வேந்தன் பொருள். ௬.

இ - ள். உறு பொருளும் - உடையாரின்மையிற் றானேவந்துற்ற பொருளும் — உல்கு பொருளும் - சுங்கமாகிய பொருளும் — தன் ஒன்னார்த் தெறுபொருளும் - தன் பகைவரைத் திறையாகக்கொள்ளும் பொருளும் — வேந்தன் பொருள் - அரசனுக்குரிய பொருள்கள். எ - று.

உறுபொருள் வைத்தாரிறந்துபோக நெடுங்காலம் நிலத்தின்கட் கிடந்து பின் கண்டெடுத்ததூஉம், தாயத்தார் பெறுநரிலதூஉமாம். சுங்கம் கலத்தினுங் காலினும் வரும் பண்டங்கட்கிறையாயது. தெறுபொருள் தெறுதலான் வரும் பொருளென விரியும். ஆறிலொன்றொழியவும் உரியன கூறியவாறு. இவை மூன்றுபாட்டானும்

அஃதீட்டு நெறி கூறப்பட்டது. (௬)

௭௫௭. அருளென்னு மன்பீன் குழவி பொருளென்னுஞ்
செல்வச் செவிலியா லுண்டு. ௭.

இ - ள். அன்பு ஈன் அருள் என்னும் குழவி - அன்பினாலீனப்பட்ட அருளென் னுங்குழவி — பொருள் என்னும் செல்வச் செவிலியால் உண்டு - பொருளென்று உயர்த்துச்சொல்லப்படுஞ் செல்வத்தையுடைய செவிலியான் வளரும். எ - று.

இ - ள். பொருளைச் செய்க - தமக்கொன்றாண்டாகக் கருதுவார் பொருளையுண் டாக்குக;—செறுநர் செருக்கு அறுக்கும் எஃகு - தம்பகைவர் தருக்கினையறுக்கும் படைக்கலம் அதுவாம்;—அதனிற் கூரியது இல் - அதற்கதுபோலக் கூரிய படைக் கலம் பிறிதில்லை. எ- று.

அதுவாம், அதற்கென்பன அவாய்நிலையான் வந்தன பொருளைச் செய்யவே பெரும்படையும் நட்புமுடையராவர், ஆகவே, பகைவர் தருக்கொழிந்து தாமேயடங் குவரென்பார் செறுநர்செருக்கறுக்குமெஃகென்றும், ஏனையெஃகுகள் அதுபோல அருவப்பொருளையறுக்கமாட்டாமையின் அதனிற்கூரிய தில்லென்றுங்கூறினர். (க)

எகo. ஒண்பொருள் காழ்ப்ப வியற்றியார்க் கெண்பொரு
ளேனை யிரண்டு மொருங்கு. ௧0.

இ - ள். ஒண்பொருள் காழ்ப்ப இயற்றியார்க்கு - நெறியான்வரும் பொருளை இறப்ப மிகப் படைத்தார்க்கு—ஏனை இரண்டும் ஒருங்கு எண்பொருள்-மற்றையறனு மின்பமும் ஒருங்கேயெளிய பொருள்களாம். எ - று.

காழ்த்தல் முதிர்தல். பயன்கொடுத்தல்லது போகாமையின் ஒண்பொருளென் றும், ஏனையிரண்டும் அதன் விளைவாகலிற் றமே யொருகாலத்திலேயுளவாமென்பார் எண்பொருளென்றுங்கூறினர். இவை நான்குபாட்டானும் அதனுன் வரும்பயன் கூறப்பட்டது.
(௧0)

---

# எஎ ம் அதி.—படைமாட்சி.

இனி அப்பொருளினுளவதாய் வெல்வதாய படை இரண்டதிகாரத்தாற் கூறு வான்றொடங்கி, முதற்கட் படைமாட்சி கூறுகின்றார். அஃதாவது படையினது தன்மை.

௭௬௧. உறுப்பமைந் தூறஞ்சா வெல்படை வேந்தன்
வெறுக்கையு ளெல்லாந் தலை. ௧.

இ - ள். உறுப்பு அமைந்து ஊறு அஞ்சா வெல்படை - யானை முதலிய நான் குறுப்பானும் நிறைந்து போரின்கணூறுபடுதற்கஞ்சாது நின்று பகையை வெல்வதாய படை—வேந்தன் வெறுக்கையுள் எல்லாம் தலை - அரசன் செல்வங்களெல்லாவற்றுள் ளுந் தலையாய செல்வம். எ - று.

நன்மைப் படையென்றது அக்காலங்கள்தொறுநிலை. ஊறஞ்சியவழி வேறல்கூடா மையின் ஊறஞ்சாவென்றும், ஒழிந்தவெல்லாங்கட்கும் அரசன்றனக்குங் காவலாகலின் வெறுக்கையுளெல்லாந் தலையென்றுங் கூறினார். (௧)

௭௬௨. உலைவிடத் தூறஞ்சா வன்கண் டொலைவிடத்துத்
தொல்படைக் கல்லா லரிது. ௨.

இ - ள். தொலைவிடத்து உலைவிடத்து ஊறு அஞ்சா வன்கண் - தான் சிறிதாய் வழியும் அரசற்குப் போரின்கணுலைவுவந்தால்
தன்மேலுறுவதற்கஞ்சாது நின்று தாங் உ௨௦ ஏள ம
அதி—படைமாட்சி.

கும் வன்கண்மை—தொல்படைக்கல்லால் அரிது - அவன் முன்னோரைத் தொடங்கி வரும் படைக்கல்லது உளதாகாது. எ - று.

இழிவு சிறப்பும்மை விகாரத்தாற்றொக்கது. மூலப்படை, கூலிப்படை, நாட்டுப் படை, காட்டுப்படை, துணைப்படை, பகைப்படையென்னும் அறுவகைப்படையுள் ளுஞ் சிறப்புடையது மூலப்படையாகலான், அதனை அரசன் "வெ ல்பொறிபு நாமம் விழுப்பொருளோர் தன்னடையும்—கொல்களிறுமாவுங் கொடுத்தளிக்க" என்பது குறிப்பெச்சம். இப்படையை வடநூலார் மௌலமென்ப. (௨)

எகாடு. ஒலித்தக்கா லென்னு முவரி யெலிப்பகை
நாக முயிர்ப்பக் கெடும். ௩.

இ - ள். எலிப்பகை உவரி ஒலித்தக்கால் என்னும்-எலியாயபகை திரண்டு கடல் போலவொலித்தால் நாகத்திற்கு என்னவேதம் வரும்!—நாகம் உயிர்ப்பக் கெடும் - அந்நாகமுயிர்த்தளவானே அது தானே கெடும். எ - று.

உவமைச்சொற் றொக்குநின்றது. இத்தொழிலுவமத்தாற் றிரட்சிபெற்றும், வீர ரல்லாதார் பலர் திரண்டார்த்தால் அதற்கு வீரனஞ்சான் அவன்சீறிர்த்த வளவானே அவர் தாங்கெடுவரென்பது தோன்ற நின்றமை யின், இது பிறிதுமொழிதலென்னு மலங்கா ரம். வீரரல்லாதார் பலரினும் வீரனொருவனேயமைதல் நன்றென்பதாம். இவை மூன்றுபாட்டானும் முறையே அரசனுக்குப் படை வினயங்களுட் சிறந்ததென்ப துடம், அதுதன்னுள்ளும் மூலப்படை சிறந்ததென்பதுடம், அதுதன்னுள்ளும் வீரன் சிறந்தானென்பதுடைய கூறப்பட்டன. (௩)

எகாச. அழிவின் றறைபோகா தாகி வழிவந்த
வன்க ணதுவே படை. ௪.

இ - ள். அழிவு இன்று - போரின்கட்கெடுதலின்றி—அறைபோகாதாகி - பகை வர்ற் கீழறுக்கப்படாததாய்—வழிவந்த வன்கணதுவே படை - தொன்றுதொட்டு வந்த தறுகணமையையுடையதே அரசனுக்குப் படையாவது. எ - று.

அழிவின்மையான் மறமானங்களுடைமையும், அறைபோகாமையான் அரசன் மாட்டன்புடைமையும் பெறப்பட்டன. வழிவந்த வன்கண்மை "கன்னின்று னெந்தை கணவன் களப்பட்டான்—முன்னின்று மொய்யவிந்தா ரென்னையர் - பின்னின்று— கைபோய்க் கணைபுதைப்பக் காவலன்

ஈன்னெறிக்க ட்சேறலும் அரசனுந்தேறப் படுதலுமென இந்நான்கு குணமுமே—படைக்கு எமம் - படைக்கு அரணாவது. எ-று.

இவற்றுள் முறையே பகைவரைக் கடிதிற்கொன்றுமிற்றலும், அரசனுக்குத் தாழ்வுவாராமற்காத்தலும், "அழிபுகர்புறக்கொடையயில்வாளோச்சா†" மை முதலிய வும், அறைபோகாமையுமாகிய செய்கைகள் பெறப்பட்டன. இச்செய்கையார்க்குப் பகைவர் ஈனுகாராகலின், வேறரண் வேண்டாவென்பதாம். (௬)

எகள. தார்தாங்கிச் செல்வது தானை தலைவந்த
போர்தாங்குந் தன்மை யறிந்து. எ.

இ - ள். தலைவந்த போர் தாங்கும் தன்மை அறிந்து - மாற்றாரால் வகுக்கப்பட் டுத் தன்மேல்வந்த படையின்போரை விலக்கும் வகுப்பறிந்து வகுத்துக்கொண்டு— தார் தாங்கிச் செல்வது தானை - அவர் தூசியைத் தன்மேல் வாராமற்றடுத்துத் தான் அதன்மேற் செல்வதே படையாவது. எ - று.

படைவகுப்பாவது வியூகம்; அஃது எழுவகையுறுப்பிற்றாய், வகையானன்காய், விரியான்முப்பதாம் ‡ உறுப்பேழாவன உரமுதற்கோடியீறுயின. வ கைநான்காவன தண்டம், மண்டலம், அசங்கதம், போகமெனவிவை௫. விரி முப்பதாவன தண்டவிரி பதினேழும், மண்டலவிரி இரண்டும், அசங்கதவிரியாறும், போகவிரியைந்துமென விவை௦. இவற்றின்பெயர்களும் இலக்கணமும் ஈண்டுரைப்பிற்பெருகும்; அவை யெல்லாம் வடநூல்களுட்கண்டுகொள்க. இவைநான்குபாட்டானும் ப டையினதிலக் கணங் கூறப்பட்டது.
(எ)

எகஅ. அடற்றகையு மாற்றலு மில்லெனினுந் தானை
படைத்தகையாற் பாடு பெறும். அ.

---

* மருந்தில் கூற்றந் தருந்தொழுல சாயா—புறநானூறு, ௯.

வெய்தும். எ - று.

இல்லெனினுமெனவே, அவற்றினின்றியமையாமை பெறப்பட்டது. படைத்தகை வென்றது ஒருபெயர்மாத்திரமாய் நின்றது. தோற்றப்பொலிவாவது அலங்கரிக்கப் பட்ட தேர், யானை, குதிரைகளுடனும் பதாகை, கொடி, குடை, பல்லியம், காளம் முதலியவற்றுடனும் அணிந்து தோன்றுமழகு. பாடு கண்டளவிலே பகைவர்க்கு ச்சம் பெருமை. (அ)

எசுகூ சிறுமையுஞ் செல்லாத் துனியும் வறுமையு
மில்லாயின் வெல்லும் படை. கூ.

இ - ள். சிறுமையும் செல்லாத் துனியும் வறுமையும் இல்லாயின் - தான் தேய்ந்து சிறிதாகலும் மனத்தினின்று நீங்காத வெறுப்பும் நல்குரவும் தனக்கில்லை யாயின்,—படை வெல்லும் - படை பகையை வெல்லும். எ - று.

விட்டுப்போதலும் நின்றது நல்குர்தலும் அரசன் பொருள் கொடாமையான் வருவன. செல்லாத்துனியாவது மகளிரை வௌவல், இளிவரவாயினசெய்தன் முத லியவற்றான் வருவது. இவையுள்வழி அவன்மாட்டன்பின்றி உற்றுப்போராமையின், இல்லாயின் வெல்லுமென்றார். (கூ)

எஎ0 நிலைமக்கள் சால வுடைத்தெனினுந் தானை
தலைமக்க ளில்வழி யில். க0.

இ - ள். நிலைமக்கள் சால உடைத்து எனினும்-போரின்கணிலையுடைய வீரரை மிகவுடைத்தேயாயினும்,—தலைமக்கள் இல்வழித் தானை இல்-தனக்குத் தலைவராகிய வீரரில்லாதவழித் தானை நில்லாது. எ - று.

படைத்தலைவர் நிலையுடையரன்றிப் போவாராயிற் காண்போரில்லெனப் போராது தாமும் போமென்பார், தலைமக்களில்வழியில்லென்றார். இவை மூன்று பாட்டானும் முறையே படைத்தகையின்மையானும், அரசன்கொடைத் தாழ்வுக ளானும், தலைவரின்மையானும், தாழ்வு கூறப்பட்டது. (க0)

---

## எஅ-ம் அதி.—படைச்செருக்கு.

சானமுயலென்ற ஞல் வெள்ளிடைகின்றவெ வன்பதும், பிழைத்தவென்றதனுற் பிழையாமலென்பதும், முயற்குத் தக எய்தவென்றதனுன் யானைக்குத்தக எறிதலும், வருவிக்கப்பட்டன. இது மாற்றரசன் படையொடு பொருதாஞெர் வீரன் அது புறங் கொடுத்ததாக காணிப் பின்னவன்றன்மேற் செல்லலுற்ருனது கூற்று. (௩)

எஎ௩. பேராண்மை யென்ப தறுகணென் றுற்றக்கா
லூராண்மை மற்றத னெஃகு. ௩.

இ - ள். தறுகண் பேராண்மை என்ப - பகைவர்மேற் கண்ணோடாது செய்யும் மறத்தை நூலோர் மிக்கவாண்டன்மையென்று சொல்லுவர்,—ஒன்று உற்றக்கால் ஊராண்மை அதன் எஃகு (என்ப) - அவர்க்கு ஒருதாழ்வு வந்தாயிற் கண்ணோடி அது தீர்த்துக்கோடற்பொருட்டு ஊராண்மைசெய்தலை நூலோர் அதற்குக் கூர்மை யென்று சொல்லுவர். எ - று.

என்பவென்பது பின்னுமியைந்தது. ஊராண்மை உபகாரியாந்தன்மை. அஃதா வது இலங்கையர்வேந்தன் போரிடைத் தன்ருனை முழுதும்படத் தமியனுயகப்பட்டா னது நிலைமை நோக்கி, அயோத்தியரிறை மேற்செல்லாது இன்றுபோய்நாளை நின் ருனையோடு வாவென விட்டாற்போல்வது. இவையிரண்டுபாட்டும்தழிஞ்சி. (௩)

எஎ௪. கைவேல் களிற்றொடு போக்கி வருபவன்
மெய்வேல் பறியா நகும். ௪.

இ - ள். கைவேல் களிற்றொடு போக்கி வருபவன் - தன்கைப் படையாய வேலைத் தன்மேல்வந்த களிற்றொடு போக்கி வருகின்ற களிற்றுக்கு வேண்டித்திரிவான்—மெய் வேல் பறியா நகும் - தன்மார்பின்கணின்ற வேலைக்கண்டு பறித்து மகிழும். எ - று.

---

* வெண்பாமாலை, தொல், பொருள், புறம், ௫-ம் சூத்திரத்துட்காண்க.

---

† பைம்பொற புனைப் பருமக்களி யானை யீட்டஞ்—செம்பொ னெமெனேத்த

(௬)

௭௭௬. விழுப்புண் படாதநா ளெல்லாம் வழுக்கினுள்
வைக்குந்தன் னாளை யெடுத்து. ௬.

இ - ள். தன் நாளை எடுத்து - தனக்குச் சென்ற நாள்களையெடுத்தெண்ணி,— விழுப்புண் படாத நாளெல்லாம் வழுக்கினுள்வைக்கும் - அவற்றுள் விழுப்புண்படாத நாள்களையெல்லாம் பயன்படாது கழிந்தநாளுள்ளே வைக்கும் வீரன். எ - று.

விழுப்புண் முகத்தினும் மார்பினும் பட்ட புண். போர்பெற்றிருக்கவும் அது பெறாத நாள்களோடுங் கூட்டுமென்பதாம். இவைமூன்றுபாட்டானும் ஊறஞ்சாமை கூறப்பட்டது.
(௭)

௭௭௭. சுழலு மிசைவேண்டி வேண்டா வுயிரார்
கழல்யாப்புக் காரிகை நீர்த்து. ௭.

இ - ள். சுழலும் இசைவேண்டி வேண்டா உயிரார் - துறக்கத்துத் தம்மொடு செல்லாது வையத்தைச் சூழ்ந்து நிற்கும் புகழைவேண்டி உயிர்வாழ்தலை வேண்டாத வீரர்—கழல் யாப்புக் காரிகை நீர்த்து - கழல்கட்டுதல் அலங்கார நீர்மையையுடைத்து. எ - று.

வையத்தைச் சூழுமெனவே, அதன் பெருமை பெற்றாம். செயப்படுபொருள் வருவிக்கப்பட்டது. சூழ்தல் அகத்திடல். துறக்கமும் புகழும் எளிதினெய்துவராகலின், ஆபரணமாவது அதுவேயென்பதாம்.
(௮)

௭௭௮. உறினுயி ரஞ்சா மறவ ரிறைவன்
செறினுஞ்சீர் குன்ற லிலர். ௮.

இ-ள். உறின் உயிர் அஞ்சா மறவர் - போர்பெறிற் றம்முயிர்ப்பொருட்டஞ் சாது அதன் மேற்செல்லும் வீரர்—இறைவன் செறினும் சீர் குன்றல் இலர் - தம்மிறைவன் அதுவேண்டாமென்று முனியினும் அவ்வீரமிகுதி குன்றார். எ - று.

---

* [illegible] [illegible] படையிய—[illegible] பதித்தோச் நின்று—வெண்பாமாலை, [illegible] கூ.

## எகூம் அதி.—நட்பு.

உக௬

போர்பெற்றறியாமையின், அது பெற்றால் அரசன்றடுப்பினும் நில்லாரென்பது தாம். பிறரும் "போரெனிற் புகலும் புனைகழல் மறவர்" என்றும் "புட்பகைக்— கேவா னாகலிற் சாவேம் யாமென - நீங்கா மறவர் வீங்குதோள் புடைப்ப†" என்றும் கூறினர்.
(அ)

எஎகூ. இழைத்த திகவாமைச் சாவாரை யாரே
பிழைத்த தொறுக்கிற் பவர். கூ.

இ - ள். இழைத்தது இகவாமைச் சாவாரை - தாங்கூறின வஞ்சினந்தப்பாமற் பொருட்டுச் சென்று சாவவல்ல வீரரை—பிழைத்தது ஒறுக்கிற்பவர் யார் - அது தப்பியவாறு சொல்லியெள்ளுதற்குரியார் யாவர்! எ - று.

இழைத்தல் இன்னது செய்யேனாயின் இன்னனாகுகவெனத் தான்வகுத்தல். சொல்லியென்பது அவாய்நிலையான் வந்தது. வஞ்சினமுடிப்பான்புக்கு முன்னே சாவினும் தொலைவன்மையின், அதுமுடித்தாராவரெனச் சாதற்சிறப்புக் கூறியவாறு.

எஅ0. புரந்தார்கண் ணீர்மல்கச் சாகிற்பிற் சாக்காடு

டிரக்துகோட் டக்க துடைத்து. ௬௦.

இ - ள். புரந்தார் கண் நீர் மல்கச் சாகிற்பின - தமக்குச் செய்தநன்றியை நினைந்து ஆண்டவரசர் கண்கள் நீர் மல்கும்வகை போரிடைச் சாவப்பெறின்,—சாக் காடு இரந்துகோட்டக்கது உடைத்து - அச்சாக்காடு இரந்தாயினுங்கொள்ளுந்தகுதி யையுடைத்து. எ - று.

மல்குதலாகிய இடத்து நிகழ்பொருளின்றொழில் இடத்தின்மேனின்றது. வினை யமு இல்லிடை நோயால் விளிவார் பழவினைப்பயனேயெய்தலின், அவித்தவினையாற் றுறக்கமெய்துஞ்சாதலை இரந்துகோட்டக்கதுடைத்தென்றார். இவை நான்குபாட்டானும் உயிரோம்பாமை கூறப்பட்டது.

(௬௦)

---

## எக ம் அதி.—நட்பு.

இனி அப்படைபோல அரசனுக்கு வினையிடத்துதவுவதாய நட்பினை ஐந்தி காரம் விதிமுகத்தானும் பன்னிரண்டதிகாரம் எதிர்மறைமுகத்தானுங் கூறுவான் றொடங்கி, விதிமுகவதிகாரமைந்தனுள்ளும் முதற்கண் நட்புக்கூறுகின்றார். அஃதா வது இன்னதென்பதூஉம் அதிகாரமுறைமையும் இதனுள் விளங்கும்.

௭௮௧. செயற்கரிய யாவுள நட்பி னதுபோல்
வினைக்கரிய யாவுள காப்பு. ௧.

இ - ள். நட்பின் செயற்கரிய யா உள - நட்புப்போலச் செய்துகோடற்கரிய பொருள்கள் யாவையுள—அதுபோல் வினைக்கு அரிய காப்பு யா உள - செய்து கொண்டால் அதுபோலப் பகைவர் செய்யும் வினைக்குப் புகற்கரியகாவலாவன யாவையுள. எ - று.

நட்புச்செய்தற்காவாரைப் பெறுதலும் பெற்றாற்

செய்யுமுபாயமும் செய்தாற் பிரிவின்றி கிற்றலுமுதலிய அரியவாகலின் நட்பிற செயற்கரியன வில்லையென்றும்,

செய்தாற் பகைவருஞ்சி வினைதொடங்காராகலின் அதுபோல வினைவாராமைக்கு

---

* புறநானூறு, ௩௪,  † புறநானூறு, ௩௮



அரிய காவலில்லையென்றுங் கூறினார். நட்புத்தான் இயற்கை செயற்கையென இரு வகைப்படும். அவற்றுள் இயற்கை பிறப்புமுறையானுளதூஉம் தேயமுறையானுளதூஉமென இருவகைப்படும். அவற்றுள் முன்னையது சுற்றமாகலின் அது சுற்றந்தழால் விளடங்கிற்று; ஏனையது பகையிடையிட்டதேயத்ததாகலின், அது துணைவலியென வலியறிதலுளடங்கிற்று இனி ஈண்டுச் சொல்லப்படுவது முன்செய்தவுதவிபற்றி வருஞ் செயற்கையேயாகலின், அதன்சிறப்பு இதனாற் கூறப்பட்டது. (௧)

எஅஉ. நிறைநீர நீரவர் கேண்மை பிறைமதிப்
பின்னீர பேதையார் நட்பு. உ.

இ - ள். நீரவர் கேண்மை பிறை நிறை நீர - அறிவுடையார் நட்புக்கள் பிறை நிறைபுந்தன்மைபோல நாடோறும் நிறையுந்தன்மையவாம்;—பேதையார் நட்பு மதிப் பின் நீர - மற்றைப்பேதைமையுடையார் நட்புக்கள் நிறைந்தமதி பின் குறையுந்தன்மைபோல நாடோறுங் குறையுந்தன்மையவாம். எ - று.

நீரவரென்றார், இனிமைபற்றி. கேண்மை, நட்பென்பன ஒருபொருட்கிளவி. செய்தாரது பன்மையான் நட்பும் பலவாயின. அறிவுடையாரும் அறிவுடையாருஞ் செய்தன முன்சுருங்கிப்

பின்பெருகதலும், பேதையாரும் பேதையாருஞ்செய்தன முன்பெருகிப் பின்சுருங்கற்குங் காரணம் தம்முன் முன்னறியாமையும் பின்னறிதலுமாம்.

(உ)

எஅங. நவிறொறு நூனயம் போலும் பயிறொறும்
பண்புடை யாளர் தொடர்பு. ௩.

இ - ள். பண்பு உடையாளர் தொடர்பு பயிறொறும் - நற்குணமுடையமக்கள் தம்முட்செய்த நட்புப் பயிலுந்தோறும் அவர்க்கின்பஞ் செய்தல்—நூல் நவிறொறும் நயம்போலும் - நூற்பொருள் கற்குந்தோறுங் கற்றார்க்கின்பஞ்செய்தலை யொக்கும். எ - று.

நயத்தினைச் செய்தலான், நயமெனப்பட்டது. இருமையினும் ஒருகாலைக்கொரு கால் மிகுமென்பதாம். இவையிரண்டுபாட்டானும் அச்சிறப்பிற்கேது கூறப்பட்டது.

எஅச. நகுதற் பொருட்டன்று நட்டன் மிகுதிக்கண்
மேற்சென் றிடித்தற் பொருட்டு. ௪.

இ - ள். நட்டல் நகுதற்பொருட்டன்று - ஒருவனோ டொருவன் நட்புச்செய்தல் தம்முணகுதற்கினையனசொல்லி நகையாடற் பொருட்டன்று,—மிகுதிக்கண் மேற்சென்று இடித்தற்பொருட்டு - அவர்க்கு வேண்டாதசெய்கையுளதாயவழி முற்பட்டுக் கழறுதற்பொருட்டு. எ - று.

பழியும் பாவமுந்தருஞ்செய்கை துன்பமே பயத்தலான் வேண்டப்படுவதன்மையின் அதனை மிகுதியென்றும், அதுசெய்தற்கு முன்னே மீட்டல்வேண்டுதலின் மேற்

சென்றென்றும், இன்சொற்கு நீணாமையின்
இத்துன் நட்பின்பயன் கூறப்பட்டது.

இடித்தற்பொருட்டென்றுங் கூறினர்.

(௪)

> எஅ௫. புணர்ச்சி பழகுதல் வேண்டா வுணர்ச்சிதா
> னட்பாங் கிழமை தரும். ௫.

## எகூம் அதி.—நட்பு.

இ-ள். புணர்ச்சி பழகுதல் வேண்டா - ஒருவனோடொருவன் நட்பாதற்குப் புணர்ச்சியும் பழகுதலுமாகிய காரணங்கள் வேண்டுவதில்லை,—உணர்ச்சிதான் நட்பாம் கிழமை தரும் - இருவர்க்குமொத்தவுணர்ச்சிதானே நட்பாமுரிமையைக் கொடுக்கும். எ-று.

புணர்ச்சி ஒருதேயத்தாராதல்; "இன்றே போல்கநும் புணர்ச்சி" என்றதும் அதனை. பழகுதல் பலகாற்கண்டுஞ் சொல்லாடியும் மருவுதல் இவ்விரண்டுமின்றிக் கோப்பெருஞ் சோழனுக்கும் பிசிராந்தையார்க்கும்போல உணர்ச்சியொப்பின், அதுவே உடனுயிர்நீங்கு முரிமைத்தாய நட்பினைப் பயக்குமென்பதாம்†. நட்பிற்குப் புணர்ச்சி, பழகுதல், உணர்ச்சியொத்தலென்னுங் காரணமூன்றனுள்ளும் பின்னது சிறப்புடைத்தென்பது இதனாற் கூறப்பட்டது. (௫)

> எஅக. முகநக நட்பது நட்பன்று நெஞ்சத்
> தகநக நட்பது நட்பு. க.

இ-ள். முகம் நக நட்பது நட்பு அன்று - கண்டவழி அகமொழிய முகமாத்திரமே மலரும்வகை நட்குமது நட்பாகாது;—நெஞ்சத்தகம் நக நட்பது நட்பு - அன்பால் அகமுமலர நட்குமதே நட்பாவது. எ-று.

நெஞ்சின்கணிகழ்வதனை நெஞ்சென்றார். இறந்தது தழீஇய எச்சவும்மை விகாரத்தாற் றொக்கது. இதனால் இரண்டும் ஒருங்கே மலரவேண்டுமென்பது பெற்றாம். ()

எஅஎ. அழிவி னவைநீக்கி யாறுய்த் தழிவின்க
ணல்ல லுழப்பதா நட்பு. எ.

இ - ள். அழிவினவை நீக்கி ஆறு உய்த்து-கேட்டினைத்தரும் நெறிகளிற் செல்லுங்கால் விலக்கி நன்னெறிக்கண்ணே செலுத்தி—அழிவின்கண் அல்லல் உழப்பது நட்பாம் - தெய்வத்தாற் கேடுவருமாயின் அது விலக்கப்படாமையின் அதன்பகுதியை உடனனுபவிப்பதே ஒருவனுக்கு நட்பாவது. எ - று.

ஆறென வருகின்றமையின், அழிவினைத்தருமவையென்றுரைத்தார். "தெருண்ட வறிவினவர்" என்புழிப்போல இன்சாரியை நீக்க இரண்டனுருபு தொக்கது. இனி அவையென்று பாடமோதி, அதற்குப் பேரழிவினுஞ் செல்வ வழியினும் வந்த துன் பங்களென்றும், அழிவின்க ணென்பதற்கு யானை யழிவின்கணென்றும் உரைப்பாருமுளர்.
(எ)

எஅஅ. உடுக்கை யிழந்தவன் கைபோல வாங்கே
யிடுக்கண் களைவதா நட்பு. அ.

இ - ள். உடுக்கை இழந்தவன் கைபோல - அவையிடை ஆடைகுலைந்தவனுக்கு அப்பொழுதே கைசென்றுதவி அவ்விளிவரல் களையுமாறுபோல,—ஆங்கே இடுக்கண் களைவது நட்பாம் - நட்டவனுக்கு இடுக்கண் வந்துழி அப்பொழுதே சென்றுதவி அதனைக்களைவதே நட்பாவது. எ - று.

அற்றங்காத்தற்கட் கைதன்மனத்தினு முற்படுதலின், அவ்விரைவு இடுக்கண்களையும் வழியும் அதற்கொத்த தொழிலுவமையினும் வருவிக்க.

மேலேற்றப்பட்டது.
உடையவன்றொழில் நட்பின்
(அ)

---

* புறநானூறு, ௯அ. † புறநானூறு, ௨௯௯. ‡ நாலடியார், இரவச்சம், ௪.



## அ0 ம் அதி.—நட்பாராய்தல்.

௭௮௯. நட்பிற்கு வீற்றிருக்கை யாதெனிற் கொட்பின்றி
ஒல்லும்வா யூன்று நிலை. ௯.

இ - ள். நட்பிற்கு வீற்றிருக்கை யாதெனின் - நட்பினுக்கு அரசிருக்கையாதெனின்,—கொட்பு இன்றி ஒல்லும் வாய் ஊன்றும் நிலை - அஃது எஞ்ஞான்றும் திரிபின்றி இயலுமெல்லை யெல்லாம் அறம்பொருள்களிற் றளராமைத் தாங்கும் நிலைமை. எ - று.

ஒருஞான்றும் வேறுபடாத மறுமையிம்மைகட்கு உறுதியாய அறம்பொருள் களிற்றளர்ந்தழி அத்தளர்ச்சி நீக்கி அவற்றின்கணிறுத்ததற்குமேல் ஒருசெயலுமின்மையின், அதனை நட்பிற்கு முடிந்தவெல்லையென்றார். (௯)

௭௯0. இனைய ரிவரெமக் கின்னம்யா மென்று
புனையினும் புல்லென்னு நட்பு. ௧0.

இ - ள். இவர் எமக்கு இனையர் யாம் இன்னம் என்று புனையினும் - இவர் எமக் கித்துணையன்பினர் யாமிவர்க்கித்தன்மையமென்று ஒருவரையொருவர் புனைந்து சொல்லினும்,—நட்புப் புல்லென்னும் - நட்புப் புல்லிதாய்த் தோன்றும். எ - று.

இவர்க்கென்பது வருவிக்கப்பட்டது. தாம் அவரென்னும் வேற்றுமையின்றி வைத்துப் புனைந்துரைப்பினும்

வேறுமையுண்டாமாகலின், நட்புப் புல்லென்று மென்றார். இவையிரண்டுபாட்டானும் நட்பினதிலக்கணங் கூறப்பட்டது. (௧0)

---

## ௮௦ ம் அதி.—நட்பாராய்தல்.

அஃதாவது மேற்சொல்லிய விலக்கணத்தாரை யாராய்ந்தறிந்தே நட்கவேண் டுதலின், அவரையாராயுந்திறம். அதிகாரமுறைமையும் இதனானே விளங்கும்.

எ௯௧. நாடாது நட்டலிற் கேடில்லை நட்டபின்
வீடில்லை நட்பாள் பவர்க்கு. ௧.

இ - ள். நட்பு ஆள்பவர்க்கு நட்டபின் வீடு இல்லை - நட்பினைவிரும்பி அதன் கண்ணே நிற்பாராகு ஒருவனோடு நட்புசெய்த பின் அவனை விடுதலுண்டாகாது;— நாடாது நட்டலிற் கேடு இல்லை - ஆக லான், ஆராயாது நட்புசெய்தல்போலக் கேடு தருவது பிறிதில்லை. எ - று.

ஆராய்தல் குணஞ்செய்கைகளது நன்மையையாராய்தல். கேடு ஆகுபெயர். நட் டுத் தூமவென்னும் வேற்றுமையின்மை யின் வீடில்லையென்றும், அவவேறுமையின் மையான் அவன்கட் பழிபாவங்கள் தமவாமாகலின் இருமையுங்கெடுவரென்பது நோக்கி நாடாது நட்டலிற் கேடில்லையெனறு கூறினார். (௧,

எ௯௨. ஆய்ந்தாய்ந்து கொள்ளாதான் கேண்மை கடைமுறை
தானசாந் துயரந் தரும். ௨.

இ - ள். ஆய்ந்து ஆய்ந்து கேண்மை கொள்ளாதான் - குணமுஞ் செய்கையும் நல்லனென்பது பலகாலும் பலவாற்றானுமாராய்ந்து ஒருவனோடு நட்புக்கொள்ளாத வன்—கடைமுறை தான் சாம் துயரம் தரும் - முடிவிற் றான் சாதற்கேதுவாய துன்பத்தினைத் தன்மாற்றுர்

விளக்கவேண்டாமற் றானே விளக்கும். எ-று.

## அ௰ம் அதி.—நட்பாராய்தல்.

உ.உ.கூ

கடைமுறைக்கண்ணே இறுதிக்கட்டொடாக்க ஏழவது விரிக்க. குணனுஞ் செயலுஞ் சீயானேனும் சொல்லின் அவற்கு வரும்பகையை வெல்லாத் தன்மையாய்ப் பின் அவற்குணிறத்துவிடுமென்பதாம். இவையிரண்டுபாட்டானும் ஆராயாவழிப்படு மிழுக்குக் கூறப்பட்டது. (உ)

எகூங. குணனுங் குடிமையுங் குற்றமுங் குன்றா
இனனு மறிந்தியாக்க நட்பு. ௩.

இ - ள். குணனும் குடிமையும் குற்றமும் குன்றா இனனும் அறிந்து - ஒருவன் குணத்தினையும் குடிப்பிறப்பினையும் குற்றத்தினையும் குறைவற்ற சுற்றத்தினையு மாராய்ந்தறிந்து, —நட்பு யாக்க - அவனோடு நட்புச்செய்க. எ - று.

குற்றமில்லாதார் உலகத்தின்மையின் உள்ளது பொறுக்கப்படுவதாயின் அவர் நட்பு விடற்பாற்றன்றென்பார் குற்றமுமென்றும், சுற்றப்பிணிப்புடையார் நட்டாரோடும் பிணிப்புண்டு வருதலிற் குன்றாவினனுமென்றும், விடப்படிற் றக்குறையா மென்பார் அறிந்தியாக்கவென்றுங் கூறினார். (௩.)

எகூச. குடிப்பிறந்து தன்கட் பழிநாணு வானைக்
கொடுத்துங் கொளல்வேண்டு நட்பு. ௪.

இ - ள். குடிப்பிறந்து தன்கட் பழி நாணுவானை -

உயர்ந்தகுடியின்கட்பிறந்து தன்மாட்டு உலகர்சொல்லும் பழிக்கஞ்சுவானை—கொடுத்தும் நட்புக்கொளல் வேண்டும் - சில கொடுத்தாயினும் நட்புக்கோடல் சிறந்தது. எ - று.

குடிப்பிறப்பாற் றன் பிழைசெய்யாமையும், பழிக்கஞ்சலாற் பிறர்பிழைத்தன பொறுத்தலும் பெற்றாம். இவையிரண்டுமுடையானைப் பெறுதலருமையின், அவனட்பை விலைகொடுத்துங் கொள்கவென்பதாம். (௪)

௭௯௫ அழச்சொல்லி யல்ல திடித்து வழக்கறிய
வல்லார்நட் பாய்ந்து கொளல். ௫.

இ - ள். அல்லது அழச் சொல்லி - தாம் உலகவழக்கல்லது செய்யக் கருதிற் சோகம்பிறக்கும்வகை சொல்லி விலக்கியும்—இடித்து - செய்தக்காற் பின்னுஞ் செய்யாவகை நெருக்கியும்—வழக்கு அறியவல்லார் - அவ்வழக்குச் செய்யாவழிச் செய்விக்கவும் வல்லாரை—ஆய்ந்து நட்புக் கொளல் - ஆராய்ந்து நட்புக்கொள்க. எ - று.

அழச்சொல்லி யிடித்தெனவந்த பரிகாரவினைகளான் அவற்றிற்கேற்ற குற்றவினைகள் வருவிக்கப்பட்டன. வழக்கு உலகத்தார் அடிப்படச் செய்துபோந்த செயல். தம்மொடு நட்டாரும் அறியும்வகை அறிவித்தலரிதாகலின், அறியவல்லாரென்றார். இரண்டாவது இறுதிக்கட்டொக்கது. (௫)

௭௯௬. கேட்டினு முண்டோ ருறுதி கிளைஞரை
நீட்டி யளப்பதோர் கோல். *௬.

இ - ள். கிளைஞரை நீட்டி அளப்பது ஓர்கோல் - ஒருவனுக்குக் கேடென்பது தன்னட்டாராகிய புலங்களை யெஞ்சாமலளப்ப

இ-ள். மாசு அற்றார் கேண்மை மருவுக - உலகோடொத்துக் குற்றமற்றார் நட்பினையே பயில்க;—ஒப்பு இலார் நட்பு ஒன்று ஈத்தும் ஒருவுக - உலகோடொத்தலில்லார் நட்பினை அறியாது கொண்டாராயின், அவர்வேண்டிய தொன்றனைக் கொடுத்தாயினும் விடுக. எ-று.

உலகோடொத்தார் நட்பு இருமையின்பமும் பயத்தலின் மருவுகவென்றும், அதனொடு மாறாயினார் நட்புத் துன்பமே பயத்தலின் அதனொழிவை விலைகொடுத்துங் கொள்கவென்றுங் கூறினர். இதனால் அவ்விருமையுந் தொகுத்துக் கூறப்பட்டன. ()

---

## அகம் அதி.—பழைமை.

அஃதாவது நட்டாரது பழையராந்தன்மைபற்றி அவர் பிழைத்தன பொறுத்தல். காரணப்பெயர் காரியத்திற்காயிற்று. ஆராய்ந்து நட்கப்பட்டாரெனினும் பொறுக்கப்படுங் குற்றமுடையராகவாறும் ஊழ்வகையாலும் நட்டார்மாட்டுப் பிழை யுளதாமென்பது அறிவித்தற்கு, இது நட்பாராய்தலின்பின் வைக்கப்பட்டது.

> பழைமை யெனப்படுவ தியாதெனின் யாதுங்
> கிழமையைக் கீழ்ந்திடா நட்பு. க.

இ-ள். பழைமை எனப்படுவது யாதெனின்-பழைமையென்று சொல்லப்படுவது யாதென்று வினவின்,—கிழமையை யாதும் கீழ்ந்திடா நட்பு - அது பழைமையோர் உரிமையாற் செய்வனவற்றைச் சிறிதுஞ் சிதையாது அவற்றிற்குடம்படும் நட்பு. எ-று.

கிழமை ஆகுபெயர். கெழுதகைமையென வருவனவுமது. உரிமையாற்செய்வனவாவன கருமமாயின செய்புக்காற் கேளாதுசெய்தல், கெழுதகைசெய்தல், தமக்கு வேண்டியன தாமே கோடல், பணிவச்சங்களின்மையென்றிவை முதலாயின. சிதைத்தல் விலக்கல். இதனாற் பழைமையாவது காலஞ்சென்றதன்று இப்பெற்றித்தாய நட்பென்பது கூறப்பட்டது. (க)

அ௦உ. நட்பிற் குறுப்புக் கெழுதகைமை மற்றதற்
குப்பாதல் சான்றோர் கடன். உ.

இ - ள். நட்பிற்கு உறுப்புக் கெழுதகைமை - நட்பிற் கவயவமாவன நட்டார் உரிமையாற்செய்வன,—அதற்கு உப்பாதல் சான்றோர் கடன் - அதனால் அவ்வுரிமைக்கு இனியராதல் அமைந்தார்க்கு முறைமை. எ - று.

வேறன்மைதோன்ற உறுப்பென்றார். உப்பென்பது ஈண்டிலக்கணையடியாக வந்த குறிப்புச்சொல். அவயவமாதலறிந்தே இனியவராவரென்பது தோன்றச் சான்றோர்மேல் வைத்தார். (உ)

அ௦௩. பழகிய நட்பெவன் செய்யுங் கெழுதகைமை
செய்தாங் கமையாக் கடை. ௩.

இ - ள். கெழுதகைமை செய்தாங்கு அமையாக்கடை - தாமுடம்படாதனவேனும் நட்டார் உரிமையாற் செய்தனவற்றிற்குத் தாஞ்செய்தாற்போல உடம்படாராயின்,—பழகிய நட்பு எவன்செய்யும் - அவரோடு பழையதாய் வந்த நட்பு என்ன பயனைச் செய்யும். எ - று.

செய்தாற்போலவுடம்படுதலாவது தாமும் அவரிடத்துரிமையாலுடம்படுதல். இவையிரண்டுபாட்டானும் பழைமையான்வரு முரிமையது சிறப்புக் கூறப்பட்டது. ()



அ௦௪. விழைதகையான் வேண்டி யிருப்பர் கெழுதகையாற்
கேளாது நட்டார் செயின்.

இ - ள். நட்டார் கெழுதகையால் கேளாது செயின் - தங்கருமத்தை நட்டார் உரிமையாற்கேளாது செய்தாராயின்,—விழைதகையான் வேண்டியிருப்பர் - அச்செயலது

விழையப்படுந்தன்மைபற்றி அதனை விரும்புவர் அறிவுடையார். எ - று.

ஒருவர்க்குத் தங்கருமந் தாமறியாமன் முடிந்திருத்தலினூஉங்கு நன்மையின்மையின், அச்செயல் விழையத்தக்க தாயிற்று. அதனை அவ்வாறறிந்து விரும்புதல் அறிவுடையார்க்கல்லதின்மையின், அவர்மேல்வைத்துக்கூறினார். வேண்டியிருப்பரென்பது எழுந்திருப்பரென்பதுபோல ஒருசொன்னீர்மைத்து. இதனாற் கேளாதுசெய்தவழி அதனை விரும்புகவென்பது கூறப்பட்டது. (௪)

அ0ரு. பேதைமை யொன்றோ பெருங்கிழமை யென்றுணர்க
நோதக்க நட்டார் செயின். ரு.

இ - ள். நோதக்க நட்டார் செயின் - தாம் வெறுக்கத் தக்கனவற்றை நட்டார் செய்தாராயின்,—பேதைமை ஒன்றோ பெருங்கிழமை என்று உணர்க - அதற்குக் காரணம் ஒன்றிற்பேதைமையென்றாதல் ஒன்றின்மிக்கவுரிமையென்றாதல் கொள்க. எ-று

ஒன்றோவென்பது எண்ணிடைச்சொல். செயினெனவே, தம்மியல்பாற் செய்யாமை பெற்றாம். இது வருகின்றவற்றானுமொக்கும். இழவூழான் வரும் பேதைமை யாவர்க்கு முண்மையிற் றமக்கேதக்கொண்டாரென்றாதல் ஊழ்வகையான் எம்மின் வரற்பாலது ஒற்றுமை மிகுதிபற்றி அவரின்வந்ததென்றாதல் கொள்வதல்லது அன்பின்மையென்று கொள்ளப்படாதென்பதாம். கெடும்வகைசெய்யின் அதற்குக் காரணம் இதனாற் கூறப்பட்டது. (௫)

அ0௬. எல்லைக்க ணின்றார் துறவார் தொலைவிடத்துந்
தொல்லைக்க ணின்றார் தொடர்பு. ௬.

இ - ள். எல்லைக்கண் நின்றார் - நட்புவரம்பிகவாது அதன்கண்ணே

நின்றவர்— தொல்லைக்கண் நின்றார் தொடர்பு தொலைவிடத்தும் துறவார் - தம்மொடு பழைமை யிற்றிரியாது நின்றாரது நட்பினை அவராற்றொலைவுவந்தவிடத்தும் விடார். எ - று.

பழைமையிற்றிரியாமை உரிமையொழியாமை. தொலைவு பொருட்கேடும் போர்க்கேடும்.
(௬)

அ௦எ. அழிவந்த செய்யினு மன்பறா ரன்பின்
வழிவந்த கேண்மை யவர். எ.

இ - ள். அழிவந்த செய்யினும் அன்பு அறார் - நட்டார் தமக்கழிவு வந்தவற்றைச் செய்தாராயினும் அவர்மாட்டன்பொழியார்—அன்பின் வழி வந்த கேண்மையவர் - அன்புடனே பழையதாய்வந்த நட்பினையுடையார். எ - று.

அழியென்பது முதனிலைத்தொழிற்பெயர். அழிவு மேற்சொல்லிய கேடுகள். இவை இரண்டுபாட்டானும் கேடுசெய்தக்கண்ணும் நட்பு கூறப்பட்டது.
விடற்பாற்றன்றென்பது
(௭)

அ௦அ. கேளிழுக்கம் கேளாக் கெழுதகைமை வல்லார்க்கு
நாளிழுக்க நட்டார் செயின். அ௨ ம்



இ - ள்: கேள் இழுக்கம் கேளாக் கெழுதகைமை வல்லார்க்கு - நட்டார் செய்த பிழையைத் தாமாகவேயன்றிப் பிறர் சொன்னாலுங்கேளாத உரிமையறியவல் லார்க்கு—நட்டார் இழுக்கம் செயின் நாள் - அவர் பிழை செய்வாராயின், அதுபயன் பட்ட நாளாம்.

எ - று.

பிழையாவன சொல்லாது நற்பொருள்வெளவல், பணியாமை, அஞ்சாமை முதலாயின. கேட்டல் உட்கோடல். கெழுதகைமை வல்லாரென்பது ஒருபெயராய்க் கேளாதவென்று மெச்சத்திற்கு முடிபாயிற்று. செய்தபோர்துழியல்லது அவ்வுரிமை வெளிப்படாமையின், செய்யாதன நாள ல்ல வாயின. இதனாற் பிழைபொறுத்தற் சிறப்புக் கூறப்பட்டது.
(அ)

அ0கூ. கெடாஅ வழிவந்த கேண்மையார் கேண்மை
விடாஅர் விழையு முலகு. கூ.

இ - ள். கெடா வழி வந்த கேண்மையார் கேண்மை - உரிமையுறு பழையதாய் வந்த நட்பினை யுடையாரது நட்பினை—விடார் உலகு விழையும்-அவர் பிழைநோக்கி விடுதல்செய்யாதாரை உலகம் நட்புக்குறித்து விரும்பும். எ - று.

கெடாதென்பதனிறுதிநிலை விகாரத்தாற்றொக்கது. விடாதாரையெனவே, விடுதற்காரணங் கூறப்பட்டது. நம்மாட்டும் இவரித்தன்மையராவரென்று யாவருந்தாமே வந்து நட்பாவரென்பதாம். கெடாரென்று பாடமோதி, நட்புத்தன்மையிற் கெடாராகி யென்றுரைப்பாருமுளர்.
(கூ)

அகை. விழையார் விழையப் படுப பழையார்கட்
பண்பிற் றலைப்பிரியா தார். க0.

இ - ள். பழையார்கண் பண்பின் தலைப்பிரியாதார் - பழைய நட்டார் பிழை செய்தாராயினும் அவர்மாட்டுத் தம் பண்பினீங்காதார்—விழையார் விழையப்படுப - பகைவரானும் விரும்பப்படுவர். எ - று.

தம்பண்பாவது செய்யாதமுன்போல அன்புடையராதல். மூன்றனுருபுஞ் சிறப் பும்மையும் விகாரத்தாற் றொக்கன. அத்திரிபின்மை நோக்கிப் பகைவரும் நட்டா ராவரென்பதாம்.

இவையிரண்டோட்டாலும் பழைமையறிவார் எய்தும் பயன் கூறப்பட்டது.
(௪0)

---

## அ௨ ம் அதி.—தீநட்பு.

இனிப் பொறுக்கப்படாத குற்றமுடைமையின் விடற்பாலதாய நட்பு நட்பா ராய்தற்கட் கருக்கச்சொல்லியதனையா னடங்காமையின் அதனை விரிவகைப்பயித்து இரண்டதிகாரத்தாற் கூறுவான்றொடங்கி, முதற்கட்டீநட்புக் கூறுகின்றார். அஃதா வது தீக்குணத்தாரோடு உளதாய நட்பு. குணத்தின்தீமை ஒற்றுமைபற்றி உடையார் மேற்றும், அது பின் அவரோடுசெய்த நட்பின்மேற்றுமித்து. அதிகாரமுறைமை கூறுமையே விளங்கும்.

௮௧௧. பருகுவார் போலினும் பண்பிலார் கேண்மை
பெருகலிற் குன்ற லினிது.

௮௧௧ அ௨ ம் அதி.—தீநட்பு.

இ - ள். பருகுவார் போலினும் பண்பு இலார் கேண்மை - காதன்மிகுதியாற் பருகுவார்போன்றாராயினுந் தீக்குணமுடையார் நட் பெருகலிற் றேய்தனன்று. எ - று.

பு—பெருகலின் குன்றல் இனிது-

"பருகு வன்ன வருகா நோக்கமொடு" என்றார் பிறரும். நற்குணமில்லா ரெனவே, தீக்குணமுடையாரென்பது அருத்தாபத்தியான் வந்தது. பெருகினால் வருங்கேடு குன்றினால் வாராமையின், குன்றலினிதென்றார். இதனாற்றீநட்பினது ஆகாமை பொதுவகையாற் கூறப்பட்டது. இனிச் சிறப்புவகையாற் கூறுப.

(க)

அகஉ. உறினட் டறினொரூஉ மொப்பிலார் கேண்மை
பெறினு மிழப்பினு மென். உ.

இ - ள். உறின் நட்டு அறின் ஒரூஉம் ஒப்பு இலார் கேண்மை - தமக்குப் பய னுள்வழி நட்புச்செய்து அஃதில்வழி ஒழியும் ஒப்பிலாரது நட்பினை—பெறினும் இழப்பினும் என் - பெற்றால் ஆக்கமியாது! இழந்தாற் கேடியாது! எ - று.

தமக்குற்றனபார்ப்பார் பிறரோடு பொருத்தமிலராகலின், அவரை ஒப்பிலாரென் றார். அவர்மாட்டு நொதுமற்றன்மையே அமையுமென்பதாம். (உ)

அகஙு. உறுவது சீர்தூக்கு நட்பும் பெறுவது
கொள்வாருங் கள்வருநேர். ௩.

இ - ள். உறுவது சீர்தூக்கும் நட்பும் - நட்பளவு பாராது அதனால் வரும் பயனளவு பார்க்கும் நட்டாரும்—பெறுவது கொள்வாரும் - கொடுப்பாரைக் கொள்ளாது விலையைக்கொள்ளும் பொதுமகளிரும்—கள்வரும் - பிறர்கேடு நோக்காது அவர் சோர்வு நோக்குங் கள்வரும்—நேர் - தம்முளொப்பர். எ - று.

நட்பு ஆகுபெயர். பொருளையேகுறித்து வஞ்சித்தொழுகலின், கணிகையர் கள்வ ரென்றிவரோடொப்ப ரென்பதாயிற்று. இவையிரண்டுபாட்டானும் தமக்குறுவது பார்ப்பார் நட்பின்றீமை கூறப்பட்டது. (௩)

அகச. அமரகத் தாற்றறுக்குங் கல்லாமா வன்னார்
தமரிற் றனிமை தலை. ச.

இ - ள். அமரகத்து ஆற்று அறுக்கும் கல்லா மா அன்னார் தமரின்-அமர் வாராத முன்னெல்லாந் தாங்குவதுபோன்று வந்துழிக் களத்திடை வீழ்த்துப்போம் கல்வி

செறியவென்பதனைக் கொள்ளின், செய்தென்பது நின்று வற்றும். இவையிரண்டுபாட்டானுந் தொலைவிற் றுணையாகாத நட்பின்றீமை கூறப்பட்டது. (௫)

௮௧௬. பேதை பெருங்கெழீஇ நட்பி னறிவுடையா
ரேதின்மை கோடி யுறும். ௬.

இ - ள். பேதை பெருங்கெழீஇ நட்பின் - அறிவிலானது மிகச்செறிந்தநட்பின்—அறிவுடையார் ஏதின்மை கோடி உறும் - அறிவுடையானது பகைமை கோடி மடங்கு நன்று. எ - று.

கெழீஇயவென்பதனிறுதிநிலை விகாரத்தாற்றொக்கது. பன்மை உயர்த்தற்கண் வந்தது. அறிவுடையான் பகைமை ஒரு தீங்கும் பயவாமையானும், பேதைநட்பு எல்லாத் தீங்கும் பயத்தலானும், கோடியுறுமென்றார். பெருங்கழிநட்பென்று பாடமோதுவாருமுளர். (௬)

௮௧௭. நகைவகைய ராகிய நட்பிற் பகைவராற்
பத்தடுத்த கோடி யுறும். ௭.

இ - ள். நகை வகையர் ஆகிய நட்பின் தாமறிதல்வகையராகாது நகுதல்வகையராதற்கேதுவாகிய நட்பான் வருவனவற்றின்—பகைவரால் பத்து அடுத்த கோடி உறும் - பகைவரான் வருவன பத்துக்கோடிமடங்கு நல்ல. எ - று.

நட்பு ஆகுபெயர். அந்நட்பாவது விடமருந் தூர்த்தரும் வேழம்பரும்போன்று பலவகையா னகுவித்துத் தாம் பயன்கொண்டொழிவாரோடு உளதாயது. பகைவரா லென்பது அவாய்நிற்றலின், வருவனவென்பது வருவிக்கப்பட்டது. பத்தடுத்தகோடி பத்தாகத்தொகுத்தகோடி. அந்நட் பான் வருமின்பங்களின் அப்பகைவரான் வருந் துன்பங்கள் இறப்பநல்லவென்பதாம். இதற்குப் பிறரெல்லாஞ் சொல்லிலக்கணத்

தோடு மாறுகொளவுரைத்தார்.
(எ)

அகஅ. ஒல்லுங் கரும முடற்று பவர்கேண்மை
சொல்லாடார் சோர விடல். அ.

இ - ள். ஒல்லுங் கருமம் உடற்றுபவர் கேண்மை - தம்மான்முடியுங் கருமத்தை முடியாதாக்கிச் செய்யாதாரோடு கொண்ட நட்பினை—சொல்லாடார் சோரவிடல் - அது கண்டால் அவரறியச் சொல்லாதே சோரவிடுக. எ - று.

முடியாதாக்குதல் முடியாதாகவடித்தல். சோரவிடல் விடுமென்றவாறுதோன்றாமல் ஒருகாலைக் கொருகா லேயவிடுதல். அறியச்சொல்லினும் விடுமென்றவாறுதோன்றினும் அதுபொழுது பரிகரித்துப் பின்னு நட்பாயொழுகக்கருதுவாராகலின், சொல்லாடாரென்றுஞ் சோரவிடலென்றுங் கூறினார். இவைமூன்றுபாட்டானும் முறையே பேதையார், கருவிப்பார், இயல்வதுசெய்யாதாரென்றிவர்களட்பின்றீமை கூறப்பட்டது. (அ)

## உகக அங-ம் அதி.—கூடாநட்பு.

அக௯. கனவினு மின்னாது மன்னோ வினைவேறு
சொல்வேறு பட்டார் தொடர்பு. ௯.

இ - ள். வினை வேறு சொல் வேறு பட்டார் தொடர்பு - வினையுஞ்சொல்லு மொவ்வாது வேறுவேறாயிருப்பார்நட்பு—கனவினும் இன்னாது - கனவின்கண்ணே யன்றிக் கனவின்கண்ணு மின்னாது. எ - று.

வினை சொற்களதொவ்வாமை முதன்மேலேற்றப்பட்டது. அஃதாவது வினையிற் பகைவராய்ச் சொல்லின் நட்டாராயிருத்தல். நிகழ்வின்கண் உளதாயிருத்தலால், கன விலுமின்னாதென்றார். உம்மை எச்சவும்மை, இழிவுசிறப்பும்மையுமாம். மன்னும் ஓவும் அசைநிலை.

அ௨0. எனைத்துங் குறுகுத லோம்பன் மனைக்கெழீஇ
மன்றிற் பழிப்பார் தொடர்பு. க0.

இ - ள். மனைக் கெழீஇ மன்றிற் பழிப்பார் தொடர்பு - தனியே மனைக்கணிருந் தழீஇ நட்பாடிப் பலரோடு மன்றின்கணிருந்துப் பழிகூறுவார்நட்பு—எனைத்தும் குறுகுதல் ஓம்பல் - சிறிதாயினுந் தம்மை நணுகுதலைப் பரிகரிக்க. எ - று.

மனைக்கட்கெழுமலும் மன்றின்கட்பழித்தலுந் தீதாகலின், அவர் ஒருகாலுந் தம்மை நணுகாவகை குறிக்கொண்டு காக்கவென்பார், அவர் நட்பின்மேல் வைத்துக் கூறினார். இவையிரண்டுபாட்டானும் வஞ்சர்நட்பின் றீமை கூறப்பட்டது. (க0)

---

அ௩ ம் அதி.—கூடா நட்பு.

இனி எனைக்கூடாநட்புக் கூறுகின்றார். அஃதாவது பகைமையான் அகத்தாற் கூடாதிருந்தே தமக்கு வாய்க்குமிடம் பெறுந்துணையும் புறத்தாற் கூடியொழுகுவார் நட்பு.

அ௨௧. சீரிடங் காணி னெறிதற்குப் பட்டடை
நேரா நிரந்தவர் நட்பு. க.

இ - ள். நேரா நிரந்தவர் நட்பு - கூடாதிருந்தே தமக்குவாய்க்குமிடம் பெறுந் துணையுங்கூடியொழுகுவார் நட்பு—சீரிடம் காணின் எறிதற்குப் பட்டடை - அது பெற்றால், அறவெறிதற்குத் துணையாய பட்டடையாம். எ - று.

எறிபுமெல்லை வாராமுனெல்லாந் தாங்குவதுபோன்றிருந்து வந்துழி அறவெறி விப்பதாய பட்டடைக்கும் அத்தன்மைத்தாய நட்பிற்குந் தொழிலொப்புமையுண்மை யான், அதுபற்றி அந்நட்பினைப் பட்டடையாக வுபசரித்தார். சீர்விடமென்றுபாட மோதி

முடிவிடமென்றுரைப்பாருமுளர்.
(௪)

அ௨௨. இனம்போன் றினமல்லார் கேண்மை மகளிர்
மனம்போல வேறு படும். ௨.

இ - ள். இனம்போன்று இனமல்லார் கேண்மை - தமக்குற்றார்போன்று உறுதா ரோடு உண்டாய நட்பு—மகளிர் மனம்போல வேறுபடும் - இடம்பெற்றுழ் பெண்பாலார் மனம்போல வேறுபடும். எ - று.

## அ௩ம் அதி.—கூடாநட்பு.

௨௩௪

அவர்மனம் வேறுபடுதல் "பெண்மனம் பேதின் ஒருப்படுப்பேனென்னு— மெண்ணி லொருவன்" என்பதனானுமறிக. நட்பு வேறுபடுதலாவது பழையபகை வேயாதல். இவையிரண்டுபாட்டானும் கூடாநட்பினது குற்றங் கூறப்பட்டது. (௨)

அ௨௩. பலநல்ல கற்றக் கடைத்து மனநல்ல
ராகுதன் மாணார்க் கரிது. ௩.

இ - ள். நல்ல பல கற்றக்கடைத்தும் - நல்லன பல நூல்களைக் கற்றவிடத்தும்— மனம் நல்லர் ஆகுதல் மாணார்க்கு அரிது - அதனான் மனந்திருந்தி நட்பாதல் பகைவர்க்கில்லை. எ - று.

நல்லன மனக்குற்றங்கெடுப்பன. மனநல்லரெனச்சினைவினை முதன்மேனின்றது. நல்லராகுதல் செற்றம் விடுதல். உள்ளே செற்றமுடையாரைக் கல்வியுடைமைபற்றி நட்பென்று கருதற் க

வென்பதாம். (௩)

அ௨௪. முகத்தி னினிய நகாஅ வகத்தின்னா
வஞ்சரை யஞ்சப் படும். ௪.

இ - ள். முகத்தின் இனிய நகாஅ அகத்து இன்னா வஞ்சரை - கண்டபொழுது முகத்தால் இனியவாகச் சிரித்து எப்பொழுதும் மனத்தாலின்னாராய வஞ்சரை—அஞ் சப்படும் - அஞ்சல்வேண்டும். எ - று.

நகையது வகைபற்றி இனியவென்றும், அகத்துச்செற்றம் நிகழவும் அதற்கு மறு தலையாய நகையைப் புறத்து விளைத்தலின் வஞ்சரென்றும், அச்செற்றங் குறிப்பறிதற் கருவியாய முகத்தானுந் தோன்றாமையின் அஞ்சுத ல் செய்யப்படுமென்றுங் கூறினார். இவையிரண்டுபாட்டானுங் குற்றத்திற்கேதுவாய அவர்கொடுமை கூறப்பட்டது. (௪)

அ௨௫. மனத்தி னமையா தவரை யெனைத்தொன்றுஞ்
சொல்லினாற் றேறற்பாற் றன்று. ௫.

இ - ள். மனத்தின் அமையாதவரை - மனத்தாற் றம்மொடு மேவாதாரை— எனைத்தொன்றும் சொல்லினால் தேறற்பாற்று அன்று - யாதொரு கருமத்தினுஞ் சொல்லாற் றெளிதன்முறைமைத்தன்று நீதினூல். எ - று.

நீதிநூலென்பது அவாய்நிலையான் வந்தது. பகைமைமறைத்தற்பொருட்டுச் சொல்லுகின்ற வஞ்சனைச்சொல்லைச் செவ்விய சொல்லெனக்கருதி அவரைக்கருமங் களிற்றெளிதல் நீதினூன்முறைமையன்றென்பதாம். (௫)

அ௨௬. நட்டார்போ னல்லவை சொல்லினு மொட்டார்சொ
லொல்லை யுணரப் படும். ௬.

இ - ள். நட்டார்போல் நல்லவை சொல்லினும் - நட்டார்போன்று நன்மைபயக் குஞ் சொற்களைச் சொன்னாராயினும்,—ஒட்டார் சொல்

ஒல்லை உணரப்படும் - பகைவர் சொற்கள் அது பயவாமை அச்சொல்லியபொழுதே யறியப்படும். எ - று.

சொல்லினுமெனவே, சொல்லாமையே பெறும். ஒட்டாராதலாற் றீமைபயத்தல் ஒருதலையென்பார், ஒல்லையுணரப்படுமென்றார். (௬)

---

* ஒல்லையாபதி.



## அ௩ம் அதிகாரம் கூடாநட்பு.

அ௨எ. சொல்வணக்க மொன்னார்கட் கொள்ளற்க வில்வணக்கந்
தீங்கு குறித்தமை யான். எ.

இ - ள். வில்வணக்கம் தீங்கு குறித்தமையான் - வில்லினது வணக்கம் எய்தவர்க்குத் தீமைசெய்தலைக் குறித்தமையால்,— ஒன்னார்கண் சொல்வணக்கம் கொள்ளற்க - பகைவர்மாட்டுப் பிறக்குஞ் சொல்லினது வணக்கத்தையும் தமக்கு நன்மை செய்தலைக்குறித்ததென்று கருதற்க. எ - று.

தம்வணக்கமன்றென்பது தோன்றச் சொல்வணக்கமென்றும், வில்வணக்கம் வேறாயினும் வணங்குதலொப்புமைபற்றி அதன்குறிப்பையேதுவாக்கியுங் கூறினார். வில்லினது குறிப்பு அவனுடைய வில்வணக்கத்தின்மேனிற்றலான், ஒன்னாரது குறிப்பும் அவருடைய சொல்வணக்கத்தின்மேலதாயிற்று. இதுவுந் தீங்குகுறித்த வணக்கமென்றேகொண்டு அஞ்சிக்காக்க வென்பதாம். இவைமூன்றுபாட்டானும் அவரைச் சொல்லாற்றெளியற்கவென்பது கூறப்பட்டது. (எ)

அ௨அ. தொழுதகை யுள்ளும் படையொடுங்கு மொன்னா
ரழுதகண் ணீரு மனைத்து. அ.

இ - ள். ஒன்னார் தொழுத கையுள்ளும் படை ஒடுங்கும் - ஒன்னார் குறிப்பை புணரவல்லார்க்கு அவர் தொழுத கையகத்தும் படைக்கலம் மறைந்திருக்கும்;— அழுத கண்ணீரும் அனைத்து - அவரழுதகண்ணீரும் அவ்வாறே அதுமறைந்திருத்தற் கிடனும். எ - று.

தாடீட்பென்பதனைத் தங்கையானுங் கண்ணானும் தேற்றிப் பின் கோறற்குவாங்க விருக்கின்ற படைக்கலம் உய்த்துணர்வழித் தேற்றுகின்றபொழுதே அவற்றன்னே தோன்றுமென்பார், ஒடுங்குமென்றார். பகைவர் தம்மென்மைகாட்டித் தொழினுமழி னும், அவர் குறிப்பையே நோக்கிக் காக்கவென்பதாம் இதனால் அவரைச் செயலாற் றெளியற் கவென்பது கூறப்பட்டது.
(அ)

அஉகூ. மிகச்செய்து தம்மெள்ளு வாரை நகச்செய்து
நட்பினுட் சாப்புல்லற் பாற்று. கூ.

இ - ள். மிகச் செய்து தம் எள்ளுவாரை - பகைமைதோன்றாமற் புறத்தின்கண் நட்பினை மிகச் செய்து அகத்தின்கட் டம்மையிகழும் பகைவரை—நட்பினுள் நகச் செய்து சாப் புல்லற்பாற்று - தாமும் அந்நட்பின்கண்ணே நின்று புறத்தின்கண் அவர் மகிழும் வண்ணஞ்செய்து அகத்தின்கண் அதுசாம்வண்ணம் பொருந்தற்பான்மை புடைத்து அரசநீதி. எ - று.

நின்றென்பதூஉம் அரசநீதியென்பதூஉம் அவாய்நிலையான் வந்தன. அகனென்று
புறனென்றுதல் ஒருவற்குத் தகாதெனினும் பகைவர்மாட்டாயிற் றருமென்பதுநீதி நூற்றுணிபென்பார், அதன்மேல்வைத்துக் கூறினார். சாவவென்பதனிறுதிநிலை விகாரத்தாற்றொக்கது, "கோட்டின்வாய்ச்சாக்குத்தி" என்புழிப்போல. எள்ளுவாரைப் புல்லலெனக் கூட்டுக. (கூ)

அஉ0. பகைநட்பாங் காலம் வருங்கான் முகநட்
டகநட் பொரீஇ விடல். க0.

* கலி, முல்லை, ௯.

அ௪ம் அதி.—பேதைமை.

உரியில்

இ - ள். பகை நட்பாம் காலம் வருங்கால் - தம்பகைவர் தமக்கு நட்டாராகியொழுகுங்காலம் வந்தால்,—முகம் நட்டு அகம் நட்பு ஒரீஇ விடல்-தாமும் அவரோடு முகத் தால் நட்புச்செய்து அகத்தால் அதனைவிட்டுப் பின்னதுவுந்தவிர்க. எ - று.

அக்காலமாவது தம்மாலும் பகையென்று வெளிப்பட நீக்கலாகாதவளவு. இத னுனே ஆமளவெல்லாம் நீக்குகவென்பது பெற்றாம். இவையிரண்டுபாட்டானும் அந் நட்பினிடையொழுகுமாறு கூறப்பட்டது. (௩௦)

---

## அ௪ம் அதி.—பேதைமை.

இனி அந்நட்பினை யெதிர்மறுத்துப் பகைமுகத்தாற் கூறியதொடங்கினர். அப்பகைதான் முற்றக்கடியுங்குற்றமன்மையினவாய வெகுளியானும் காமத்தானும் வருவதாம். அவற்றுள் வெகுளியான் வருவன ஐந்ததிகாரத்தானும் காமத்தான் வருவன ஐந்ததிகாரத்தானுங் கூறுவார், அவ்விரண்டற்கும் அடியாய மயக்கத்தை இரு வகைப்படுத்து, இரண்டதிகாரத்தாற் கூறுவான்றொடங்கி, முதற்கட்பேதைமை கூறு கின்றார். அஃதாவது யாதுமறியாமை.

அ௩௧. பேதைமை யென்பதொன் றியாதெனி னேதங்கொண்
டூதியம் போக விடல். ௧.

இ - ள். பேதைமை என்பது ஒன்று - பேதைமையென்று

கருமங்களிற்செய்வன தவிர்வன, குறித்த பயன்களுறுதல். பேணவேண்டுவன குடிப்பிறப்பு, கல்வி, ஒழுக்க முதலாயின. இவை பேதைக்கு ஏற்றுரன் தவிவம்பரம் வருதலின், தொழிலென்றார்.()



## ௮௪ம் அதி.—பேதைமை.

௮௩௪. ஓதி யுணர்ந்தும் பிறர்க்குரைத்துந் தானடங்காப்
பேதையிற் பேதையா ரில். ௪.

இ - ள். ஓதி - மனமொழிமெய்களடங்குதற்கேதுவாய நூல்களை யோதியும்,— உணர்ந்தும் - அவ்வடக்கத்தான் வரும் பயனையுணர்ந்தும்,— பிறர்க்கு உரைத்தும் அந்நூலைப்பிறருணரப் பிறர்க்குரைத்தும்,—தான் அடங்காப் பேதையின் - தான் அவை யடங்கி யொழுகாத பேதைபோல—பேதையார் இல் - பேதையார் உலகத் தில்லை, எ - று.

உம்மை மூன்றும் கூட்டப்பட்டது. இப்பேதைமை தனக்கு மருந்தாய இவற்றாற் றீராமையானும், வேற்றுமருந்தின்மையானும், பேதையிற்பேதையாரில்லென்றார். இவையிரண்டுபாட்டானும் பேதையது தொழில் பொதுவகையாற் கூறப்பட்டது. இனிச் சிறப்புவகையாற் கூறுப (௪)

௮௩௫. ஒருமைச் செயலாற்றும் பேதை யெழுமையுந்
தான்புக் கழுந்து மளறு. ௫.

இ - ள். பேதை - பேதையாயினான்—எழுமையும் தான் புக்கு அழுந்தும் அளறு- வரும்பிறவிகளெல்லாந் தான்புக்கழுந்தும் நிரயத்தினை—ஒருமைச் செயல் ஆற்றும் - இவ்வொருபிறப்புள்ளே செய்துகொள்ள வல்லனும், எ - று.

## அறு ம் அதி.—புல்லறிவாண்மை.

[illegible] வசம் பெறுதரென்ற ஆ ரவெவ் றம், உ ணவும்பெருமை தோன்றப் பயிப்பரென்றும் கூ றினர்.

(அ)

அகஅ. மைய லொருவன் களித்தற்றாற் பேதைதன்
கையொன் றுடைமை பெறின். அ.

இ - ள் பேதை தன்கை ஒன்று உடைமை பெறின்-பேதையாயினான் தன்கைக் கண்ணே ஒன்றனையுடைமையாகப் பெற்றானாயின்,—மையல் ஒருவன் களித்தற்று - அவன் மயங்குதல் முன்னே பித்தினையுடையானொருவன் அம்மயக்கத்தின்மேலே மறவுண்டு மயங்கினாற்போலும். எ - று.

பெறினெனவே, தெய்வத்தானன்றித் தன்னாற்பெறாமை பெற்றும். பேதைமையுஞ் செல்வக்களிப்பும் ஒருங்குடைமையால் அவன் செய்வனமையலும் மறுக்களிப்பும் ஒருங்குடையான் செய்வனபோற் றவைதமொறுமென்பதாம். இவையிரண்டு பாட்டானும் அவன் செல்வமெய்தியவழிப் பயன்கொள்ளுமாறு கூறப்பட்டது. (அ)

அகக. பெரிதினிது பேதையார் கேண்மை பிரிவின்கட்
பீழை தருவதொன் றில். க.

இ - ள். பிரிவின்கண் தருவது பீழை ஒன்று இல்-பின் பிரிவுவர்தழி அஃதிரு வர்க்குந் தருவதொருதுன்பமில்லை;—பேதையார் கேண்மை பெரிது இனிது - ஆகலாற் பேதையாயினார் தம்முட்கொண்ட நட்பு மிகவினிது. எ - று.

நாடோறுந் தேய்ந்து வருதலின், துன்பந்தாராதாயிற்று. புகழ்வார்போன்று பழித்தவாறு. இதனால் அவரது நட்பின்குற்றங் கூறப்பட்டது. (க)

அ௪௰. கழாஅக்கா ல் பள்ளியுள் வைத்தற்றுற் சான்றோர்
குழாஅத்துப் பேதை புகல். ௪௰.

இ - ள். சான்றோர் குழாத்துப் பேதை புகல்-சான்றோரவையின்கட் பேதையா யினன் புகுதல்—கழாக்கால் பள்ளியுள் வைத்தற்று-தூய்வல்ல மிதித்தகாலை இன்பந் தரும் அமளிக்கண்ணே வைத்தாற்போலும். எ - று.

கழுவாக்காலென்பது இடக்கரடக்கு. அதனால் அவ்வமளியும் இழிக்கப்படுமாறு போல இவனால் அவ்வவையும் இழிக்கப்படுமென்பதாம். இதனால் அவன் அவையிடை இருக்குமாறு கூறப்பட்டது. (௪௰)

---

## அரு ம் அதி.—புல்லறிவாண்மை.

இனி எனைப்புல்லறிவாண்மை கூறுகின்றார். அது புல்லிய றன்மையென விரியும். அஃதாவது தான் சிற்றறிவினனாயிருந்தே

வறிவினையாடற்
றன்னைப்பேசதி
வினனாக மதித்து உயர்ந்தோர் கூறும் உறுதிச்சொற்கொள்ளாமை.

அசக. அறிவின்மை யின்மையு ளின்மை பிறிதின்மை
யின்மையா வையா துலகு. க.

இ - ள். இன்மையுள் இன்மை அறிவின்மை - ஒருவனுக்கு இல்லாமை பலவற் றுள்ளும் மிக்கவில்லாமையாவது

அறிவில்லாமை;—பிறிதின்மைஇன்மையா வையாது [illegible]

அரு ம் அதி.—புல்லறிவாண்மை.

உலகு - மற்றப்பொருளில்லாமையோவெனின், அதனை

மையாகக் கொள்ளார் உலகத்தார். எ - று.

அப்பெற்றித்தாய இல்லா
அறிவென்பது எண்ணித் தலைமையுற்றி நல்லறிவின்மையின்றது. புல்லறிவாளர் செல்வமெய்தியவழியும் இம்மைமறுமைப்பய னெய்தாமையின் அதனை இன்மையு ளின்மையென்றும், நல்லறிவாளர் வறுமையெய்தியவழியும் அஃதிடு வாமையின் அதனை இன்மையா வையாதென்றுங் கூறினார். இதனால் புல்லறிவினது குற்றங் கூறப்பட்டது.
(௧)

அசஉ. அறிவிலா னெஞ்சுவந் தீதல் பிறிதியாது
மில்லை பெறுவான் றவம். ௨.

இ - ள். அறிவிலான் நெஞ்சு உவந்து ஈதல் - புல்லறிவுடையான் ஒருவனுக்கு மனமுவந்து ஒன்று கொடுத்தல் கூடிற்றாயின்,—பெறுவான் தவம் பிறிது யாதும் இல்லை - அதற்குக் காரணம் பெறுகின்றவனல்வினையே, வேறொன்று மில்லை எ - று.

ஒரோவழி நெஞ்சுவந்தீதல்கூடவிற புல்லறிவாளரும் நல்வினைசெய்ப என்பார்க் குப், பெறுவான் வீழ்பொருளெய்தியான் போல்வதல்லது இம்மை நோக்கியாக மறுமை நோக்கியாக ஈவின்மு நல்லரெனக் கூறியவாறு கூடிற்றாயின் அதற்குக்காரண மென்றுஞ் சொற்கள் அவாய்நிலையான் வந்தன. இதனால் அஃதுடையார் தம்மாட்டு நல்லன செய்தலறியாமை கூறப்பட்டது.
(௨)

அசஊ. அறிவிலார் தாந்தம்மைப் பீழிக்கும் பீழை
செறுவார்க்குஞ் செய்த லரிது. ௩.

இ - ள். அறிவிலார் தாந்தம்மைப் பீழிக்கும் பீழை - புல்லறிவுடையார் தாமே தம்மை வருத்தும் வருத்தம்—செறுவார்க்கும் செய்தல் அரிது - அதுசெய்தற்குரிய ராய தம்பகைவர்க்குஞ் செய்தலரிது. எ - று.

ஐயம் தரும் - கசடறக் கற்றதொரு நூலுண்டாயின், அதன் கண்ணும் ஐயுறவை விளைக்கும். எ - று.

பிறக்கை

வல்லதென எழாவது இறுதிக்கட்டொக்கது. உண்டாயினென்பது அவாய்நிலையான் வந்தது. ஐயம் அது வல்லரென்பதூஉம் இவ்வாறுசொல்லோவென்பது. (௫)

அசுக. அற்ற மறைத்தலோ புல்லறிவு தம்வயிற்
குற்ற மறையா வழி. ௬.

இ - ள். தம் வயின் குற்றம் மறையாவழி - புல்லறிவாளர் தங்கணிகழுங் குற்றங் களைபறிந்து கடியாராயின், — அற்றம் மறைத்தலோ புல்லறிவு - உடையால் அற்ற மறைத்தாராகத் தம்மைக் கருதுதலும் புல்லறிவாம். எ - று.

ஞும்

குற்றமறைத்தலாவது அவற்றை இலவாக்குதல். மறைக்கப்படுவன பலவற்றுள் உணர்ந்தவற்றையெல்லாம் மறையாது தாழ்ந்ததொன்றினையே மறைத்து அவ்வளவாற் றம்மையு முலகவொழுக்கினராக மதித்தலும் புல்லறிவென்பதாம். இவை மூன்று பாட்டானும் அவர் தம்மை வியத்தற்குற்றங் கூறப்பட்டது. (௬)

அசஎ. அருமறை சோரு மறிவிலான் செய்யும்
பெருமிறை தானே தனக்கு. எ.

இ - ள். அருமறை சோரும் அறிவிலான் - பெறுதற்கரிய உபதேசப் பொருளைப் பெற்றும் உட்கொள்ளாது போக்கும் புல்லறிவாளன் — தானே தனக்குப் பெருமிறை செய்யும் - அவ்வுறுதி பறியாமையாற் றானே தனக்கு மிக்க வருத்தத்தைச் செய்துகொள்ளும். எ - று.

சோருமென இடத்து நிகழ்பொருளின் றொழில் இடத்தின்மேனின்றது. மிக்க வருத்தம் பொறுத்தற்கரிய துன்பங்கள்.

இனி அருமறைசோரு மென்பதற்குப் பிற ரெல்லாம் உள்ளத்தடக்கப்படும் எண்ணத்தை வாய்சோர்ந்து பிறர்க்குரைக்குமென் றுரைத்தார்; அது பேதைமை யென்னும் பேதைமையாவதன்றிப் புல்லறிவாண்மை யன்மையறிக. (எ)

அ௪அ. ஏவவுஞ் செய்கலான் றான்றேறா னவ்வுயிர்
போஒ மளவுமோர் நோய். அ.

இ - ள். ஏவவும் செய்கலான் - புல்லறிவாளன் தனக்குறுதியாயவற்றை அறிவுடையார் சொல்லாநிற்கவுஞ் செய்யான், — தான் தேறான் - அதுவன்றித் தானாகவும் இவை செய்வனவென்றறியான், — அவ்வுயிர் போமளவும் ஓர் நோய் - அவ்வுயிர் யாக்கையினீங்குமளவும் நிலத்திற்குப் பொறுத்தற்கரியதொரு நோயாம். எ - று.

உயிர் தான் உணர்த்தற்றன்மைத்தாயிருக்கும் நின்ற யாக்கை வயத்தான் மருடற் றன்மைத்தாய் வேறுபடுதலின் அவ்வுயிரென்றும், அதனினீங்கியபொழுதே அதற்கு இரண்டனுளொன்று கூடுதலிற் போமளவுமென்றும், குலமிழுதலில பொறுக்கின்ற நிலத்திற்குப் பாவயாக்கை பெரும்பொறையாய்த் துன்பஞ்செய்தலின் நோக்கூறினர்.
ஒருநோயென
(அ)

அ௪௯. காணாதாற் காட்டுவான் றான்காணான் காணாதான்
கண்டானாந் தான்கண்ட வாறு. க.

உ.சி அவையம் அறிதல்.

இ - ள். காணுதாற் காட்டுவான் தான் காணான் - தன்னை எல்லாமறிந்தானாக மதித்தலாற் பிறரால் ஒன்றறியுந் தன்மையிலாதானை அறிவிக்கப்புகுவான் அவனாற் பழிக்கப்பட்டுத் தான் அறியானாய் முடியும்;—காணாதான் தான் கண்டவாறு கண்டானாம் - இனி அவ்வறியுந்தன்மையில்லாதான் கொண்டது விடாமையாற் றானறிந்த வாற்றால் அதனை அறிந்தானாய் முடியும் எ - று.

புல்லறிவாளர்க்கு நல்லறிவு கொளுவுதல் ஒருவாற்றானும் இயைவதன்றென் பதாம்.

(௯)

அ௫0. உலகத்தா ருண்டென்ப தில்லென்பான் வையத்
தலகையா வைக்கப் படும். ௧0

இ - ள். உலகத்தார் உண்டு என்பது இல் என்பான் - உயர்ந்தோர் பலரும் உண்டென்பதோர் பொருளைத் தன் புல்லறிவானில்லையென்று சொல்லுவான்—வையத்து அலகையா வைக்கப்படும் - மகனென்று கருதப்படான், வையத்துக் காணப்படுவதோர் பேயென்று கருதப்படும். எ - று

கடவுளும் மறுபிறப்பும் இருவினைப்பயனும் முதலாக அவர் உளவென்பன பலவேனுஞ் சாதிபற்றி உண்டென்பதென்றும், தானே வேண்டிய கூறலால் ஒப்பும் வடிவால் ஒவ்வாமையுமுடைமையிற் றன்யாக்கை காரது மக்கள்யாக்கையுட் டோன்று தல்லல்ல அலகையென்றுங் கூறினார். இவை நான்குபாட்டானும் உறுதிசொற் கொள்ளாமையது குற்றங் கூறப்பட்டது.

(௧0)

---

## அ௬ம் அதி.—இகல்.

இனி அவற்றான் வரும் வெகுளிகாம நகளுள் அரசர்க்கு

வெகுளி பெரும்பான் மைத்தாகலின், அதனன் வருவன கூறவான் றொடங்கி, முதற்கண் இகல் கூற வென்றார். அஃதாவது இருவர் தம்முட் பொருது வலிதொலைதற்கேதுவாய மாறுபாடு.

அறுக. இகலென்ப வெல்லா வுயிர்க்கும் பகலென்னும
பண்பின்மை பாரிக்கு நோய். க.

இ - ள். எல்லா உயிர்க்கும் பகல் என்னும் பண்பு இன்மை பாரிகும் நோய் - எல்லாவுயிர்கட்கும் பிறவுயிர்களோடு கூடாமையென்னுந் தீக் குணத்தை வளர்க்குங் குற்றம்—இகல் என்ப - இகலென்று சொல்லுவர் நூலோர். எ - று.

மக்களையும் விலங்குகளோடொப்பிப்பதென்பது தோன்ற எல்லாவுயிர்க்கு மென்றும், பகுதிக்குணத்தை இடைநின்று விளைத்தலிற் பகலென்னும் பண்பின்மை யென்றுங் கூறினர். சற்குணமின்மை அருத்தாபத்தியாற் றீக்குணமாயிற்று. இதனால் இகலது குற்றங் கூறப்பட்டது. (க)

அறுஉ. பகல்கருதிப் பற்ற செயினு மிகல்கருதி
பின்னாசெய் யாமை தலை. உ.

இ - ள். பகல் கருதிப் பற்ற செயினும் - தம்மொடு கூடாமையைக் கருதி ஒருவன் வெறுப்பன செய்தானாயினும்,—இகல் கருதி இன்னா செய்யாமை தலை - அவனொடு மாறுபடுதலைக் குறித்துத் தாமவனுக்கு இன்னாதவற்றைச் செய்யாமை உயர்ந்தது. எ - று.

அறு ம் அதி.—இகல்.

உளஅ

செய்தி பகைமையனைத் தாக்தாழ்க்துவராவாலும், ஒழியின்
அப்பந்துதன நாமே யோய்ந்துபோகத் தாம் ஒக்கெவராலாலும்,
பது விகாரமாயிற்று.
செய்யாமை நிலயென்றார். பந்துதவென்

(க)

அருஉ. இகலென்னு மெவ்வநோய் நீக்கிற் றவவில்லாத்
தாவில் விளக்கந் தரும். க.

இ - ள். இகல் என்னும் எவ்வ நோய் நீக்கின் - மாறுபாடென்று சொல்லப் படுகின்ற துன்பத்தைச்செய்யு நோயை ஒருவன் தன்மனத்தினின்று நீக்குமாயின்,— தவல் இல்லாத் தாவில்விளக்கம் தரும் - அவனுக்கு அந்நீக்குதல் எஞ்ஞான்றும் உளதாகற் கேடுவாய புகழைக் கொடுக்கும். எ - று.

தவவில்லாமை அருத்தாபத்தியான் அப்பொருட்டாயிற்று. தாவில்விளக்கம் வெளிப்படை. யாவருநண்பராவர், ஆகவே எல்லாச்செல்வமுமெய்திக் கொடை முதலிய காரணங்களாற் புகழ்பெறுமென்பதாம். (க)

அருச. இன்பத்து ளின்பம் பயக்கு மிகலென்னுந்
துன்பத்துட் டுன்பங் கெடின். ச.

இ - ள். இகல் என்னும் துன்பத்துள் துன்பம் கெடின் - மாறுபாடென்று சொல்லப்படுகின்ற துன்பங்களெல்லாவற்றினும் மிக்க துன்பம் ஒருவனுக்கில்லையாயின்,—இன்பத்துள் இன்பம் பயக்கும் - அவ்வின்மை அவனுக்கு இன்பங்களெல்லாவற் றினும் மிக்கவின்பத்தினைக் கொடுக்கும். எ - று

துன்பத்துட்டுன்பம் பலரொடு பொருது வலிதொலைதலான் யாவர்க்குமெளியனாய் புறுவது. அதனை இடையின்றியே பயத்தலின், இகலென்றுமென்றார். இன்பத்துளின் பம் யாவருநட்பாகலின் எல்லாப்பயனுமெய்தியுறுவது. (ச)

அ௫௫. இகலெதிர் சாய்ந்தொழுக வல்லாரை யாரே
மிகலூக்குந் தன்மை யவர். ௫.

இ - ள். இகல் எதிர் சாய்ந்து ஒழுக வல்லாரை - தம்முள்ளத்து மாறுபாடு தோன்றியவழி அதனையேற்றுக்கொள்ளாது சாய்ந்தொழுகவல்லாரை,—மிகல் ஊக்கும் தன்மையவர் யார் - வெல்லக்கருதுந்தன்மையுடையார் யாவர்! எ - று.

இகலையொழிந்தொழுகல் வேந்தர்க்கு எவ்வாற்றானும் அரிதாகலின் வல்லாரை யென்றும், யாவர்க்கும் நண்பாகலின் அவரை வெல்லக் கருதுவார் யாவருமில்லை யென்றுங் கூறினார். இவை நான்குபாட்டானும் இகலாதார்க்கு வரும் நன்மை கூறப்பட்டது. (௫)

அ௫௬. இகலின் மிகலினி தென்பவன் வாழ்க்கை
தவலுங் கெடலு நணித்து. ௬.

இ - ள். இகலின் மிகல் இனிது என்பவன் வாழ்க்கை - பிறரொடு மாறுபடுதல் மிகுதல் எனக்கு இனிதென்று அதனைச்செய்வானது உயிர்வாழ்க்கை—தவலும் கெடலும் நணித்து - பிழைத்தலும் முற்றக்கெடுதலுஞ் சிறிதுபொழுதின் உளவாம். எ - று.

மிகுதல் மேன்மேலூக்குதல். இனிதென்பது தான் வேறல்குறித்தல். பிழைத்தல் வறுமையானின்றாதல். முற்றக்கெடுதல் இறத்தல். இவற்றோடு நணித்தென் [illegible] [illegible]

[illegible]—இகல்,

பகைமை [illegible], உம்மைகளை அதிகாம் இறந்தது தழீஇய [illegible] [illegible]. பொருட்கேடும் உயிர்க்கேடும் [illegible]. (௬)

அ௫எ. மிகன்மேவன் மெய்ப்பொருள் காணா ரிகன்மேவ
லின்னா வறிவி னவர். எ.

இ-ள். இகல் மேவல் இன்னா அறிவினவர் - இகலோடு மேவுதலையுடைய இன்னாதவறிவினையுடையார்—மிகல் மேவல் மெய்ப்பொருள் காணார் - வெற்றி பொருந்துதலையுடைய நீதிநூற்பொருளை யறியமாட்டார். எ-று.

இன்னாவறிவு தமக்கும் பிறர்க்குந் தீங்கு பயக்குமறிவு. வெற்றி வழிநின்றார்க்கு உளதாவது. காணப்படும்பயத்ததாகலின், மெய்ந்நூலெனப்பட்டது இகலால் அறிவு மயங்குதலின், காணாரென்றார். இவையிரண்டுபாட்டானும் இகலினார்க்கு வருந் தீங்கு கூறப்பட்டது. (எ)

அ௫அ. இகலிற் கெதிர்சாய்த லாக்க மதனை
மிகலூக்கி னூக்குமாங் கேடு. அ.

இ-ள். இகலிற்கு எதிர் சாய்தல் ஆக்கம் - தன்னுள்ளத்து மாறுபாடு தோன்றியவழி அதனை யெதிர்தலையொழிதல் ஒருவனுக்கு ஆக்கமாம்;—அதனை மிகல் ஊக்கின் கேடு ஊக்குமாம் - அது செய்யாது அதன்கண்மிகுதலை மேற்கொள்வானாயிற் கேடுந்தன்கண் வருதலை மேற்கொள்ளும். எ-று.

எதிர்தல் ஏற்றுக் கோடல். சாய்ந்தபொழுதே வருதலின், சாய்தல் ஆக்கமென்றார். இகலிற்கெனவும் அதனையெனவும் வந்தன வேற்றுமைமயக்கம். (அ)

அ௫௯ இகல்காணு னாக்கம் வருங்கா லதனை
மிகல்காணுங் கேடு தரற்கு. கூ.

இ-ள். ஆக்கம் வருங்கால் இகல் காணான் - ஒருவன் தன்க ணாக்கம் வரும்வழிக் காரணமுண்டாயினும் இகலை நினையான்,—கேடு தரற்கு அதனை மிகல் காணும் - தனக்குக் கேடுசெய்து கோடற்

காரணமின்றியும் அதன்கண் மிகுதலை நினைக்கும். எ - று.

இகலான் வருங்கேடு பிறரானன்றென்பது தோன்றத் தானென்றார். ஈண்டவை நாம் இரண்டாவதும் ஏழாவதன்கண் வந்தன. ஆக்கக்கேட்டுக்கு முன்னடப்பன இக் கிளந்த இன்மை உண்மைகளென்பதாம். (௯)

அஅ௰. இகலானா மின்னாத வெல்லா நகலானா
நன்னய மென்னுஞ் செருக்கு. ௬௰.

இ - ள். இகலான் இன்னாத எல்லாம் ஆம் - ஒருவனுக்கு மாறுபாடொன்றானே இன்னாதனவெல்லாம் உளவாம்;—நகலான் நன்னயம் என்னும் செருக்கு ஆம் - நட்பொன்றானே நல்ல நீதியென்னும் பெருஞ்செல்வம் உளதாம். எ - று.

இன்னாதன வறுமை, பழி, பாவமுதலாயின. நகல் மகிழ்தல். நகலென்பதூஉம் மிகுதியென்பதூஉம் தத்தங்காரணங்கட்காயின. நயமென்னுஞ் செருக்கெனக் காரியத்தைக் காரணமாக உபசரித்தார். இவைமூன்றுபாட்டானும் அவ்விருமையும் கூறப்பட்டன.

(௪௰)

## அஎம் அதி.—பகைமாட்சி.

அஃதாவது அறிவின்மைமுதலிய குற்றங்களுடைமையாற் பகையை மாட்சிப்படுத்தல். அரசர்க்கு எவ்வாற்றானும் பகையின்மை கூடாமையின் மேற்பொதுவகையான் விலக்கப்பட்ட இகலை ஈண்டுச் சிறப்புவகையான் விதிக்கின்றாராகலின், இஃது அதன்பின் வைக்கப்பட்டது.

அஅக. வலியார்க்கு மாறேற்ற லோம்புக வோம்பா
மெலியார்மேன் மேக பகை. க.

இ - ள். வலியார்க்கு மாறு ஏற்றல் ஓம்புக-தம்மின்வலியார்க்குப் பகையாயெதிர் நிலை ஒழிக;—மெலியார்மேல் பகை ஓம்பா மேக - வினை ஒழியாது விரும்புக. எ - று.

மெலியார்க்குப் பகையாதலை

வலியாரென்புழித் துணைவலியு மடங்கலின், மெலியாரென்புழித் துணைவலி யின் மையு உ கொள்ளப்படும் அத்துணைதான் படை பொருண்முதலிய வேற்றுமைத்துணை யும் நல்லறிவுடைமை நீதிநூல்வழியொழுகன் முதலிய ஒற்றுமைத்துணையுமென விரண்டாம். அவவிரண்டுமில்லாரை வெல்வார்க்கு வலிதொலையாமையின் அவரோடு பகைத்தல் விதிக்க பட்டது. இக்கரோக்காகிய இதனுட் பகைமாட்சி பொதுவகை யாற் கூறப்பட்டது

(க)

அகூ அன்பில னான்ற துணையிலன் றான்றுவ்வா
னென்பரியு மேதிலான் றுப்பு. உ.

இ - ள். அன்பு இலன் - ஒருவன் தன்சுற்றத்தின்மேலன்பிலன்,—ஆன்ற துணை இலன் - அதுவேயன்றி வலிய துணையிலன்,—தான் துவ்வான்-அதன்மேற் றன்வலி யிலன்,—ஏதிலான் துப்பு என் பரியும் - அப்பெற்றியான் மேல்வந்த பகைவன் வலி யினை யாங்ஙனந்தொலைக்கும்! எ - று.

சுற்றமும் இருவகைத்துணையும் தன்வலியுமிலனாகலின், அவன்மேற் செல்வார்க்கு வலி வளர்வதன்றித் தொலையாதென்பதாம். துவ்வான் துவ்வினைச் செய்யான். (உ)

அகூங. அஞ்சு மறியா னமைவில னீகலான்
றஞ்ச மெளியன் பகைக்கு. ங.

இ - ள். அஞ்சும் - ஒருவன் அஞ்சவேண்டாதவற்றிற்கு அஞ்சாநிற்கும்,—அறி யான் - அறியவேண்டுமவற்றை யறியான்,—அமைவு இலன் - பிறரோடு பொருந்த மிலன்,—ஈகலான் -

இவற்றின்மேலும் யாவர்மாட்டும் இவறன்மாலையன்,—பகைக்குத் தஞ்ச மெளியன் - இப்பெற்றியான் பகைவர்க்கு மிகவெளியன். எ - று.

தஞ் சமெளியனென்பன ஒருபொருட்பன்மொழி. இந்நான்கு குற்றமுமுடையான் பகையின்றியுமழியுமாகலின் தஞ்சமெளியனென்றார். (௭)

அகஅ. நீங்கான் வெகுளி நிறைபில னெஞ்ஞான்றும்
யாங்கணும் யார்க்கு மெளிது. ௮.

இ - ள். வெகுளி நீங்கான் - ஒருவன் வெகுளியினீங்கான்,—நிறை இலன் - அது வேயன்றித் தான் நிறையுடையனல்லன்,—எஞ்ஞான்றும் யாங்கணும் யார்க்கும் எளிது - அவன்மேற்சேறல் எக்காலத்தும் எவ்விடத்தும் யார்க்கு மெளிது. எ - று. * தஞ்சக் கிளவி யெண்மைப் பொருட்டே,

தொல்காப்பியம், சொல், உ௩௪.

---

உ௯அ அ ம் ஆ றி.—பகைமாட்சி.

: நிறை மறைபிறரறியாமை. வெகுட்சியையுடைமையாலும், மறை வெளிப்படுத் தலானும், மேற்செல்வார்க்குக் காலமும் இடமும் வலிபுமறிந்து செறல்வேண்டாது. இனி இனி தென்று பாடமோதி அவன்பகைமை இனிதென் றுரைப்பாருமுளர்.

அக௯. வழிநோக்கான் வாய்ப்பன செய்யான் பழிநோக்கான்
பண்பிலன் பற்றார்க் கினிது. ௯.

இ - ள். வழி நோக்கான் - ஒருவன் நீதிநூலையோதான்,—வாய்ப்பன செய் யான் - அது

விழித்ததொழில்களைச் செய்யான்,—பழி நோக்கான் - தனக்கு வரும் பழியைப் பாரான்,—பண்புஇலன் - தான் பண்புடையனல்லன்,—பற்றார்க்கு இனிது- அவன் பகைவர்க்கு அப்பகைமையினிது. எ - று.

தொல்லோரடிப்பட வழங்கிவருவதாகலான் வழியென்றும், தப்பாது பயன்படு தலின் வாய்ப்பனவென்றும் இக்குற்றங்களுடையான் குலேயழிதலிற் பற்றார்க்கினி தென்றுங் கூறினர்.
(௬)

அசுகூ. காணுச் சினத்தான் கழிபெருங் காமத்தான்
பேணுமை பேணப் படும். கூ.

இ - ள். காணுச் சினத்தான் - தன்னையும் பிறரையுந் தானறியாமைக்கேதுவாகிய வெகுளியையுடையான் யாவன்,—கழி பெருங்காமத்தான் - மேன்மேல் வளராநின்ற மிக்க காமத்தையுடையான் யாவன்,—பேணுமை பேணப்படும் - அவரது பகைமை விரும்பிக் கொள்ளப்படும். எ - று.

காணாதசினமென்பது விகாரமாயிற்று. முன்னேனுக்கு யாவரும் பகையாகலானும், ஏனேனுக்குக் காரியந் தோன்றுமையானும், தாமே வழிவரென்பது பற்றி, இவர் பேணுமை பேணப்படுமென்றூர்.
(௯)

அசுஎ. கொடுத்துங் கொளல் வேண்டுமன்ற வடுத்திருந்து
மாணுத செய்வான் பகை. எ.

இ - ள். அடுத்து இருந்து மாணுத செய்வான் பகை - வினையைத் தொடங்கி யிருந்து அதற்கேலாதன செய்வான்பகைமையை—கொடுத்தும் கொளல் மன்றவேண்டும் - சிலபொருளழியக்கொடுத்தாயினுங் கோடல் ஒருதலையாகவேண்டும். எ- று.

ஏலாதன மெலியனுய்வைத்துத்துணிதலும், வலியனுய்வைத்துத் தணிதலும்

அ௬௯. செறுவார்க்குச் சேணிகவா வின்ப மறிவிலா
அஞ்சும் பகைவர்ப் பெறின். ௯

இ - ள். அறிவு இலா அஞ்சும் பகைவர்ப் பெறின் - நீதியையறிதலில்லாத அஞ்சும் பகைவரைப் பெற்றால்,—செறுவார்க்குச் சேண் இன்பம் இகலா-அவரைச் செறு வார்க்கு உயர்தலின்பங்கள் நீங்கா. எ - று.

உபாயமறிதலும் அறிந்தாற் செய்துமுடிக்குந் திண்மையுமில்லாதாரே பகைவரா தல் கூடாமையிற் பெறினென்றும், அவரையறிந்து மேற்சென்றபொழுதே பகையின் மையுஞ் செல்வமுங் கூறினர்.

ஒருங்கேயெய்தலிற் சேணுடையின்பங்கள் இகலாவென்றும்

(௯)

அ௭௦. கல்லான் வெகுளுஞ் சிறுபொரு ளெஞ்ஞான்று
மொல்லானை யொல்லா தொளி. ௧0.

இ - ள். கல்லான் வெகுளும் சிறுபொருள் ஒல்லானை - நீதிநூலைக் கல்லாதா னொடு பகைத்தலான் வரும் எளியபொருளை மேவாதானை— எஞ்ஞான்றும் ஒளி ஒல் லாது - எஞ்ஞான் று புகழ்மேவாது. எ - று.

சிறுபொருள் முயற்சி சிறிதாய பொருள். நீதியறியாதானை வேறல் எளிதாயிருக் கவும் அது மாட்டாதானை வெற்றியான் வரும் புகழ் கூடாதென்பதாம்; ஆகவே, இச் சிறிய முயற்சியாற பெரிய பயனெய்துகவென்றவாறாயிற்று. இதற்குப் பிறசொல்லாம் அதிகாரத்தோடு மாறுகன்மேலும் ஒரு பொருட்டொடர்புபடாமலுரைத்தார். இவை மூன்றுபாட்டாலும் அத னினுய பயன் கூறப்பட்டது. (௧0)

---

## அ௮ம் அதி.—பகைத்திறந்தெரிதல்.

ஏராகவுடைய உழவரோடு பகைகொண்டாராயினும்,—சொல் ஏர் உழவர் பகை கொள்ளற்க - சொல்லை ஏராகவுடைய உழவரோடு பகை கொள்ளாதொழிக. எ - று.

சொல் ஆகுபெயரான் நீதிநூன்மேனின்றது. வீரம் சூழ்ச்சியென்னும் ஆற்றல்களுள் வீரமேயுடையாரோடு பகைகொண்டாற் கேடுவருதல் ஒருதலையன்று, வந்தாயினுந் தனக்கேயாம், ஏனைச் சூழ்ச்சியுடையாரோடாயிற் றன்வழியினுள்ளார்க்குந் தப்பாது வருதலின், அது கொள்ளினும் இது கொள்ளற்க வென்றார். உம்மையான் அதுவுமாகாமை பெறுதும். இரண்டு முடையாரோடு கொள்ளலாகாமை சொல்ல வேண்டாவாயிற்று. உருவகவிசேடம். (உ)

அஎங. ஏமுற் றவரினு மேழை தமியனாய்ப்
பல்லார் பகைகொள் பவன். ங.

இ - ள். தமியனாய்ப் பல்லார் பகைகொள்பவன் - தான் தனியனாய்நின்று பலரோடு பகைகொள்வான் — ஏமுற்றவரினும் ஏழை - பித்துற்றாரினும் அறிவிலன். எ-று.

தனிமை சுற்றம் நட்புப் படைமுதலியவின்மை. மயக்கத்தால் ஒப்பாராயினும் ஏமுற்றவர் அதனாற் றீங்கெய்தாமையின், தீங்கெய்துதலுமுடைய இவனை அவரினும் ஏழையென்றார். தீங்காவது துணையுள்வழியும் வேறல் ஐயமாயிருக்க அஃதின்றியும் பலரோடு பகைகொண்டு அவரால் வேறுவேறு பொருதற்கண்ணும் ஒருங்கு பொருதற்கண்ணும் அழிந்தே விடுதல். இவைமூன்றுபாட்டானும் பகை கோடற்குற்றம் பொதுவினுஞ் சிறப்பினுங் கூறப்பட்டது. (ங)

அஎச. பகைநட்பாக் கொண்டொழுகும் பண்புடை யாளன்
றகைமைக்கட் டங்கிற் றுலகு. ச.

இ - ள். பகை நட்பாக் கொண்டு ஒழுகும் பண்புடையாளன் தகை மைக்கண்வேண்டியவழிப் பகையை வேறுபடுத்துத் தனக்கு நட்பாக செய்துகொண்டொழுகும் இயல்பினையுடைய அரசனது பெருமையுளே—தங்கிற்று உலகு - அடங்கிற்று இவ்வுலகு. எ - று.

வேண்டியவழியென்பது ஆக்கத்தான் வந்தது. வேறுபடுத்தல் பகைநிலைமையி னீக்குதல். ஒழுகல் நீதிவழியொழுகல். பெருமை பொருள், படையென இருவகைத் தாய ஆறதல். அதன்வழித்தாதற்கு தங்கிற்றென்றார்.

எஞ்ஞான்றுந் திரிபின்மையின், அத்தணிவுபற்றித்

(௪)

அஎ௫. தன்றுணை யின்றாற் பகையிரண்டாற் றானொருவ
னின்றுணையாக் கொள்கவற்றி னொன்று. ௫.

இ - ள். தன்றுணை இன்று - தனக்குதவுந் துணையோவெனின் இல்லை,—பகை இரண்டு - நலிவுசெய்யும் பகையோவெனின் இரண்டு,—ஒருவன் தான் அவற்றின்

❀

# அஅம் அதி.—பகைத்திறந்தெரிதல்.

உ௲௬

று இன்றுணையாக் கொள்க - அங்ஙனமாய் நின்றவழி ஒருவனாகிய தான் அப்பகை

...ளுட் பொருந்தியதொன்றை அப்பொழுதைக்கு இனிய துணையாகச் செய்து கொள்க. எ - று.

பொருந்தியது வினையதனை வேறற்கு ஏற்றது. அப்பொழுது அவ்வெல்லும் பொழுது திரிபின்றாகச் செய்துகொள்கவென்பார், இன்து

ணையாவென்றார். ஆல்கள் [illegible] இவையிரண்டுபாட்டானும் நட்பாக்கற்பாலது கூறப்பட்டது. (௫)

அஎகூ. தேறினுந் தேறா விடினு மழிவின்கட்
டேறான் பகாஅன் விடல். கூ.

இ - ள். தேறினும் தேறாவிடினும் - பகைவனை முன் தெளிந்தானாயினும் தெளிந்திலனாயினும்—அழிவின்கண் தேறான் பகான் விடல் - தனக்குப் புறத்தொருவினை யாற் றாழ்வுவந்துழிக் கூடாது நீக்காது இடையே விட்டுவைக்க. எ - று.

முன்றெளிந்தானாயினும் அப்பொழுது கூடாதொழிகவென்றது, உள்ளாய் நின்று [1]கடுத்தனோக்கி. தெளிந்திலனாயினும் அப்பொழுது நீக்காதொழிகவென்றது, அவ் ழிவிற்குத் துணையாதனோக்கி. இதனான் நொதுமலாக்கற்பாலது கூறப்பட்டது. ()

அஎஎ. நோவற்க நொந்த தறியார்க்கு மேவற்க
மென்மை பகைவ ரகத்து. எ.

இ - ள். நொந்தது அறியார்க்கு நோவற்க - நொந்ததனைத் தாமாக அறியாத நட்டார்க்குத் தன்னோவு சொல்லற்க ;—மென்மை பகைவரகத்து மேவற்க - வலியின்மை பார்த்திருக்கும் பகைவர்மாட்டு அவ்வலியின்மையை மேலிட்டுக்கொள்ளற்க. எ - று.

நோவென்னும் முதனிலைத்தொழிற்பெயர் ஈண்டு அது சொல்லுதற்கணாயிற்று. பகைவர்கட் டவிர்வது கூறுவார், நட்டார்கட் டவிர்வதும் உடன்கூறினார். இதனால் அவ்விருபகுதிக்கண்ணுஞ் செய்வது கூறப்பட்டது. (எ)

அஎஅ. வகையறிந்து தற்செய்து தற்காப்ப மாயும்
பகைவர்கட் பட்ட செருக்கு. அ.

உயிர்க்குமாத்திரத்திற்கும் உளரல்லர் ஒருதலையாக. எ - று.

அவர் வலியராய்த் தம்மைக் களைத ல் ஒருதலையாகலின், இறந்தாரேய ா வரென் பதாம். அவருயிர்த்த துணையா னே தாமிறப்பரெனினுமமையும். இதனாற் களைபா வழிப்படியொழுக்குக் கூறப்பட்டது. (௫௦)

---

## அக ம் அதி.—உட்பகை.

அஃதாவது புறப்பகைக்கு இடனாக்கிக் கொடுத்து அது வெல்லுந் துணையும் உள்ளாயிற்கும் பகை. இதுஎம், களையப்படுவதன் பாலதாகலின், பகைத்திறந்தெரி தலின்பின் வைக்கப்பட்டது.

அஅக. நிழனீரு மின்னாத வின்னா தமர்நீரு
மின்னுவா மின்னா செயின். க.

இ - ள். நிழல் நீரும் இன்னாத இன்னா- ஒருவனுக்கு அனுபவிக்கவேண்டுவன வாய நிழலும் நீருந் முன் இனியவேனும் பின் நோய்செய்வன இன்னாவாம்;—தமர் நீரும் இன்னாசெயின் இன்னாவாம் - அதுபோலத் தழுவவேண்டுவனவாய தமரியல்பு களும் முன் இனியவேனும் பின் இன்னாசெய்வன இன்னாவாம். எ - று.

நோய் பெருங்கால், பெருவயிறு முதலாயின. தமரென்றதனால் உட்பகையாதற் குரியராய ஞாதியரென்பதறிக . இன்னாசெயல் முன்வெளிப்படாமைநின்று துணை பெற்றவழிக் கெடுத்தல். (க)

அஅஉ. வாள்போல் பகைவரை யஞ்சற்க வஞ்சுக
கேள்போல் பகைவர் தொடர்பு. உ.

இ - ள். வாள்போல் பகைவரை அஞ்சற்க - வாள்போல எறிதுமென்று வெளிப் பட்டுநிற்கும் பகைவர் பகையினை அஞ்சாதொழிக ;—கேள்போல் பகைவர் தொடர்பு அஞ்சுக - அங்ஙனம் மில்லாது கேள்போல மறைந்துநிற்கும் பகைவர் நட்பினை அஞ்சுக. எ - று.

பகைவர் ஆகுபெயர். முன்னேயறிந்து காக்கப்படுதலான்

அஞ்சத்தகவென்றதூஉம் அங்ஙனம் அறியவும் காக்கவும்படாமையின் கெடுதல் ஒருதலையென்பதுபற்றி அஞ்சக வென்றுங்கூறினார். பின்செய்யும் பகையினுங்கொடிதாகலானும், காக்கலாகாததாகலானும், அஞ்சப்படுவது முன்செய்த அவர்தொடர்பாயிற்று. இவையிரண்டு பாட்டானும் உட்பகை ஆகாதென்பது கூறப்பட்டது. (௨)

௮௮௩. உட்பகை யஞ்சித்தற் காக்க வுலைவிடத்து
மட்பகையின் மாணத் தெறும். ௩.

## ௮௯ம் அதி.—உட்பகை

பரிமே

இ - ள். உட்பகை அஞ்சித் தற்காக்க - உட்பகையாயினாரையஞ்சித் தம்மைக் காத்துக்கொண்டொழுகுக;—உலைவிடத்து மட்பகையின் மாணத் தெறும் - அங்ஙன மொழுகாதவழித் தமக்கோர் தளர்ச்சி வந்தவிடத்துக் குயவன் மட்கலத்தை யறுக் குங்கருவிபோல அவர் தப்பாமற்கெடுப்பர். எ - று.

காத்தல் அவரணுகாமலும் அவர்க்குடம்படாமலும் பரிகரித்தல். மண்ணைப் பகுக்குங்கருவி மட்பகையெனப்பட்டது. பகைமைதோன்றாமல் உள்ளாயிருந்தே யிறுத்தலின், கெடுதல் தப்பாதென்பதாம். (௩)

௮௮௪. மனமாணா வுட்பகைதோன்றி னினமாணா
வேதம் பலவுந் தரும். ௪.

இ - ள். மனம் மாணா உட்பகை தோன்றின் - புறந்திருந்தியதுபோன்று அகந் திருந்தாத உட்பகை அரசனுக்கு உண்டாவதாயின்,—இனம் மாணா ஏதம் பலவும் தரும் - அஃது அவனுக்குச்சுற்றம் வயமாகாமைக்கேதுவாகிய குற்றம்பலவற்றையும்

கொடுக்கும். எ - று.

அவை சுற்றத்தாரை உள்ளாயின்று வேறுபடுத்தலும், அதனால் அவர் வேறு பட்டவழித் தான்றேருமையும், பின் அவற்றான் விளைவனவுமாம். (ச)

அஅ௩. உறன்முறையா னுட்பகை தோன்றி னிறன்முறையா னேதம் பலவுந் தரும். ரு.

இ - ள். உறல் முறையான் உட்பகை தோன்றின் - புறத்து உறவுமுறைத்தன் மையோடு கூடிய உட்பகை அரசனுக்கு உண்டாவதாயின், —இறல் முறையான் ஏதம் பலவும் தரும் - அஃது அவனுக்கு இறத்தல் முறையோடு கூடிய குற்றம்பலவற்றை யுங் கொடுக்கும். எ - று.

அவை புறப்பகைத் துணையாய் நின்றே அது தோன்றுமத் தோறன்முதலிய வஞ்சனை செய்தலும், அமைச்சர்முதலிய உறுப்புக்களைத் தேய்த்தலும் முதலாயின. (ரு)

, அஅ௪. ஒன்றுமை யொன்றியார் கட்படி னெஞ்ஞான்றும் பொன்றுமை யொன்ற லரிது. சு.

இ - ள். ஒன்றுமை ஒன்றியார்கண் படின் - பகைமை தனக்குள்ளாயினார் மாட்டே பிறக்குமாயின், —பொன்றுமை ஒன்றல் எஞ்ஞான்றும் அரிது - அரசனுக்கு இறவாமை கூடுதல் எஞ்ஞான்றுமரிது. எ - று.

பொருள் படை முதலிய உறுப்புக்களாற் பெரியனாயகாலத்து மென்பார், எஞ்ஞான்றுமென்றார். இவை நான்குபாட்டானும் அதனாற் பட்டது.

றனக்குவருர் நீங்கு கூறப்

(சு)

அஅஎ. செப்பின் புணர்ச்சிபோற் கூடினும் கூடாதே
யுட்பகை யுற்ற குடி. எ.

இ - ள். செப்பின் புணர்ச்சிபோல் கூடினும் - செப்பினது புணர்ச்சி போலப் புறத்து வேற்றுமை தெரியாமற் கூடினாராயினும்,—உட்பகை உற்ற குடி கூடாது - உட்பகை உண்டாயகுடியிலுள்ளார் அகத்துத் தம்முட்கூடார். எ - று. [illegible]

## கூ0 ம் அதி.—பெரியாரைப்பிழையாமை.

செப்பினதுபுணர்ச்சி செப்பு மூடியோடு புணர்ந்த புணர்ச்சி. உட்பகையான் மனம் வேறுபட்டமையிற் புறப்பகை பெற்றுழி வீற்றுவீற்றாமென்பதாம். குடி கூடாதென்பதனை நாடு வந்ததென்பதுபோலக் கொள்க. உட்பகை தானுற்றகுடி யோடு கூடாதென்றும், உட்பகை யுண்டாயகுடி அப்பகையோடு கூடாதென்றும் உ ரைப்பாருமுளர்.
(எ)

அஅஅ. அரம்பொருத பொன்போலத் தேயு முரம்பொரு
துட்பகை யுற்ற குடி. அ.

இ - ள். உட்பகை உற்றகுடி - முன் வளர்ந்துவந்ததாயினும் உட்பகையுண்டாய குடி—அரம் பொருத பொன் போலப் பொருது உரம் தேயும் - அரத்தாற் பொரப் பட்ட இரும்புபோல அதனாற் பொரப்பட்டு வலிதேயும். எ - று.

பொருதென்னுஞ் செயப்பாட்டுவினையெச்சம் தேயுமென்னும் வினைகொண்டது. அஃது உரத்தின்றொழிலாயினுங் குடிமேலேற்றுதலின், வினைமுதல்வினையாயிற்று. காரியஞ்செய்வதுபோன்று பொருந்தி மெல்லமெல்லப் பிரிவித்தலான், வலி தேய்ந்து விடுமென்பதாம். இவையிரண்டுபாட்டானும் அவன்குடிக்குவருந் தீங்கு கூறப் பட்டது.

அஅ௯. எட்பக வன்ன சிறுமைத்தே யாயினு
முட்பகை யுள்ளதாங் கேடு. ௯.

இ - ள். உட்பகை எட்பகவு அன்ன சிறுமைத்தே ஆயினும்-அரசனது உட்பகை அவன்பெருமையை நோக்க எள்ளின்பிளவையொத்த சிறுமையுடைத்தேயாயினும், — கேடு உள்ளதாம் - பெருமையெல்லாம் அழியவருங்கேடு அதனகத்ததாம். எ - று.

எத்துணையும் பெரிதாயகேடு தனக்கெல்லைவருந்துணையும் எத்துணையுஞ்சிறிதாய உட்பகையுள்ளேயடங்கியிருந்து, வந்தால் வெளிப்பட்டுநிற்குமென்பதாம். இதனால் அது சிறிதென்று இகழப்படாதென்பது கூறப்பட்டது. (௯)

அ௯0. உடம்பா டிலாதவர் வாழ்க்கை குடங்கருட்
பாம்போ டுடனுறைந் தற்று. ௧0.

இ - ள். உடம்பாடு இலாதவர் வாழ்க்கை - மனப்பொருத்தமில்லாதாரோடு கூட ஒருவன் வாழும்வாழ்க்கை—குடங்கருள் பாம்போடு உடன் உறைந்தற்று - ஒரு குடிலுள்ளே பாம்போடுகூட உறைந்தாற்போலும். எ - று.

குடங்கமென்னும் வடசொற்றிரிந்து நின்றது. இடச்சிறுமையாலும் பயிற்சியாலும் பாம்பாற்கோட்படல் ஒருதலையாம்; ஆகவே, அவ்வுவமையால் அவனுயிர்க்கு இறுதிவருதல் ஒருதலையென்பது பெற்றாம். இவனாற் கண்ணோடாதவரைக் கடிக என்பது கூறப்பட்டது.
(௧0)

---

## ௯0 ம் அதி.—பெரியாரைப்பிழையாமை.

அஃதாவது பெரியாரினை அவமதித்து ஒழுகாமை. இரட்டுறமொழித லென்பதனாற் பெரியாரென்பது ஆற்றலாற்பெரியாராய வேந்தர்மேலும் தவத்தாற் பெரியாராய முனிவர்மேலும் நின்றது. மேற்சொல்லாது எஞ்சிநின்றதாகலின், இது

செருவியான் வருவனவற்றதிகாரத்தின்கண் வைக்கப்பட்டது.

## ௯0ம் அதி.—பெரியாரைப்பிழையாமை.

உரை

*௮௯௧. ஆற்றுவா ராற்ற லிகழாமை போற்றுவார்*
*போற்றலு ளெல்லாந் தலை.* க.

இ-ள். ஆற்றுவார் ஆற்றல் இகழாமை - எடுத்துக்கொண்டன யாவும் முடிக்க வல்லாருடைய ஆற்றலை அவமதியாமை—போற்றுவார் போற்றலுள் எல்லாம் தலை - தங்கட்டீங்கு வாராமற்காப்பார் செய்யுங் காவல்களெல்லாவற்றினும் மிக்கது. எ-று.

ஆற்றலென்பது பெருமை, அறிவு, முயற்சியென்னும் மூன்றன்மேலும் நிற்றலிற் சாதியொருமை. இகழ்ந்தவழிக் களையவல்லாரென்பது தோன்ற ஆற்றுவாரென்றும், அரண், படை, பொருள், நட்பு முதலிய பிறகாவல்கள் அவரானழியுமாகலின் அவ்விகழாமையைத் தலையாய காவலென்றுங் கூறினார். பொதுவகையால் அவ்விருதிறத்தாரையும் பிழையாமையது சிறப்பு இதனாற் கூறப்பட்டது. (க)

*௮௯௨. பெரியாரைப் பேணா தொழுகிற் பெரியாரால்*
*பேரா விடும்பை தரும்.* உ.

இ-ள். பெரியாரைப் பேணாது ஒழுகின் - ஆற்றலாற் பெரியராயினாரை வேந்தர் நன்குமதியாது அவமதித்து ஒழுகுவாராயின்,—பெரியாரால் பேரா இடும்பை தரும் - அவ்வொழுக்கம் அப்பெரியாரால் அவர்க்கு எஞ்ஞான்றும் நீங்காத துன்பங்களைக் கொடுக்கும். எ-று.

அத்துன்பங்களாவன இருமையினும் இடையறாது வரும் மூவகைத் துன்பங்களுமாம். அவையெல்லாந் தாமே செய்துகொள்கின்றனவென்பது தோன்ற, ஒழுக்கத்தை வினைமுதலாக்கியும் பெரியாரைக் கருவியாக்கியுங் கூறினார். பொதுவகையால் அவரைப் பிழைத்தகுற்றம் இதனாற் கூறப்பட்டது. இனிச் சிறப்புவகையாற் கூறுப.

*௮௯௩. கெடல்வேண்டிற் கேளாது செய்க வடல்வேண்டி*

இ - ள். அடல் வேண்டின் ஆற்றுபவர்கண் இழுக்கு - வேற்றுவேந்தரைக் கோறல்வேண்டியவழி அதனை அப்பொழுதே செய்யவல்ல வேந்தர்மாட்டுப் பிழை வினை—கெடல் வேண்டின் கேளாது செய்க - தான் கெடுதல்வேண்டினானாயின் ஒருவன் நீதிநூலைக் கடந்துசெய்க. எ - று.

அப்பெரியாரைக் "காலனும் காலம் பார்க்கும் பாராது—வேலீண்டு தானை விழுமியோர் தொலைய—வேண்டிடத் தடூஉம் வெல்போர் வேந்த*" தர் என்றார் பிறரும். நீதிநூல் செயலாகாதென்று கூறலின், கேளாதென்றார். (௩)

அகச. கூற்றத்தைக் கையால் விளித்தற்றா லாற்றுவார்க்
காற்றாதா ரின்னா செயல். ௪.

இ - ள். ஆற்றுவார்க்கு ஆற்றாதார் இன்னா செயல் - மூவகையாற்றலுமுடையார்க்கு அவையில்லாதார் தாம் முற்பட்டு இன்னாதவற்றைச் செய்தல்—கூற்றத்தைக் கையால் விளித்தற்று - தானேயும் வரற்பாலனாய கூற்றுவனை அதற்குமுன்னே கைகாட்டி அழைத்தாலொக்கும். எ - று.

---

* புறநானூறு, ௪௧.

௯௰ அதி.—பெரியாரைப் பிழையாமை.

கையால் விளித்தல் இகழ்ச்சிக்குறிப்பிற்று. தாமேயும் உயிர்முதலிய கோடற்குரியாரை அதற்குமுன்னே விரைந்து தம்மேல் வருவித்துக்கொள்வர் இறப்பினது உண்மையும் அண்மையுங்கூறியவாறு. இவையிரண்டுபாட்டானும் தலின் குற்றம் கூறப்பட்டது.
வேந்தரைப்பிழைத்
(௪)

அகஞ. யாண்டுச்சென் றியாண்டு முளராகார் வெந்துப்பின்
வேந்து செறப்பட் டவர். ௩.

இ - ள். வெந்துப்பின் வேந்து செறப்பட்டவர் - பகைவர்க்கு வெய்தாய வலியினையுடைய வேந்தனாற்செறப்பட்ட அரசர்—யாண்டுச் சென்று யாண்டும் உளராகார் - அவனைத் தப்பி எங்கேபோயுளராவர், ஓரிடத்தும் உளராகார். எ - று.

இடைவந்த சொற்கள் அவாய்நிலையான் வந்தன. வெந்துப்பின் வேந்தாகலால் தன் னிலம் விட்டுப்போயவர்க்கு இடங்கொடுப்பாரில்லை, உளராயின் இவர் இனியா ரென்பது நோக்கி அவனோடு நட்புக்கோடற்பொருட்டும் தானே வந்தெய்திய அவ ருடைமை வௌவுதற்பொருட்டுங் கொல்வர், அன்றெனின் உடனே யழிவரென்பன நோக்கி, யாண்டுச்சென் றியாண்டுமுள ராகாரென்றார். இதனால் அக்குற்றமுடையார் அருமையுடைய அரண் சேர்ந்தும் உய்யாரென்பது கூறப்பட்டது. (௩)

அஙகூ. எரியாற் சுடப்படினு முய்வுண்டா முய்யார்
பெரியார்ப் பிழைத்தொழுகு வார். கூ.

இ - ள். எரியால் சுடப்படினும் உய்வு உண்டாம் - காட்டிடைச் சென்றொருவன் அண்டத் தீயாற்சுடப்பட்டானாயினும் ஒருவாற்றான் உயிருய்தல்கூடும்;—பெரியார்ப் பிழைத்து ஒழுகுவார் உய்யார் - தவத்தாற் பெரியாரைப்பிழைத்து ஒழுகுவார் எவ்வாற்றானும் உயிருய்யார். எ - று.

தீ முன் உடம்பினைக் கதுவி அதுவழியாக உயிர்மேற்சேறலின் இடையே உய்யவுங்கூடும், அருந்தவர்வெகுளி அன்னதன்றித் தானிற்பது கணமாய் அதற் குள்ளே யாவர்க்குங் காத்தலரிதா கலின், அது கூடாதாகலான், அதற்கேதுவாய பிழைசெய்யற்க வென்பதாம்.
(௫)

௮௯௭. வகைமாண்ட வாழ்க்கையும் வான்பொருளு மென்னாந்
தகைமாண்ட தக்கார் செறின். ௭.

இ - ள். தகை மாண்ட தக்கார் செறின் - சாப வருள்கட்கேதுவாய பெருமை மாட்சிமைப்பட்ட அருந்தவர் அரசனை வெகுள்வராயின்,—வகை மாண்ட வாழ்க்கையும் வான் பொருளும் என்னும் - உறுப்பழகுபெற்ற அவனரசாட்சியும் ஈட்டிவைத்த பெரும்பொருளும் என்பட்டொழியும்! எ - று.

உறுப்பு அமைச்சு, நாடு, அரண், படையெனவிவை. செறினென்பது அவர் செறுமை தோன்ற நின்றது. இவ்வெச்சத்தான் முன் வருவனவற்றிற்கும் இஃதொக்கும். அரசர் தஞ்செல்வக்களிப்பான் அருந்தவர்மாட்டுப் பிழை செய்வாராயின், அச்செல்வம் அவர் வெகுளித்தீயான் ஒருகணத்திற்றானே வெந்துவிடுமென்பதாம்.(௭)

௮௯௮. குன்றன்னார் குன்ற மதிப்பிற் குடியொடு
நின்றன்னார் மாய்வர் நிலத்து. ௮.

---

* திருக்குறள், ௨௧.

---

*

௯௧ம் அதி.—பெண்வழிச்சேறல்.



இ - ள். குன்று அன்னார் குன்ற மதிப்பின் - குன்றத்தை யொக்கும் அருந்தவர் கெட நினைப்பாராயின்,—நிலத்து நின்றன்னார் குடியொடு மாய்வர் - அப்பொழுதே இந்நிலத்து நிலைபெற்றாற்போலுஞ் செல்வர் தங்குடியொடும் மாய்வர். எ - று.

வெயில் மழை முதலிய பொறுத்தலுஞ் சலியாமையும் உள்ளிட்ட குணங்களுடைமையின், குன்றன்னாரென்றார்: "மல்லன் மலையனைய மாதவர்*" என்றார் பிறரும்.

நிலைபெற்றாற்போறலாவது இறப்பப்பெரியராகலின் இவர்க்கு இல்லையென்று கண்டாராற் கருதப்படுதல்.

எஞ்ஞான்றும் அழி
(அ)

அகூகூ. ஏந்திய கொள்கையார் சீறி னிடைமுரிந்து
வேந்தனும் வேந்து கெடும். கூ.

இ - ள். ஏந்திய கொள்கையார் சீறின் - காத்தற்கருமையான் உயர்ந்த விரதங்களை உடையார் வெகுள்வாராயின்,—வேந்தனும் இடை வேந்து முரிந்து கெடும் - அவராற்றலான் இந்திரனும் இடையே தன்பதம் இழந்துகெடும். எ - று.

"வேந்தன் மேய தீம்புனலுலகமும்†" என்றார் பிறரும். நகுடனென்பான் இந்திரன்பதம்பெற்றுச் செல்கின்ற காலத்துப் பெற்ற களிப்புமிகுதியான் அகத்தியன் வெகுள்வதோர் பிழைசெய அதனாற் சாபமெய்தி அப்பதம் இடையே இழந்தா னென்பதனையுட்கொண்டு, இவ்வாறு கூறினார். இவையிரண்டுபாட்டானும் முனிவரைப் பிழைத்தலின்குற்றங் கூறப்பட்டது.
(க)

கூ00. இறந்தமைந்த சார்புடைய ராயினு முய்யார்
சிறந்தமைந்த சீரார் செறின். க0.

இ - ள். சிறந்து அமைந்த சீரார் செறின் - கழியமிக்க தவத்தினையுடையார் வெகுள்வாராயின்,—இறந்து அமைந்த சார்பு உடையராயினும் உய்யார் - அவரான் வெகுளப்பட்டார் கழியப் பெரிய சார்பு உடையராயினும், அதுபற்றி உய்யமாட்டார். எ - று.

சார்பு அரண், படை, பொருள், நட்பெனவிவை. அவையெல்லாம் வெகுண்டவாறு ஆற்றலாற்றிரிபுரம்போல அழிந்துவிடுமாகலின், உய்யாரென்றார். சீருடையது சீரெனப்பட்டது. இதனால் அக்குற்றமுடையார் சார்பு பற்றியும் உய்யாரென்பது

கூறப்பட்டது.
(௯௦)

---

## ௯௧ ம் அதி.—பெண்வழிச்சேறல்.

இனிக் காமத்தான் வருவன வேறே பகையல்லவாயினும் ஆக்கஞ்சிதைத்தல் அழிவுதலைத் தருதலென்னுந் தொழில்களாற் பகையோடொத்தலிற் பகைப்பாற்படுவனவாமாகலான், அவற்றைப் பகைப்பகுதியதிறுதிக்கட் கூறுவான்றொடங்கி, முதற் கட் பெண்வழிச்சேறல் கூறுகின்றார். அஃதாவது தன்வழியொழுகற்பாலளாய இல்லாள்வழியே தான் ஒழுகுதல்.

௯௦௧. மனைவிழைவார் மாண்பய னெய்தார் வினைவிழைவார்
வேண்டாப் பொருளு மது. ௧.

* சீவகசிந்தாமணி, முத்தியிலம்பகம், கஙக.

---

† தொல்காப்பியம், பொருளதிகாரம், அகத்திணையியல், ௭.



இ - ள். மனை விழைவார் மாண் பயன் எய்தார் - இன்பக்காரணமாகத் தம் மனையாளை விழைந்து அவடன்மையராய் ஒழுகுவார் தமக்கு இன்றியமையாத அறத்தினை யெய்தார்;—வினை விழைவார் வேண்டாப் பொருளும் அது—இனிப் பொருள் செய்தலைமுயல்வார் அதற்கிடையீடென்று இகழும்பொருளும் அவ்வின்பம். எ - று.

மனையும் விழைதலும் பயனும் ஆகுபெயர். அவ் வின்பம் அவடன்மையராதற்கு ஏதுவாயவின்பம். அஃது அவனாற்பயனுயவறத்தினும் அவ்வறத்திற்குந் தனக்கும் ஏதுவாய பொருளினுஞ் செல்லவிடாமையின், விடற்பாற்றென்பதாம்.

௯0௨. பேணாது பெண்விழைவா னாக்கம் பெரியதோர்
நாணாக நாணுத் தரும். உ.

இ - ள். பேணாது பெண் விழைவான் ஆக்கம் - தன்னாண்மையை விட்டு மனையாளது பெண்மையை விழைவான் எய்திநின்ற செல்வம்—பெரியது ஓர் நாண் ஆக நாணுத் தரும் - இவ்வுலகத்து ஆண்பாலார்க்கெல்லாம் பெரியதோர் நாணுண்டாகத் தனக்கும் நாணுதலைக் கொடுக்கும். எ - று.

எய்திநின்றதாயிற்று, படைக்கும் ஆற்றலிலனாகலின். அச்செல்வத்தால் ஈதலுந் துய்த்தலும் முதலிய பயன்கொள்வாள் அவளாகலின், அவ்வாண்மைச் செய்கை அவள்கண்ணதாயிற்றென்று ஆண்பாலார் யாவரும் நாண அதனால் தன்னாண்மை யின்மை அறிந்து பின் தானும் நாணுமென்பது நோக்கிப் பெரியதோர் நாணாக நாணுத் தருமென்றார். இவையிரண்டுபாட்டானும் மனைவிழைதற் குற்றங் கூறப்பட்டது. (உ)

௯0௩. இல்லாள்கட் டாழ்ந்த வியல்பின்மை யெஞ்ஞான்று
நல்லாரு ணாணுத் தரும். ௩.

இ - ள். இல்லாள்கண் தாழ்ந்த இயல்பு இன்மை - ஒருவன் இல்லாண்மாட்டுத் தாழ்தற்கு ஏதுவாய அச்சம் —நல்லாருள் நாணு எஞ்ஞான்றும் தரும் - அஃதில்லாத நல்லாரிடைச் செல்லுங்கால் நாணுதலை அவனுக்கு எக்காலத்துங் கொடுக்கும். எ - று.

அவடான் அஞ்சி ஒழுகுதல் இயல்பாகலின், அவளையஞ்சுதல் இயல் பின்மை யாயிற்று. அங்ஙனமஞ்சியொழுகுதலின், அவளை நியமிப்பாரில்லையாம், ஆகவே, எல்லாக்குற்றமும் விளையுமென்பதுநோக்கி, எஞ்ஞான்றும் நாணுத்தருமென்றார். (௩)

(௫)

கூ0௬. இமையாரின் வாழினும் பாடிலரே யில்லா
ளமையார்தோ ளஞ்சு பவர். ௬.

இ - ள். இல்லாள் அமை ஆர் தோள் அஞ்சுபவர் - தம்மில்லாளுடைய வேய் போலுந்தோளினை அஞ்சுவார்,—இமையாரின் வாழினும் பாடு இலர் - வீரத்தாற் றுறக்கமெய்திய அமரர்போல இவ்வுலகத்து வாழ்ந்தாராயினும், ஆண்மையிலர். எ-று.

அமரர்போல வாழ்தலாவது பகைத்த வீரர் தோள்களையெல்லாம் வேறலான் நன்குமதிக்கப்பட்டு வாழ்தல். அது கூடாமையின், வாழினுமென்றார். அமையார் தோளெனவே, அஞ்சுதற்காரணத்தது எண்மை கூறியவாறு. வீரர்தோள்களை வென்றாராயினும் இல்லாடோள்களை அஞ்சுவார் ஆண்மையிலரென்பதாம். இவைநான்கு பாட்டானும் அவளையஞ்சுதற்குற்றம் கூறப்பட்டது.
(௬)

கூ0எ. பெண்ணேவல் செய்தொழுகு மாண்மையி னாணுடைப்
பெண்ணே பெருமை யுடைத்து. எ.

இ - ள். பெண் ஏவல் செய்து ஒழுகும் ஆண்மையின் - நாணின்றித் தன்னில்லா ளது ஏவற்றொழிலைச் செய்து திரிகின்றவனது ஆண்டன்மையின்—நாண் உடைப் பெண்ணே பெருமை உடைத்து - நாணினையுடைய அவள் பெண்டன்மையே மேம்பாடுடைத்து. எ - று.

நாணுடைப் பெண்ணென வேண்டாது கூறியது அவனேவல் செய்வானது நாணின்மை முடித்தற்காதலின், அம்மறுதலைத்தொழில் வருவிக்கப்பட்டது. ஏவல் ஆகுபெயர். இறுதிக்கட் பெண்ணென்பதூஉம் அது. ஏவல்செய்வித்துக் கோடற்சிறப்புத் தோன்றப் பெண்ணேயெனப் பிரித்தார். (எ)

௯0அ. நட்டார் குறைமுடியார் நன்றாற்றார் நன்னுதலாள்
பெட்டாங் கொழுகு பவர். அ.

இ - ள். நன்னுதலாள் பெட்டாங்கு ஒழுகுபவர் - தம்வேண்டியவாறன்றித் தம் மனையாள் வேண்டியவாறு ஒழுகுவார்—நட்டார்குறை முடியார் - தம்மொடு நட்புச் செய்தார் உற்ற குறை முடிக்கமாட்டார்,—நன்று ஆற்றார் - அதுவேயன்றி மறுமைக்குத் துணையாய அறஞ்செய்யவுமாட்டார். எ - று.

---

* இல்லவே பஞ்சி யிருந்தவையுமக் கொளநறுந்தெருநிற—புலவரை ஊக மதமேதரநிவெள பபு கைகது—வில்லா எழுவம் பிளக்கிட்டு வெகுண்டு கோகிக—கொல்புயிக புக்கிக குடை பேதுமோர் கோமெழுவித்தான்—சீவகசிந்தாமணி, மண்மகளிலம்பகம், ௨௪௪.

† பெண்மை நுண்மைபட்டுப் பொருள் கட்புலனுமிப அமைதித்தன்மை, குறுந்தன்மை என்பர் நச்சினார்க்கினியர்.

௯0௯ ம். [illegible] வரைவின்மகளிர்.

நன்னுதலுமென்பதனை "அறைமுயார்நிரச்த" என்புழிப்போலக் கொள்க. அவ்வாறே அறிந்து எவரும் பொருள்கொடுத்தலும் கூடாமையின், இருமைக்கும் வேண்டுவன செய்யமாட்டாரென்பதாம். (அ)

௯0௯. அறவினையு மான்ற பொருளும் பிறவினையும்
பெண்ணேவல் செய்வார்க ணில். ௯.

இ - ள். அறவினையும் - அறச்செயலும்—ஆன்ற பொருளும் - அது முடித்தற்கு ஏதுவாயபொருட்செயலும்—பிறவினையும் - அவ்விரண்டின் வேறாய இன்பச்செயல்களும்—பெண் ஏவல் செய்வார் கண் இல் - தம்மனையாள் ஏவல் செய்வார்மாட்டு உளவாகா. எ - று.

புலன்களைந்தாகலின், பிறவினை யெனப் பன்மையாயிற்று. அவைநோக்கி அறச்

செயல் பொருட்செயல்கள் முன்னேபொழிந்தார்க்குத நிலைமை அவள்கண்ணதாக வின், பின் அவைதாமும் இலவாயினவென்பது தோன்ற, அவற்றைப் பிரித்துக் கூறினார். இவைமூன்றுபாட்டானும் அவளேவல்செய்தற்குற்றங் கூறப்பட்டது. (௯)

௯௱௰. எண்சேர்ந்த நெஞ்சத் திடனுடையார்க் கெஞ்ஞான்றும்
பெண்சேர்ந்தாம் பேதைமை யில். ௰.

இ - ள். எண் சேர்ந்த நெஞ்சத்து இடன் உடையார்க்கு - கருமச்சூழ்ச்சிக்கட் சென்ற நெஞ்சத்தினையும் அதனானாய செல்வத்தினையும் உடையராய வேந்தர்க்கு— பெண் சேர்ந்து ஆம் பேதைமை எஞ்ஞான்றும் இல் - மனையாளைச் சேர்தலான் வினையும் பேதைமை எக்காலத்தும் உண்டாகாது. எ - று.

" இடனில்பருவத்தும்† " எனவும் " இடனின்றியிரந்தோர்க்கு‡ " எனவும் வந்தமையான், இடனென்பது அப்பொருட்டாதலறிக. இளமைக்காலத்து மென்பார், எஞ்ஞான்றுமென்றார். அப்பேதைமையாவது மேற்சொல்லிய விழைதல், அஞ்சல், ஏவல்செய்தலென்னு மூன்றற்குங் காரணமாயது. எதிர்மறைமுகத்தான் அம்மூன்றும் இதனாற்றொகுத்துக் கூறப்பட்டன. (௰)

---

## ௯௨ ம் அதி.—வரைவின்மகளிர்.

அஃதாவது தநலம் விலைகொடுப்பார் யாவர்க்கும் விற்பதல்லது அதற்கு ஆவார் ஆகாதாரென்னும் வரைவிலாத மகளிரது இயல்பு; ஆதலால் தமக்குரிய மகளிரான் வருங்குற்றத்தின் பின் வைக்கப்பட்டது.

௯௱௰௧. அன்பின் விழையார் பொருள்விழையு மாய்தொடியார்
இன்சொ லிழுக்குத் தரும். ௧.

அவ்வறிவு அவரை விடுதற்கு உபாயமென்பது தோன்றப் பின் கள்ளாவிடலென்றும் கூறினர் .
(௳)

௯௰௩. பொருட்பெண்டிர் பொய்ம்மை முயக்க மிருட்டறையி
லேதில் பிணந்தழீஇ யற்று. ௩.

இ - ள். பொருட்பெண்டிர் பொய்ம்மை முயக்கம் - கொடுப்பாரை விரும்பாது பொருளையே விரும்பும் பொதுமகளிரது பொய்ம்மையையுடைய முயக்கம்—இருட்டு அறையில் ஏதில் பிணம் தழீஇயற்று - பிணமெடுப்பார் இருட்டறைக்கண்ணே முன் னறியாத பிணத்தைத் தழுவினாற்போலும். எ - று.

பொருட்கு முயங்கும் மகளிர் கருத்துஞ்செயலும் ஆராயாது சாதியும் பருவமும் ஒவ்வாதாரை முயங்குங்கால் அவர்குறிப்புக் கூலிக்குப் பிணமெடுப்பார் காணப்படாத் தோரிடத்தின்கண் இயைபில்லாததோர் பிணத்தை எடுக்குங்கால் அவர்குறிப்போ டொக்குமெனவே, அகத்தால் அருவராநின்றும் பொருளுக்குப் புறத்தாற்றழுவுவர்; அதனை யொழிகவென்பதாம். இவை மூன்றுபாட்டானும் அவர்சொல்லும் செயலும் பொய்யென்பது கூறப்பட்டது.
(௳)

௯௰௪. பொருட்பொருளார் புன்னலந் தோயா ரருட்பொரு
ளாயு மறிவி னவர். ௪.

இ - ள். பொருட்பொருளார் புன்னலம் - இன்பமாகிய பொருளை இகழ்ந்து பொருளாகிய பொருளையே விரும்பும் மகளிரது புல்லியநலத்தை—அருட்பொருள் ஆயும் அறிவினவர் தோயார் - அருளோடு கூடிய பொருளை ஆராய்ந்துசெய்யும் அறிவினையுடையார் தீண்டார். எ - று.

அறமுதலிய நான்கும் பொருளெனப்படுதலின், பொருட்பொருள் அருட்பொருளென விசேடித்தார். புன்மை இழிந்தார்க்கே உரித்தாதல். தாம் விரும்பின்றி அறத்தின்று அவர் மெய்ந்நலம் மறந்திலராகலின், தோயாரென்பதாம். (௪)

கூகரு. பொதுநலத்தார் புன்னலந் தோயார் மதிநலத்தின்
மாண்ட வறிவி னவர். ரு.

இ - ள். மதி நலத்தின் மாண்ட அறிவினவர் - இயற்கையாகிய மதிநன்மையான் மாட்சிமைப்பட்ட செயற்கையறிவினையுடையார்—பொது நலத்தார் புன்ன லந்



தோயார் - பொருள்கொடுப்பார்க்கெல்லாம் பொதுவாய ஆசையினையுடைய மகளிரது புல்லிய நலத்தைத் தீண்டார். எ - று.

மதிநன்மை முற்பிறப்புக்களிற் செய்த நல்வினைகளான் மனத்தெளிவுடைத்தாதல். அதனானன்றிக் கல்வியறிவு மாட்சிமைப்படாமையின் மதிநலத்தின் மாண்ட வறிவினவரென்றும், அவ்வறிவுடையார்க்கு அவராசையது பொதுமையும் மெய்ந்நலத்தது புன்மையும் விளங்கித் தோன்றலின் தோயாரென்றுங் கூறினர். (௫)

கூகசு. தந்நலம் பாரிப்பார் தோயார் தகைசெருக்கிப்
புன்னலம் பாரிப்பார் தோள். சு.

இ - ள். தகை செருக்கிப் புன்னலம் பாரிப்பார் தோள் - ஆடல், பாடல், அழ கென்பனவற்றாற் களித்துத் தம்புல்லிய நலத்தை விலைகொடுப்பார் யாவர்மாட்டும் பரப்பும் மகளிர் தோளினை—தம் நலம் பாரிப்பார் தோயார் - அறிவொழுக்கங்களானாய தம்புகழை உலகத்துப் பரப்புதற்குரிய உயர்ந்தோர் தீண்டார். எ - று.

ஆடன்முதலிய மூன்றுமுடைமை அவர்க்கு மேம்பாடாகலின் தகையென்றும், தோயின் அறிவொழுக்கங்கள் அழியுமாகலின் அவற்றைப் புகழ்பரப்புவார் தோயா ரென்றுங் கூறினார். தந்நலமென்புழி நலம் ஆகுபெயர். இவைமூன்றுபாட்டானும் அவரை உயர்ந்தோர் தீண்டாரென்பது கூறப்பட்டது.
(௬)

கூ௧எ. நிறைநெஞ்ச மில்லவர் தோய்வர் பிறநெஞ்சிற்
பேணிப் புணர்பவர் தோள். எ.

இ-ள். நெஞ்சின் பிறபேணிப் புணர்பவர் தோள் - நெஞ்சினாற் பிறவற்றை ஆசைப்பட்டு அவை காரணமாகக் கொடுப்பாரை மெய்யாற்புணரும் மகளிர் தோள் களை—நிறை நெஞ்சம் இல்லவர் தோய்வர் - நிறையாற்றிருத்திய நெஞ்சமில்லாதார் தோய்வர். எ - று.

பொருளும் அதனாற் படைக்கப்படுவனவும் விரும்பும் நெஞ்சு அவற்றின்மேல தாகலின், புணர்வது உடம்புமாத்திரமென்பதறிந்து அதுவழி ஓடாதனிற்கும் நெஞ் சினையுடையார் தோயாமையின், அஃதிலார் தோய்வரென்றார். (எ)

கூ௧அ. ஆயுமறிவின ரல்லார்க் கணங்கென்ப
மாய மகளிர் முயக்கு. அ.

இ - ள். மாய மகளிர் முயக்கு - உருவுசொற்செயல்களான் வஞ்சித்தலை வல்ல மகளிரது முயக்கத்தை—ஆயும் அறிவினர் அல்லார்க்கு அணங்கு என்ப - அவ்வஞ் சனை ஆராய்ந்தறியுமறிவுடைய ரல்லார்க்கு அணங்குதாக்கென்று சொல்லுவர் நூலோர். எ - று.

அணங்கு காமநெறியான் உயிர்கொள்ளும் தெய்வமகள். தாக்குத் தீண்டல். இவ் வுவமத்தான் அம்முயக்கம் முன் இனிதுபோன்று பின் உயிர்கோடல்பெற்றாம். இது நூலோர் துணிவென்பதுதோன்ற அவர்மேல்வைத்துக் கூறினார். அப்பெயர் அவாய் நிலையான் வந்தது.

(அ)

௯௧௯. வரைவிலா மாணிழையார் மென்றோள் புரையிலாப்
பூரியர்க ளாழு மளறு.

## ௯௩-ம் அதி.—கள்ளுண்ணாமை.

[illegible]

இ - ள். வரைவு இலா மாண் இழையார் மென்றோள் - உயர்ந்தோர் இழிந்தோர் என்று விலைகொடுப்பார் யாவரையும் முயங்கும் மகளிரது மெல்லியதோள்கள்— புரை இலாப் பூரியர்கள் ஆழும் அளறு - அக்குற்றத்தையறியும் அறிவில்லாத கீழ்மக்கள் புக்கழுந்து நிரயம். எ - று.

உயர்தற்கேதுவாகலின், புரையெனப்பட்டது. சாதியானிழிந்தாரின் நீக்குதற்குப் புரையிலாப்பூரியர்களென்றும், அவர் ஆழ்தற்கேது உருவமுதலிய மூன்றுமென்பது தோன்ற மாணிழையார்மென்றோளென்றும், அவர்க்கு அளற்றினையிடையின்றிப் பயக்குமென்பது தோன்ற உருவகமாக்கியுங்கூறினர். (௯)

௯௨0. இருமனப் பெண்டிருங் கள்ளுங் கவறுந்
திருநீக்கப் பட்டார் தொடர்பு. ௰.

இ - ள். இருமனப் பெண்டிரும் கள்ளும் கவறும் - கவர்த்த மனத்தினையுடைய மகளிரும் கள்ளும் சூதுமென இம்மூன்றும்—திரு நீக்கப்பட்டார் தொடர்பு - திருமகளாற்றுறக்கப்பட்டார்க்கு நட்பு. எ - று.

இருமனம் ஒருவனொடு புணர்தலும் புணராமையும் ஒரு காலத்தேயுடையமனம். கவறு ஆகுபெயர். ஒத்தகுற்றத்தவாகலின், கள்ளும் சூதும் உடன்கூறப்பட்டன. வடநூலாரும் இக்கருத்தான் விதனமென உடன்கூறினார். வருகின்ற அதிகார முறைமையும் இதனானறிக. இனிவிராயெண்ணியவழிப் பன்மைபற்றி முடிபுகோட

வின், ஈண்டு, அஃறிணையாற்கொண்டது. திருந்தப்பட்டமை இக்குறிகளான் அறியப் படுமென்பதாம். இவைநான்குபாட்டானும் சேர்வார் இழிந்தோரென்பது கூறப் பட்டது. (௰)

---

## கூங ம் அதி.—கள்ளுண்ணாமை.

இனி ஒழுக்கமும் உணர்வுமழித்தற்கண் அவ்வரைவின்மகளிரோடொப்பதாய கள்ளினையுண்ணாமையது சிறப்பு எதிர்மறைமுகத்தாற் கூறுகின்றார்.

> கூஉக. உட்கப் படாஅ ரொளியிழப்ப ரெஞ்ஞான்றுங்
> கட்காதல் கொண்டொழுகு வார். க.

இ-ள். கட்காதல் கொண்டு ஒழுகுவார் - கள்ளின்மேற்காதல் செய்தொழுகுமரசர்—எஞ்ஞான்றும் உட்கப்படார் - எஞ்ஞான்றும் பகைவரானஞ்சப்படார்;—ஒளி இழப்பர் - அதுவேயன்றி முன்னெய்தி நின்ற ஒளியினையுமிழப்பர். எ-று.

அறிவின்மையால் பொருள் படை முதலியவற்றாற் பெரியராயகாலத்தும் பகைவர் அஞ்சார், தம்முன்னோரானெய்தினின்ற ஒளியினையும் இகழ்ப்பாட்டான் இழப்பரென்பதாம். இவையிரண்டானும் அரசு இனிதுசெல்லாதென்பது இதனாற் கூறப்பட்டது. (க)

> கூஉஉ. உண்ணற்க கள்ளை யுணிலுண்க சான்றோரா
> னெண்ணப் படவேண்டா தார். உ.

இ-ள். கள்ளை உண்ணற்க - அறிவுடையாரயினும் அஃதிலாரதற்கு ஏதுவாய கள்ளினை உண்ணாதொழிக;—உணில் சான்றோரான் எண்ணப்பட வேண்டாதார்

---

* காமந்தகம், அர்த்தியாயம், கக, சுலோகம், ௩௨௪.





கூங ம் அதி.—கள்ளுண்ணாமை.

௯௩௦. கள்ளுண்ணாப் போழ்திற் களித்தானைக் காணுங்கா
லுள்ளான்கொ லுண்டதன் சோர்வு. ௰.

இ-ள். கள் உண்ணாப் போழ்தில் களித்தானை - கள்ளுண்பானொருவன் தான் அஃதுண்ணாது தெளிந்திருந்த பொழுதின்கண் உண்டு களித்த பிறனைக் காணு மன்றே,—காணுங்கால் உண்டதன்சோர்வு உள்ளான்கொல்-காணுங்கால் தானுண்ட பொழுது உளதாஞ்சோர்வினை அவன் சோர்வால் அதுவெயிற்றென்று கருதான் போலும்! எ-று.

சோர்வு மனமொழிமெய்கள் தன்வயத்தவல்லவாதல்.

கருதலளவையான் அத னிழுக்கினை புய்த்துணரின் ஒழியுமென கூறப்பட்டது.

இதனால் அஃதொழிதற்காரணங்

(௯௰)

## ௯௪ ம் அதி.—சூது.

இனி அக்கள்ளுண்டல்போல அறம் பொருள் இன்பங்கட்கு இடையீடாகிய சூதாடலும் பிணிபுறத்தலும் கூறுவான்றொடங்கி, முதற்கட் சூதினதியல்பு கூறு கின்றார்.

௯௩௧. வேண்டற்க வென்றிடினுஞ் சூதினை வென்றதூஉந்
தூண்டிற்பொன் மீன்விழுங்கி யற்று. ௧.

இ-ள். வென்றிடினும் சூதினை வேண்டற்க - தான்வெல்லுமாற்றலுடையனா யினும் சூதாடலை விரும்பாதொழிக;—வென்றதூஉம் தூண்டிற்பொன் மீன் விழுங்கி யற்று - வென்று பொருளெய்துவார் உளராவெனின் அவ்வென்றபொருடானும் இரையான் மறைந்த தூண்டிலிரும்பினை இரையெனக்கருதி மீன் விழுங்கினாற்போ

லும். எ - று.

வேறல் ஒருதலையன்மையின் வென்றிடினுமென்றும், கருமங்கள் பலவுங்கெடுதலின் வேண்டற்கவென்றுங் கூறினார். எய்தியபொருள் சூதாவோர் நீங்காமைக்கு இட்டதோர் இரையென்பதூஉம், அதனாற்பின் துயருழத்தலும், உவமையாற்பெற்றாம்.

௯௩௨. ஒன்றெய்தி நூறிழக்குஞ் சூதர்க்கு முண்டாங்கொ
 னன்றெய்தி வாழ்வதோ ராறு. ௨.

இ - ள். ஒன்று எய்தி நூறு இழக்கும் சூதர்க்கும் - அத்தூண்டிற்பொன் போன்ற ஒன்றனை முன்பெற்று இன்னும் பெறுதுமென்னுங் கருத்தால் நூற்றினையிழந்து வறியராஞ் சூதர்க்கும் — நன்று எய்தி வாழ்வது ஓராறு உண்டாங்கொல் - பொருளால் அறனுமின்பமுமெய்தி வாழ்வதொரு நெறியுண்டாமோ ஆகாது. எ - று.

அவ்வாற்றாற் பொருளிழந்தே வருதலான் அதனாலெய்தும்பயனும் அவர்க்கில்லையென்பதாம். (௨)

௯௩௩. உருளாய மோவாது கூறிற் பொருளாயம்
 போஒய்ப் புறமே படும். ௩.



இ - ள். உருள் ஆயம் ஓவாது கூறின் - உருளுங்கவற்றின்கட்பட்ட ஆயத்தை விடாது கூறிச் சூதாடுமேல்,—பொருள் ஆயம் போஒய்ப் புறமே படும் - ஈட்டியபொருளும் அவன்பொருள்வருவாயும் அவனைவிட்டுப்போய்ப் பகைவர் கண்ணே தங்கும். எ - று.

கவற்றினது உருட்சியை அதனுடைய ஆயத்தின் மேலேற்றியும், சூதாடலை அது கூறு[illegible] காரணத்தின்மேலிட்டுங்கூறினார். பொருளாயமென்பது உம்மைத்தொகை. ஆயம் வடமொழித்திரிசொல். காத்தற்கண்ணும் இயற்றற்கண்ணும் கருத்திலனாகலின், அவையிரண்டும் பகைவர்பாற் செல்லுமென்பதாம். (௩)

கூகச. சிறுமை பலசெய்து சீரழிக்குஞ் சூதின்
வறுமை தருவதொன் றில். ௪.

இ - ள். சிறுமை பல செய்து சீர் அழிக்கும் சூதின் - தன்னை விழைந்தார்க்கு முன்னில்லாத துன்பங்கள் பலவற்றையும் விளைத்து உள்ளபுகழையும் கெடுக்குஞ் சூதுபோல்—வறுமை தருவது ஒன்று இல் - நல்குரவினைக் கொடுக்கவல்லது பிறிதொன்றில்லை. எ - று.

அத்துன்பங்கள் முன்னர்க் கூறுப. நல்வினைகளையும் நல்லினத்தையும் நீக்கித் தீவினைகளையுந் தீயினத்தையுங் கூட்டுதலால், சீரழிக்குமென்றார். வறுமைக்கு எல்லை யாவரென்பதாம். (௪)

கூகரு. கவறுங் கழகமுங் கையுந் தருக்கி
யிவறியா ரில்லாகி யார். ரு.

இ - ள். இல்லாகியார் - முற்காலத்துத் தாமுளராகியே இலராகியொழிந்தார்— கவறும் கழகமும் கையும் தருக்கி இவறியார் - கவற்றினையும் அஃதாடுங்களத்தினையும் அவ்வாடற்குவேண்டுங் கைத்தொழிலினையும் மேற்கொண்டு கைவிடாத வேந்தர். எ - று.

கைத்தொழில் வெல்லுமாயம்படப் பிடிதத்தெறிதல். அவ்விவருதலாற் பாண்டவர் தம்மரசுவிட்டு வனத்திடைப்போய் ஆண்மேறைந்தொழுகினரென அனுபவங் காட்டியவாறு. இவையைந்துபாட்டானும் அதனது வறுமைபயத்தற்குற்றங் கூறப்பட்டது.
(ரு)

கூகசு. அகடாரா ரல்லலுழப்பர்சூ தென்னு
முகடியான் மூடப்பட் டார். சு.

இ - ள். சூது என்னும் முகடியான் மூடப்பட்டார் - தன்பெயர்சொல்லல் மங்கலமன்மையிற் சூதென்று சொல்லப்படும்

முகடியான் விழுங்கப்பட்டார்—அகடு ஆரார் அல்லல் உழப்பர் - இம்மைக்கண் வயிறாரப்பெறார்; மறுமைக்கண் நிரயத் துன்பமுழப்பர். எ - று.

செல்வங்கெடுத்து நல்குரவுகொடுத்தற்றொழில் வேறுபடாமையிற் சூதென்னு முகடியென்றும், வெற்றிதோல்விகளொன்றி ஒருபொழுதும் விடாராகலின் ஈண்டு அகடாராரென்றும், பொய்புங்களவும் முதலிய பாவங்களிட்டலின் ஆண்டு அல்லலு ழப்பரென்றுங்கூறினார். வயிறாராமை சொல்லவே, ஏனைப்புலன்களுகாரபெறுமை சொல்லவேண்டாவாயிற்று. உழப்பரென்பது எதிர்காலவினை. (௬) [illegible] ம் [illegible].

௯௩௭. பழகிய செல்வமும் பண்பும் கெடுக்குங்
கழகத்துக் காலை புகின். எ.

இ - ள். காலை கழகத்துப் புகின் - அறம் பொருளின்பங்கட்கடைத்தகாலம் அரசனுக்குச் சூதாகெளத்தின்கட்கழிபுமாயின்,—பழகிய செல்வமும் பண்பும் கெடுக்கும் - அக்கழிவு தொன்றுதொட்டுவந்த அவன்செல்வத்தினையும் நற்குணங்களையும் போக்கும். எ - று.

பழகியவென்பது பண்புடனுமியையும். தான் செய்துகொள்ளும் அறமுதலிய வேயன்றி முன்னோரைத்தொடங்கி வருகின்றசெல்வமும் முன்செய்த நல்வினையின் பயனாய பண்பும் இலவாமென்பதாம். (எ)

௯௩௮. பொருள்கெடுத்துப் பொய்மேற் கொளீஇ யருள்கெடுத்
தல்ல லுழப்பிக்குஞ் சூது. அ.

இ - ள். சூது - சூது—பொருள் கெடுத்து - தன்னைப்பயின்றவன்பொருளைக்கெடுத்து,—பொய் மேற்கொளீஇ - பொ

ப்மை மேற்கொள்ளப்பண்ணி,—அருள் கெடுத்து - மனத்தெழும் அருளைக்கெடுத்து,—அல்லல் உழப்பிக்கும் - இவ்வாற்றான் அவனை இருமையினுந் துன்பமுறுவிக்கும் எ - று.

இத்தொழில்கண் மூன்றற்கும் சூது வினைமுதலாகவும், தோல்வி, வெற்றி, செற்றமென்பன முறையே கருவிகளாகவுங் கொள்க. முன்னதனான் இம்மையினும், ஏனையவற்றான் மறுமையினுமாம். பொருள்கொடுத்தென்பது பாடமாயின், அவ்வெச்சத் திற்குமுடிவு மேற்கொளீஇயென்புழி மேற்கோடலாகிய வினைமுதல்வினை. (அ)

௯௩௯. உடைசெல்வ மூணொளி கல்வியென் றைந்து
மடையாவா மாயங் கொளின். ௯.

இ - ள். ஆயம் கொளின் - அரசன் சூதினைத் தனக்கு வினோதத்தொழிலாக விரும்புமாயின்,—ஒளி கல்வி செல்வம் ஊண் உடை என்று ஐந்தும் அடையாவாம் - அவனை ஒளியும் கல்வியும் செல்வமும் ஊணும் உடையுமென்றிவ்வைந்துஞ் சாரா வாம். எ - று.

ஆயம் ஆகுபெயர். இச்சிறப்புமுறை செய்யுணோக்கிப் பிறழநின்றது. செல்வம் அறுவகையுறுப்புக்கள். ஊணுடையென்பனவற்றால் துப்புரவுகளெல்லாங் கொள்ளப் படும். காலமும் கருத்தும் பெறாமையின், இவையுளவாகாவென்பதாம். இவை நான்கு பாட்டானும் சிறுமைபலசெய்து அவற்றானிருமையுங்கெடுத்தல் கூறப்பட்டது. (௯)

௯௪0. இழத்தொறூஉங் காதலிக்குஞ் சூதேபோற் றுன்ப
முழத்தொறூஉங் காதற் றுயிர். ௧0.

இ - ள். இழத்தொறூஉம் காதலிக்கும் சூதேபோல் - சூதாடலான் இருமைப் பயன்களையுமிழக்குந்தோறும் அதன்மேற் காதல்செய்யுஞ் சூதன்போல—துன்பம் உழத்தொறூஉம் காதற்று உயிர் - உடம்பான் மூவகைத்துன்பங்களையும் அனுபவிக் குந்தோறும் அதன்மேற் காதலையுடைத்து உயிர். எ - று.

சூது ஆகுபெயர். உயிரினதறியாமை கூறுவார்போன்று

வாதமுதலாக வெண் ணப்பட்ட மூன்றுநோயும் அவ ரூக்குத் துன்ப ஞ்செய்யும். எ - று.

நூலோரெண்ணியவெனவே,அவர் அவற்றான்வகுத்த வாதப்பகுதி பித்தப்பகுதி ஐப்பகுதியென்னும் பகுதிப்பா டும் பெற்று ம் அவற்றிற்குணவொத்தலாவது சுவை வீரியங்களாலும் அளவாலும் பொருந்துதல். செயல்களொத்தலாவது மனமொழி மெய்களாற்செய்யுந் தொழில்களை அவை வரு ந்துவதற்கு முன்னேயொழிதல்.இவை இரண்டும் இவ்வனமன்றி மிகுதல் குறைதல்செய்யின், அவை தத்தநிலையினில்லாவாய் வருத்துமென்பதாம். காரணமிரண்டும் அவாய்நிலையான் வந்தன. முற்றும்மை விகா ரத்தாற்றொக்கது. இதனால் யாக்கைகட்கியல்பாகிய நோய் மூவகைத்தென்பதூஉம், அவை துன்பஞ்செய்தற்காரணம் இருவகைத்தென்ப தூஉம் கூ றப்பட்டன இன்பஞ் செய்தற்காரணம் முன்ன ர்க்கூறுப.
(க)

கசஉ. மருந்தென வேண்டாவாம் யாக்கைக் கருந்திய
தற்றது போற்றி யுணின். உ.

இ - ள். அருந்தியது அற்றது போற்றி உணின் - ஒருவன் முன்னுண்டது அற்ற படியைக் குறிகளாற்றெரியவறிந்து பின்னுண்ணுமாயின்,—யாக்கைக்கு மருந்து என வேண்டாவாம் - அவன் யாக்கைக்கு மருந்தென்று வேறுவேண்டாவாம். எ-று.

குறிகளாவன யாக்கைநொய்ம்மை, தேக்கின் றூய்மை, கரணங்டொழிற்குரிய வாதல், பசிமிகுதலெனவிவை முதலாயின. பிணிகள் யாக்கையவாகலின், யாக்கைக் கென்றார். உணியென்பது அதனருமை தோன்ற நின்றது. (உ)

கசக. அற்ற லளவறிந் துண்க வஃதுடம்பு
பெற்ற னெடிதுய்க்கு மாறு. க.

இ - ள். அற்றல் அளவு அறிந்து உண்க - முன்னுண்டது அற்றாற் பின்னுண் பதனை அறுமளவறிந்து அவ்வளவிற்றாக உண்க,—உடம்பு

பெற்றான் நெடிது உய்க்கு மாறு அஃது - இறப்பவும்பலவாய பிற யாக்கைகளிற்பிழைத்துப் பெறற்கரிய இம்மானுடயாக்கையைப் பெற்றான் அதனை நெடுங்காலங்கொண்டு செலுத்துநெறி அதுவாகலான். எ - று.

௯௪௩ கூறும் அறி—மருந்து.

இம்மை மறுமை வீடுபேறுகளெய்தற்பாலது ஈதொன்றுமேயாகலின் உடம்பு பெற்றானென்றும், அது நெடிதுநின்றுழி அவைபெருகச்செய்து கொள்ளலாமாகலின் நெடிதுய்க்குமாறென்றுங்கூறினார். பெற்றானென்று பாடமோதுவாருமுளர். (௩)

௯௪௪. அற்ற தறிந்து கடைப்பிடித்து மா......
துய்க்க துவரப் பசித்து.

இ - ள். அற்றது அறிந்து - முன்னுண்டது அற்றபடியையறிந்து,—துவரப் பசித்து - பின் மிகப்பசித்து,—மாறல்ல கடைப்பிடித்துத் துய்க்க - உண்ணுங்கால் மாறுகொள்ளாத உணவுகளைக் குறிக்கொண்டுண்க. எ - று.

அற்றதறிந் தென்னும் பெயர்த்துரை• அதனை யாப்புறுத்தற்பொருட்டு. உண்டது அற்றாலும் அதன்பயனாகிய இரதமறாதாகலான் அதுவுமறல்வேண்டுமென்பார், மிகப்பசித்தென்றார். பசித்தல்வினை ஈண்டு உடையான்மேனின்றது. மாறுகொள்ளாமையாவது உண்பான் பகுதியோடு மாறுகொள்ளாமையும், காலவியல்போடு மாறு கொள்ளாமையும், சுவை வீரியங்களாற்றம்முண் மாறுகொள்ளாமையுமாம். அவை யாவன முறையே வாதபித்த ஐகளாகிய பகுதிக்கடாதவற்றைச் செய்வனவாதலும், பெரும்பொழுது சிறுபொழுதென்னுங் காலவேறுபாடுகளுள் ஒன்றற்காவன பிறிதொன்றற்காகாமையும், தேனுநெய்யுந் தம்முளளவொத்துக் கஞ்சாதல் போல்வனவு மாம். அவற்றைக் குறிக்கொள்ளாது

மனம்பட்டவாற்றாற் றுய்ப்பின் அதனானே நோயும் மரணமும் வருதலின், கடைப்பிடித்தென்றார். (௪)

௯௪௫. மாறுபா டில்லாத வுண்டி மறுத்துண்ணி
னூறுபா டில்லை யுயிர்க்கு. ௫.

இ - ள். மாறுபாடு இல்லாத உண்டி மறுத்து உண்ணின் - அம்மூவகை மாறு கோளுமில்லாத உணவைத் தன்னுள்ளம் வேண்டியவளவினன்றிப் பிணிவாராவளவினால் ஒருவனுண்ணுமாயின்,—உயிர்க்கு ஊறுபாடு இல்லை - அவனுயிர்க்குப் பிணிகளாற்றுன்பம் விளைதலுண்டாகாது. எ - று.

உறுவதனை ஊறென்றார், அஃது இன்பத்திற்செல்லாதாயிற்று, இல்லையென்பது தொடர்பாகலின், துன்பமுறுவது உயிரேயாதலின், அதன்மேல்வைத்துக் கூறினார். மாறுபாடில்வழியுங் குறைதல் நன்றென்பதாம். இவைநான்குபாட்டானும் உண்ணப் படுவனவும், அவற்றதளவும், காலமும், பயனும் கூறப்பட்டன. (௫)

௯௪௬. இழிவறிந் துண்பான்க ணின்பம்போ னிற்குங்
கழிபே ரிரையான்க ணோய். ௬.

இ - ள். இழிவு அறிந்து உண்பான்கண் இன்பம்போல - அக்குறைதலைநன்றென் றறிந்து அவ்வாறேயுண்பவன்மாட்டு இன்பம் நீங்காது நிலைநிற்குமாறு போல,—கழி பேர் இரையான்கண் நோய் நிற்கும் - மிகப்பெரியவிரையை விழுங்குவான்மாட்டு நோய் நீங்காது நிலைநிற்கும். எ - று.

அவ்வாறேயுண்டல் உண்ணலாமளவிற் சிறிது குறையவுண்டல். இன்பமாவது வாதமுதலியமூன்றும் தத்தநிலையிற்பிரியாமையின் மனமொழிமெய்கள் அவன் வயத்தவாதலும் அதனான் அறமுதலிய நான்குமெய்தலுமாம். இரையையளவின்றிமெத்த அதனான் வருத்தம் விலங்கோடொத்தலின், இரையானென்றார். விதிபெதிர்மறை யிரண்டுவமும் பொருளுமாக்கியது இரண்டானும் பெறுதற்கு. (௬)

---

* பெயர்த்துரை - அருமாதம்.

௯௪௭. தீயள வன்றித் தெரியான் பெரிதுண்ணின்
நோயள வின்றிப் படும். ௭.

இ - ள். தெரியான் தீ அளவு அன்றிப் பெரிது உண்ணின் - தன்பசியும் அதற்
ற்றவுணவும் காலமுமாராயாது வேண்டியபோதுணவை வேண்டியதோர் காலத்து
த்தீயினளவன்றி ஒருவன் மிகவுண்ணுமாயின்,—நோய் அளவு இன்றிப் படும் -
மாட்டு நோய்கள் எல்லையற வளரும். எ - று.

தெரியாமை வினைக்குச் செயப்படுபொருள்கள் அதிகாரத்தான் வந்தன. நோய் ...ப்பொருமை. இவையிரண்டுபாட்டானும் ...ப்பட்டது.
அவ்வளவுண்ணுவழிப்படு மிழுக்குக்
(௭)

௯௪௮. நோய்நாடி நோய்முதல் நாடி யதுதணிக்கும்
வாய்நாடி வாய்ப்பச் செயல். ௮.

இ - ள். நோய் நாடி - மருத்துவனாயினான் ஆதுரன்மாட்டு நிகழ்கின்ற நோயை அதன் குறிகளான் இன்னதென்று துணிந்து,—நோய் முதல் நாடி-பின் அது வருதற் காரணத்தை ஆராய்ந்து தெளிந்து,—அது தணிக்கும் வாய் நாடி - பின் அதுதீர்க்கு முபாயத்தினையறிந்து,—வாய்ப்பச் செயல் - அதனைச் செய்யும்வழிப் பிழையாமற் செய்க. எ - று.

காரணம் உணவுசெயலென முற்கூறியவிரண்டும். அவற்றை ஆயுள்வேதமுடையார் நிதானமென்ப. அவை நாடுதற்பயன் நோயினையும் வாயினையும் ஐயமறத்துணிதல். மருந்துசெய்தல்,

உதிரங்களைதல், அறுத்தல், சுடுதல்முதலிய செயல்களெல்லாம் அடங்குதற்கு, அதுதணிக்கும்வாயென்றார். "கழுவாயுமுள"* என்றார்பிறரும். பிழையாமை பழைய மருத்துவர் செய்துவருகின்ற முறைமையிற்றப்பாமை. (அ)

௯௪௯ உற்றா னளவும் பிணியளவுங் காலமுங்
கற்றான் கருதிச் செயல். ௯.

இ - ள். கற்றான் - ஆயுள்வேதத்தினைக் கற்ற மருத்துவன்,—உற்றான் அளவும் பிணி அளவும் காலமும் கருதிச் செயல் - அவ்வுபாயத்தினைச் செய்யுங்கால், ஆதுர னளவினையும் அவன்கணிகழ்கின்ற நோயினளவினையும் தன்செயற்கேற்ற காலத்தினையும் அந்நூனெறியால் நோக்கி, அவற்றோடு பொருந்தச்செய்க எ - று.

ஆதுரனளவு பகுதி பருவம் வேதனை வலிகளினளவு. பிணியளவு சாத்தியம், அசாத்தியம், யாப்பியமென்னுஞ் சாதிவேறுபாடும்†, தொடக்க நடுவீறென்னும் அதன் பருவ வேறுபாடும், வன்மைமென்மைகளுமுதலாயின. காலம் மேற்சொல்லியன. இம்மூன்றும் பிழையாமல் நூனெறியானும் உணர்வுமிகுதியானும் ஆராய்ந்து செய்க வென்பார், கற்றான்கருதிச்செயலென்றார். இவையிரண்டுபாட்டானும் அவனிழுக்குப் பட்டுழி மருத்துவன்றீர்க்குமாறு கூறப்பட்டது. (௯)

௯௫௦. உற்றவன் தீர்ப்பான் மருந்துழைச் செல்வானென்
றப்பானாற் கூற்றே மருந்து. ௧௦.

---

* புறநானூறு, ௩௪.

† சாத்தியம் தீர்க்கத்தக்கது. அசாத்தியம் தீர்க்கத்தகாதது. யாப்பியம் பெரும்பான்மை தீர்க்கத்தக்கதும் சிறுபான்மை தீர்க்கத்தகாததுமெனச் சொல்லத்தக்கது.

இ - ள். மருந்து - பிணிக்கு மருந்தாவது,—உற்றவன் - அதனையுற்றவன்,—தீர்ப்பான் - அதனைத் தீர்க்குமருத்துவன்,—மருந்து - அவனுக்குக் கருவியாயமருந்து,— உழைச் செல்வான் என்று அப்பால் நாற்கூற்று - அதனைப்பிழையாமல் இயற்றுவா னென்று சொல்லப்பட்ட நான்குபகுதியையுடைய நான்கு திறத்தது. எ - று.

நான்கென்னு மெண்வருகின்றமையின், அதுநோக்கி அப்பாலென்றொழிந்தார். நாற்கூற்றதென்பது விகாரமாயிற்று. அவற்றுள் உற்றவன்வகை நான்காவன பொரு ளுடைமை, மருத்துவன்வழிநிற்றல், நோய்நிலையுணர்த்தல்வன்மை, மருந்துத்துன்பம் பொறுத்தலெனவிவை. தீர்ப்பான்வகைநான்காவன நோய்கண்டஞ்சாமை, ஆசிரியனைவழிபட்டோதிய கல்வியு நுண்ணறிவுமுடைமை, பலகாலுந்தீர்த்துவருதல், மன மொழிமெய்கடூயவாதலெனவிவை. மருந்தின்வகைநான்காவன பலபிணிகட்குமேற் றல், சுவை வீரியம் விளைவாற்றல்களான்மேம்படுதல், எளிதினெய்தப்படுதல், பகுதி யோடுபொருந்துதலெனவிவை. இயற்றுவான்வகை நான்காவன ஆதுரன்மாட்டன் புடைமை, மனமொழிமெய்கடூயவாதல், சொல்லியன அவ்வாறே செய்தல் வன்மை, அறிவுடைமையெனவிவை. இவையெல்லாங்கூடியவழியல்லது பிணி தீராமையின், இத்தொகுதியையும் மருந்தென்றார். ஆயுள்வேதமுடையாரும் இவை கால்களாக நடக்குமென்பதுபற்றிப் பாதமென்றும், இவை மாறுபட்டவழிச் சாத்தியமுந்தீர்ந்து அசாத்தியமாமென்றுங் கூறினார். இதனால் அதனைத் தீர்த்தற்கு வேண்டுவனவெல் லாந் தொகுத்துக் கூறப்பட்டன. (௯0)

அங்கவியல் முற்றிற்று.



# ஒழிபியல்.

இனி அவ்வரசியலினும் அங்கவியலினும் அடங்காதொழிந்தவற்றையியல்பு பதின்மூன்றதிகாரத்தாற் கூறுவான்றொடங்கி, முதற்கட் குடிமை கூறுகின்றார்.

## ௯௬-ம் அதி.—குடிமை.

அஃதாவது உயர்ந்த குடியின்கட்பிறந்தாரது தன்மை. உயர்ந்த குடிப்பிறப்பு நால்வகைவருணத்தார்க்கும் இன்றியமையாதாகலின், அச்சிறப்புப்பற்றி இது முன் வைக்கப்பட்டது.

௯௫௧. இற்பிறந்தார் கண்ணல்ல தில்லை யியல்பாகச்
செப்பமு நாணு மொருங்கு. ௧

இ - ள். செப்பமும் நாணும் ஒருங்கு - செம்மையும் நாணும் சேர—இற்பிறந்தார் கண் அல்லது இயல்பாக இல்லை - குடிப்பிறந்தார்மாட்டல்லது பிறர்மாட்டியற்கையாக உளவாகா. எ - று.

இல்லுங் குடி குலமென்பன ஒருபொருள; ஈண்டுயர்ந்தவற்றின்மேல. செம்மை கருத்துஞ் சொல்லுஞ் செயலுந்தம்முண் மாறுகொளாமை. நாண் பழிபாவங்களின் மடங்குதல். இவை இற்பிறந்தார்க்காயின் ஒருவர் கற்பிக்கவேண்டாமற் றாமேயுளவாம், பிறர்க்காயிற் கற்பித்தவழியும் நெடிதுநில்லாவென்பதாம். (௧)

௯௫௨. ஒழுக்கமும் வாய்மையு நாணுமிம் மூன்று
மிழுக்கார் குடிப்பிறந் தார். ௨

இ - ள். குடிப் பிறந்தார் - உயர்ந்தகுடியின்கட் பிறந்தார்—ஒழுக்கமும் வாய்மையும் நாணும் இம்மூன்றும் இழுக்கார் - தமக்குரிய ஒழுக்கம் மெய்ம்மை நாணென்னப்பட்ட இம்மூன்றன்கண்ணும் வழுவாயினன்றித் தாமாகவே வழுவார். எ - று.

ஒழுக்கமுதலியன மெய்ம்மொழி மனங்களினவாகலின், அம்முறையவாயின. இழுக்குதல் அறியாது வருகின்றமையின், இழுக்காரென்றார். (உ)

கூகூ. நகையீகை யின்சொ லிகழாமை நான்கும்
வகையென்ப வாய்மைக் குடிக்கு. ங.

இ - ள். வாய்மைக் குடிக்கு - எக்காலத்துந் திரிபில்லாத குடியின்கட்பிறந் தார்க்கு—நகை ஈகை இன்சொல் இகழாமை நான்கும் வகை என்ப-வறியார் சென்ற வழி முகமலர்ச்சியும், உள்ளனகொடுத்தலும், இன்சொற்சொல்லுதலும், இகழாமையு மாகிய இந்நான்கும் உரிய கூறென்று சொல்லுவர் நூலோர். எ - று.

பெரும்மை திரிபுடைமையிற் றிரிபின்மையை வாய்மையென்றும், இல்லாரை யெல்லாருமெள்ளுவராகலின் இகழாமையை அவர் கூறுக்கியுங்கூறினர். குடி ஆகு பெயர். நான்கின்வகையென்பதுபாடமாயின், வாய்மைக்குடிப்பிறந்தார்க்குப் பிற ரின் வேறுபாடு இந்நான்குமாமென்றுரைக்க. இவைமூன்றுபாட்டானும் குடிப் பிறந்தாரியல்பு கூறப்பட்டது. (ங)

கூகூச. அடுக்கிய கோடி பெறினுங் குடிப்பிறந்தார்
குன்றுவ செய்த லிலர். ச.

இ - ள். அடுக்கிய கோடி பெறினும் - பலவாகவடுக்கிய கோடியளவிற்றாய பொருளைப் பெற்றாராயினும்,—குடிப்பிறந்தார்

பற்றிச் சால்பு இல செய்யார் - வறுமையுற்றவழியும்,
இலவாய தொழில்களைச் செய்யார். எ - று.
வஞ்சனையைப்பொருந்தி, அமை

அமைவின்மை அம்மரபிற் கேலாமை. இவை மூன்றுபாட்டானும்
யுற்றவழியும் அவ்வியல்பின் வேறுபடாரென்பது கூறப்பட்டது.

அவர் வறுமை
(௬)

௯௫௭. குடிப்பிறந்தார் கண்விளங்குங் குற்றம் விசும்பின்
மதிக்கண் மறுப்போ லுயர்ந்து. ௭.

இ - ள். குடிப் பிறந்தார்கண் குற்றம் - உயர்ந்தகுடியின்கட்பிறந்தார்மாட்டுளதாய குற்றம்—விசும்பின் மதிக்கண் மறுப்போல் உயர்ந்து விளங்கும் - தான்சிறிதே யாயினும் விசும்பின்கண் மதியிடத்து மறுப்போல ஓங்கித்தோன்றும். எ - று.

உயர்குடிமுதலிய பொருள்வகைமூன்றற்கும் விசும்பு முதலிய உவமைவகை யொத்துப் பான்மாறுபட்டது. குடியதுயர்ச்சியானும் மதிபோன்ற அவர் நற்குணங் களோடு மாறுதலானும், உலகெங்கும் பரந்து வெளிப்படுமென்பதாம். (௭)

௯௫௮. நலத்தின்க ணாரின்மை தோன்றி னவனைக்
குலத்தின்க ணையப் படும் ௮.

இ - ள். நலத்தின்கண் நார் இன்மை தோன்றின் - குலநலமுடையனாய் வரு கின்றவன்கண்ணே ஈரமின்மையுளதாமாயின்,—அவனைக் குலத்தின்கண் ஐயப்படும்- அவனை அக்குலப்பிறப்பின்கண்ணே ஐயப்படும் உலகம். எ - று.

நலமும் குலமும் ஆகுபெயர். நாரின்மையாற்கொடாமையுங் கடுஞ்சொல்லுமுதலிய கூறப்பட்டன. தோன்றினென்பது தோன்றாமை விளக்கி நின்றது. நலனுடைய குலத்தினிடையே இவைதோன்றலின், உள்ளது ஐயமாயிற்று. உலகமென்பது அவாய்நிலையான் வந்தது. ஐயப்படுமென்பது பாடமாயின், ஐயப்படுகவென விதி யாக்கியுரைக்க. இவையிரண்டுபாட்டானும் வேறுபட்டவழிப் பழியிழுக்குக் கூறப் பட்டது. (அ)

௯௫௯. நிலத்திற் கிடந்தமை கால்காட்டுங் காட்டும்
குலத்திற் பிறந்தார்வாய்ச் சொல். ௯.

இ - ள். நிலத்திற் கிடந்தமை கால் காட்டும் - நிலத்தினியல்பை அதன்கண் முளைத்த முளை காட்டும்;—குலத்திற் பிறந்தார் வாய்ச் சொல் காட்டும் - அதுபோலக் குலத்தினியல்பை அதன்கட்பிறந்தார்வாயிற் சொற்காட்டும். எ - று.

கிடந்தமை உள்ளபடி. முளைத்தமாத்திரத்தானே நன்மையுந் தீமையுந்தெரிதலின், இலைமுதலிய கூறாராயினர்; ஆகவே, பொருளினுஞ் செயன்முதலியன வேண்டாவாயின. குலத்தியல்பறிதற்கருவி கூறுவார்போன்று, இன்சொல் வேண்டுமென்ற வாறாயிற்று. (௯)

௯௬௦. நலம்வேண்டி னாணுடைமை வேண்டுங் குலம்வேண்டின்
வேண்டுக யார்க்கும் பணிவு. ௧௦.

இ - ள். நலம் வேண்டின் நாண் உடைமை வேண்டும் - ஒருவன் தனக்கு நன்றுடைமையை வேண்டுவனாயின், நாணுடையனாதல் வேண்டும்;—குலம்வேண்டின் ம் அதி.—மானம்.

ன் யார்க்கும் பணிவு வேண்டுக - குலனுடைமையை
[1] யவர்மாட்டும் பணிதலை வேண்டுக. எ - று.

வேண்டுவெனுவின், பணியப்படு

நலம் புகழ் புண்ணியங்கள். வேண்டுமென்பது விதிப்பொருட்டாய் நின்றது, மிடைப்படு தொகுதியி னும்மை வேண்டும்" என்புழிப்போல. அந்தணர் சான்றோர் அருந்தவத்தோர் தம்முன்னோர் தந்தை தாயென்றிவ † செல்லாருமடங்க, யார்க்கு மென்றார். பணிவு இருக்கை யெழலும் எதிர்செலவும் முதலாயின. இவையிரண்டுபாட் டானும் குடிமைக்கு வேண்டு ன கூறப்பட்டன. (௪0)

## கூஎ ம் அதி.—மானம்.

இனிக் குடிப்பிறந்தார்க்கு உரியவாய குணங்கள் கூறுவான்றொடங்கி, முதற் கண் மானங்கூறுகின்றார். அஃதாவது எஞ்ஞான்றும் தந்நிலையிற்றாழாமையும், தெய் வத்தாற்றாழ்வுவந்தவழி உயிர்வாழாமையுமாம். இஃது, அக்குடிப்பிறப்பினை சிறந்தது னுடைமையின், அச்சிறப்புப்பற்றி முன் வைக்கப்பட்டது.

கூகக இன்றி யமையாச் சிறப்பின வாயினுங்
குன்ற வருப விடல். க.

இ - ள். இன்றி அமையாச் சிறப்பின ஆயினும் - செய்யாதவழித் தாம் அமை யாத சிறப்பினையுடையவேயெனினும்,—குன்ற வருப விடல் - தங்குடிப்பிறப்புத் தாழ வருஞ்செயல்களையொழிக. எ - று.

அமையாமை இறத்தல். குடிப்பிறப்பென்பது

அதிகாரமுறைமையான் வந்தது. இறப்பவருவழி இளிவந்தன செய்தாயினும் உய்கவென்னும் வடநூலான் ‡ முறைமையை மறுத்து, உடம்பினது நிலையின்மையையும் மானத்தினது நிலையுடைமையையுந் தூக்கி அவை செய்யற்கவென்பதாம். (௧)

கூகஉ. சீரினுஞ் சீரல்ல செய்யாரே சீரொடு
பேராண்மை வேண்டு பவர். உ.

இ-ள். சீரினும் சீர் அல்ல செய்யார் - புகழ்செய்யுமிடத்துந் தங்குடிமைக் கொவ்வாத இளிவரவுகளைச் செய்யார்—சீரொடு பேராண்மை வேண்டுபவர் - புகழு டனே மானத்தை நிறுத்துதலை விரும்புவார். எ-று.

எவ்விடத்தும் நிலைகுலையாத திண்மையான் உளதாதல்பற்றிப் பேராண்மையெனப்பட்டது. நிலையுடைய புகழின்பொருட்டாகவுஞ் செய்யாரென்பதாம். (௨)

கூகங. பெருக்கத்து வேண்டும் பணிதல் சிறிய
சுருக்கத்து வேண்டு முயர்வு. ௩.

இ-ள். பெருக்கத்துப் பணிதல் வேண்டும் - குடிப்பிறந்தார்க்கு நிறைந்த செல்வமுளதாயவழி யாவர்மாட்டும் பணிவு வேண்டும்;—சிறிய சுருக்கத்து உயர்வு வேண்டும் - குறைந்த நல்குரவுளதாயவழிப் பணியாமை வேண்டும். எ-று.

---

* தொல்காப்பியம், கிளவியாக்கம். கக.

† வெண்பாமாலை, பாடாண்படலம், ௯௯. ‡ மநுஸ்மிருதி, அத். ௪, சுலோ, ௧௬௪.



பணியாமை தாழ்வு வாராமற் பழையவுயர்ச்சிக்கண்ணே நிற்றல்.

வேண்டுங்காலை அஃதுயர்ச்சி செய்யத் தாந்தாழ்தலும், அல்லற்காலை அது தாழ்வுசெய்யத் தாமுயர்தலும், வேண்டுமென்பதாம்.
இவைமூன்றுபாட்டாலும் தாந்தாழ்தற்கேதுவாயின செய் யாமைச் சிறப்புக் கூறப்பட்டது.
(க)

கூசு௪ தலையி னிழிந்த மயிரனையர் மாந்தர்
நிலையி னிழிந்தக் கடை. ௪.

இ - ள். மாந்தர் - குடிப்பிறந்த மாந்தர்,—நிலையின் இழிந்தக்கடை - தம்முயர்ந்த நிலையை விட்டு அதனினின்றுந்தாழ்ந்தவழி,—தலையின் இழிந்த மயிர் அனையர் - தலை யைவிட்டு அதனினின்றும் வீழ்ந்த மயிரினையொப்பர். எ - று.

அந்நிலையை விடாதுநின்றவழிப் பேணப்படுதலும்,
விட்டுத்தாழ்ந்தவழி இழிக்கப்படுதலும், உவமையாற்பெற்றாம்.
(௪)

கூசுரு குன்றி னனையாருங் குன்றுவர் குன்றுவ
குன்றி யனைய செயின். ரு.

இ - ள். குன்றின் அனையாரும் - குடிப்பிறப்பான் மலைபோலவுயர்ந்தோரும்,—
குன்றுவ குன்றி அனைய செயிற் குன்றுவர் - தாழ்தற்கேதுவாகிய குன்றியளவாயினுஞ் செய்வராயிற்றாழ்வர். எ - று.

செயல்களை ஒரு

குன்றியனையவுமென்னும் இழிவுசிறப்பும்மை

விகாரத்தாற்றொக்கது. தாழ்தற் கேதுவாய செயல்களாவன இளிவந்தன. சொற்பின்வருநிலை. (௫)

கசுசு. புகழின்றால் புத்தேணாட் டுய்யாதா லென்மற்
றிகழ்வார்பின் சென்று நிலை. சு.

இ - ள். இகழ்வார்பின் சென்று நிலை - மானத்தை விட்டுத் தன்னையவமதிப்பார் பின்னே ஒருவன்சென்று நிற்கின்றநிலை—புகழ் இன்று - இவ்வுலகத்துப் புகழ் பயவாது;—புத்தேள் நாட்டு உய்யாது - அவனைப் புத்தேளுலகத்துச் செலுத்தாது,—மற்று என் - இனி அவனுக்கு அது செய்வதியாது! எ - று.

புகழ் பயப்பதனைப் புகழென்றார். பயனுடைய இவ்விரண்டுமின்றிக் கொன்னே மானங்கெடுகின்றது என்னையென்பதாம். இவைமூன்றுபாட்டானும் அவை செய்தற் குற்றங் கூறப்பட்டது. (௬)

கசுஎ. ஒட்டார்பின் சென்றொருவன் வாழ்தலி னந்நிலையே
கெட்டா னெனப்படுத னன்று. எ.

இ - ள். ஒட்டார் பின் சென்று ஒருவன் வாழ்தலின் - தன்னையிகழ்வார்பின்னே சென்று பொருள்பெற்று அதனாலொருவன் உயிர்வாழ்தலின்,—அந்நிலையே கெட்டான் எனப்படுதல் நன்று - அது செய்யாது இறந்தானென்று சொல்லப்படுதல் அவனுக்கு நன்று. எ - று.

ஒட்டுதல் பொருந்துதல். அந்நிலையேயென்றது செல்லாத முன்னைநிலைக்கண்ணே நின்றென்றவாறு, அப்பொழுதேயென்றுமாம். புகழும் புத்தேணாடும் பயவாதேனும் பொருள்பெற்று உயிர்வாழ்வாமென்பாரை நோக்கிக் கூறியது. (எ)

௯௬௮. மருந்தோமற் றூனோம்பும் வாழ்க்கை பெருந்தகைமை
பீடழிய வந்த விடத்து. அ.

இ - ள். பெருந்தகைமை பீடு அழிய வந்தவிடத்து - உயர்குடிப்பிறப்புத் தன் [illegible]மானம் அழியவந்துழி,—ஊன் ஓம்பும் வாழ்க்கை மற்று மருந்தோ - இறந்[illegible]ழிந்து பயனில்லாதவுடம்பினைக் காக்கும் வாழ்க்கை பின்னுமிறவாமைக்கு [illegible]மோ! எ - று.

மற்றென்பது மேற்சொல்லிய இறப்பினை மாற்றி நின்றது. நற்குணங்கட்கெல்[illegible]ம் இடனாதற்சிறப்புப்பற்றிப் பெருந்தகைமையென்றும், அவையெல்லாவற்றானும் [illegible]தற்கு வலியாதற்சிறப்புப்பற்றிப் பீடென்றும், அஃதழிதால் நின்றவெற்றுடம்பு [illegible]ப்பிதலின் அதனை ஊனென்றும், பின்னுமிறத்தல் ஒருதலையென்பார் [illegible]ந்தோவென்றுங் கூறினர். மானத்தின்றொழில் அதற்கிடனாகிய குடிப்பிறப்பின் [illegible]னின்றது. (அ)

௯௬௯. மயிர்நீப்பின் வாழாக் கவரிமா வன்னா
ருயிர்நீப்பர் மானம் வரின். கூ.

இ - ள். மயிர் நீப்பின் வாழாக் கவரிமா அன்னார் - தன்மயிர்த்திரளின் ஒருமயிர் [illegible]னும் உயிர்வாழாத கவரிமாவையொப்பார்,—மானம் வரின் உயிர் நீப்பர் - உயிர் [illegible]த் தான்மானமெய்துமெல்லைவரின், அதனைத் தாங்காதிறப்பர். எ - று.

இழிவுசிறப்பும்மை விகாரத்தாற்றொக்கது. உயிரும் மானமும் உடனில்லாமைக் [illegible]பின்னும் போவதாய உயிரைநீத்து எஞ்ஞான்றும் நிற்பதாய மானத்தைக்கொள் [illegible]ளென்பதாம். உவமை அவர்க்கு அஃதியல்பென்பது விளக்கி நின்றது. (கூ)

௯௭௦ இளிவரின் வாழாத மான முடையா
ரொளிதொழு தேத்து முலகு. ௧௦.

இ - ள். இளி வரின் வாழாத மானம் உடையார் ஒளி - தமக்கோரிழிவுவந்துழிப் [illegible]பொறுத்து உயிர்வாழாது அதனைநீத்த மானமுடையாரது புகழ்வடிவினை—தொழுது ஏத்தும் உலகு - எஞ்ஞான்றுந்தொழுது துதியாநிற்பர் உலகத்தார். எ - று.

"புலவர் பாடும் புகழுடையோர் விசும்பின்—வலவ னேவா வான வூர்தி யெய்துப*" வாகலின், துறக்கச்செலவு சொல்லவேண்டாவாயிற்று. இவையிரண்டு பாட்டானும் மானப்பொருட்டாய இறப்பினது சிறப்புக் கூறப்பட்டது. (௧௦)

---

## ௯அ-ம் அதி.—பெருமை.

அஃதாவது செயற்கரிய செய்தல், தருக்கின்மை, பிறர்குற்றங் கூறாமை என்றிவை முதலிய நற்குணங்களாற் பெரியாரது தன்மை. நிலையின் மேன்மேலுயர்த்தற் பயத்தவாயவிவை உளவாவது நிலையிற் றாழாமையுள்வழியாகலின், இது மானத்தின் பின் வைக்கப்பட்டது.

௯௭௧. ஒளியொருவற் குள்ள வெறுக்கை யிளியொருவற்
கஃதிறந்து வாழ்து மெனல். *

---

* புறநானூறு, ௨௭.



இ - ள். ஒருவற்கு ஒளி உள்ள வெறுக்கை - ஒருவனுக்கொளியாவது பிறராற் செயற்கரிய செய்வேமென்று கருதும் ஊக்கமிகுதி;—ஒருவற்கு இளி அஃது இறந்து வாழ்தும் எனல் - ஒருவனுக்கு மாசாவது அச்செயலையொழிந்து உயிர்வாழக்கடவே மென்று கருதுதல். எ - று.

ஒளி தானுளனாயகாலத்து மிக்குத் தோன்றுதலுடைமை. "ஒளிசிறந் தோங்கு புகழ் செய்யான்*" என்றார் பிறரும். மேலும் † செயற்கரிய செய்வார் பெரியரென்றாராயினும், ஈண்டு அவை அளவிறந்த வொப்புரவு ஈகை முதலியவாம் அவற்றினுடைய பெருமையை அதன்காரணத்தின்மேலிட்டு உள்ளவெறுக்கையென்றும், அது தன்னையே அதன்காரியமாகிய ஒளியாக்கியுங் கூறினார். இவ்வாறு இதனெதிர்மறைக்கண் ணுமொக்கும். இதனாற் பெருமையின் சிறப்புக்

கூறப்பட்டது. (௪)

கூஎ௨ பிறப்பொக்கு மெல்லா வுயிர்க்குஞ் சிறப்பொவ்வா
செய்தொழில் வேற்றுமை யான். ௨.

இ - ள். எல்லாவுயிர்க்கும் பிறப்பு ஒக்கும் - எல்லா மக்களுயிர்க்கும் பொதுவாகிய பிறப்பியல்பு ஒக்குமேயெனினும், —சிறப்பு ஒவ்வா செயதொழில் வேற்றுமை யான் - பெருமை சிறுமையெனப்பட்ட சிறப்பியல்புகளொவ்வா, அவைசெய்யுந் தொழில்களது வேறுபாட்டான். எ - று.

வேறுபாடு நல்லனவும், தீயனவும், இரண்டுமாயினவும், இரண்டுமல்லவாயினவு மாய அளவிறந்த பாகுபாடுகள். வினைவயத்தாற் பஞ்சபூதபரிணாமமாகிய யாக்கையைப் பொருந்தின்று அதின்பயனை நுபவித்தல் எல்லாவரு ணத்தார்க்கு மொத்தலிற் பிறப்பொக்குமென்றும், பெரு மைசிறுமைகட்குக் கட்டளைகளாகிய தொழிற்பாகு பாடுகள் வருணந்தோறும் யாக்கைதோறும் வேறுபடுதலிற் சிறப்பொவ்வாவென்றுங் கூறினர்.
(௨)

கூஎ௩ மேலிருந்து மேலல்லார் மேலல்லர் கீழிருந்துங்
கீழல்லர் கீழல் லவர். ௩.

இ - ள். மேல் அல்லார் மேல் இருந்தும் மேல் அல்லர் - செயற்கரிய செய்க † லாது சிறியராயினர், உயர்ந்த வமளிமுதலியவற்றின் மிசையிருந்தாராயினும், பெரிய ராகார்;—கீழ் அல்லவர் கீழ் இருந்தும் கீழ் அல்லர் - அவைசெய்து பெரியராயினர், தாழ்ந்த வறுநிலத்திருந்தாராயினும், சிறியராகார். எ - று.

மேலிருத்தல் கீழிருத்தல்களாற் செல்வநல்குரவுகளும்,

அருமை யுடைய செயல். ௫.

இ-ள். பெருமை உடையவர் - அவ்வாற்றாற் பெருமையுடையாராயினார் — அருமை உடைய செயல் ஆற்றின் ஆற்றுவார்-தாம் வறியாராயவழியும் பிறராற்செய்தற் கரியவாய தஞ்செயல்களை விடாது அவைசெய்யுநெறியாற் கடைபோகச்செய்தலை வல்லராவர். எ-று.

வறியாராயவழியுமென்பது, முன்செய்த போர்தமை தோன்றப் பெருமையுடையவரென்றதனானும், ஆற்றுவாரென்றதனானும் பெற்றாம். செய்தி கூறப்பட்டது.

இதனால் அதனையுடையார்

(௫)

கஎசு. சிறியா ருணர்ச்சியு ளில்லை பெரியாரைப்
பேணிக்கொள் வேமென்னு நோக்கு. சு.

இ-ள். பெரியாரைப் பேணிக் கொள்வேம் என்னும் நோக்கு - அப்பெற்றிய ராய பெரியாரை வழிபட்டு அவரியல்பினை யாங் கோடுமென்னுங்கருத்து — சிறியார் உணர்ச்சியுள் இல்லை - மற்றைச் சிறியாராயினார் மனத்தின்கண் உளதாகாது. எ-று.

குடிமை, செல்வம், கல்வியென்றிவற்றது உண்மைமாத்திரத்தால் தம்மை வியந் திருப்பார்க்கு அவை சமக்கியல்பென்று அமைந்திருப்பாரை வழிபட்டு அஃதுடைய ராதல் கூடாதென்பதாம். (சு)

கஎஎ. இறப்பே புரிந்த தொழிற்றாஞ் சிறப்புந்தான்
சீரல் லவர்கட் படின். எ.

இ-ள். சிறப்புந் தானும் - தனக்கேயேற்கும் பெரியாரிடத்து அமைந்திருந்தலைச் செய்வதாய சிறப்புத்தானும், — சீர் அல்லவர்கட் படின் - தனக்கேலாத சிறியா ரிடத்துப் படுமாயின், — இறப்பே புரிந்த தொழிற்றாம் - அதனையொழிந்து தருக்கின் கண்ணே மிக்க

செயலையுடைத்தாம். எ - று.

தருக்கினை மிகச்செய்யுமென்பதாயிற்று. சிறப்பு குடிமை, செல்வம், கல்விகளி னாய மிகுதி. இவை யிரண்டுபாட்டானும் அஃதிலார் செய்தி கூறப்பட்டது. (எ)

கூஎஅ. பணியுமா மென்றும் பெருமை சிறுமை
அணியுமாந் தன்னை வியந்து. அ.

இ - ள். பெருமை என்றும் பணியும் - பெருமையுடையார் அச்சிறப்புண்டாய ஞான்றுந் தருக்கின்றி அமைந்தொழுகுவர்;—சிறுமை (என்றும்) தன்னை வியந்து அணியும் - மற்றைச் சிறுமையுடையார் அஃதில்லாதஞான்றுந் தம்மை வியந்து புனையாநிற்பார். எ - று.

கூஎ

உறுமை கூகூம் அதி.—சான்றாண்மை.

அஃதாவது, பெருமைக்குணங்கள் பலவின்மேலேற்றப்பட்டன. இஃதாதற்றுமையானும் பெருமைபெரும்பதிபொக்கும். என்றுமென்பது பின்னும் வந்தமைபற்றி. ஆமென் பதுயிர்ப்பிசை. புனைதல் பிறரிற் றமக்கோர்மிகுதியை யேற்றிக்கோடல். இது உயர்ந்தார் தாழ்வார் தாழ்ந்தார் உயர்வார் இஃதொரு விரோதமிருந்தவாறென் னென்ற உலகியலை வியந்து கூறிற்றுக்குவாருமுளர். (அ)

கூஎகூ. பெருமை பெருமித மின்மை சிறுமை
பெருமித மூர்ந்து விடல். கூ.

இ - ள். பெருமை பெருமிதம் இன்மை - பெருமைக்குணமாவது காரணமுண்டாயவழியும் அஃதியல்பாதலேறுக்கித் தருக்கின்றியிருத்தல்;—சிறுமை பெருமிதம் ஊர்ந்து விடல் - சிறுமைக்குணமாவது அஃதில்வழியும் அதனையேற்றிக்கொண்டு தருக்கின்முடிவின்கண்ணே நின்றுவிடுதல். எ - று.

அளவறத்தருக்குதலென்பதாயிற்று. விடுமென்று

இயல்பாயிருக்குமென்று சொல்

லுவர் நல்லோர். எ - று.

நிலை குணங்களிலைவயமழிப்பும் உள்ளன செய்துகொண்டவாயவழிபுஞ் சான் றோருடையமென்றுசொற்பொருள் கூடாமையின், நல்லோர் இல்வேறுப்பெயர்பற்றி அவரிலக்கணம் இவ்வாறு கூறலவரோவப்ருாம். (௪)

* திருக்குறள், ௬௩௭.

௬

# ௯௯ ம் அதி.—சான்றாண்மை.

உ௫ ௯௮௧. குணநலஞ் சான்றோர் நலனே பிறநல

மெந்நலத் துள்ளதூஉ மன்று. ௨.

இ - ள். சான்றோர் நலம் குணநலமே - சான்றோர்களுக்காவது குணங்களானாய நலமே;—பிற நலம் எந்நலத்தும் உள்ளது அன்று - அஃதொழிந்த உறுப்புக்களானாய நலம் ஒருநலத்திலுமுள்ளதன்று. எ-று.

அகநலத்தை முன்னே பிரித்தமையின் ஏனைப்புறநலத்தைப் பிறநலமென்றும், அது குடிப்பிறப்புக்கல்வியுமுதலாக நல்லோரெடுத்த நலங்களுட் புகுதாமையின் எந்நலத்துள்ளதூஉமன்றென்றுங் கூறினர். இவைமிரண்டுபாட்டானும் சால்பிற்கேற்ற குணங்கள் பொதுவகையாற் கூறப்பட்டன. (௩)

௯௮௨. அன்புநா ணொப்புரவு கண்ணோட்டம் வாய்மையோ

டைந்துசால் பூன்றிய தூண். ௩.

இ - ள். அன்பு - சுற்றத்தார்மேலேயன்றிப் பிறர்மேலுமுளதாய அன்பும்— நாண் - பழிபாவங்களினாணும் —ஒப்புரவு - யாவர்மாட்டுமொப்புரவு செய்தலும்— கண்ணோட்டம் - பழையார்மேற்கண்ணோடலும்—வாய்மை - எவ்விடத்தும் மெய்ம்மைகூறலுமென—சால்பு ஊன்றிய தூண் ஐந்து - சால்பென்னும் பாரத்தைத் தாங்கிய தூண்களைந்து. எ - று.

௯௮௬. சால்பிற்குக் கட்டளை யாதெனிற் றோல்வி
துலையல்லார் கண்ணுங் கொளல். ௬.

இ - ள். சால்பிற்குக் கட்டளை யாது எனின்-சால்பா கிய பொன்னினளவறிதற்கு உரைகல்லாகிய செயல் யாதெனின்,—தோல்வி துலை அல்லார்கண்ணும் கோளல் - அது தம்மினுயர்ந்தார்மாட்டேகொள்ளுந் தோல்வியை இழிந்தாமாட்டுங் கோடல். எ - று.

துலை ஒப்பு. எச்சவும்மையான் இருதிறத்தார்கண்ணும் வேண்டுதல் பெற்றும்.

கொள்ளுதல் வெல்லுமாற்றலுடையராயிருந்தே ஏற்றுக்கொள்ளுதல். இழிந்தாரை வெல்லுதல்கருதித் தம்மோடொப்பித்துக்கொள்ளாது தோல்வியான் அவரினுயர்வ ராயின், அதனாற் சால்பளவறியப்படுமென்பதாம். (௬)

௯௮௭. இன்னாசெய் தார்க்கு மினியவே செய்யாக்கா
லென்ன பயத்ததோ சால்பு. ௭.

இ - ள். இன்னா செய்தார்க்கும் இனியவே செய்யாக்கால் - தமக் கின்னாதவற்றைச் செய்தார்க்குஞ் சால்புடையார் இனியவற்றைச செய்யாராயின்,—சால்பு என்ன பயத்தது - அச்சால்பு வேறென்ன பயனையுடைத்து. எ - று.

சிறப்பும்மை அவர் இன்னாசெய்தற்கிடனாதல் விளக்கிநின்றது. ஓகாரம் அசை.

வினா எதிர்மறைப்பொருட்டு. தாமுமின்னாசெய்வராயின், சால்பாலொருபயனுமில்லை யென்பதாம். இவையிரண்டுபாட்டானுஞ் சிறப்புவகையாற் கூறப்பட்டது. (௭)

௯௮௮. இன்மை யொருவற் கிளிவன்று சால்பென்னுந்
திண்மையுண் டாகப் பெறின். ௮.

இ - ள். சால்பு என்னும் திண்மை உண்டாகப் பெறின்-சால்பென்று சொல்லப் படும் வலியுண்டாகப்பெறின்,—ஒருவற்கு இன்மை இளிவு அன்று - ஒருவனுக்கு நல் குரவு இளிவாகாது. எ - று.

தளராமை காட்டுதலின், வலியாயிற்று. இன்மையான் வருவதனை இன்மை யாக உபசரித்துக்கூறினார். சால்புடையார நல்கூர்ந்தவழியும் மேம்படுதலுடைய ரென்பதாம். (அ)

கூஅக. ஊழி பெயரினுந் தாம்பெயரார் சான்றாண்மைக்
ஆழி யெனப்படு வார். கூ.

இ - ள். சான்றாண்மைக்கு ஆழி எனப்படுவார் - சால்புடைமையாகிய கடற்குக் கரையென்று சொல்லப்படுவார்,—ஊழி பெயரினும் தாம் பெயரார - ஏனைக்கடலும் கரைபுணில்லாமற் காலந்திரிந்தாலும் தாந்திரியார். எ - று.

சான்றாண்மையது பெருமைதோன்ற அதனைக் கடலாக்கியும், அதனைத் தாங்கிக் கொண்டுநிற்றலின் அஃதுடையாரைக் கரையாக்கியுங்கூறினார்; "பெருங்கடற் காழி யனையன் மாதோ" என்றார் பிறரும். ஏகதேசவுருவகம். (க)

கூகூ0. சான்றவர் சான்றாண்மை குன்றி னிருநிலந்தான்
றாங்காது மன்னோ பொறை. க0.

---

* புறநானூறு, கூ0.

# க00 ம் அதி.—பண்புடைமை.

உரை

இ - ள். சான்றவர் சான்றாண்மை குன்றின் - பலகுணங்களானுநிறைந்தவர் தந்தன்மை குன்றுவாராயின்,—இருநிலந்தான் பொறை தாங்காது - மற்றைப்பெருநிலந்தானுந் தன்பொறையைத் தாங்காதாய்முடியும். எ - று.

தானுமென்னுமெச்சவும்மை விகாரத்தாற்றொக்கது. அவர்க்கது குன்றாமையும்
அதற்கது தாங்கலும் இயல்பாகலான், அவை வேஞான்று முளவாகாவென்பது தோன்றநின்றமையின், மன் ஒழியிசைக்கண்வந்தது. ஓகாரம் அசை. இதற்கு இருநிலம் பொறை தாங்குவது சான்றவர் நிலையாகவருதலான் அதுவும் அது தாங்கலாற்றாதென்றுரைப்பாருமுளர். இவை மூன்றுபாட்டானும் அவற்றானிறைந்தவரது சிறப்புக் கூறப்பட்டது.
(௯0)

---

# ௬00 ம் அதி.—பண்புடைமை.

அஃதாவது பெருமை சான்றாண்மைகளிற்றும்வழுவாது நின்றே எல்லாரியல் புகளுமறிந்தொத்தொழுகுதல்; "பண்பெனப் படுவது பாடறிந்தொழுகல்" என்றார் பிறரும். அதிகாரமுறைமையும் இதனானே விளங்கும்.

௯௯௧. எண்பதத்தா லெய்த லெளிதென்ப யார்மாட்டும்
பண்புடைமை யென்னும் வழக்கு. ௧.

இ - ள். யார்மாட்டும்எண்பதத்தால் - யாவர்மாட்டுமெளிய செவ்வியராதலால்— பண்புடைமை என்னும் வழக்கு எய்தல் எளிது என்ப - அரிதாய பண்புடைமையென் னும் நன்னெறியினை யெய்துதல் எளிதென்று சொல்லுவர் நூலோர். எ - று.

குணங்களானிறைந்து செவ்வியெளியருமாயக்கால் பண்புடைமை தானே உள தாமாகலின், எண்பதத்தா லெய்தலெளிதென்றும், அஃதுலகத்தையெல்லாம் வசி கரித்தற் பயத்ததாகலின் அதனைத்

தொல்லோர்சென்ற நன்னெறியாக்கியும், அதனை யெளிதி னெய்துதற்கு இது நலோரோதியவுபாயமென்பார் அவர்மேல் வைத்துக் கூறினர். (௧)

௯௯௨. அன்புடைமை யான்ற குடிப்பிறத்த லிவ்விரண்டும்
பண்புடைமை யென்னும் வழக்கு. ௨.

இ - ள். அன்புடைமை ஆன்ற குடிப் பிறத்தல் இவ்விரண்டும் - பிறர்மேலன் புடையனாதலும் உலகத்தோடமைந்த குடியின்கட் பிறத்தலுமாகிய இவ்விரண்டும்— பண்புடைமை என்னும் வழக்கு - ஒருவனுக்குப் பண்புடைமையென்று உலகத்தார் சொல்லும் நன்னெறி. எ - று.

அமைதல் ஒத்துவருதல். குடிப்பிறத்தலென்றது பிறந்தார் செயலை. தனித்தவழி ஆகாது இரண்டுங்கூடியவழியே ஆவதென்பது தோன்ற, முற்றும்மை கொடுத்தார். காரணங்கள் காரியமாக வுபசரிக்கப்பட்டன. இவையிரண்டானும் பண்புடை யாதற்காரணங் கூறப்பட்டது. (௨.)

௯௯௩. உறுப்பொத்தன் மக்களொப் பன்றால் வெறுத்தக்க
பண்பொத்த லொப்பதா மொப்பு. ௩.

---

* கலி, நெய்தல், ௧௧.

௧00 ம் அதி—பண்புடைமை.

இ - ள். உறுப்பு ஒத்தல் மக்கள் ஒப்பு அன்று - செறியத்தகாதவுடம்பாலொத்தல் ஒருவனுக்கு நன்மக்களோடொப்பாகாமையின் அது பொருந்துவதன்று—ஒப்பாம் ஒப்பு வெறுத்தக்க பண்பு ஒத்தல் - இனிப் பொருந்துவதாய வொப்பாவது செறியத் தக்க பண்பாலொத்தல். எ - று.

வடநூலார் அங்கமென்றமையின், உறுப்பென்றார். ஒருவனுக்கு நன்மக்களோடு பெறப்படுமொப்பாவது உயிரின்வேறாய் நிலையுதலில்லாவுடம்பொத்தலன்று, வேறன்றி நிலையுதலுடைய பண்பொத்தலாகலான், அப்பெற்றித்தாய அவர் பண்பினையுடையனாக வென்பதாம். (௩.)

௯௯௪. நயனொடு நன்றி புரிந்த பயனுடையார்
பண்புபா ராட்டு முலகு. ௪.

இ - ள். நயனொடு நன்றி புரிந்தபயன் உடையார் பண்பு - நீதியையும் அறத்தையும் விரும்புதலாற் பிறர்க்குந்தமக்கும் பயன்படுதலுடையாரது பண்பினை—உலகு பாராட்டும் - உலகத்தார் கொண்டாடாநிற்பர். எ- று.

புரிந்தவென்னும் பெயரெச்சம் ஈண்டுக் காரணப்பொருட்டு. நயனொடுநன்றி புரிதலும் பயனுடைமையும் பண்புகாரணமாக வந்தமையின், அதனைப்பாராட்டு மென்றார்.
(௪)

௯௯௫. நகையுள்ளு மின்னா திகழ்ச்சி பகையுள்ளும்
பண்புள பாடறிவார் மாட்டு. ௫.

இ - ள். இகழ்ச்சி நகையுள்ளும் இன்னாது - தன்னையிகழ்தல் ஒருவற்கு விளையாட்டின்கண்ணும் இன்னாது;—பாடு அறிவார்மாட்டுப் பகையுள்ளும் பண்பு உள - ஆகலாற் பிறர் பாடறிந்தொழுகுவார்மாட்டுப் பகைமையுள்வழியும் அஃதின்னாதாகாது இனியவாய பண்புகளே உளவாவன, எ - று.

பாடறிவாரெனவே, அவ்வின்னாமையறிதலும் பெற்றாம். அதனையறிந்தவர் பின் அது செய்யார் இனியவே செய்வாரென்பதுகருத்து. இதற்குப்பிறரெல்லாம் இரண்டு தொடருந்தம்முளியையாமலுரைப்பாரும், இன்னாதென்னுஞ்சொற்குப் பிறவாதென் றுரைப்பாருமாயினார்.
(௫)

கசகூ. பண்புடையார்ப் பட்டுண் டுலக மதுவின்றேல்
மண்புக்கு மாய்வது மன். கூ.

இ - ள். பண்பு உடையார்ப் பட்டு உலகம் உண்டு - பண்புடையார்கண்ணே பட்டு நடத்தலால் உலகியல் எஞ்ஞான்றும் உண்டாய் வாராநின்றது;—இன்றேல் அது மண்புக்கு மாய்வது - அவர்கண் படுதலில்லையாயின், அது மண்ணின்கட்புக்கு மாய்ந்துபோவ தாம். எ - று.

படவென்பது திரிந்துநின்றது. உலகு ஆகுபெயர். மற்றைப் பண்பில்லார் சார் புன்மையின் ஓர்சார்புமின்றி மண்ணின்கட்புக்கு மாயுமது வேண்டாவாயிற்றென்பது
பட நின்றமையின், மன் ஒழியிசைக்கண் வந்தது.
டையாரதுயர்ச்சி கூறப்பட்டது.
இவையிரண்டுபாட்டானும் அதனியல்பு
(ச)

கசஎ. அரம்போலுங் கூர்மைய ரேனு மரம்போல்வர்
மக்கட்பண் பில்லா தவர்.

௧0௧ மீ அதி—நன்றியில்செல்வம்.

உரை

இ - ள். மக்கட்பண்பு இல்லாதவர் - மக்கட்கேயுரிய பண்பில்லாதவர்,— அரம்போலும் கூர்மையரேனும் - அரத்தின் கூர்மைபோலும் கூர்மையையுடையரே யாயினும்,—மரம் போல்வர் - ஓரறிவிற்றாய மரத்தினையொப்பர். எ - று.

அரம் ஆகுபெயர். ஓரறிவு ஊற்றினையறிதல். உவமையிரண்டனுள், முன்னது தன் மடிவின்றித் தன்னையுற்ற பொருள்களை மடித்தலாகிய

தொழில்பற்றி வந்தது; ஏனையது விசேடவறிவின்மையாகிய பண்புபற்றி வந்தது. அவ்விசேடவறிவிற்குப் பயனாகிய மக்கட்பண்பின்மையின், அதுதானுமில்லையென்பதாயிற்று. (எ)

கஅஅ. நண்பாற்று ராகி நயமில செய்வார்க்கும்
பண்பாற்று ராதல் கடை. அ.

இ - ள். நண்பு ஆற்றாராகி நயம் இல செய்வார்க்கும் - தம்மொடு நட்பினைச் செய்யாது பகைமையைச் செய்தொழுகுவார்மாட்டும்—பண்பு ஆற்றாராதல் கடை - தாம் பண்புடையாரயொழுகாமை அறிவுடையார்க்கிழுக்காம். எ - று.

நயம் ஈரம். சிறப்பும்மை அவர் பண்பாற்றுமைக்கிடனுதல் தோன்றநின்றது அதனைச் செய்யிற்றும் அவர் தன்மையராவரென்பார், கடையென்றார். (அ)

கஅக. நகல்வல்ல ரல்லார்க்கு மாயிரு ஞாலம்
பகலும்பாற் பட்டன் றிருள். கூ.

இ - ள். நகல் வல்லர் அல்லார்க்கு - பண்பின்மையான் ஒருவரோடும்கலந்து உண்மகிழ்தன்மாட்டாதார்க்கு—மாயிரு ஞாலம் பகலும் இருட்பாற் பட்டன்று - மிக
வும் பெரியஞாலம் இருளில்லாத பகற்பொழுதினும் இருளின்கட்கிடந்ததாம்.
எல்லாரோடும் கலந்தறியப்பெறுமையிற் பண்பில்லார்க்கு உலகியல்

எ - று.
தெரியா
தென்பார், உலகமிருளின்கட்பட்டதென்றார். பாழ்பட்டன்றிருளென்று பாடமோதி, இருணீக்கிற்றன் றென்றுரைப்பாருமுளர்.
(கூ)

க000. பண்பிலான் பெற்ற பெருஞ்செல்வ நன்பால்
கலந்தீமை யாற்றிரிந் தற்று. க0.

இ - ள். பண்பு இலான் பெற்ற
பெருஞ்செல்வம்-பண்பில்லாதவன் முன்னோல்
வினையானெய்திய பெரிய செல்வம் அக்குற்றத்தால் ஒருவர்க்கும் பயன்படாது கெடு
தல்—நன்பால் கலத்தீமையால் திரிந்தற்று - நல்லவான்பால் ஏற்ற கலத்தின் குற்றத்
தால் இன்சுவைத்தாகாது கெட்டாற்போலும். எ - று.
கலத்தீமையென்பது மெலிந்துநின்றது. தொழிலுவமமாகலின் பொருளின்கண்
ஒத்ததொழில் வருவிக்கப்பட்டது. படைக்குமாற்றலிலனுதரோன்றப் பெற்றவென்
றும், எல்லாப்பயனுங்கோடற்கேற்ற இடனுடைமைதோன்றப் பெருஞ்செல்வமென்
றுங்கூறினர். அச்செல்வமும் பயன்படாதென்ற இதனன் வருகின்ற அதிகாரப்
பொருண்மையுந் தோற்றுவாய் செய்யப்பட்டது. இவை நான்குபாட்டானும் அஃதில்
லாரதிழிவு கூறப்பட்டது.
(௯௦)

---

## ௧0௧ ம் அதி.—நன்றியில்செல்வம்.

அஃதாவது நட்டியார்க்கும் பிறர்க்கும் பயன்படுதலில்லாத செல்வத்தின
திபல்பு. உடம்பான குற்றஞ் செல்வத்தின்மேலேற்றப்பட்டது. அதிகாரமுறைமை மேற்றோற்றுவாய் செய்ததனுந் பெற்றும்.

௧00௧. வைத்தான்வாய் சான்ற பெரும்பொரு ளஃதுண்ணான்
செத்தான் செயக்கிடந்த தில். ௧.

இ - ள். வாய்சான்றபெரும்பொருள் வைத்தான் அஃதுண்ணான் - தன்மனை யகலமெல்லாம் நிறைதற்கேதுவாயபெரும்பொருளை யீட்டிவைத்து உலோபத்தால் அதனையுண்ணாதவன்—செத்தான் செயக் கிடந்தது இல்-உளனாயினுஞ் செத்தானும், அதன் கண் அவனாற் செயக்கிடந்ததோருரிமையின்மையான். எ - று.

வைத்தானென்பது முற்றெச்சம். உண்ணுதல் அதனாலைம்புலன்களையும் நுகர் தல். வாய்சான்றபெரும்பொருளை வைத்தானொருவன் அதனையுண்ணாது செத்தவழி அதன்கண் அவனாற்செய்யக் கிடந்ததோருரிமையில்லையாகலான், வையாது பெற்ற பொருளோடு நுகர்கவென் றுரைப்பினுமமையும். இதற்குச் செத்தானென்பது எச்சம். இதனால் ஈட்டியானுக்குப் பயன்படலின்மை கூறப்பட்டது. (௧)

௧00௨. பொருளானா மெல்லாமென் றீயா திவறு
மருளானா மாணாப் பிறப்பு. ௨.

இ - ள். பொருளான் எல்லாம் ஆம் என்று - பொருளொன்றுமுண்டாக அதனு லெல்லாமுண்டாமென்றறிந்து அதனையீட்டி—ஈயாது இவறும் மருளான் - பின் பிறர்க்கீயாது பற்றுள்ளஞ்செய்யு மயக்கத்தாலே—மாணாப் நிறைதலில்லாத பேய்ப்பிறப்புண்டாம். எ - று.

பிறப்பு ஆம் - ஒருவனுக்கு

இருமையினு மெய்து மின்பங்கள் பலவுமடங்க எல்லாமென்றும்

ஈட்டுதற்கு

முன்னுண்டாய அறிவு பின் மயங்குதலின் மருளென்றும், பொருளுண்டாயிருக்கப் பிறர்பசி கண்டிருந்த தீவினைபற்றி உணவுகளுளவாயிருக்கப் பசித்தலுருத்தும் பிறப்புளதாமென்றும் கூறினார். (௨)

க00௩. ஈட்ட மிவறி யிசைவேண்டா வாடவர்
தோற்ற நிலக்குப் பொறை. ௩.

இ - ள். ஈட்டம் இவறி இசைவேண்டா ஆடவர் தோற்றம் - யாம்

பிறரின்மிக

ஈட்டுதுமென்று பொருளினை ஈட்டன் மாத்திரத்தையே விரும்பி அதன்பயனாய புகழை விரும்பாத மக்களது பிறப்பு—நிலக்குப் பொறை - நிலத்திற்குப் பாரமாந்துணையே. எ - று.

இசை இருமைக்குமுறுதியாய அறமாகலின் ஈகையான் அதனையே வேண்டல், செய்யாது ஈட்டற்றுன்பத்தையும் காத்தற்றுன்பத்தையும் வேண்டியவறிவின்மை பற்றி, நிலக்குப்பொறையென்றார். பிறப்பென்றது அதற்குரியவுடம்பினை. (௩)

க00௪. எச்சமென் றென்னெண்ணுங் கொல்லோ வொருவரா
னச்சப் படாஅ தவன். ௪.

இ - ள். ஒருவரால் நச்சப்படாதவன் - ஒருபொருளும் ஈந்தறியாமையின் ஒருவராலும் நச்சப்படுதலில்லாதவன்—எச்சமென்று என் எண்ணுங்கொல் - தானிறந்தவழி நின்றொழிந்து நிற்பதாக யாதனைக் கருதுமோ] எ - று.

நின்றொழிந்து நிற்கும்புகழ் நச்சப்படுவார்மேலன்றி நில்லாமையின் அவனுக் கஃதுண்டாதலில்லையென்பார், என்னெண்ணுங்கொல்லோவென்றார். ஓகாரம் அசை. இவை மூன்றுபாட்டானும் பிறர்க்குப் பயன்படலின்மை கூறப்பட்டது. (௪)

## க0க ம் அதி.—நன்றியில்செல்வம்.

[illegible]

௧00௫. கொடுப்பதூஉந் துய்ப்பதூஉ மில்லார்க் கடுக்கிய
கோடியுண் டாயினு மில். ௫.

இ - ள். கொடுப்பதூஉம் துய்ப்பதூஉம் இல்லார்க்கு - பிறர்க்கீவதும் தாநுகர்வதுமாய இரண்டுசெய்கையுமுடையரல்லாதார்க்கு - அடுக்கிய கோடி உண்டாயினும் இல் - பலவாகவடுக்கிய கோடி பொருளுண்டாயினும் ஒன்றுமில்லை, எ - று.

இன்பத்தினும் அறஞ்சிறந்தமையின், கொடுத்தற்றொழில் முற்கூறப்பட்டது. அடுக்கியகோடியென்றது ஈண்டெண்ணப்படும் பொருண்மேனின்றது. ஒன்றுமில்லார்போலப் பயனிரண்டுமிழத்தலின், இல்லென்றார். (௫)

௧00௬. ஏதம் பெருஞ்செல்வந் தான்றுவ்வான் றக்கார்க்கொன்
றீத லியல்பிலா தான். ௬.

இ - ள். தான் துவ்வான் தக்கார்க்கு ஒன்று ஈதல் இயல்பிலாதான் - தானுகரானும் அதன்மேலுந் தகுதியுடையார்க்கு அவர்வேண்டியதொன்றனை ஈதலியற்கையிலனுமாயினான்—பெருஞ்செல்வம் ஏதம் - இரண்டுஞ் செய்தற்கிடனுடைத்தாய செல்வத்திற்கு ஒருநோய். எ - று.

தகுதி தானங்கோடற்கேற்புடைமை. ஏதம் ஆகுபெயர். நுகரப்படுதலும் ஈயப்படுதலுமாகிய தொழிற்குரியதனை அன்றாக்கினமையின், நோயென்றார். ஈதலியல்பிலாதானது பெருஞ்செல்வம் அவனுக்கு ஈட்டல் காத்தன்முதலியவற்றால் துன்பமேயாமென்றுரைப்பாருமுளர். இவையிரண்டுபாட்டானும் அவ்விருமையும் உடன் கூறப்பட்டன.
(௬)

௧00எ. அற்றார்க்கொன் றாற்றாதான் செல்வ மிகநலம்
பெற்றா டமியண்மூத் தற்று. எ.

இ - ள். அற்றார்க்கு ஒன்று ஆற்றாதான் செல்வம் - ஒருபொருளுமிலராயினார்க்கு அவர் வேண்டியதொன்றனைக் கொடாதானது செல்வம் கொன்னேகழிதல்—மிகநலம் பெற்றாள் தமியள் மூத்தற்று - பெண்டிரின் மிக்க நலத்தினைப் பெற்றாளொருத்தி கொளப்பாரின்மையிற் கொழுநனின்றித் தமியளாய் மூத்ததன்மைத்து. எ - று.

நலம் வடிவினன்மையும் குணத்தினன்மையும். இரண்டுமொருங்கு பெறுதலரிதாகலின் பெற்றாளென்றார். கொளப்பாரும் கொழுநனுமேயன்றித் தானும் பயனிழந்து கழிந்த குமரியோடுவமை கூறினமையின், தானுமேற்பாருமேயன்றிச் செல்வமும் பயனிழந்து கழியுமென்பதாயிற்று. (எ)

௧00அ. நச்சப் படாதவன் செல்வ நடுவூரு
ணச்ச மரம்பழுத் தற்று. அ.

இ - ள். நச்சப்படாதவன் செல்வம் - வறியார்க்கணியனாயிருந்தும் ஒன்றுங்கொடாமையின் அவரானச்சப்படாதவன் செல்வமெய்துதல்—ஊர் நடுவண் நச்சமரம் பழுத்தற்று - ஊரிடைநிற்பதோர் நச்சமரம் பழுத்தாற்போலும். எ - று.

நடுவூரென்பது பின்முன்னாகத்தொக்க ஏழாம்வேற்றுமைத்தொகை. அண்மையும் [illegible] பயனில்லையென்பதாம்.
(அ)

௨-அ

௨௫அ ௧0௨ ம் அதி.—நாணுடைமை

௧00௯. அன்பொரீஇத் தற்செற் றறநோக்கா தீட்டிய

இ - ள். அன்பு ஒரீஇ - ஒருவன் கொடாமைப்பொருட்டுச் சுற்றத்தார் கட்டார் கண் அன்பு செய்தலையொழித்து—தற்செற்று - வேண்டுவன நுகராது தன்னைச்செறுத்து—அறம் நோக்காது - வறியார்க்கு ஈதல் முதலியவறத்தை நினைப்பதுஞ்செய் யாது—ஈட்டிய ஒண்பொருள் கொள்வார் பிறர் - ஈட்டிய வொள்ளிய பொருளைக் கொண்டுபோய்ப் பயன்பெறுவார் பிறர். எ - று.

பயனாய அறனும் இன்பமுஞ் செய்துகொள்ளாதானுக்குப் பொருளாலுள்ளது ஈட்டற்றுன்பமே யென்பது தோன்ற ஈட்டியவென்றும், அவன்வழியிலுள்ளார்க்கும் உதவாதென்பது தோன்றப் பிறரென்றும் கூறினார். (௯)

௧0௧0. சீருடைச் செல்வர் சிறுதுனி மாரி
வறங்கூர்ந் தனைய துடைத்து. ௧0.

இ - ள். சீர் உடைச் செல்வர் சிறுதுனி - புகழுடைத்தாய செல்வத்தினையுடைய வர்தா நிற்குங்காலஞ் சிறிதாய வறுமை— மாரி வறங்கூர்ந்தனையது உடைத்து - உலகத்தையெல்லாம் நிலைநிறுத்துமேகம் வறுமை மிக்காற்போல்வதோரியல்பினையுடைத்து. எ - று.

துனி வெறுப்பு; அதனைச்செய்தலாற் றுனியெனப்பட்டது. யாவர்க்கும் பயன் பட்டார் அதனான் வறியாராயவழியும் அவ்வறுமை கடிதினீங்கத்தலைப் பின்புஞ் செல்வராய்ப் பயன்படுவரென்பது உவமையாற் பெறப்பட்டது; படவே, நன்றியில்லாத செல்வம் எஞ்ஞான்றும் பயன்படாதென்பதாயிற்று. இதற்குச் சீருடைச்செல்வர் இரவலரோடு வெறுக்கும் நிலையில்வெறுப்பு மாரிவறங்கூர்ந்தனைய தன்மையையுடைத் தென அதிகாரத்தோடு பொருந்தாமைமேலும் ஓர்பொருட்டொடர்புபடாமலுரைப் பாருமுளர். இவை நான்குபாட்டானும் அச்செல்வத்தது குற்றங் கூறப்பட்டது (௧0)

---

## ௧0௨ ம் அதி.—நாணுடைமை.

அஃதாவது மேற்சொல்லிய சால்பு பண்புமுதலிய குணங்களானுயர்ந்தோர் தமக்கொவ்வாத கருமங்களில் நாணுதலுடையராந்தன்மை. அதிகாரமுறைமையும் இதனானே விளங்கும்.

௧0௧௧. கருமத்தா னாணுத னாணுத் திருநுதல்
நல்லவர் நாணுப் பிற. ௧.

இ - ள். நாணுக் கருமத்தால் நாணுதல் - நன்மக்களது நாணாவது இழிந்த கருமங்காரணமாக நாணுதல்;—பிற திரு நுதல் நல்லவர் நாணு - அஃதன்றி மனமொழிமெய்கள் ஒடுக்கத்தான் வருவனவோவெனின், அவை அவரளவல்ல அழகிய நுதலினையுடைய குலமகளிர் நாணங்கள். எ - று.

பிறகுலமகளிர்நாணென்றதனான் இனையது நன்மக்களுநாணென்பதூஉம், நாணுதலென்றதனாற் கருமத்ததிழிவும் பெற்றாம். திருநுதனல்லவரென்பது புகழ்ச்சிக்குறிப்பு. அப்பன்மைபற்றிப் பிறவென்றார். இனி அற்றமறைத்தன்முதலியன பொதுமகளிர் நாணொடொக்குமென்றுரைப்பாருமுளர்; அவர்க்கு நாண் தேய்வுபடுமென விடுக்

## ௧0௨ ம் அதி.—நாணுடைமை.

[illegible]

சப்பட்டமையாலும், அவர்பெயராற் கூறப்பட்டமையாலும் அஃதவைபன்மையுமறிக. இதனான் நாணினிலக்கணம் கூறப்பட்டது. (௧)

க0கஉ. ஊணுடை யெச்ச முயிர்க்கெல்லாம் வேறல்ல
நாணுடைமை மாந்தர் சிறப்பு. உ.

இ - ள். ஊண் உடை எச்சம் உயிர்க்கெல்லாம் வேறு அல்ல-ஊணும் உடையும் அவையொழிந்தனவும் மக்களுயிர்க்கெல்லாம் பொது;—மாந்தர் சிறப்பு நாணுடைமை - நன்மக்கட்குச் சிறப்பாவது நாணுடைமையே, அவையல்ல. எ - று.

ஒழிந்தன உறக்கமும் அச்சமுங் காமமும். சிறப்பு அவ்வுயிர்களின் வேறுபாடு. அச்சமென்று பாடமோதுவாருமுளர்.
(உ)

க0கங. ஊனைக் குறித்த வுயிரெல்லா நாணென்னு
நன்மை குறித்தது சால்பு. ங.

இ - ள். உயிரெல்லாம் ஊனைக்குறித்த - எல்லாவுயிர்களும் உடம்பினைத்தமக்கு நிலைக்களனாகக்கொண்டு அதனைவிடா;—சால்பு நாண் என்னும் நன்மை குறித்தது - அதுபோலச் சால்பு நாணென்னு நன்மைக்குணத்தைத் தனக்கு நிலைக்களனாகக்கொண்டு அதனை விடாது. எ - று.

உடம்பென்பது சாதியொருமை. நன்மை ஆகுபெயர். உயிர் உடம்போடு கூடி யல்லது பயனெய்தாதவாறுபோலச் சால்பு நாணொடுகூடியல்லது பயனெய்தாதென்பதாம். ஊனைக்குறித்தவென்று பாடமோதுவாருமுளர்.
(ங)

க0கச. அணியன்றோ நாணுடைமை சான்றோர்க் கஃதின்றேற்
பிணியன்றோ பீடு நடை. ச.

இ - ள். சான்றோர்க்கு நாணுடைமை அணியன்றோ - சான்றோர்க்கு நாணுடைமை ஆபரணமாம்;—அஃது இன்றேல் பீடு நடை பிணியன்றோ - அவ்வாபரண மில்லையாயின் அவர்

பெருமிதத்தையுடைய நடை கண்டார்க்குப் பிணியாம். எ - று.

அழகுசெய்தலின் அணியென்றும், பொறுத்தற் கருமையிற் பிணியென்றுங் கூறினார். ஓகாரவிடைச்சொற்கள் எதிர்மறைக்கண் வந்தன. இவைமூன்றுபாட்டானும் அதன் சிறப்புக் கூறப்பட்டது. (௪)

௧0௧௫. பிறர்பழியுந் தம்பழியு நாணுவார் நாணுக்
குறைபதி யென்னு முலகு. ௫.

இ - ள். பிறர் பழியும் தம்பழியும் நாணுவார் - பிறர்க்கு வரும் பழியையுந் தமக்கு வரும்பழியையும் ஒப்பமதித்து நாணுவாரை—உலகு நாணுக்கு உறைபதி என்னும் - உலகத்தார் நாணுக்குறைவிடமென்று சொல்லுவர். எ - று.

ஒப்பமதித்தல் அதுவுந்தமக்கு வந்ததாகவே கருதுதல். அக்கருத்துடையார் பெரியாராகலின், அவரை உயர்ந்தோர் யாவரும் புகழ்வரென்பதாம். இதனால் அதனை யுடையாரது சிறப்புக் கூறப்பட்டது. (௫)

௧0௧௬. நாண்வேலி கொள்ளாது மன்னோ வியன்ஞாலம்
பேணலர் மேலா யவர். ௬.



இ - ள். மேலாயவர் - உயர்ந்தவர்,—வேலி நாண் கொள்ளாது - தமக்கேமமாகிய நாணினைக் கொள்வதன்றி,—வியன் ஞாலம் பேணலர்-அகன்ற ஞாலத்தைக்கொள்ள விரும்பார். எ - று.

பழிபாவங்கள் புகுதாமற்காத்தலின், வேலியென்றார். நாணும் ஞாலமுந் தம் முன்பாகுபவழி அந்நாணினைக் கொள்வதல்லது அவைபுகுது நெறியாய ஞாலத்தி

னைக்கொள்ள விரும்பாரென்பதாம். மன்னும் ஓவும் அசை.

பெற்றல்லது ஞாலம்பெற விரும்பாரென்றுரைப்பாருமுளர்.

நாணுடைய வேலியைப்

(௬)

௧௦௧௭. நாணா லுயிரைத் துறப்ப ருயிர்ப்பொருட்டா
னாண்டுறவார் நாணாள் பவர். எ.

இ - ள். நாண் ஆள்பவர் - நாணினது சிறப்பறிந்து அதனை விடாதொழுகுவார்—நாணால் உயிரைத் துறப்பர் - அந்நாணுமுயிருந்தம்முள் மாறாயவழி நாண்சிதையாமற்பொருட்டு உயிரை நீப்பர்;—உயிர்ப்பொருட்டு நாண் துறவார் - உயிர் சிதையாமற்பொருட்டு நாணினை நீக்கார். எ - று.

உயிரினும் நாண்சிறந்ததென்பதாம். இவையிரண்டுபாட்டானும் அவர்செயல் கூறப்பட்டது.

(எ)

௧௦௧௮. பிறர்நாணத் தக்கது தானாணா னாயி
னறநாணத் தக்க துடைத்து. அ.

இ - ள். பிறர் நாணத்தக்கது தான் நாணானாயின்-கேட்டாருங்கண்டாரு நாணத் தக்க பழியை ஒருவன் தானாணாது செய்யுமாயின்,—அறம் நாணத்தக்கது உடைத்து- அந்நாணாமை அவனை அறம் விட்டு நீங்கத்தக்க குற்றத்தினையுடைத்து. எ - று. தானெனச் செய்வானைப் பிரிக்கின்றாராகலின், பிறரென்றார்.
வனதானை அறஞ்சாராதென்பதாம்.

நாணுடைமையில்

(அ)

௧0௧௯. குலஞ்சுடுங் கொள்கை பிழைப்பி னலஞ்சுடு
நாணின்மை நின்றக் கடை. ௯.

இ - ள். கொள்கை பிழைப்பிற் குலம் சுடும் - ஒருவனுக்கொழுக்கம் பிழைக்குமாயின் அப்பிழைப்பு அவன் குடிப்பிறப்பொன்றனையுங் கெடுக்கும்;—நாணின்மை நின்றக் கடை நலம் சுடும் - ஒருவன்மாட்டு நாணின்மை நின்றவழி அந்நிலை அவனலம் யாவற்றையுங் கெடுக்கும். எ - று.

நிற்றல் ஒருபொழுது நீங்காமை. நலம் சாதியொருமையாகலின், பிறப்பு, கல்வி,
குணம், செயல், இனமென்றிவற்றான் வருநலமெல்லாங்கொள்ளப்படும். இதனும் நாணின்மை இறப்பத் தீதென்பதாம்.

ஒழுக்கவழி
(௯)

௧0௨0. நாணகத் தில்லா ரியக்க மரப்பாவை
நாணா லுயிர்மருட்டி யற்று. ௧0.

இ - ள். அகத்து நாண் இல்லார் இயக்கம் - தம்மனத்தின்கண் நாணில்லாத மக்கள் உயிருடையார்போன்றியங்குகின்ற வியக்கம்—மரப்பாவை நாணால் உயிர் மருட்டியற்று - மரத்தாற்செய்த பாவை இயந்திரக்கயிற்றினுடைய தன்மையைக்கத்தால் உயிருடைத்தாக மயக்கினாற்போலும். எ - று.

## ௧0௩ ம் அதி.—குடிசெயல்வகை.

ஏனையவே கருத்தாவாயிற்று. நாணில்லாத மக்களியக்கம் நாணுடைய பாவை யியக்கம்போல்வதல்லது உயிரியக்கமன்றென்பதாம். இவை மூன்று பாட்டானும் நாணில்லாரதிழிவு கூறப்பட்டது. (௧0)

## ௲௩-ம் அதி.—குடிசெயல்வகை.

அஃதாவது ஒருவன்றான் பிறந்த குடியை உயரச்செய்தலின்றிறம். இது தாழ்வின்கணுணருதலுடையார்க்குளதாவதாகலின் நாணுடைமையின் பின்வைக்கப்பட்டது.

௲௨௧. கருமஞ் செயவொருவன் கைதூவே னென்னும்
பெருமையிற் பீடுடைய தில். ௧.

இ - ள். கருமம் செயக் கைதூவேன் என்னும் பெருமையின் - தன்குடி செய்தற் பொருட்டுத் தொடங்கிய கருமமுடியாமையின் எண்ணியகருமஞ் செய்தற்கியான் கையொழியேனென்னும் ஆள்வினைப்பெருமைபோல—ஒருவன் பீடு உடையது இல்- ஒருவனுக்கு மேம்பாடுடைய பெருமை பிறிதில்லை. எ - று.

குடிசெயற்கென்பது அதிகாரத்தான் வந்தது. பலவகைத்தாய கருமச்செயலாற் செல்வமும் புகழுமெய்திக் குடியுயருமாகலின், பீடுடையதில்லென்றார். குடிசெய்தற் கருமமே நடத்தலால், தன்கருமஞ்செய்யவென்றும் பிறர்கருமஞ் செய்யவென்று முரைப்பாருமுளர்; தன்கருமமும் அதுவேயாகலானும், பிறரேவல் செய்தல் தலைமை யன்மையானும், அவையுரையன்மையறிக. (௧)

௲௨௨. ஆள்வினையு மான்ற வறிவு மெனவிரண்டி
னீள்வினையா னீளுங் குடி. ௨.

இ - ள். ஆள்வினையும் ஆன்ற அறிவும் என இரண்டின் நீள்வினையான் - முயற்சியும் நிறைந்த வறிவுமென்று சொல்லப்பட்ட இரண்டினையுமுடைய இடையறாத கருமச்செயலால்—குடி நீளும் - ஒருவன் குடியுயரும். எ - று.

நிறைதல் இயற்கையறிவு செயற்கை யறிவோடு நிரம்புதல்.

ஆள்வினை மடி புகுதாமற்பொருட்டு. ஆன்றவறிவு உயர்தற்கேற்ற செயல்களும் அவை முடிக்குந்திற மும் பிழையாமலென்னுதற்பொருட்டு. இவையிரண்டோட்டாலும் அச்செயற்குக் காரணம் கூறப்பட்டது.
(உ)

௧0உ௩. குடிசெய்வ லென்னு மொருவற்குத் தெய்வ
மடிதற்றுத் தான்முந் துறும். ௩.

இ - ள். குடி செய்வல் என்னும் ஒருவற்கு- என் குடியினையுயரச்செய்யக் கடவே னென்றுகொண்டு அதற்கேற்ற கருமங்களின் முயலும் ஒருவனுக்கு—தெய்வம் மடி தற்றுத் தான் முந்துறும் - தெய்வம் ஆடையைத் தற்றுக்கொண்டு தான் முந்துற்று நிற்கும். எ - று.

முயற்சியை அதன் காரணத்தாற் கூறினார். தற்றுதல் இறுகவுடுத்தல். முன்னடப் பதாச்செயல் வெறிமேலேற்றப்பட்டது.
(௩)

௧0உ௪. சூழாமற் றானே முடிவெய்துந் தங்குடியைத்
தாழா துஞற்று பவர்க்கு. ௪.

௧0௩ ம் அதி. — குடிசெயல்வகை.

இ - ள். தங்குடியைத் தாழாது உஞற்றுபவர்க்கு - தங்குடிக்காம் வினையை விரைந்து முயல்வார்க்கு—சூழாமல் தானே முடிவெய்தும்- அவ்வினை முடிக்குந் திறம் அவர் சூழவேண்டாமற்றானே முடிவெய்தும். எ - று.

குடி ஆகுபெயர். தெய்வமுந்துறுதலாற் பயன்கூறியவாறு. இவையிரண்டோட்டாலும் அதற்குத் தெய்வந்துணையாதல் கூறப்பட்டது. (௪)

௯0௨௫. குற்ற மிலனாய்க் குடிசெய்து வாழ்வானைச்
சுற்றமாச் சுற்று முலகு. ௫.

இ - ள். குற்றம் இலனாய்க் குடி செய்து வாழ்வானை - குற்றமாயின செய்யாது
தன்குடியையுயரச்செய்தொழுகுவானை—சுற்றமாச் சுற்றும் உலகு - அவனுக்குச் சுற்ற மாகவேண்டித் தாமே சென்று சூழ்வர் உலகத்தார். எ - று.

குற்றமாயின அறநிலைக்கு மறுதலையாய செயல்கள். தாமும் யாவருஞ்சென்று சார்வரென்பதாம்.

பயனெய்துவிக்கி
(௫)

௯0௨௬. நல்லாண்மை யென்ப தொருவற்குத் தான்பிறந்த
வில்லாண்மை யாக்கிக் கொளல். ௬

இ- ள். ஒருவற்கு நல்லாண்மை என்பது - ஒருவனுக்கு நல்ல வாண்மையென்று உயர்த்துச் சொல்லப்படுவது—தான்பிறந்த இல்லாண்மை ஆக்கிக்கொளல் - தான் பிறந்த குடியினையாளுந் தன்மையைத் தனக்குளதாக்கிக்கோடல். எ - று.

போர்த்தொழிலினீக்குதற்கு நல்லாண்மையென விசேடித்தார். குடியினையாளுந் தன்மை குடியிலுள்ளாரையுயரச்செய்து தன்வழிப்படுத்தல். அதனைச்செய்து கோடல் நல்லாண்மையாமாறு வருகின்ற பாட்டாற் பெறப்படும். (௬)

௯0௨௭. அமரகத்து வன்கண்ணர் போலத் தமரகத்து
மாற்றுவார் மேற்றே பொறை. ௭.

இ - ள். அமரகத்து வன்கண்ணர்போல - களத்தின்கட்சென்றார் பலராயினும் போர்தாங்குதல் வன்கண்ணர்மேலதானாற்போல,—தமரகத்தும் பொறை ஆற்றுவார் மேற்றே - குடியின்கட்பிறந்தார் பலராயினும் அதன் பாரம் பொறுத்தல் அதுவல்லார் மேலதாம். எ - று.

பொருட்கேற்ப வேண்டுஞ்சொற்கள் உவமைக்கண் வருவிக்கப்பட்டன. நன்கு மதிக்கப்படுவோர் அவரேயென்பதாம். இவை மூன்றுபாட்டானும் அதுசெய்வாரது சிறப்புக் கூறப்பட்டது. (எ)

௧0௨அ. குடிசெய்வார்க் கில்லை பருவ மடிசெய்து
மானங் கருதக் கெடும். அ.

இ - ள். மடி செய்து மானம் கருதக் கெடும் - தங்குடியினையுயர்ச்செய்வார் அச்செயலையே நோக்காது காலத்தை நோக்கி மடியினைச்செய்துகொண்டு மானத்தை முன்கருதுவராயிற் குடிகெடும்;—குடி செய்வார்க்குப் பருவம் இல்லை - ஆகலான் அவர்க்குக் காலவரைவில்லை. எ - று.

## ௧0௪ ம் அதி.—உழவு.

உழவு,

காலத்தைநோக்கி மடிசெய்தல் வெயில்மழைபனியென்பன வுடைமைநோக்கிப் பின்னர்ச்செய்துமென்றொழிந்திருத்தல். மானங்கருதுதல் இக்குடியிலுள்ளார் யாவரும் இன்பமுற இக்காலத்துத் துன்பமுறுவேன் யானோவென்று உட்கோடல். மேல் "இகல் வெல்லும் வேந்தர்க்கு வேண்டும்பொழுது" தென்றதுட்கொண்டு இவர்க்கும் வேண்டுமோவென்று கருதினும் அது கருதற்கவென்று மறுத்தவாறு. (அ)

௧0௨௯. இடும்பைக்கே கொள்கலங் கொல்லோ குடும்பத்தைக்
குற்ற மறைப்பா னுடம்பு ௯.

இ - ள். குடும்பத்தைக் குற்றம் மறைப்பான் உடம்பு - மூவகைத்துன்பமுமுறற் பாலதாய தன்குடியை அவைபுகுமற்காக்க முயல்வா னது உடம்பு—இடும்பைக்கே கொள்கலங்கொ ல் - அம்முயற்சித்துன்பத்திற்கே கொள்கலமாமத்துணையோ, அஃதொழிந்து இன்பத்திற்காதலில்லையோ. எ - று.

“†உறைப்பெய லோலை போல—மறைக்குவன் பெருமநிற்குறித்த வருவேலே” என்புழியும் மறைத்தல் இப்பொருட்டாயிற்று. என்குடிமுழுது மின்புற்றுயவே யானிருமையுமெய்துதலான் இம்மெய்வருத்தமாத்திரம் எனக்கு நன்றென்று முயலு மறிவுடையான் அஃதொருஞான்றுமொழியாமைநோக்கி, இடும்பைக்கே கொள்கலங் கொல்லோவென்றார். இது குறிப்புமொழி. இவையிரண்டுபாட்டானும் அவர் அது செய்யுமியல்பு கூறப்பட்டது.
(௯)

௧0௩0. இடுக்கண்கால் கொன்றிட வீழு மடுத்தூன்று
நல்லா ளிலாத குடி. ௧0.

இ - ள். இடுக்கண் கால் கொன்றிட வீழும் - துன்பமாகிய நவியம் புகுந்து தன்முதலை வெட்டிச் சாய்க்க ஒருபற்றின்றி வீழாநிற்கும்—அடுத்து ஊன்றும் நல்லான் இலாத குடி - அக்காலத்துப் பற்றுவன கொடுத்துத் தாங்கவல்ல நல்லாண் மகன் பிறவாத குடியாகிய மரம். எ - று.

முதல் அதன்வழிக்குரியார், வளர்ப்பாரைப் பெற்றுழி வளர்ந்துபயன்படுதலும் அல்லாவழிக் கெடுதலுமுடைமையின், மரமாக்கினார்; “தூயகுசிறை வாவலுறை தொன்மரங்க ளன்ன—வோங்குகுல மையவது ளுட்பிறந்த வீரர்—தாங்கல்கடன்‡” என்றார் பிறரும். இது குறிப்புருவகம். இதனான் அவரில்லாத குடிக்குளதாங் குற்றங் கூறப்பட்டது.

---

## ௧0௪ ம் அதி.—உழவு.

அஃதாவது சிறுபான்மை வாணிகர்க்கும் பெரும்பான்மை வேளாளர்க்கு முரித்தாய உழுதற்றொழில். செய்விக்குங்கால் ஏனையோர்க்குமுரித்து. இது, மேற் குடியுயர்தற்கேதுவென்ற ஆள்வினைவகையாகலின், குடிசெயல்வகையின் பின் வைக்கப்பட்டது.

௧0௩௧. சுழன்றுமேர்ப் பின்ன துலக மதனா
லுழந்து முழவே தலை. க.

---

* திருக்குறள். ௬௮௪. † புறநானூறு, ௨௧0.
‡ சீவகசிந்தாமணி, காந்தருவதத்தையாரிலம்பகம். ௯.

[illegible]

## ௧0௪ ம் அதி.—உழவு.

இ - ள். சுழன்றும் ஏர்ப்பின்னது உலகம் - உழுதலான்வரும் மெய்வருத்தநோக்கிப் பிறதொழில்களைச் செய்து திரிந்தும், முடிவில் ஏருடையார் வழியதாயிற்று உலகம்;—அதனால் உழந்தும் உழவே - ஆதலான் எல்லாவருத்தமுற்றும், தலையாய தொழில் உழவே. எ - று.

ஏர் ஆகுபெயர். பிறதொழில்களாற் பொருளெய்தியவழியும் உணவின்பொருட்டு உழுவார்கட்செல்லவேண்டுதலிற் சுழன்று மேர்ப்பின்னதுலகமென்றும், வருத்தமில

வேனும் பிறதொழில்கள் கடையென்பது போதர
கூறினார். இதனால் உழவினது சிறப்புக் கூறப்பட்டது.

உழந்துமுழவேதலையென்றும்

௲௩௨. உழுவா ருலகத்தார்க் காணியஃ தாற்றா
தெழுவாரை யெல்லாம் பொறுத்து. ௨.

இ - ள். அஃது ஆற்றாது எழுவாரை எல்லாம் பொறுத்து-அவ்வுழுதலைச் செய்ய மாட்டாது பிறதொழில்கண்மேற்செல்வார் யாவரையுந் தாங்குதலால்,—உழுவார் உலகத்தார்க்கு ஆணி-அது வல்லார் உலகத்தாராகிய தேர்க்கு அச்சாணியாவர். எ-று.

“காடுகொன்று நாடாக்கிக் குளந்தொட்” டென்றாற்போல உழுவாரென்றது உழுவிப்பார்மேலுஞ்செல்லும். உலகத்தாரென்றது ஈண்டிவரையொழிந்தாரை. கல க்ரமனிறுத்தற்கண் ஆணிபோறலின், ஆணியென்றார். பொறுத்தலானென்பதுதிரிந்துநின்றது. ஏகதேசவுருவகம். அஃதாற்றார் தொழுவாரேயெல்லாம் பொறுத்தென்று பாடமோதி, அதுமாட்டாதார் புறப்பார்செய்யும் பரிபவமெல்லாம் பொறுத்து அவரைத் தொழுவாரேயாவரென்றுரைப்பாருமுளர்.
(௨)

௲௩௩. உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார்மற் றெல்லாந்
தொழுதுண்டு பின்செல் பவர். ௩.

இ - ள். உழுது உண்டு வாழ்வாரே வாழ்வார் - யாவரு முண்ணும் வகை உழுதலைச்செய்து அதனாற்றாமுமுண்டு வாழ்கின்றாரே தமக்குரியராய் வாழ்கின்றவர்;—மற்றெல்லாம் தொழுது உண்டு பின்செல்பவர் - மற்றையாரெல்லாம் பிறரைத்தொழுது அதனாற்றாமுண்டு அவரைப் பின்செல்கின்றவர். எ - று.

மற்றென்பது வழக்குப்பற்றி வந்தது. தாமுமக்கட்பிறப்பினராய்வைத்துப் பிறரைத்தொழுது அவர் சிலகொடுப்பத் தம்முயிரோம்பி அவர்பின்செல்வார் தமக்குரியரல்லரென்பது கருத்து.

இ - ள். கைசெய்தூண் மாலையவர் இரவார் - தங்கையாலுழுதுண்டலை இயல்பாகவுடையார் பிறரைத் தாமிரவார்;—இரப்பார்க்கு ஒன்று கரவாது ஈவர் - தம்மை யிரப்பார்க்கு அவர்வேண்டியதொன்றனைக் கரவாது கொடுப்பர் எ - று.

செய்தென்பதற்கு உழுதலையெனவருவிக்க. கைசெய்தூண் மாலையவரென்பது ஒருகுன்றும் அழிவில்லாதசெல்வமுடையரென்னும் ஏதுவைபுட்கொண்டுநின்றது.()

௧0௩௬. உழவினார் கைம்மடங்கி னில்லை விழைவதூஉம்
விட்டேமென் பார்க்கு நிலை. ௬.

இ - ள். உழவினார் கை மடங்கின் - உழுதலையுடையார்கை அதனைச்செய்யாது மடங்குமாயின்,—விழைவதூஉம் விட்டேம் என்பார்க்கு நிலை இல்லை - யாவரும்விழையு முணவும் யாந்துறந்தோமென்பார்க்கு அவ்வறத்தின்கணிற்றலுமுளவாகா. எ - று.

உம்மை இறுதிக்கண்ணும் வந்தியைந்தது. உணவின்மையால், தாமுண்டலும் இல்லறஞ்செய்தலும் யாவர்க்குமில்லையாயின . அவருறுப்புமாத்திரமாய் கை வாளா விருப்பின் உலகத்து இம்மை மறுமை வீடென்னும் பயன்கள் நிகழாவென்பதாம். ஒன்றனை மனத்தால் விழைதலுமொழிந்தேமென்பார்க்கெனவுரைப்பாருமுளர். இவையிரண்டுபாட்டானும் அதனைச் செய்வாரது சிறப்புக் கூறப்பட்டது. (௬)

௧0௩௭. தொடிப்புழுதி கஃசா வுணக்கிற் பிடித்தெருவும்
வேண்டாது சாலப் படும். ௭.

இ - ள். தொடிப்புழுதி கஃசா உணக்கின் - ஒருநிலத்தினை உழுதவன் ஒருபலப் புழுதி கஃசாம்வண்ணம் அதனைக்காயவிடுவானாயின்,—பிடித்து எருவும் வேண்டாது சாலப் படும் - அதன்கட்செய்த பயிர் ஒருபிடியின்கணடங்கிய

தன் கட் 'சென் று வேண்வென செய்யாது வேறிடத்திருந்த வழி மனையாளுமோறுபோலவென்றது அவன் போகமிழத்தலேக்கி. இவை மூன்று பாட்டாலும் அதுசெய்யுமாறு கூறப்பட்டது.
(க)

கoசo. இலமென் றசைஇ யிருப்பாரைக் காணி
னிலமென்னு நல்லா ணகும் கo

இ - ள். இலம் என்று அசைஇ இருப்பாரைக் காணின் - யாம் வறியேமென்று சொல்லி மடிந்திருப்பாரைக கண்டால்,—நிலம் என்னும் நல்லாள் நகும் - நிலமகளென்று உயர்த்துச்சொல்லப்படுகின்ற நல்லாள் தன்னுள்ளே நகாநிற்கும். எ - று.

உழுதன்முதலிய செய்வார யாவர்க்குஞ் செல்வங்கொடுத்துவருகின்றவாறு பற்றி நல்லாளென்றும், அதுகண்டிவைத்தும் அதுசெய்யாது வறுமையுறுகின்ற பேதைமை பற்றி நகுமென்றுங் கூறினார். இரப்பாரையென்று பாடமோதுவாருமுளர். இதனன் அதுசெய்யாதவழிப்படுமிழுக்குக் கூறப்பட்டது. வருகின்றவதிகாரமுறைமைக்குக் காரணமுமிது.
(கo)

---

## கoரு ம் அதி.—நல்குரவு.

அஃதாவது நுகரப்படுவனயாவுமில்லாமை.

கoசக. இன்மையி னின்னாத தியாதெனி னின்மையி
னின்மையே யின்னா தது. க.

இ - ள். இன்மையின் இன்னாதது யாது எனின் - ஒருவனுக்கு வறுமைபோல வின்னாதது யாதென்று வினவின்,—இன்மையின்

இன்றாதது இன்மையே - வறுமை போல வின்றாதது வறுமையே, பிறிதில்லை. எ - று.

இன்றாதது துன்பஞ்செய்வது. ஒப்புநில்லையெனவே, மிக்கதின்மை சொல்ல வேண்டாவாயிற்று.
(க)

௧0௪௨. இன்மை யெனவொரு பாவி மறுமையு
மிம்மையு மின்றி வரும். உ.

இ - ள். இன்மையென ஒருபாவி - வறுமையென்று சொல்லப்படுவதொரு பாவி—மறுமையும் இம்மையும் இன்றி வரும் - ஒருவனுழை வருமாயின் அவனுக்கு மறுமையின்பமும் இம்மையின்பமுமில்லையாக வரும். எ - று.
௩

## ௧0௫ ம் அதி.—நல்குரவு.

உ.ஸ்ரீ

இன்மையென வொருபாவியென்பதற்கு மேல் "அழுக்காறெனவொருபாவி" யென்புழியுரைத்தாங்குரைக்க. மறுமை இம்மையென்பன ஆகுபெயர். சயாமையா னும் துவ்வாமையானும் அவையிலவாயின. இன்றிவிடுமென்று பாடமோதிப் பாவி , பாவென விரித்துரைப்பாருமுளர் .
(உ)

௧0௪௩. தொல்வரவுந் தோலுங் கெடுக்குந் தொகையாக
நல்குர வென்னு நசை. ௩.

இ - ள். நல்குரவு என்னும் நசை - நல்குரவென்றுசொல்லப்படுமோசை—தொல் வரவும் தோலும்

தொகையாகக் கெடுக்கும் - தன்னாற்பற்றப்பட்டாருடைய பழைய குடிவரவினையும் அதற்கேற்ற சொல்லினையும் ஒருங்கே கெடுக்கும். எ - று.

கையில்வழி நல்குரவு மில்லையாகலின் நல்குரவையே கையாக்கி, அஃது அக் குடிப்பிறந்தோர்க்கில்லாத இழிதொழில்களையும் இளிவந்த சொற்களையுமுளவாக்க

லான் அவ்விரண்டனையுமொருங்கு கெடுக்குமென்றார்: "குடிப்பிறப் பழிக்கும் விழுப் பங் கொல்லும்†" என்றார் பிறரும். தோலாவது "இழுமென் மொழியால் விழுமியது நுவறல்‡" என்றார் தொல்காப்பியனாரும். இதற்கு உடம்பென் றுரைப்பாருமுளர்; அஃததற்குப் பெயராயினும் உடம்பு கெடுக்குமென்றற்கோர் பொருட்சிறப்பில்லாமையறிக.

(உ)

கஙசச. இற்பிறந்தார் கண்ணேயு மின்மை யிளிவந்த
சொற்பிறக்குஞ் சோர்வு தரும். ச.

இ - ள். இற்பிறந்தார் கண்ணேயும் - இளிவந்த சொற்பிறவாத குடிப்பிறந்தார் மாட்டேயும்—இளிவந்த சொற்பிறக்கும் சோர்வு இன்மை தரும் - அது பிறத்தற்கேதுவாகிய சோர்வினை நல்குரவு உண்டாக்கும். எ - று.

சிறப்பும்மை அவர்மாட்டு அது பிறவாமை தோன்றநின்றது. இளிவந்தசொல் இளிவருதற் கேதுவாகியசொல். அஃதாவது எமக்கியவேண்டுமென்றல். சோர்வு தாமுறுகின்றதன்பமிகுதிபற்றி ஒரோவழித் தம்பிறப்பினை மறந்து அது சொல்லுவ தாக நினைத்தல்.

(ச)

கஙசரு. நல்கூர வென்னு மிடும்பையுட் பல்குரைத்
துன்பங்கள் சென்று படும். ரு.

இ - ள். நல்குரவு என்னும் இடும்பையுள் - நல்குரவென்ற சொல்லப்படுகின்ற துன்பமொன்றனுள்ளே—பல் துன்பங்கள் சென்றுபடும் - பலதுன்பங்களும் வந்து விளைபும். எ - று.

குறை இசைக்கிறை. செலவு விரைவின்கண்வந்தது. துன்பமுந்தானு முடனே நிகழ்தலின் நல்குரவைத்துன்பமாக்கியும், அத்துன்பமடியாகச் செல்வர்கடைபோக்கிச் சேறற்றுன்பமும், அவரைக்காண்டற்றுன்பமும், கண்டான்மறுத்தழி னெழுந்துன்பமும், மறுவழியும் அவர்கொடுத்தது வாங்கற்றுன்பமும், அதுகொண்டுவந்து நுகர்வன கட்டற்றுன்பமு முதலாயின ஈடோறும் வேறுவேறாக வருதலின் எல்லாத்துன்பமுமுளவாமென்றுங்கூறினர். இவையைந்துபாட்டானும் நல்குரவின் கொடுமை கூறப்பட்டது. (௫)

* திருக்குறள், ௧௮. † மணிமேகலை, ௧௧-வது பாத்திரம்பெற்றகாதை.

‡ பொருள், செய்யுளியல், ௨௨௪.



## ௧0௫-ம் அதி.—நல்குரவு.

௧௦௪௬. நற்பொரு ணன்குணர்ந்து சொல்லினு நல்கூர்ந்தார்
சொற்பொருள் சோர்வு படும். ௬.

இ - ள். நற்பொருள் நன்கு உணர்ந்து சொல்லினும் - மெய்ந்நூற்பொருளைத் தெளியவறிந்து சொன்னாராயினும்,—நல்கூர்ந்தார் சொற் பொருள் சோர்வு படும் - நல்கூர்ந்தார் சொல்லுஞ்சொற் பொருளின்மையைத் தலைப்படும். எ - று.

பொருளின்மையைத் தலைப்படுதலாவது யாமிவர்சொல்லியன விரும்பிக்கேட்டு பரிந்து என்றோடி இவருறுகின்ற குறைமுடிக்கவேண்டுமென்றஞ்சி யாவருங்கேளாமையின் பயனில்சொல்லாய்முடிதல். கல்வியும் பயன்படாதென்பதாம். (௬)

௧௦௪௭, அறஞ்சாரா நல்குர வீன்றதா யானும்
பிறன்போல நோக்கப் படும். ௭.

இ - ள். அறம் சாரா நல்குரவு - அறத்தோடியைபில்லாத நல்குரவுடையான்— ஈன்ற தாயாலும் பிறன்போல நோக்கப்படும் - தன்னையீன்றதாயாலும் பிறனைக் கருதுமாறுபோலக் கருதி நோக்கப்படும். எ - று.

அறத்தோடொட்டாமை காரணகாரியங்களுளொன்றுபியையாமை. நல்குரவு ஆகு பெயர். சிறப்பும்மை அவனதியற்கையன்புடைமை விளக்கின்றது. கொள்வதின் றுதலேயன்றிக கொடுப்பதுண்டாதலுமுடைமையின், அதுநோக்கிச் சுற்றத்தார் யாவரும் துறப்பரென்பதாம்.
(எ)

௧0௪அ. இன்றும் வருவது கொல்லோ நெருநலுங்
கொன்றது போலு நிரப்பு. அ.

இ - ள். நெருநலும் கொன்றதுபோலும் நிரப்பு - நெருநற்றுங் கொன்றது போன்று எனக்கின்னாதவற்றைச்செய்த நல்குரவு—இன்றும் வருவதுகொல் - இன் றும் என்பால் வரக்கடவதோ, வந்தால் இனி யாது செய்வேன்! எ - று.

அவ்வின்னாதனவாவன மேற் சொல்லிய துன்பங்கள். நெருநன்மிக வருத்தித் தன்வயிறுநிறைத்தானொருவன் கூற்று.

(அ)

௧0௪௯. நெருப்பினுட் டுஞ்சலு மாகு நிரப்பினுள்
யாதொன்று கண்பா டரிது. ௯.

இ - ள். நெருப்பினுள் துஞ்சலும் ஆகும் - மந்திரமருந்துகளான் ஒருவனுக்கு நெருப்பிடையே கிடந்துறங்கலுமாம்,—நிரப்பினுள் யாதொன்றும் கண்பாடு அரிது - நிரப்புவந்துழி யாதொன்றானு முறக்கமில்லை எ - று.

நெருப்பினும்
நான்குபாட்டானும்

நிரப்புக்கொடிதென்றவாறாயிற்று. இதுவுமவன்கூற்று. இவை நல்கூர்ந்தார்க்குளதாங் குற்றங் கூறப்பட்டது. (௯)

௧0௫0. துப்புர வில்லார் துவரத் துறவாமை

லைக் காணில், அவர்மாட்டிரக்க;—கரப்பின் அவர்பழி தம்பழி அன்று - இரந்தால் அவர் கரந்தாராயின் அவர்க்குப்பழியாவதல்லது தமக்குப் பழியாகாமையான். எ-று.

இரவென்னுமுதனிலைத்தொழிற்பெயரதிறுதிக்கண் நான்கனுருபு விகாரத்தாற்
றொக்கது. இரத்தற்கேற்புடையராவார் உரையாமை முன்றுணருமொண்மையுடைய ராய் மாற்றுதிவார். அவர் உலகத்தரியராகலிற் காணினென்றும், அவர்மாட்டிரந் தார்க்கு இரவான்வருமிழிவின்மையின் இரக்கவென்றும், அவர் ஈதலிற் குறைபாட்டா மையிற் கரப்பினென்றும், கரப்பவராயின் அப்பழி வெள்ளைக்கண் மாசுபோல அவர்கட் கடிதுசேறலின் அவர்பழியென்றும், ஏற்பிலார் மாட்டிரவன்மையிற் றம்பழி யன்றென்றுங் கூறினார்.
(௧)

௧௦௫௨. இன்ப மொருவற் கிரத்த லிரந்தவை
துன்ப முறாஅ வரின். ௨.

இ-ள். ஒருவற்கு இரத்தல்
தேவாம்,—இரந்தவை துன்பம்

இன்பம் - ஒருவற்கு இரத்தலும் இன்பத்தின்
உறு வரின் - இரந்தபொருள்கள் ஈவாரதுணர்வு
டைமையாற் றுன்றுன்புறாமல் வருமாயின். எ - று.

இன்பம் ஆகுபெயர். உறாமலென்பது கடைக்குறைந்துநின்றது. துன்பம் சாதி பொருமைப்பெயர். அவையாவன ஈவார்கட் காலமுமிடமுமறிந்துசேறலும், அவர் குறிப்பறிதலும், அவரைத்தம்வயத்தராக்கலும், அவர் மனநெகிழ்வன நாடிச்சொல் லலு முதலியவற்றான் வருவனவும், மறுத்துழி வருவனவுமாம். அவையுறாமல் வருத லாவது அவர் முன்றுணர்ந்தீயக்கோடல். இரந்தவர் துன்பமுறுவரினென்று பாட மோதி, இரக்கப்பட்டவர் பொருளின்மை முதலியவற்றாற் றுன்புறாது எதிர்வந்தீவரா யினென்றுரைப்பாருமுளர். இவையிரண்டானும் நல்குரவாலுயிர்க்குமெய்ம் மைக்கண் இளிவில்லாவிரவு விலக்கப்படாதென்பது கூறப்பட்டது. (௨)

கOஙஅ. கரப்பிலா நெஞ்சிற் கடனறிவார் முன்னின்
இரப்புமோ ரேஎ ருடைத்து. அ.

இ - ள். கரப்பிலா நெஞ்சிற் கடன் அறிவார் முன் நின்று இரப்பும்-கரத்தலில்லா நெஞ்சினையுடைய மானமறிவார்முன்னர் நின்று அவர்மாட்டொன்றிரத்தலும்—ஓரேர் உடைத்து - நல்குரர்தார்க்கு ரழகுடைத்து எ - று.

"சிறியசுருக்கந்துவேண்டுமுயர்வு" வென்றதனால், அவர்க்கு அது கடனெனப் பட்டது. அதனையறிதல் சொல்லுதலுறுரைக்கலாகாமைக்கேதுவாய அதனியல் பினையறிதல். அவ வறிவுடையார்க்கு முன்னிற்றன்மாத்திரமேயமைதலின் முன்னின்றென்றும் சொல்லுத லான்வருஞ் சிறுமையெய்தாமையின் ஓரேருடைத்தென்றுங் கூறினார். உம்மை அதனிழிபு விளக்குகின்றது. (அ)

கOஙச. இரத்தலு மீதலே போலுங் கரத்தல்
கனவிலுந் தேற்றாதார் மாட்டு. ச.

இ - ள். கரத்தல் கனவிலும் தேற்றாதார்மாட்டு இரத்தலும் - தமக்குள்ளது கரத்தலைக் கனவின்கண்ணு மறியாதார்மாட்டுச்சென்றொன்றனையிரத்தலும்—ஈதலே போலும் - வறியார்க்கீதலேபோலும். எ - று.

உம்மை ஈண்டுமெவ்வாறுநின்றது. தான் புகழ்பயவாதாயினும் முன்னுளதாய புகழ் கெட வாராமையின், ஈதலேபோலுமென்றார். ஏகாரம் ஈற்றசை. (ச)

கOஙரு. கரப்பிலார் வையகத் துண்மையாற் கண்ணின்
றிரப்பவர் மேற்கொள் வது. ரு.

இ - ள். கண்ணின்று இரப்பவர் மேற்கொள்வது - சொல்லுதன்மாட்டாது முன்னிற்றன் மாத்திரத்தான் இரப்பார் உயிரோம்பற்பொருட்டு அதனை மேற்கொண்டு போதுகின்றது—கரப்பிலார் வையகத்து உண்மையான்-அவர்க்கு உள்ளது கரவாது கொடுப்பார் சிலர் உலகத்துளராய தன்மையானே, பிறிதொன்றானன்று. எ - று.

அவரில்லையாயின், மானநீக்கமாட்டாமையின் உயிர்நீப்பரென்பதாம். (௭)

௧௦௫௪. கரப்பிடும்பை யில்லாரைக் காணி னிரப்பிடும்பை யெல்லா மொருங்கு கெடும். ௮.

இ - ள். கரப்பிடும்பை இல்லாரைக் காணின் - உள்ளதுகரத்தலாகிய நோயில்லாரைக் கண்டால்,—இரப்பிடும்பை எல்லாம் ஒருங்கு கெடும் - மானம்விடா திரப் பார்க்கு இரப்பான் வருந்துன்பங்களெல்லாஞ் சேரக்கெடும். எ - று.

கரத்தல் ஒருவற்கு வேண்டுவதொன்றன்மையின் அதனை நோயென்றும், அஃதில் லாத இரக்கத்தக்காரைக் கண்டபொழுதே அவர் கழிபுவகையராவராகலின் எல்லா மொருங்கு கெடுமென்றுமுரைத்தார். இடும்பை ஆகுபெயர். முழுதுங் கெடுமென்று பாடமோதி, எஞ்சாமற்கெடுமென் றுரைப்பாருமுளர். (௮)

௧௦௫௫. இகழ்ந்தெள்ளா தீவாரைக் காணின் மகிழ்ந்துள்ள முள்ளு ளுவப்ப துடைத்து. ௯.

---

* திருக்குறள், ௧௦௪.

---

# ௧௦௫ம் அதி—இரவு.

இ - ள். இகழ்ந்து எள்ளாது ஈவாரைக் காணின் - தம்மையவமதித்திழிவு சொல்லாது பொருள்கொடுப்பாரைக்கண்டால்,—உள்ளம் மகிழ்ந்து உள்ளுள் உவப்பது உடைத்து - அவ்விரப்பாரது உள்ளமகிழ்ந்து உள்ளுள்ளேயுவக்குந் தன்மையுடைத்து. எ - று.

இகழ்ந்தெள்ளாதெனவே, நன்குமதித்தலும் இனியவைகூறலும் பெறுதும். இரப்பிடும்மை கெடுதலளவேயன்றி ஐம்புலன்களானும் பேரின்பமெய்தினராகக் கருதலான், உள்ளுளுவப்பதுடைத்தென்றார். இவையிரண்டுபாட்டானும் அவ்விரத்தற் காரியல்பு கூறப்பட்டது. (எ)

௧0ருஅ. இரப்பாரை யில்லாயி னீர்ங்கண்மா ஞால
மரப்பாவை சென்றுவந் தற்று. அ.

இ - ள். இரப்பார் இல்லாயின் - வறுமையுற்றிரப்பாரில்லையாயின்,—ஈர்ங்கண் மா ஞாலம் - குளிர்ந்தவிடத்தையுடைய பெரிய ஞாலத்துள்ளார் செலவு வரவுகள்—மரப்பாவை சென்று வந்தற்று - உயிரில்லாத மரப்பாவை இயந்திரக்கயிற்றாற்சென்று வந்தாற்போலும் எ - று.

ஐகாரம் அசைநிலை. ஞாலமென்னும் ஆகுபெயர்ப்பொருட்கு உவமையோடொத்த தொழில் வருவிக்கப்பட்டது. ஞாலத்துள்ளாரென்றது அவரையொழிந்தாரை. அவர்க்கீதலைச்செய்து புகழும் புண்ணியமுமெய்தாமையின், உயிருடையரல்லரென்பதாம்; "ஈவாருங் கொள்வாரு மில்லாத வானத்து—வாழ்வாரே வன்கணவர்" என்றார் பிறரும். இத்தொடையின்பநோக்காது இரப்பவரில்லாயினென்று பாடமோதுவாருமுளர். (அ)

௧0௬௯ ஈவார்க ணென்னுண்டாக் தோற்ற மிரந்துகோண்
மேவா ரிலாஅக் கடை. ௯.

இ - ள். இரந்துகோள் மேவார் இலாக்கடை - அவர்பாற்சென்று ஒன்றினை யிரந்துகோடலை விரும்புவாரில்வழி—ஈவார்கண் தோற்றம் என் உண்டாம் - கொடுப் பார்மாட்டு என்னபுகழுண்டாம்! யாதுமில்லை. எ - று.

தோற்றம் ஆகுபெயர். மேவுவாரென்பது விகாரமாயிற்று. கொடுத்தல்வன்மை வெளிப்படாமையின், அதனாற்புகழெய்தாரென்பதாம். இவையிரண்டுபாட்டானும் உலகிற்கிரப்பார்வேண்டுமென்பது கூறப்பட்டது. (௯)

௧0௬0. இரப்பான் வெகுளாமை வேண்டு நிரப்பிடும்பை
தானேயுஞ் சாலுங் கரி. ௧0.

இ - ள். இரப்பான் வெகுளாமை வேண்டும் - ஈவானுக்குப் பொருளுதவாவழி இவனெனக்கீகின்றிலனென்று அவனை யிரப்பான் வெகுளா தொழிதல்வேண்டும்—நிரப்பிடும் பை தானேயும் கரிசாலும் - அது வேண்டியபொழுது உதவாதென்பதற்கு வேறுசான்று வேண்டா, நிரப்பாகிய தன்னிடும்பை தானேயுஞ் சான்றுதலமை யும். எ - று.

யாவர்க்கும் தேடவேண்டுதலும் நிலையின்மையுமுதலிய பிறசான்று முன்பே பதுபட கின்றமையின், உம்மை எச்சவும்மை. தனக்கேயன்று மற்றையிரந்தார்க்கும் அற்றைக்கன்று பொருள் கடைக்கூட்டற்கு அவனுதர்துன்பத்தைத் தனக்கேயாக [illegible]
கண்டும் அறி—[illegible]ரவச்சம்.

[illegible]யைத்துத் தானுந்துன்பத் தானறிந்து வெகுளற்கவென்பதாம்.
[illegible]ன்றியமையாதோரியல்பு கூறப்பட்டது.

---

## ௧0௭ம் அதி.—இரவச்சம்.

அஃதாவது மானந்தீரவருமிரவிற்கஞ்சுதல். அதிகாரமுறைமையும் இதனானே விளங்கும்.

௧0௬௧ கரவா துவந்தீயுங் கண்ணன்னார் கண்ணு
மிரவாமை கோடி யுறும். க.

இ - ள். கரவாது உவந்து ஈயும் கண் அன்னார் கண்ணும் இரவாமை - தமக்குள் ளது கரவாது இவர் வரப்பெற்றேமென்று உண்மகிழ்ந்து கொடுக்கும் கண்போலச் சிறந்தார்மாட்டும் இரவாதே ஒருவன் வறுமைகூர்தல்—கோடி உறும் - இரந்து செல்வமெய்தலிற் கோடிமடங்கு நன்று. எ - று.

நல்குரவு மறைக்கப்படாத நட்டார்மாட்டும் ஆகாதென்பதுபட நின்றமையின், உம்மை உயர்வுசிறப்பின்கண்வந்தது. அவ்விரவான் மானக் கேடாதென்னுந் துணையல்லது அதற்கு மிகுதி கூடாமையின், வல்லதோர் முயற்சியானுயிரோம்பலே நல்லதென்பது கருத்து. (க)

௧0௬௨. இரந்து முயிர்வாழ்தல் வேண்டிற் பரந்து
கெடுக வுலகியற்றி யான். உ.

இ - ள். உலகு இயற்றியான் இரந்தும் உயிர்வாழ்தல் வேண்டின் - இவ்வுலகத்தைப் படைத்தவன் இதன்கண் வாழ்வார்க்கு முயன்றுயிர்வாழ்தலேயன்றி இரந்துமுயிர்வாழ்தலை வேண்டி விதித்தானாயின்,—பரந்து கெடுக - அக்கொடியோன்றானும் அவரைப்போன்று எங்குமலமந்து கெடுவானாக. எ - று.

மக்களுயிர்க்கெல்லாம் வாழ்நாளும் அதற்கு வேண்டுவதாயவுண்டியும் அதற்கேதுவாய செய்தொழிலும் பழவினைவயத்தாற் கருவொடுகலந்தவன்றே அவன் கற்

அமைதி—இடமெல்
கொள்ளாத் தகைத்தே - எல்லாவுலகும் ஒருங்கிசைத்தாலும்
த்து. எ - று.

கொள்ளாத பெரு

அவ்விரத்தலைச் சால்பு விலக்குமாகலின், இரவொல்லாமை அதன்மேலேற்றப் ட்டது. இதனான் அச்செறியல்லதனைச் ப்பட்டது.

சால்புடையார் செய்யாரென்பது கூறப்

(௪)

௧0௬௫. தெண்ணீ ரடுபுற்கை யாயினுந் தாடந்த
துண்ணலி னூங்கினிய தில். ௫.

இ - ள். தாள் தந்தது தெண்ணீர் அடுபுற்கையாயினும் - நெறியாய முயற்சி கொணர்ந்தது தந்தது தெளிந்தநீர்போலும் அடுபுற்கையேயாயினும், — உண்ணலின் ஊங்கு இனியது இல் - அதனையுண்டற்குமேலினியதில்லை. எ - று.

தாடக்கூழ் செறிவின்றித் தெண்ணீர்போன்றதாயினும் இழிவாய இரவான்வ ததன்றித் தம்முடைமையாகலின், அமிழ்தத்தோடொக்குமென்பதாம். இதனால் செறி வினையது சிறிதேனும் அதுசெய்யுமின்பம் பெரிதென்பது கூறப்பட்டது.

(௫)

௧0௬௬. ஆவிற்கு நீரென் றிரப்பினு நாவிற்
கிரவி னிளிவந்த தில். ௬.

இ - ள். ஆவிற்கு நீரென்று இரப்பினும் - தண்ணீர்பெறாது இறக்குநிலைமைத்தா யதோராவினைக் கண்டு அறனோக்கி இதற்குத் தண்ணீர் தரல்வேண்டுமென்றிரந்து சொல்லுங்காலும்,—இரவின் நாவிற்கு இளிவந்தது இல் - அவ்விரவுபோல ஒருவனது நாவிற்கிளிவந்தது பிறிதில்லை. எ - று.

ஆ காத்தோம்பல் பேரமைாகலின் ஆவிற்கென்றும், பொருள்கொடுத்துக் கொள்ள வேண்டாத எண்மைத்தாகலின் நீரென்றும், இரக்கின்றானுக்கு இளிவு அச்சொல்லளவேயாகலின் நாவிற்கென்றும், அதுதான் எல்லாவிளிவினும் மேற்பட்டதலின் இளிவந்ததில்லென்றுங்கூறினார். இதனான் அறனும் முயன்றுசெய்வதல்லது இரந்து செய்யற்கவென்பது கூறப்பட்டது. (௬)

௱௦௬௭. இரப்ப னிரப்பாரை யெல்லா மிரப்பிற்
கரப்பா ரிரவன்மி னென்று. ௭.

இ - ள். இரப்பாரை எல்லாம் இரப்பன் - இரப்பாரையெல்லாம் யானிரவாநின் றேன்,—இரப்பிற் கரப்பார் இரவன்மின் என்று - யாதுசொல்லியெனின், நமக்கிரக்க வேண்டுமாயிற் றமக்குள்ளது கரப்பாரையிரவாதொழிமினென்று சொல்லி. எ - று.

இரண்டாவது விகாரத்தாற்றொக்கது. இவ்விளிவந்த செயலான் வேட்டியவழி யும் உடம்பு நில்லாதாகலின் இது வேண்டாவென்பது தோன்ற, இரப்பனென்றார். இதனான் மானந்தீரவருமிரவு விலக்கப்பட்டது. (௭)

௱௦௬௮. இரவென்னு மேமாப்பி றோணி கரவென்னும்
பார்தாக்கப் பக்கு விடும். அ.

இ - ள். இரவு என்னும் ஏமாப்பு இல் தோணி - இல்வறுமையென்னும் கடலை இதனுற்கடத்துமென்றுகருதி ஒருவனேறியஇரவென்னுஞ்சேமத்ற தோணி—கரவு

௯௦

௲எக. மக்களே போல்வர் கயவ ரவரன்ன
ஒப்பாரி யாங்கண்ட தில். க.

இ - ள். மக்களே போல்வர் கயவர் - வடிவான் முழுதும் மக்களையொப்பர் கயவர்;—அவர் அன்ன ஒப்பாரி யாம் கண்டது இல் - அவர் மக்களையொத்ததுபோன்ற வொப்பு வேறிரண்டு சாதிக்கண் யாங்கண்டதில்லை. எ - று.

முழுதுமொத்தல் தேற்றேகாரத்தாற்பெற்றும். அவரென்றது அவர்மாட்டுளதாய வொப்புமையை. மக்கட்சாதிக்கும் கயச்சாதிக்கும் வடிவொத்தலிற் குணங்களது உண்மையின்மைகளானல்லது வேற்றுமையறியப்படாதென்பதாம். இதனாற் கயவரது குற்றமிகுதி கூறப்பட்டது. (க)

௲எஉ. நன்றறி வாரிற் கயவர் திருவுடையர்
நெஞ்சத் தவல மிலர். உ.

இ - ள். நன்று அறிவாரிற் கயவர் திரு உடையர் - தமக்குறுதியாவனவறிவாரின் அவையறியாத கீழ்மக்கள் நன்மையுடையவர்;—நெஞ்சத்து அவலம்இலர்-அவர்போல அவைகாரணமாகத் தந்நெஞ்சத்தின்கட் கவலையிலராகலான். எ - று.

நன்றென்பது சாதியொருமை. உறுதிகளாவன இம்மைமறுமைவீட்டுக்குரிய வாய புகழறஞானங்கள். இவற்றையறிவார் இவை செய்யாநின்றேம் மிக்கசெய்யப்பெறுகின்றிலேமென்றும், செய்கின்றவினைதமக்கு இடையூறுவருங்கொலென்றும், இவற்றின் மறுதலையாய பழிபாவமறியாமையென்பனவற்றால் யாதுவிளையுமோவென்றும், இவ்வாற்றாற் கவலையெய்துவர்; கயவர் அப்புகழ்முதலியவொழிந்தும் பழிமுதலிய செய்யாநின்றும் யாதுகவலையுடையரல்லராகலாற் திருவுடையரெனக் குறிப்பு

மிகழ்ந்தவாறு. இதனாற் பழிமுதலியவற்றிற்கஞ்சாரென்பது கூறப்பட்டது. (௨.)

௧0௭௩. தேவ ரனையர் கயவ ரவருந்தா
மேவன செய்தொழுக லான். ௩.

இ - ள். தேவர் அனையர் கயவர் - தேவருங்கயவரும் ஒருதன்மையர்;—அவரும் தாம் மேவன செய்து ஒழுகலான் - அஃதியாதனானெனின், தேவரைப்போலத் தம்மை வியப்பாரின்றிக் கயவரும் தாம் விரும்புவனவற்றைச் செய்தொழுகலான். எ - று.

உயர்ச்சியும் இழிவுமாகிய தம்காரணவேறுபாடு குறிப்பாற்றோன்றநின்றமையின், இது புகழ்வார்போன்று பழித்தவாறாயிற்று. இதனால் விலக்கற்பாடின்றி வேண்டுவ செய்வரென்பது கூறப்பட்டது. (௩.)

௧0௭௪. அகப்பட்டி யாவாரைக் காணி னவரின்
மிகப்பட்டுச் செம்மாக்குங் கீழ். ௪.

இ - ள். கீழ் - கீழ்மகன்,—அகப்பட்டி ஆவாரைக் காணின் - தன்னிற் சுருங்கிய பட்டியாயொழுகுவாரைக் கண்டானாயின்,—அவரின் மிகப்பட்டுச் செம்மாக்கும் - அவ்வொழுக்கத்தின்கண் அவரிற் றான்மேம்பட்டு அதனாற்றன்னைமதித்துப்பட்டி இறுமாக்கும். எ - று.

[illegible]

அகப்பட்டி அகமாமேயபட்டி. பட்டிபோன்று வேண்டியவாறேயொழுகலின், பட்டியென்றார்; "சோதக்கசெய்புஞ் சிறுபட்டிக" என்றார் பிறரும். இதனால் அவர் மேம்பாடு கூறப்பட்டது. (௪)

௧0௭௫. அச்சமே கீழ்கள தாசார மெச்ச
மவாவுண்டே லுண்டாஞ் சிறிது. ரு.

இ - ள். கீழ்களது ஆசாரம் அச்சமே - கயவர்தாம் ஆசாரம் கண்டதுண்டாயின் அதற்குக் காரணம் அரசனான் ஏதம் வருமென்றஞ்சுமச்சமே;—எச்சம் அவா உண் டேல் சிறிது உண்டாம் - அஃதொழிந்தால், தம்மால் அவாவப்படும் பொருள் அதனானுண்டாமாயிற் சிறிதுண்டாம். எ - று.

ஆசாரத்தின் காரணத்தை ஆசாரமென்றும், அவாவப்படுவதனை அவாவென்றும் கூறினார். எச்சத்தின்கண்ணென்னுமேழாவது இறுதிக்கட்டொக்கது. பெரும்பான்மை அச்சம், சிறுபான்மை பொருட்பேறு இவ்விரண்டானுமன்றி இயல்பாகவுண் டாகாதென்பதாம். வேண்டியசெய்தலே இயல்பு, ஆசாரஞ்செய்தல் இயல்பன்றென் பது இதனாற் கூறப்பட்டது.

(௫)

௧௦௭௬. அறைபறை யன்னர் கயவர்தாங் கேட்ட
மறைபிறர்க் குய்த்துரைக்க லான். ௬.

இ - ள். தாம் கேட்ட மறை உய்த்துப் பிறர்க்கு உரைக்கலான் - தாங்கேட்ட மறையினை இடர்தோறுந் தாங்கிக்கொண்டு சென்று பிறர்க்குச் சொல்லுதலான்,— கயவர் அறை பறை அன்னர் - கயவர் அறையப்படும் பறையினையொப்பர். எ - று.

மறை வெளிப்படிற் குற்றம்விளையுமென்று பிறரைமறைத்து ஒருவன்சொல்லிய சொல். பிறர் அம்மறைக்குரியார். உய்த்தென்றார், அவர்க்கது பெரும்பாரமாதனோக்கி. பறை ஒருவன்கையாற் றன்னையறிவித்ததொன்றனை இடர்தோறுங்கொண்டு சென்று யாவரையுமறிவிக்குமாகலான, இது தொழிலுவமம். இதனால் வின்மை கூறப்பட்டது.

அவாது செறி

(௬)

௯௪௯. உடுப்பதூஉ முண்பதூஉங் காணிற் பிறர்மேல்
வடுக்காண வற்றாகும் கீழ். ௯.

இ - ள். உடுப்பதூஉம் உண்பதூஉம் கீழ் காணின் - பிறர்செல்வத்தாற் பட்டுக் துகிலுடுத்தலையும் பாலோடடிசிலுண்டலையும் கீழாயினன் காணுமாயின்,—பிறர்மேல் வடுக் காண வற்றாகும் - அவற்றைப் பொறாது அவர்மாட்டு வசையில்லையாகவும் உண்டாக்க வல்லனாம். எ - று.

டல்

உடுப்பது உண்பதென்பன ஈண்டவ்வத்தொழில்மேனின்றன; அவற்றாற் பூண்கைத்தன்முதலிய பிறதொழில்களுங்கொள்ளப்படும். அவற்றைக் கண்டறியானே பொறாமையெய்தலிற் காணினென்றும், கேட்டார் இது உண்மையென்றிலையைப் படைத்தல் அரிதாகலின் வற்றாகுமென்றுங்கூறினர். இதனாற் பிறர்செல்வம்பொறாமை கூறப்பட்டது.
(௯)

௯௫௦. எற்றிற் குரியர் கயவரொன் றுற்றக்கால்
விற்றற் குரியர் விரைந்து. ௯௦.

இ - ள். கயவர் ஒன்று உற்றக்கால் விரைந்து விற்றற்கு உரியர் - கயவர் தம்மை யாதானுமொரு துன்பமுற்றக்கால் அதுவே பற்றுக்கோடாக விரைந்து தம்மைப் பிறர்க்கு விற்றற்குரியர்;—எற்றிற்கு உரியர் - அதுவன்றி வேறெத்தொழிற்குரி யர்! எ - று.

உணவின்மையாகப் பிறிதாக ஒன்று வந்துற்றதனையாளென்பது தோன்ற ஒன்

றுற்றக்காலென்றும், கொள்வின்றார் தங்கயமைபறிந்து வேண்டாவென்றற்கு முன்னே விற்றலிற்றலின் விரைந்தென்றுங்கூறினர். ஒருதொழிற்கு முரியரல்லரென்பது குறிப்பெச்சம். இதனாற்றும் பிறர்க்கடிமையாய் நிற்பரென்பது கூறப்பட்டது.
(௯௦)

கயமை முற்றிற்று.
ஒழிபியல் முற்றிற்று.
பொருட்பால் முற்றிற்று.



# காமத்துப்பால்.

## களவியல்.

இனி அப்பொருளினைக் காரணமாகவுடைத்தாய் இம்மையே பயப்பதாய வின்பங்கூறுவானெடுத்துக்கொண்டார். ஈண்டின்பமென்றது ஒருகாலத்தொருபொருளான் ஐம்புலனுநுகர்தற்சிறப்புடைத்தாய காமவின்பத்தினை. இச்சிறப்புப்பற்றி வடநூலுட் போசராசனுஞ் சுவைபலவென்று கூறுவார் கூறுக யாங்கூறுவதின்பச் சுவை யொன்றனையுமேயென இதனையே மிகுத்துக்கூறினான். இது புணர்ச்சி பிரிவெனவிருவகைப்படும். ஏனை இருத்தல், இரங்கல், ஊடலென்பனவோவெனின், இவர் பொருட்பாகுபாட்டினை அறம்பொருளின்பமென வடநூல்வழக்குப்பற்றியோதுதலான், அவ்வாறேயவற்றைப் பிரிவின்கணடக்கினாரென்க. இனி அவைதம்மையே தமிழ் நூல்களோடும் பொருந்தப் புணர்ச்சியைக் களவென்றும் பிரிவைக் கற்பென் றும் பெரும்பான்மைபற்றி வகுத்து, அவற்றைச் சுவைமிகுதிபயப்ப உலகநடையோடு ஒப்பு மொழிவாரமையு முடையவாக்கிக் கூறுகின்றார். அக் கைகோளிரண்டனுள்ளும் களவாவது பிணிமூப்பிறப்புக்களின்றி என்றுமொன்று மொருதன்மையராய் உருவுந் திருவும் பருவமுங் குலனுங்குணனு

ஓ அசை. ஆய்மயில் படைத்தோன் விசேடமாகவாய்ந்து படைத்த மயில்; மயிற் சாதியுட்டெரிந்தெடுத்த மயிலென்றுமாம். கனங்குழை ஆகுபெயர். கனங்குழை யென்று பாடமோதிப் பலவாய்த்திரண்ட குழையென்றுரைப்பாருமுளர். எழுதலாகா உருவும் தன்வருத்தமும்பற்றி அணங்குகொலென்றும், சாயலும் பொழில்வயினிற் றலும்பற்றி ஆய்மயில்கொலென்றும், தன்னெஞ்சு சென்றமையும் அவளெதிர்நோக்கியவாறும்பற்றி மாதர்கொலென்றுங் கூறினான். (௧)

௧௦௮௨. நோக்கினா ணோக்கெதிர் நோக்குத லக்கணங்கு
தாக்கணங்கு தானைக்கொண் டன்ன துடைத்து. ௨.

மானுடமாதராதறெளிந்த தலைமகன்
அவணோக்கினானாயவருத்தங்கூறியது.

இ - ள். நோக்கினாள் நோக்கெதிர் நோக்குதல்- இப்பெற்றித்தாய வனப்பினையுடையாள் என்னோக்கிற்கெதிர்நோக்குதல்—தாக்கு அணங்கு தானைக்கொண்டன்னது உடைத்து - தானேதாக்கிவருத்துவதோரணங்கு தாக்குதற்குத் தானையையுங் கொண்டுவந்தாற்போலுந் தன்மையையுடைத்து. எ - று.

மேலும் அணங்குகொலாய்மயில்கொலென்றமையான், இகரச்சுட்டு வருவிக்கப் பட்டது. எதிர்நோக்குதலென்றமையின், அதுகுறிப்புநோக்காயிற்று. வனப்பால் வருத்துதன்மேலுங் குறிப்புநோக்கால் வருத்துதல் கூறியவாறு. நோக்கினாளென் பதற்கு என்னானோக்கப்பட்டாளென்றுரைப்பாருமுளர்.
(௨)

௧௦௮௩. பண்டறியேன் கூற்றென் பதனை யினியறிந்தேன்
பெண்டகையாற் பேரமர்க் கட்டு. ௩.

## இதுவுமது.

இ - ள். கூற்று என்பதனைப் பண்டு அறியேன் - கூற்றென்று நூலோர்சொல் லுவதனைப் பண்டு கேட்டறிவதல்லது கண்டறியேன்,—இனி அறிந்தேன் - இப்பொழுது கண்டறிந்தேன்,—பெண்டகையால் பேர் அமர்க் கட்டு - அது பெண்டகை யுடனே பெரியவாய் அமர்த்த கண்களையுடைத்து. எ - று.

பெண்டகை நாணம், மடம், அச்சம், பயிர்ப்பென்னுங் குணங்கள். அவை அவ் வக்குறிகளாலறியப்பட்டன. அமர்த்தல் அமர்செய்தல், பெயரடியாயவினை. பெண் டகையால் இன்பம்பயத்தலுமுண்டேனும் துன்பம்பயத்தன்மிகுதிபற்றிக் கூற்றாக்கிக் கூறினான். (௩.)

௧௦௮௪. கண்டாருயி ருண்ணுந் தோற்றத்தாற் பெண்டகைப்
பேதைக் கமர்த்தன கண். ௪.

## இதுவுமது.

இ - ள். பெண்டகைப் பேதைக்குக் கண் - பெண்டகையையுடைய இப்பேதைக்கு உளவாய கண்கள்—கண்டார் உயிர் உண்ணும் தோற்றத்தான் அமர்த்தன - தம்மைக்கண்டாருயிருண்ணுந் தோற்றத்துடனேகூடி அமர்த்திருந்தன. எ - று.

---

* சொல்லுருபுபொருளதனை குறிப்பென் றோரா மறந்து, அன்மொழித்தொகையெனச் சொல்வர் இலக்கணவிளக்கக்குருவிபோர். குறிப்புக்கும் அன்மொழித்தொகைக்கும் வேற்றுமை தொல்காப்பியச் சூத்திரவிருத்தியிற் காண்க.

## ௧௦௯ ம் அதி.—தகையணங்குறுத்தல்.

கக்ரு

அமர்த்தல் மாறுபடுதல்,—குணங்கட்கும் பேதைமைக்குமேலாற கொடியவா ...றெவென்பதாம்.

(ச)

௧௦அ௫. கூற்றமோ கண்ணோ பிணையோ மடவர
லோக்கமிம் மூன்று முடைத்து. ௫.

இதுவுமது.

இ-ள். கூற்றமோ - என்னை வருத்துதலுடைமையாற் கூற்றமோ,—கண்ணோ - ...மேலோடுதலுடைமையாற் கண்ணோ,—பிணையோ - இயல்பாக வெருவுதலுடை... ...யாற் பிணையோ, அறிகின்றிலேன்;—மடவரல் நோக்கம் இம்மூன்றும் உடைத்து - ...மடவரல் கண்களினோக்கம் இம்மூன்றன் றன்மையையு முடைத்தாயிராநின் ...று. எ-று.

இன்பமுந் துன்பமும் ஒருங்குசெய்யாநின்றதென்பதாம், தொழில்பற்றிவந்த ...மிலுபவமம்.

(௬)

௧௦அ௬. கொடும்புருவங் கோடா மறைப்பி னடுங்கஞர்
செய்பல மன்னிவள் கண். ௬.

இதுவுமது.

இ - ள். கொடும் புருவம் கோடா மறைப்பின் - பிரியாநட்பாய கொடும்புருவங் கடாஞ் செப்பமுடையவாய் விலக்கினவாயின்,—இவள் கண் நடுங்கு அஞர் செய் யல - அவற்றைக்கடந்து இவள் கண்கள் எனக்கு நடுங்குந்துயரைச் செய்ய மாட்டா. எ-று.

நட்டாரைக்கழறுவார்க்குத் தாஞ்செம்மையுடையராதல் வேண்டலிற் கோடா வென்றும், செய்கின்ற அவற்றிற்கும் உறுகின்றதனக்கும் இடைநின்று விலக்குங்கா லுஞ் சிறிதிடைபெறின் அதுவழியாக வந்து அஞர்செய்யுமாகலின் மறைப்பினென் றுங் கூறினான். நடுங்கஞர் நடுங்கற்கேதுவாயவஞர். தாயியல்பாகக்

போ கா மெதவுடை மையான் அவற்றை
மிருநக்கண்மேற்சென்றிடிக்கமாட்டாவாயினவென்பதுபட நின்
றமையின், மன் ஒழியிசை க் கண் வந்தது .
(ௌ)

௧௦அ௭. கடாஅக் களிற்றின்மேற் கட்படாம் மாதர்
படாஅ முலைமேற் றுகில். ௭.

அவண்முலைகளினாய வருத்தங்கூறியது.

இ - ள். மாதர் படா முலைமேற்றுகில் - இம்மாதர்
படாமுலைகளின்மேலிட்ட துகில்,—கடாக் களிற்றின்மேற் கட்படாம் -
அவை கொல்லாமற் காத்தலின், கொல் வதாய மதக்களிற்றின்மேலிட்ட
முகபடாத்தினையொக்கும். எ - று.

கண்ணை மறைத்தல்பற்றிக் கட்படாமென்றான்.
துகிலான்மறைத்தல் காணுடை மகளிர்க்கியல்பாகலின், அத்துகிலூடே
அவற்றின் வெம்மையும் பெருமையுங்கண்டு இத்துணையாற்றலுடையன
இனியெஞ்ஞான்றுஞ் சாய்விலவெனக் கருதிப் படாமுலை யென்றான்.
உவமை சிறிதுமறையாவழி உவைகொல்லுமென்பது தோன்ற நின்றது.

௧௦அஅ. ஒண்ணுதற் கோஒ வுடைந்ததே ஞாட்பினு
ணண்ணாரு முட்குமென் பீடு. அ.

௪௪

௲௧௨ ௧௧௦ ம் அதி.—குறிப்பறிதல்.

நுதலினாய வருத்தங்கூறியது.

இ - ள். ஞாட்பினுள் நண்ணாரும் உட்கும் என் பீடு - போர்க்களத்துவந்து
சேராதபகைவரும் சேர்ந்தார்வாய்க்கேட்டஞ்சுதற்கேதுவாய என்வலி—ஒண்ணுதற்கு
உடைந்ததே - இம்மாதரதொள்ளிய நுதலொன்றற்குமே அழிந்துவிட்டது. எ - று.

மாதரென்பது அதிகாரத்தான் வந்தது. ஞாட்பினுளென்றதனாற்

பகைவராதல் பெற்றும். பீடென்ற பொதுமையான் மனவலியுங் காயவலியுங்கொள்க. ஓவென்னும் வியப்பின்கட்குறிப்பு அவ்வலிகளது பெருமையும் நுதலது சிறுமையுந்தோன்ற நின்றது. கழிந்ததற்கிரங்கலிற் றற்புகழ்தலன்றாயிற்று. (அ)

க0அசு. பிணையேர் மடநோக்கு நாணு முடையாட்
கணியெவனோ வேதில தந்து. கூ,

அணிநலத்தானுய வருத்தங்கூறியது.

இ - ள். பிணையேர் மடநோக்கும் நாணும் உடையாட்கு - புறத்து மான் பிணை யொத்த மடநோக்கினையும் அகத்து நாணினையுமுடையளாயவிவட்கு—ஏதில தந்து அணி எவன் - ஒற்றுமையுடைய இவ்வணிகளேயமைந்திருக்க வேற்றுமையுடையவணிகளைப்படைத்தணிதல் என்ன பயனுடைத்து! எ - று.

மடநோக்கு வெருவுதலுடையநோக்கு. இவட்குப் பாரமாதலும் எனக்கணங்காதலுங் கருதாமையின், அணிந்தார் அறிவிலரென்பதாம். (க)

க0கூ0. உண்டார் கணல்ல தடுநறாக் காமம்போற்
கண்டார் மகிழ்செய்த லின்று. க0.

தலைமகள் குறிப்பறிதலுற்றான் சொல்லியது.

இ - ள். அடுநறா - அடப்படு நறா,—உண்டார்கண் அல்லது - தன்னை யுண்டார் மாட்டு மகிழ்ச்சியைச் செய்வதல்லது,—காமம்போல் கண்டார் மகிழ்செய்தல்இன்று- காமம்போலக் கண்டார்மாட்டு மகிழ்ச்சியைச்செய்தலுடைத்தன்று. எ - று.

அடுநறா வெளிப்படை. காமமென்றது ஈண்டு அதநுகர்தற்கிடனாகியாளை. கண்டார்கணென்னு மேழாவது இறுதிக்கட்டொக்கது. மகிழ்செய்தற்கட் காமம் நறவினுஞ்சிறந்ததே யெனினும் இவள்குறிப்பாராய்ந் தறியாமையின் யானதுபெற்றிலேனெனக் குறிப்பெச்சம் வருவித்துரைக்க, "அரிமயிர்த்திரண்முன்கை*" என்னும் புறப்பாட்டிற் குறிப்புப்போல.

---

## ௧௧௦ ம் அதி.—குறிப்பறிதல்.

அஃதாவது தலைமகன் தலைமகள் குறிப்பினையறிதலும், தோழிகுறிப்பினையறிதலும், அவடான் அவ்விருவர்குறிப்பினையுமறிதலுமாம். தகையணங்குற்ற தலைமகன் தலைமகளைக்கூடுங்கால் இதுவேண்டுமாகலின், தகையணங்குறுத்தலின்பின் வைக்கப்பட்டது.

௲௯௧. இருநோக் கிவளுண்க ணுள்ள தொருநோக்கு
நோய்நோக்கொன் றந்நோய் மருந்து. ௧.

---

* புறநானூறு, ௧௧.

## ௧௧௦ ம் அதி.—குறிப்பறிதல். ௩௧௧.

தலைமகன்றலைமகளுளப்பாட்டுக்குறிப்பினை

அவனோக்கினானறிந்தது.

இ-ள். இவள் உண்கண் உள்ளது இருநோக்கு - இவளுடைய வுண்கணகத்ததாய நோக்கு இதுபொழுது என்மேலிரண்டு நோக்காயிற்று;—ஒரு நோக்கு நோய்நோக்கு ஒன்று அந்நோய் மருந்து - அவற்றுள் ஒருநோக்கு என்கணோய்செய்யுநோக்கு, ஏனையது அந்நோய்க்கு மருந்தாய நோக்கு. எ - று.

உண்கண் மையுண்டகண். நோய்செய்யுநோக்கு அவண்மனத்துள்ள காமக்குறிப்பினை வெளிப்படுக்கின்ற நோக்கு. மருந்தாய நோக்கு தன்கணிகழ்கின்ற அற்புநோக்கு. நோய்செய்யுநோக்கினைப் பொதுநோக்கென்பாருமுளர்; அது நோய்செய்கைக்கினையாவதல்லது அகமாகாமையறிக. இவ்வருத்தத் தீரும் வாயிலுமுண்டாயிற்றென்பதாம். (௧)

௲௯௨. கண்களவு கொள்ளுஞ் சிறுநோக்கங் காமத்திற்
செம்பாக மன்று பெரிது. ௨.

இதுவுமது.

இ - ள். கண் களவுகொள்ளும் சிறுநோக்கம் - இவள்கண்கள் யான்காணாமல் என்மேனோக்குகின்ற அருகியநோக்கம் —காமத்தில் செம்பாகம் அன்று பெரிது - மெய்யுறுபுணர்ச்சியின் ஒத்த பாதியளவன்று, அதனினுமிகும். எ - று.

தானோக்கியவழி நாணியிறைஞ்சியும் நோக்காவழி உற்றுநோக்கியும் வருதலாற் களவுகொள்ளுமென்றும், அஃதனதாங்காலஞ் சிறிதாகலிற் சிறுநோக்கமென்றும், அஃது உளப்பாடுள்வழி நிகழ்வதாகலின் இனிப்புணர்தல் ஒருதலையென்பான் செம்பாகமன்று பெரிதென்றுங் கூறினான். (உ)

கஉகூங. நோக்கினா ணோக்கி யிறைஞ்சினா ளஃதவள்
யாப்பினு ளட்டிய நீர். ங.

நோக்கினுணாணினுமறிந்தது.

இ - ள். நோக்கினாள் - யானோக்காவளவிற் றானென்னையன்போடு நோக்கினாள்,—நோக்கி இறைஞ்சினாள் - நோக்கி ஒன்றனையுட்கொண்டு நாணி இறைஞ்சினாள்,—அஃது யாப்பினுள் அவள் அட்டிய நீர் - அக்குறிப்பு இருவேமிடையுந் தோன்றிய அற்புப்பயிர்வளர அதன்கணவள் வார்த்த நீராயிற்று. எ - று.

அஃதென்னுஞ்சுட்டுப்பெயர் அச்செய்கைக்கேதுவாய யாப்பினுயதனை யாப்பென்றார். ஏகதேசவுருவகம்.

குறிப்பின்மேனின்றது.

(ஙு)

கஉகூச. யானோக்குங் காலை நிலனோக்கு நோக்காக்காற்
றானோக்கி மெல்ல நகும். ச.

நாணினுமகிழ்ச்சியினுமறிந்தது.

இ - ள். யான் நோக்குங் காலை நிலன் நோக்கும் - யான்றன்னை நோக்குங்காற் றானெதிர்நோக்காது இறைஞ்சி நிலத்தை நோக்காநிற்கும்,—நோக்காக்கால் தான் நோக்கி மெல்ல நகும் - அஃதறிந்தியானோக்காக்காற் றனென்னைநோக்கித் தன்னுள்ளே மகிழாநிற்கும் எ - று.

௧௧௪ ௧௧௦ ம் அதி.—குறிப்பறிதல்.

மெல்ல வெளிப்படாமல். மகிழ்ச்சியாற் புணர்தற்குறிப் பினிது விளக்கும். மெல்லநகுமென்பதற்கு முறுவலிக்குமென் றுரைப்பாருமுளர். (எ)

௧௦௯௫. குறிக்கொண்டு நோக்காமை யல்லா லொருகண் சிறக்கணித்தாள் போல நகும். ரு.

இதுவுமது.

இ - ள். குறிக்கொண்டு நோக்காமை அல்லால் - நேரே குறிக்கொண்டு நோக்கத்துணையல்லது—ஒருகண் சிறக்கணித்தாள் போல நகும் - ஒருகண்ணைச் சிறங்கணித்தாள்போல என்னை நோக்கிப் பின்றன்னுள்ளே மகிழாநிற்கும். எ - று.

சிறக்கணித்தாளென்பது செய்யுள் விகாரம். சிறங்கணித்தல் சுருங்குதல். அது

தானும் வெளிப்பட நிகழாமையிற் போலவென்றான். நோக்கியென்பது சொல்லெச்சம். இனியிலனை யெய்துதல் ஒருதலையென்பது குறிப்பெச்சம். (௧)

௧௦௯௬. உறாஅ தவர்போற் சொலினுஞ் செறாஅர்சொ லொல்லை யுணரப் படும். ௬.

தோழிசே ட்பதேதவழி அவள்குறிப்பறிந்த தலைமகன் சொல்லியது.

தன்னுள்ளே

இ - ள். உறுதவர்போல் சொலினும் - புறத்து சொதுமலர்போலக் கடுஞ்சொற்
சொன்னாராயினும்,—செறுர் சொல் ஒல்லே உணரப்படும் - அகத்துச்
செறுதலிலாதார்
சொற் பிற்பயத்தல் குறையுற்றாராற் கடிதினறியப்படும். எ - று.

கடுஞ்சொலென்பது இவ்விடங்காவன்மிகுதியுடைத்து
வரற்பாலிரல்லீரென்றன் முதலாயின. செறுரெனவே, அருளுடைமை
பெறப்பட்டது. தன்குறை முடிக்கக்கரு தியே சேட்பேச்சின்றமை
குறிப்பானறிந்து, உலகியன்மேலிட்டுக் கூறியவாறு. இது
வருகின்றபாட்டிற்கு மொக்கும்.
(க)

அபகை, செறுஅச் சிறுசொல்லுஞ் செற்றார்போ னோக்கு
முறுஅர்போன் றற்றார் குறிப்பு. எ.

இதுவுமது.

இ - ள். செறுச் சிறுசொல்லும் - பின்னினிதாய்
முன்ரின்னாதாயசொல்லும் — செற்றார்போல் நோக்கும் - அகத்துச்
செறுதிருந்தே புறத்துச் செற்றார்போன்றவெகு
ளிநோக்கும்—உறார்போன்று உற்றார் குறிப்பு - சொதுமலர் போன்று
ஒகு குறிப்புப்பற்றி வருவன. எ - று.
நட்பாயினர்க்கு
குறிப்பு ஆகுபெயர். இவை உள்ளேயொருபயன்குறித்துச்
செய்கின்றன இயல்
பல்லவாகலான், இவற்றிற்கஞ்சவேண்டாவென்பதாம்.
(எ)

௧0௯௮. அசையியற் குண்டாண்டோ ரேஎர்யா னோக்கப்
பசையினள் பைய நகும். அ.

தன்னை நோக்கி மகிழ்ந்த தலைமகளைக்கண்டு தலைமகன் கூறியது

இ - ள். யான் நோக்கப் பசையினள் பைய நகும் - என்னைப்பற்றுகின்ற நோற் றாற்றுவியாளிடத்துநோக்கியவழி அஃதறிந்து நெகிழ்ந்து உள்ளே மெல்ல நகாநின்

## ௧௧௧ம் அதி.—புணர்ச்சிமகிழ்தல்.

உக௫

ஞர்,—அசை இயற்கு உண்டு ஓரேஎர் உண்டு - அதனால் நுடங்கிய வியல்பினையுடை யாட்கு அச்சாயலின்கண்ணே தோன்றுகின்றதோர் நன்மைக்குறிப்புண்டு. எ - று.

ஏஎர் ஆகுபெயர். அக்குறிப்பு இனிப்பழுதாகாதென்பதாம்.

(அ)

௧0௯௯. ஏதிலார் போலப் பொதுநோக்கு நோக்குதல்
காதலார் கண்ணே யுள. கூ.

தோழி மதியுடம்படுவாள் தன்னுள்ளேசொல்லியது.

இ - ள். ஏதிலார் போலப் பொதுநோக்கு நோக்குதல் - முன்னறியாதார்போல ஒருவரையொருவர் பொதுநோக்கத்தானோக்குதல்—காதலார் கண்ணே உள - இக் காதலையுடையார்கண்ணே யுளவாகாநின்றன. எ - று.

பொதுநோக்கு யாவர்மாட்டும் ஒருதன்மைத்தாய நோக்கு. நோக்குதற்றொழில், ஒன்றேயாயினும் இருவர்கண்ணு நிகழ்தலானும், ஒருவர்கட்டானுங் குறிப்பு வேறு பாட்டாற்பலவாமாகலானும், உளவெனப்பன்மையாற் கூறப்பட்டது. இருவரும் "மது மறைந்துண்டோர் மகிழ்ச்சிபோல உள்ளத்துள்ளே மகிழ்" தலின் அதுபற்றிக் காத லாரென்றும், அது புறத்து வெளிப்படாமையின் ஏதிலார்போலவென்றுங் கூறினான்.

௧௧00. கண்ணொடு கண்ணிணை நோக்கொக்கின் வாய்ச்சொற்க

இதுவுமது.

இ - ள். கண்ணொடு கண்ணிணை நோக்கு ஒக்கின் - காமத்திற்குரிய இருவருள் ஒருவர்கண்களோடு ஒருவர்கண்கள் நோக்கால்ஒக்குமாயின்,—வாய்ச்சொற்கள் என்ன பயனும் இல - அவர் வாய்மைதோன்றச் சொல்லுகின்ற வாய்ச்சொற்கள் ஒருபயனுமுடையவல்ல. எ - று.

நோக்கால்ஒத்தல் காதலொக்கினவாதல். வாய்ச்சொற்கள் மனத்தின்கணின்றி வாயளவிற்றோன்றுகின்ற சொற்கள். இருவர்சொல்லுங்கேட்டு உலகியன்மேல்வைத்துக் கூறியவாறு. இருவர்சொல்லுமாவன அவன் புனங்காவன்மேலும் அவள் வேட்டத்தின்மேலுஞ்சொல்லுவன. பயனில்சொற்களாகலின், இவை கொள்ளப் படாவென்பதாம். இவை புணர்தனிமித்தம். (க0)

---

## கககம் அதி.—புணர்ச்சிமகிழ்தல்.

அஃதாவது அவ்வனக்குறிப்பறிந்து புணர்ந்த தலைமகன் அப்புணர்ச்சியினை மகிழ்ந்துகூறல். அதிகாரமுறைமையும் இதனானே விளங்கும்.

கக0க. கண்டுகேட் டுண்டுயிர்த் துற்றறியு மைம்புலனு
மொண்டொடி கண்ணே யுள.† க.

இயற்கைப்புணர்ச்சியிறுதிக்கட்சொல்லியது.

இ - ள். கண்டு கேட்டு உண்டு உயிர்த்து உற்று அறியும் ஐம்புலனும் - கண்ணாற் கண்டும் செவியாற்கேட்டும் நாவாலுண்டும் மூக்கான்மோந்தும் மெய்யாற்றீண்டியும்

---

* " ஏனல் காவ லிவளு மல்லள்" என்றபாட்டு. இறையனாரகப்பொருள், அம் சூத்திரத் துரையிற்காண்க.

† இத்திருக்குறள் சேரமான் பெருமானாயனார் திருக்கைலாய ஞானவுலாவிலெடுத்தாளப் பட்டது.

அனுபவிக்கப்படுமைம்புலனும்—ஒண்டொடி கண்ணே உள -

இவ்வொள்ளிய தொடி

யையுடையாள்கண்ணே யுளவாயின. எ - று.

உம்மை முற்றும்மை. தேற்றேகாரம் வேறிடத்தின்மை விளக்கிநின்றது. வேறு வேறு காலங்களில் வேறுவேறு பொருள்களானனுபவிக்கப்படுவன ஒருகாலத்து

இவள்கண்ணேயனுபவிக்கப்பட்டனவென்பதாம். வடநூலார் இடக்கர்ப்பொருளவாகச் சொல்லிய புணர்ச்சித்தொழில்களும் ஈண்டடக்கிக் கூறப்பட்டன. (௧)

௧௧0௨. பிணிக்கு மருந்து பிறம னணியிழை
தன்னோய்க்குத் தானே மருந்து. ௨.

இடந்தலைப்பாட்டின்கட்சொல்லியது.

இ - ள். பிணிக்கு மருந்து பிற - வாதமுதலிய பிணிகட்கு மருந்தாவன அவற்றிற்கு நிதானமாயினவன்றி மாறுபவியல்பினையுடையனவாம்;—அணியிழை தன் நோய்க்கு மருந்து தானே - அவ்வாறன்றி இவ்வணியிழையினையுடையாள் தன்னின் பிணிக்குமருந்தும் தானேயாயினள். எ - று.

இயற்கைப்புணர்ச்சியை நினைந்து முன் வருந்தினுளாகலிற் றன்னோயென்றும், அவ்வருத்தம் தமியாளையிடத்தெதிர்ப்பட்டுத் தீர்ந்தானாகலிற் றானேமருந்தென்றுங் கூறினன். இப்பிணியும் எளியவாயவற்றுற்றீரப்பெற்றிலமென்பதுபட நின்றமையின், மன் ஒழியிசைக்கண் வந்தது.
(௨)

௧௧0௩. தாம்வீழ்வார் மென்றோட் டுயிலி னினிதுகொ
றாமரைக் கண்ணா னுலகு. ௩.

நிரதிசயவின்பத்திற்குரியசீ இச்சிற்றின்பத்திற்கின்னையாதல்
தகாதென்ற பாங்கற்குச் சொல்லியது.

இ - ள். தாம் வீழ்வார் மென்றோட்டுயிலின் இனிதுகொல் - ஐம்புலன்களையு நுகர்வார்க்குத் தாம்விரும்புமகளிர் மெல்லிய தோளின்கட்டுயிலுந் துயில்போலவருந் தாமவெய்தலாமோ—தாமரைக்கண்ணான் உலகு - அவற்றைத் துறந்த தவயோகிக ளெய்துஞ் செங்கண்மாலுலகம். எ - று.

ஐம்புலன்களைநுகர்வாரென்னும்பெயர் அவாய்நிலையான் வந்தது. இப்பெற்றித் தாய துயிலைவிட்டுத் தவயோகங்களான் வருந்தவேண்டுதலின், எம்மனோர்க்காக

மதன்றுங் கருத்தால் இனிதுகொலென்றான். இத்திரனுலகென்றுரைப்பாருமுளர் தாமரைக்கண்ணானென்பது அவனுக்குப் பெயரன்மையின்,அஃதுரையன்மையறிக.(

கக0ச. நீங்கிற் றெறூஉங் குறுகுங்காற் றண்ணென்னுந்
தீயாண்டுப் பெற்றா ளிவள். ச.

பாங்கற்கூட்டத்திறுதிக்கட்சொல்லியது.

இ - ள். நீங்கின் தெறூஉம் குறுகுங்கால் தண்ணென்னும் தீ - தன்னையகன் றுழிச் சுடாநிற்கும், அணுகுழிக் குளிராநிற்கும் இப்பெற்றித்தாய தீயை—இவள் யா ண்டுப் பெற்றாள் - எங்கட்டுருதற்கு இவளெவ்வுலகத்துப்பெற்றாள்! எ - று.]

## ககக ம் அதி.—புணர்ச்சிமகிழ்தல்.

க.கள்

கூடாமுன்றுன்புறுதலின் நீங்கிற்றெனவுமென்றும், கூடியபின்னின்புறுதலிற் குறைகுங்காற்றண்ணென்னுமென்றும், இப்பெற்றியதோர் தீ உலகத்தில்லையாமாகலின் யாண்டுப்பெற்றுளென்றுங் கூறினான். தன்காமத்தீத்தன்னையே அவடர்தானாகக் கூறினான், அவளான் அது வெளிப்படுதலின். (ச)

கக0ரு. வேட்ட பொழுதி னவையவை போலுமே
தோட்டார் கதுப்பினா டோள். ரு.

## தோழியிற்கூட்டத்திறுதிக்கட்சொல்லியது.

இ - ள். வேட்டபொழுதின் அவையவை போலுமே - மிகவினியவாயபொருள் களைப் பெறுது அவற்றின்மேல் விருப்பங்கூர்ந்தபொழுதின்கண் அவையவைதாமே வந் தின்பஞ்செய்யுமாறுபோல இன்பஞ் செய்யும்,—தோட்டார் கதுப்பினாள் தோள்-எப்பொழுதும் பெற்றுப்புணரினும், பூவினையணிந்த தழைந்த கூந்தலினையுடையாடோள்கள். எ - று.

தோடு ஆகுபெயர். இயற்கைப்புணர்ச்சி, இடந்தலைப்பாடு, பாங்கற்கூட்டத்துக் கண் முன்னரே நிகழ்ந்திருக்கப் பின்னரும் புதியவாய் நெஞ்சம் பிணித்தலின், அவ் வாராமைபற்றி இவ்வாறுகூறினான். தொழிலுவமம். (ரு)

கக0சு. உறுதோ றுயிர்தளிர்ப்பத் தீண்டலாற் பேதைக்
கமிழ்தி னியன்றன தோள். சு.

## இதுவுமது.

இ - ள். உயிர் உறுதோறு தளிர்ப்பத் தீண்டலால் - தன்னைப்பெறுது வாடிய என்னுயிர் பெற்றுறுந்தோறுந் தளிர்க்கும்வகை தீண்டுதலான்,—பேதைக்குத் தோள் அமிழ்தின் இயன்றன - இப்பேதைக்குத் தோள்கள் தீண்டப்படுவதோரமிழ்தினாற் செய்யப்பட்டன. எ - று.

எதுவாகலாற் றீண்டல் அமிழ்திற்குமெய்திற்று. வாடியவுயிரைத்

தளிர்ப்பித்தல் பற்றி, அவையமிழ்தினியன்றனவென்றான். தளிர்த்தல் இன்பத்தாற் றழைத்தல்.(சு)

கக0எ. தம்மி லிருந்து தமதுபாத் துண்டற்றா
லம்மா வரிவை முயக்கு. எ.

இவளை நீவரைந்துகொண்டு உலகோர் தம்மில்லிருந்து தமதுபாத்துண்ணு

மில்லறத்தோடுபடல்வேண்டுமென்ற தோழிக்குச் சொல்லியது.

இ - ள். அம் மா அரிவை முயக்கு - அழகிய மாமைநிறத்தையுடைய அரிவையது முயக்கம்—தம்மில் இருந்து தமது பாத்து உண்டற்று - இன்பம்பயத்தற்கட் டமக்குரிய வில்லின்கணிருந்து உலகோர் தந்தாளான்வந்தபொருளைத்தென்புலத்தார் தெய்வம் விருந்தொக்கல்கட்குப் பகுத்துத் தங்கூற்றை யுண்டாற்போலும். எ - று.

தொழிலுவமம். இல்லறஞ்செய்தாசெய்துந் துறக்கத்தின்பம் பின்பே தருமென வரைவுடன்படான் கூறியவாறாயிற்று.

எனக்கிப்புணர்ச்

(எ)

கக0அ. வீழு மிருவர்க் கினிதே வளியிடை
போழப் படாஅ முயக்கு. அ.

கக அ ககக ம் அதி.—புணர்ச்சிமகிழ்தல்.

ஒத்தவன்புடைய நமக்கு ஒருபொழுதும் விடாத முயக்கமே இனியதென வரைவுகடாயதோழிக்குச் சொல்லியது.

இ - ள். நீசொல்லுமின்றதொக்கும்,—வளி இடை போழப் படா முயக்கு - ஒரு பொழுது நெகிழாமையிற் காற்றுவிடையறுக்கப்படாதமுயக்கம்—வீழும் இருவர்க்கு இனிதே - ஒருவரையொருவர் விழைவாரிருவர்க்குமினிதே. எ - று.

முற்றும்மை விகாரத்தாற்றொக்கது. ஏகாரம் தேற்றத்தின்கண் வந்தது. ஈண்டு இருவரில்லை, இன்மையான் இஃதொவ்வாதென்பது கருத்து. களவிற்புணர்ச்சியை மகிழ்ந்து வரைவுடன்படான் கூறியவாறு. (அ)

கக0௬. ஊட லுணர்தல் புணர்த லிவைகாமங்
கூடியார் பெற்ற பயன். ௯.

கரத்தல்வேண்டாமையின் இடையறவில்லாத கூட்டமே இன்பப் பயனுடைத்தென வரைவுகடாவியாட்குச் சொல்லியது.

இ - ள். ஊடல் உணர்தல் புணர்தல் இவை - புணர்ச்சியினிதாதற்பொருட்டு வேண்டுவதாயவூடலும் அதனை யளவறிந்து நீங்குதலும் அதன்பினிகழ்வதாயவப் புணர்ச்சிதானுமென விவையன்றே—காமம் கூடியார் பெற்ற பயன் - வரைந்து கொண்டு காமத்தை யிடைவிடாதெய்தியவர் பெற்ற பயன்கள். எ - று.

ஊடவர்க்குப் பிரிவென்பதொன்றுளதாதன்மேலும் அதுதான் பரத்தையர்மாட் டாதலும் அதனையறிந்து மகளிருடிநிற்றலும் அவ்வூடலைத் தவறுசெய்தவர்தாமேதர் தவறின்மைகூறி நீக்கலும் பின்னுமவ்விருவரும் ஒத்தவன்பினராய்க் கூடலுமன்றே முன்வரைந்தெய்தினர் பெற்றபயன், அப்பயன் இருதலைப்புள்ளினொருயிராய வுழுவலன்புடையவெமக்கு வேண்டாவென அவ்வரைந்தெய்தலையிகழ்ந்துகூறியவாறு.()

கக௧0. அறிதோ றறியாமை கண்டற்றாற் காமஞ்
செறிதோறுஞ் சேயிழை மாட்டு. ௧0.

புணர்ந்துடன்போகின்றுன் றன்னுள்ளே சொல்லியது.

இ - ள். அறிதோறு அறியாமை கண்டற்று - நூல்களாலும் நுண்ணுணர்வாலும் பொருள்களை யறியவறிய முன்னையறியாமை கண்டாற்போலக் காணப்படாநின் றது—சேயிழைமாட்டுச் செறிதோறும் காமம் - சிவ ந்தவிழையினையுடையாளை இடை விடாது செறியச்செறிய இவண்மாட்டுக் காதல். எ - று.

களவொழுக்கத்திற் பலவிடையீடுகளானெய்தப்பெறு தலாவுற்றுன் இது பொழுது நிரந்தரமாகவெய்தப் பெற்றமையின், செறிதோறுமென்றுன். அறிவிற் கெல்லையின்மையான் மேன்மேலறியவறிய முன்னையறிவு அறியாமையாய்முடியுமாறு போலச் செறிவிற் கெல்லையின்றி மேன்மேற்செறியச்செறிய முன்னைச்செறிவு செறி யாமையாய் முடியாநின்றதெனத் தன்னுராமை கூறியவாறு. இப்புணர்ச்சிமகிழ் தல் தலைமகட்குமுண்டேனும் அவண்மாட்டுக்குறிப்பானிகழ்வதல்லது கூற்றுநிகழா மையறிக. (௧௦)

---

## ௧௧௨ம் அதி.—நலம்புனைந் துரைத்தல்.

அஃதாவது தலைமகன்றலைமகளைநலத்தைப் புனைந்து சொல்லியது. இது, புணர்ச்சிமகிழ்ச்சழி நிகழ்வதாகலின், புணர்ச்சிமகிழ்தலின்பின் வைக்கப்பட்டது.

௧௧௧௧. நன்னீரை வாழி யனிச்சமே நின்னினு
மென்னீரள் யாம்வீழ் பவள். ௧.

இயற்கைப்புணர்ச்சியிறுதிக்கட்சொல்லியது.

இ - ள். அனிச்சமே வாழி நன்னீரை - அனிச்சப்பூவே, வாழ்வாயாக, மென்மையால் நீ எல்லாப்பூவினும் நல்லவியற்கையையுடையை,— யாம் வீழ்பவள் நின்னினும் மென்னீரள் - அங்ஙனமாயினும் எம்மால் விரும்பப்பட்டவள் நின்னினுமெல்லிய வியற்கையையுடையள். எ - று.

அனிச்சம் ஆகுபெயர். வாழியென்பது உடன்பாட்டுக்குறிப்பு. இனி யானே மெல்லியனென்னுந்தருக்கினையொழிவாயாகவென்பதாம். அதுபொழுதுற்றறிந்தானாகலின், ஊற்றினிமையையே பாராட்டினான். இன்னீரளென்று பாடமோதுவாருமுளர். (க)

ககக௨. மலர்காணின் மையாத்தி நெஞ்சே யிவள்கண்
பலர்காணும் பூவொக்கு மென்று. ௨.

இடந்தலைப்பாட்டின்கட்சொல்லியது.

இ - ள். நெஞ்சே - நெஞ்சே,—இவள் கண் பலர்காணும் பூ ஒக்கும் என்று - யானே காணப்பெற்ற இவள் கண்களைப் பலராலுங் காணப்படும் பூக்கள் ஒக்குமென்று கருதி—மலர்காணின் மையாத்தி - தாமரை, குவளை, நெய்தல்முதலிய மலர்களைக் கண்டால் மயங்காநின்றாய், நின்னறிவிருந்தவாறென்! எ - று.

மையாத்தல்ஈண்டு ஒவ்வாதவற்றையொக்குமெனக்கோடல்: இறுமாத்தல், செம்மாத்தலென்பனபோலவொருசொல். இயற்கைப்புணர்ச்சி நீக்கமுதலாகத் தலைமகள் கண்களைக் காணப்பெறாமையின் அவற்றோடொப்புடையவாக்குமலர்களைக் கண்டுழி யெல்லாம் அவற்றின்கட் காதல்செய்துபோந்தான், இதுபொழுது அக்கண்களை முழுதுந் தானேதமியானாயிடத்தெதிர்ப்பட்டனுபவித்தானாகலின் அம்மலர்கள் ஒவ்வாமைகண்டு ஒப்புமைகருதிய நெஞ்சையிகழ்ந்து கூறியவாறு. (௨)

ககக௩. முறிமேனி முத்த முறுவல் வெறிநாற்றம்

நோக்கும். எ - று.

பண்பானேயன்றித் தொழிலானுமொல்லாதென்பான் காணினென்றும், கண்டால் அவளொல்லாமையால் சாலுடைத்தாமென்பது தோன்றக் கவிழ்ந்தென்றும் கூறினன். கட்சிபுலானுமின்மையிற் செம்மாந்து வாளைநோக்கினளென்பதாம். (ச)

கககரு அனிச்சப்பூக் கால்களையாள் பெய்தா ணுசுப்பிற்கு
நல்ல படாஅ பறை. ரு.

## பகற்குறிக்கட்பூவணிகண்டு சொல்லியது.

இ - ள். அனிச்சப்பூக் கால் களையாள் பெய்தாள் - இவள் தன் மென்மைகருதாது அனிச்சப்பூவை முகிழ்களையாது சூடினள்,—நுசுப்பிற்கு நல்ல பறை படா - இனியிவளிடைக்கு நல்ல பறைகளொலியா. எ - று.

அம்முகிழ்ப்பாரம் பொறுமையின் இடை முரியும், முரிந்தால் அதற்குச் செத்தார்க்குரிய செய்தற்பறையே படுவதென்பதாம். மக்கட்குரிய சாக்காடும் பறைபடுதலும் இலக்கணைக்குறிப்பால் நுசுப்பின்மேலேற்றப்பட்டன.* (ரு)

கககசு. மதியு மடந்தை முகனு மறியா
பதியிற் கலங்கிய மீன். சு.

## இரவுக்குறிக்கண் மதிகண்டு சொல்லியது

இ - ள். மீன்-வானத்து மீன்கள்,—மதியும் மடந்தைமுகனும் அறியா-வேறுபாடு பெரிதாகவும் தம்மதியினையும் எம்மடந்தைமுகத்தினையும் இதுமதி இதுமுகமென்றறியமாட்டாது,—பதியின் கலங்கிய-தந்நிலையினின்றுங்கலங்கித் திரியாநின்றன. எ - று.

ஓரிடத்து நில்லாது எப்பொழுதுமியங்குதல்பற்றிப்

பதியிற்கலங்கியவென்றான். வேறுபாடு வருகின்றபாட்டாற்பெறப்படும். இனி இரண்டனையும் பதியிற்கலங்காத மீன்களறியுமல்லது கலங்கின மீன்கள் அறியாவென்றுரைப்பினுமமையும். (௯)

ககஎ. அறுவாய் நிறைந்த அவிர்மதிக்குப் போல
மறுவுண்டோ மாதர் முகத்து. எ.

## இதுவுமது.

இ-ள். அம்மீன்கள் அங்ஙனங்கலங்குதற்குக் காரணம்யாது?—அறுவாய் நிறைந்த அவிர் மதிக்குப்போல - முன்குறைந்தவிடம் வந்துநிரம்பியே விளங்குமதிக்கட் போல—மாதர் முகத்து மறு உண்டோ - இம்மாதர்முகத்து மறுவுண்டோ] எ-று.

---

* இவ்விலக்கணமுடையதாகத் தோன்றியதைப்பற்றி வடநூலார் இலக்கணமூலத் தொனி யென்பர்.

௯

## கக௩ம் அதி—காதற்சிறப்புரைத்தல்.

கஉ௩

இடம் சில. மதிக்கென்பது வேற்றுமைமயக்கம். தேய்தலும் வளர்தலும் மறுவுடைமையுமின்மைபற்றி வேறுபாடறியலாயிருக்க அறிந்திலவென விகழ்ந்து கூறியவாறு.
(௭)

ககஅ. மாதர் முகம்போ லொளிவிட வல்லையேற்
காதலை வாழி மதி. அ.

## இதுவுமது.

இ-ள். மதி வாழி - மதியே, வாழ்வாயாக;—மாதர் முகம்போல் ஒளிவிட வல்லையேல் காதலை - இம்மாதர்முகம்போல யான்மகிழும்வகை ஒளிவிசவல்லையாயின், நீயுமென்காதலையுடையையாதி. எ-று.

மறவுடைமையின் அதுமாட்டாய், மாட்டாமையின் என்னும் காதலிக் கெய்படா வென்பதாம். வாழியென்பது இ ழ்ச்சிக்குறிப்பு. (அ)

கககக. மலரன்ன கண்ணாள் முகமொத்தி யாயிற்
பலர்காணத் தோன்றன் மதி. கூ.

இதுவுமது.

இ - ள். மதி - மதியே,—மலர் அன்ன கண்ணாள் முகம் ஒத்தியாயின் - இம் மலர்போலுங் கண்ணினையுடையாள்முகத்தை நீயொக்கவேண்டினையாயின்,—பலர் காணத் தோன்றல் - இதுபோல யான்காணத் தோன்று, பலர்காணத்தோன்று தொழி. எ - று.

தானே முகத்தினலமுழுதுங்கண்டனுபவித்தானாகலின் ஈண்டும் பலர்காணத் தோன்றலைவிழித்துக்கூறினான். தோன்றின் நினைக்கவ்வொப்புண்டாகாதென்பதாம்.()

ககஉ0. அனிச்சமு மன்னத்தின் றூவியு மாத
ரடிக்கு நெருஞ்சிப் பழம். எ0.

உடன்போக்குரைத்ததோழிக்கு அதனருமைகூறி மறுத்தது.

இ - ள். அனிச்சமும் அன்னத்தின் றூவியும் - உலகத்தாரான் மென்மைக்கெல்லைக் கப்பட்ட அனிச்சப்பூவும் அன்னப்புள்ளின் சிறகுமாகியவிரண்டும்—மாதர் அடிக்கு நெருஞ்சிப்பழம் - மாதரடிக்கு நெருஞ்சிப்பழம்போல வருத்தஞ்செய்யும். எ - று.

முன் வலிதாதலுடைமையிற் பழமென்றான். இத்தன்மைத்தாயவடி "பாத்தி யன்னகுடிமிக்கூர்ங்கற்" களையுடைய வெஞ்சுரத்தை யாங்ஙனங் கடக்குமென்பது குறிப்பாற்பெறப்பட்டது. செம்பொருளேயன்றிக் குறிப்புப்பொருளும் அடிகளை

பிரிவாமையாகலின், இதுவுமிவ்வதிகாரத்ததாயிற்று.
(௧0)

---

## ௧௧௩ம் அதி.—காதற்சிறப்புரைத்தல்.

அஃதாவது தலைமகன் தன்காதன்மிகுதிகூறலும், தலைமகள் தன்காதன்மிகுதி கூறலுமாம். இது, புணர்ச்சியும் களவும்பற்றி நிகழ்வதாகலின், புணர்ச்சிமகிழ்தல் நலம்புனைந்துரைத்தல்களின்பின் வைக்கப்பட்டது.

* அகநானூறு, களிற்றியானைநிரை, ௧.



௧௧௨௧. பாலொடு தேன்கலந் தற்றே பணிமொழி
வாலெயி றூறிய நீர். ௧.

இயற்கைப்புணர்ச்சி யிறுதிக்கட்டலைமகன் தன்னயப்புணர்த்தியது.

இ - ள். பணிமொழி வால் எயிறு ஊறிய நீர் - இம்மென்மொழியினையுடைய பாலது வாலியவெயிறூறியநீர்—பாலொடு தேன்கலந் தற்று - பாலுடனே தேனைக் கலந்த கலவைபோலும். எ - று.

கலந்ததற்றென்பது விகாரமாயிற்று, கலக்கப்பட்டதென்றவாறு. பாலொடு தேனென்றவதனால் அதன்கண் போலுஞ் சுவையினையுடைத்தென்பதாயிற்று. எயி

ஒருவழித்தணக்துவக்த தலைமகன் நீயிர் தணக்தனான்று எம்மையுள்ளியு மறிதிரோவென்ற தோழிக்குச் சொல்லியது.

இ - ள். ஒள்ளமர்க் கண்ணாள் குணம் யான் மறப்பின் உள்ளுவன் - ஒள்ளிய வாய் அமரைச்செய்யுங் கண்ணினையுடையாள் குணங்களை யான் மறந்தேனாயின், நினைப்பேன்;—மறப்பு அறியேன் - ஒருபொழுதும் மறந்ததையறியேன், ஆகலான் நினைந்ததையுமறியேன். எ - று.

மன் ஒழியிசைக்கண் வந்தது. குணங்கள் நாணம், மடம், அச்சம், பயிர்ப்பு முதலாயின. இத்துணையுந் தலைமகன்கூற்று; மேற்றலைமகள் கூற்று. (ரு)

கஉஉசு. கண்ணுள்ளிற் போகா ரிமைப்பிற் பருவரார்
நுண்ணியரெங் காத லவர். சு.

ஒருவழித்தணப்பின்கட்டலைமகனைத் தோழி இயற்பழிக்குமென்றஞ்சி
அவள்கேட்பத் தன்னுள்ளே சொல்லியது.

இ - ள். தாங்காணுமைபற்றிச் சேய்மைக்கட்போயினாரென்று கருதுவார் கருதுக,—எங்காதலவர் கண்ணுள்ளிற் போகார் - எம்முடையகாதலர் எங்கண்ணகத்து நின்றும் போகார்,—இமைப்பிற் பருவரார் - யாமறியாதிமைத்தேமாயின் அதனால் வருந்துவதுஞ்செய்யார்,—நுண்ணியர் - ஆகலாற் காணப்படாத நுண்ணியர். எ - று.

இடைவிடாத நினைவின்முதிர்ச்சியான் எப்பொழுதும் முன்னே தோன்றலிற் கண்ணுள்ளிற்போகாரென்றும், இமைத்தழியும் அது நிற்றலான் இமைப்பிற் பருவாரரென்றுங் கூறினாள்.
(சு)

(அ)

கக௨௯. இமைப்பிற் கரப்பாக் கறிவ லனைத்திற்கே
யேதில ரென்னுமிவ் வூர். ௯.

வரைவிடை வைத்துப் பிரிவின்கட் டலைமகளாற்றுதற் பொருட்டுத் தோழி
தலைமகனை யியற்பழித்தவழி அவளியற்பட மொழிந்தது.

இ - ள். இமைப்பிற் கரப்பாக்கு அறிவல் - என்கண்ணிமைக்குமாயின் உள்ளிருக்கின்ற காதலர் மறைதலையறிந்து இமையேன்;—அனைத்திற்கே ஏதிலர் என்னும் இவ்வூர் - அவ்வளவிற்கு அவரைத் துயிலாநோய்செய்தார் அன்பிலரென்று சொல்லாநிற்கும் இவ்வூர். எ - று.

தன்கருத்தறியாமைபற்றிப் புலர்ந்து சொல்லுகின்றாளாகலின், தோழியை வேறு படுத்து இவ்வூரென்றாள். ஒருபொழுதும் பிரியாதவரைப் பிரிந்தாரென்று பழிக்கற் பாலையல்லையென்பதாம்.
(௯)

ககூ0. உவந்துறைவ ருள்ளத்து ளென்று மிகந்துறைவ
ரேதில ரென்னுமிவ் வூர். ௧0.

இதுவுமது

இ - ள். என்றும் உள்ளத்துள் உவந்து உறைவர் - காதலர் எஞ்ஞான்றும் என் னுள்ளத்துள்ளேயுவந்துறையாநிற்பர்;—இகந்து உறைவர் ஏதிலர் என்னும் இவ்வூர்- அதனையறியாது அவரைப் பிரிந்துறையாநின்றார் அன்பிலரென்று சொல்லாநிற்கும் இவ்வூர். எ - று.

உவந்துறைவரென்றதனால் அன்புடைமைகூறினாள். பிரியாமையும் அன்புமுடை யாரை இலரெனப் பழிக்கற்பாலையல்லையென்பதாம்.
(௧0)

---

## ககச ம் அதி.—நாணுத்துறவுரைத்தல்.

அஃதாவது சேட்படுக்கப்பட்டு ஆற்றாளாய தலைமகன் தோழிக்குத் தன்னாண்டு றவுரைத்தலும், அறத்தொடு நிற்பிக்கவுற்ற தலைமகள் அவட்குத் தன்னாண்டுறவுரைத்.

## ககச ம் அதி.—நாணுத்துறவுரைத்தல்.

உடுறு தராயம். இது, காதன்மிக்குழி செய்வதாகலின், காதற்சிறப்புரைத்தலின்பின் வைக்கப்பட்டது.

ககஉக. காம முழந்து வருந்தினார்க் கேம
மடலல்ல தில்லை வலி. க.

சேட்படுக்கப்பட்டு ஆற்றாளாய தலைமகன் சொல்லியது.

இ - ள். காமம் உழந்து வருந்தினார்க்கு - அரியராய மகளிரோடு காமத்தைப்பது பவித்துப் பின்னதுபெறாது துன்புற்றவர்க்கு— ஏம மடல் அல்லது வலி இல்லை- பண்டும் ஏமமாய் வருகின்ற மடலல்லது இனியெனக்கு வலியாவதில்லை. எ - று.

ஏமமாதல் அத்துன்பநீக்கும்வகை அவ்வனுபவத்தினைக்கொடுத்தல். வலி ஆகு பெயர். பண்மோடவராயினார் இன்பமெய்திவருகின்றவாறுநிற்க, பின்னையதற்குத் துணையென்று கருதிக் கொன்னே முயன்ற யான் இதுபொழுது அல்லாமையை யறிந்தேனாகலான் இனி யானுமவ்வாற்றான் அதனையெய்துவலென்பது கருத்து. (க)

ககஉஉ. நோனா வுடம்பு முயிரு மடலேறு
நாணினை நீக்கி நிறுத்து. உ.

நாணுடையநமக்கு அதுமுடியாதேன மடல்விலக்க வுற்றாட்குச் சொல்லியது.

இ-ள். நோனா உடம்பும் உயிரும் மடல் ஏறும் - அவ்வருத்தத்தினைப்பொறாத வுடம்புமுயிரும் அதற்கேமமாய மடன்மாவினையூரக் கருதாநின்றன,—நாணினை நீக்கிநிறுத்து - அதனை விலக்குவதாய நாணினையகற்றி. எ-று.

வருந்தினார்க்கென மேல்வந்தமையிற் செயப்படுபொருள் ஈண்டுக்கூறாராயினார். மடல் ஆகுபெயர். நீக்கிநிறுத்தென்பது ஒருசொன்னீர்மைத்து. அறிவுநிறைபோர்ப்புக் கடைப்பிடி முதலிய முன்னே நீங்கவும் நாணீங்காது நின்றது, அதுவும் இது பொழுது நீங்கிற்றென்பான், உடம்புமுயிருமென்றான். அவைதாம் தம்முணீங்காமைப் பொருட்டு மடலேறுமென்றது அவள் தன்னாற்றாமையறிந்து கடிதிற் குறைநேர்த னோக்கி. (௨)

கக௩௩. நாணொடு நல்லாண்மை பண்டுடையே னின்றுடையேன்
காமுற்றா ரேறு மடல். ௩.

நாணையன்றி நல்லாண்மையு முடைமையின் முடியாதென்றாட்குச் சொல்லியது.

இ-ள். நாணொடு நல்லாண்மை பண்டு உடையேன் - நாணும் மிக்க ஆண்மையும் யான் பண்டுடையேன்;—காமுற்றார் ஏறும் மடல் இன்று உடையேன் - அவை காமத்தானீங்குதலான், அக்காமமிக்காரேறும் மடலினையின்றுடையேன். எ-று.

நாண் இழிவாயினசெய்தற்கண் விலக்குவது. ஆண்மை ஒன்றற்குந் தளராதுநிற்றல். அவை பண்டென்னவே, இன்றுள்ளது இதுவேயாகலிற் கடிதின்முடியுமென்பதாம்.

கக௩௪. காமக் கடும்புன லுய்க்குமே நாணொடு
நல்லாண்மை யென்னும் புணை. ௪.

## கக௪ ம் அதிகாரம். நாணுத்துறவுரைத்தல்.

நாணுநல்லாண்மையும் காமவெள்ளத்திற்குப் புணையாகலின் அதனால்

கக௩அ. நிறைஅரியர் மன்னளிய ரென்றூ காம
மறைஇறந்து மன்று படும். அ.

காப்புச் சிறைமிக்குக் காமம்பெருகியவழிச் சொல்லியது.

இ - ள். நிறை அரியர் (என்றூ) - இவர் நிறையால் காமிதூர்தற்கரியரென் றஞ் சதல்செய்யாது,—மன் அளியர் என்றூ - மிகவு மளிக்கத்தக்கரென் றிரக்குதல் செய்யாது,—காமம் மறை இறந்து மன்றுபடும் - மகளிர்காமமும் அவர்மறைத்தலைக் கடந்து மன்றின்கண்ணே வெளிப்படுவதாயிருந்தது. எ - று.

என்றூதென்பது முன்றுங்கூட்டி மகளிரென்பது வருவிக்கப்பட்டது. எச்சவும்மை விகாரத்தாற்றொக்கது. மன்னென்பது தன்றைதன்மையரை நோக்கி. உலகத்துப் பெண்பாலார் காமத்தியல்பு கூறுவாள்போன்று, தன்காமம் பெருகியவாறும் இனி யறத்தொடு நிற்றல்வேண்டுமென்பதுங் குறிப்பாற் கூறியவாறாயிற்று. (அ)

கக௩௯. அறிவிலா ரெல்லாரு மென்றேயென் காம
மறுகின் மறுகு மருண்டு. ௯.

இதுவுமது.

இ - ள். எல்லாரும் அறிலார் என்று - யான்முன்னடங்கிநிற்றலான் எல்லாரு மென்னையறிதலிலர் இனியவ்வாறு நில்லாதியானே வெளிப்பட்டறிவிப்பலென்று கருதி,—என்காமம் மறுகில் மருண்டு மறுகும் - என்காமம் இவ்வூர்மறுகின்கண்ணே மயங்கிச்சுழலாநின்றது. எ - று.

மயங்குதல் அம்பலாதல், மறுகுதல் அலராதல். அம்பலுமலருமாயிற்று, இனி யறத்தொடுநிற்றல்வேண்டுமென்பதாம். அறிவிலாரென்ப தூஉம் பாடம். (௯)

கக௪௦. யாங்கண்ணிற் காண நகுப வறிவில்லார்
யாம்பட்ட தாம்படா வாறு. ௪0.

அல்ல குறிப்பட்ட பிற்றைஞான்று வந்த தலைமகனைத்தோழி
யலர்கூறி வரைவுகடாயவழி அவன் சொல்லியது.

இ - ள். அலர் எழ ஆருயிர் நிற்கும்- மடந்தையொடெம்மிடைநட்பு வரின்கண் வாராவெழுதலான் அவளைப்பெறுத வருந்தமென்னரியவுயிர் பெற்றதுபோன்று நிலைபெறும்;—அதனைப் பாக்கியத்தால் பலர் அறியார் - அந்நிலைபெற்றைத் தெய்வத்தால் யானே யறிவதல்லது கூறவின்றி பலருமறியார். எ - று.

அல்லகுறிப்பட்டுத் தலைமகளை யெய்தப்பெறுத வருத்தமெல்லாத்தோன்ற அரிய வுயிரென்றும்,அவ்வளைமறியானே எளியவாக்கி யெடுக்கின்றமையின், அஃதவ்வாருயிர்க்குப் பற்றுக்கோடாகின்றதென்பான் அலரெழவாருயிர் நிற்குமென்றும், பற்றுக்கோடாதலை அவ்வேதிலாரறிவிற்றாற்றுதொழிவர், ஒழியவே ஆருயிர் போமாகலான் அவரறியாதொழிகின்றது தெய்வத்தானென்றுங் கூறினான். முற்றும்மை விகாரத் தாற்றொக்கது.
(க)

கசசஉ. மலரன்ன கண்ணா ளருமை யறியா
தலரெமக் கீந்ததிவ் வூர். உ.

இதுவுமது

இ - ள். மலர் அன்ன கண்ணாள் அருமை அறியாது - மலர்போலுங்கண்ணை யுடையாளது எய்தற்கருமையறியாது,—இவ்வூர் அலர் எமக்கு அளிக்கேயெளியளாக்கி அவளோடலர்கூறலை எமக்குபகரித்தது. எ

ஈந்தது - இவ்வூர்
- று.

அருமை அல்லகுறிப்பாட்டாலும் இடையீடுகளாலும் ஆயது.

தன்னியல்பிழந்து கருக்கும். எ - று.

அலர்தல் மேன்மேன்மிகுதல். செவ்வையுடையதனைச் செவ்விதென்றாற்போலக் கவ்வையுடையதனைக் கவ்விதென்றார். இயல்பு இன்பம் பயத்தல். தவ்வென்னுமென்பது குறிப்புமொழி; "ஞால்கால் வாத்த மாலை வெண்குடை—தவ்வென் றசைஇத் தாழ்துளி மறைப்ப" என்புழியுமது. (௭)

கசச௫. களித்தொறுங் கள்ளுண்டல் வேட்டற்றால் காமம்
வெளிப்படுந் தோறு மினிது. ௫.

இதுவுமது.

இ-ள். களித்தொறும் கள் உண்டல் வேட்டற்று - கள்ளுண்பார்க்குக் களிக்குந்தோறுங்கள்ளுண்டல் இனிதாமாறுபோல,—காமம் வெளிப்படுந்தோறும் இனிது- எனக்குக்காமம் அலராந்தோறும் இனிதாகாநின்றது. எ - று.

வேட்கப்பட்டற்றுவென்பது வேட்டற்றுவென நின்றது. அலரும் இன்பஞ்செய்யாநின்றதென்பதாம்.

வேட்கைமிகுதியால்
(௬)

கசச௬. கண்டது மன்னு மொருநாள் அலர்மன்னுந்
திங்களைப் பாம்புகொண் டற்று. ௬.

இடையீடுகளானும் அல்லகுறியானுந் தலைமகனையெய்தப்பெறாத தலைமகள் அவன் சிறைப்புறத்தானாகத் தோழிக்குச் சொல்லுவனாய் அலரறிவுறீஇ வரைவுகடாயது.

ஏதிலாரெடுக்கின்ற அலரால்

காமத்தையவித்துமென்று கருதுதல் - நெய்யால் எரி நுதுப்பேமென்றற்று -

நெய்யாலெரியையவித்துமென்று கருதுதலோடொக்கும். எ - று

மூன்றனுருபுகள் கருவிக்கண்வந்தன. வளர்தற்காரணமாய அலரால் அவித்தல் கூடாதென்பதாம்.

(அ)

௧௧௪௯. அலர்நாண வொல்வதோ வஞ்சலோம் பென்றார்
பலர்நாண நீத்தக் கடை. ௯.

வரைவிடைவைத்துப் பிரிவின்க ணாற்றாளாய தலைமகள் அவன்வந்து சிறைப்புறத்தானாதலறிந்து அலரஞ்சியாற்றல் வேண்டுமென்ற

தோழிக்குச்சொல்லியது.

இ - ள் அஞ்சலோம்பு என்றார் பலர் நாண நீத்தக்கடை - தம்மையெதிர்ப் பட்டஞான்று நின்னிற்பிரியேன் அஞ்சலோம்பென் றவர்தாமே இன்று கண்டார் பலரும் நாணும்வகை நம்மைத்துறந்தபின் — அலர் நாண ஒல்வதோ - நாமேதிலார் கூறுமலருக்கு நாணக்கூடுமோ கூடாது. எ - று.

நாணவென்னும் வினையெச்சம் ஒல்வதென்னுந் தொழிற்பெயருள் ஒல்லுதற் றொழிலோடு முடிந்தது. கண்டார் நாணுநிலைமையமாய யாம் நாணுதல் யாண்டைய தென்பதாம்.

(க)

௧௧௫௦. தாம்வேண்டி னல்குவர் காதலர் யாம்வேண்டுங்
கௌவை யெடுக்குமிவ்வூர் ௰.

தலைமகன் சிறைப்புறத்தானாகத் தோழி தலைமகட்குச் சொல்லுவாளாய் அலரறிவுறீஇ அவன் உடன்போக்கு நயப்பச்சொல்லியது

இ - ள். யாம் வேண்டும் கௌவை இவ்வூர் எடுக்கும் -

உடன்போகற்கேது வாகவேணுக்கி யாம் பண்டேவிரும்புவதாயவலரை இவ்வூர்தானேயெடாநின்றது—காத லர்தாம் வேண்டின் நல்குவர் - இனிக்காத லர்தாமும் யாம்வேண்டியக்கால் அதனை யினிதினேர்வர், ஆதலால் இவ்வலர் நமக்கு நன்றாய் வந்தது. எ - று.

எச்சவும்மை விகாரத்தாற்றொக்கது. நல்காதாருடைமையின் மருவென்பது தோன்றக் காதலரென்றாள். இவ்விருபதுபாட்டும் புணர்தனிமித்தம். (௨0)

களவியல் முற்றிற்று.



# கற்பியல்.

இனிக் கற்புப் பதினெட்டதிகாரத்தாற் கூறுவான்றொடங்கி, வாற்றாமை கூறுகின்றார்.

முதற்கட் பிரி

## கக௬-ம் அதி.—பிரிவாற்றாமை.

அஃதாவது வரைந்தெய்தியபின் தலைமகன் அறம்பொருளின்பங்களின் பொருட்டுச் சேயிடையினும் ஆயிடையினும் தலைமகளைப் பிரிந்துசெல்லும்; செல்லு ஞான்று அப்பிரிவினை அவளாற்றாத்தன்மை. அஃது ஈண்டுப் பிரிவுணர்த்திய தலைமகற்குத் தோழிகூறலும், அவடனக்குத் தலைமகடானே அவன்குறிப்பானுணர்ந்துகூறலும், பிரிவுணர்த்தியவழிக்கூறலும், தலைமகன்பிரிந்துழி ஆற்றுவிக்குந் தோழிக்குத் தலைமகள் மறுத்துக்கூறலுமென நால்வகையாற் கூறப்படும்.

ககடுக. செல்லாமை யுண்டே லெனக்குரை மற்றுநின்
வல்வரவு வாழ்வார்க் குரை. க.

பிரிந்து கடிதின்வருவலென்ற தலைமகற்குத் தோழி

சொல்லியது

இ - ள். செல்லாமை உண்டேல் எனக்கு உரை - நீயெம்மைப் பிரியாமையுண் டாயின் அதனையெனக்குச்சொல்,—மற்றுநின் வல்வரவு வாழ்வார்க்கு உரை - அஃதொழியப் பிரிந்துபோய் விரைந்து வருதல் சொல்லவையாயின் அதனை அப்பொழுது உயிர்வாழ்வார்க்குச் சொல். எ - று.

தலைமகனையொழித்து எனக்கென்றாள், தானவனென்னும் வேற்றுமையின்மை பின். அக்காலமெல்லாமாற்றியிருந்து அவ்வரவு காணவல்லளல்லள், பிரிந்தபொழுதே இறந்துபடுமென்பதாம். அழுங்குவித்தல் பயன். இதனைத் தலைமகன் கூற்றாக்கியுரைப் பாருமுளர். (௧)

௧௱௫௰௨. இன்க ணுடைத்தவர் பார்வல் பிரிவஞ்சும்
புன்க ணுடைத்தாற் புணர்வு. ௨.

பிரிவு தலைமகன்குறிப்பானறிந்த தலைமகள் தோழிக்குச்சொல்லியது.

இ - ள். அவர் பார்வல் இன்கண் உடைத்து - தழையுங்கண்ணியுங்கொண்டு பின்னின்றஞான்று அவர்நோக்குமாத்திரமும் புணர்ச்சி குறித்தமையான் எமக்கின்ப முடைத்தாயிருக்கும்,—புணர்வு பிரிவஞ்சும் புன்கண் உடைத்து - இன்று அப்புணர்ச்சிதான் நிகழாநிற்கவும் அது பிரிவென்றஞ்சுமச்சத்தினையுடைத்தாயிற்று, அவரன்பின்மையின். எ -

பார்வலென்றதனாற் புணர்ச்சிபெறாத பின்னிலைக்காலம் பெறப்பட்டது. புன்கணென்னுங்காரணப்பெயர் காரியத்தின்மேலாயிற்று. அவ்வச்சத்தினையுடைத்தாதல் வரவு "முன்னுறு முனையெயிற் றமிழ்நறாக் கீகரைக்—கன்னிறு மகிழ்செய்புனை வுரைத்த மமையாரென்—னொள்ளிழை திருத்துமக்" பண்டையிற் சிறப்பால் அவன் பிரிதற்குறிப்புக்காட்டி அச்சஞ்செய்தலுடைமை. அழுங்குவித்தல் பயன். (௨)

௧௱௫௰௩. அரிதரோ தேற்ற மறிவுடையார் கண்ணும்
பிரிவோ ரிடத்துண்மை யான். ௩.

---

* கலி, பாலை, ௩.

# ௧௧௬ ஆம் அதி.—பிரிவாற்றாமை.

இதுவுமது

இ - ள். அறிவு உடையார் கண்ணும் - பிரியேனென்ற தஞ்சொல்லும் நம்பிரிவாற்றாமையும் அறிதலுடையராய காதலர்கண்ணும்,—ஓரிடத்துப் பிரிவுஉண்மை யான் - ஒரோவழிப் பிரிவு நிகழ்தலான்,—தேற்றம் அரிது - அவர்சொல்லும் நிலையின்மையுமப்பற்றி நம்மாட்டன்புடையரெனத் தேறுந்தேற்றம் அரிதாயிருந்தது. எ - று.

அரோ அசைநிலை. உம்மை உயர்வுசிறப்பின்கண் வந்தது. (௩)

௧௧௫௪. அளித்தஞ்ச லென்றவர் நீப்பிற் றெளித்தசொற்
தேறியார்க் குண்டோ தவறு. ௪

இதுவுமது.

இ - ள். அளித்து அஞ்சல் என்றவர் நீப்பின் - எதிர்ப்பட்டஞான்றே தலையளி செய்து நின்னிற்பிரியேன் அஞ்சலென்றவர்தாமே பின் பிரிவராயின்,—தெளித்த சொல் தேறியார்க்குத் தவறு உண்டோ - அவர்க்கன்றி அவர் தெளிவித்த சொல்லை மெய்யெனத் தெளிந்தார்க்குக் குற்றமுண்டோ! எ - று.

தேறியாரென்பது தன்னைப் பிறர்போற்கூறல். சொல்லுஞ் செயலுமொவ்வாமைக்குற்றம் அவர்க்கெய்தும்; அஃதெய்தாவகையழுங்குவியென்பது கருத்து. (௪)

௧௧௫௫. ஓம்பி னமைந்தார் பிரிவோம்பன் மற்றவர்
நீங்கி னரிதாற் புணர்வு. ௫

இதுவுமது

இதுவுமது.

இ - ள். துறைவன் துறந்தமை - துறைவன் என்னைப் பிரிவுற்றமையை— முன்கையிறை இறவாநின்ற வளை தூற்றுகொல் - அவருணர்த்தாமற்றமேயுணர்ந்து என்முன்கையினிறையினின்றும் கழலாநின்ற வளைகள் எனக்கறிவியாவோ, அவனுணர்த்தவுணர்ந்தவர்க்கு நீயறிவித்தல்வேண்டுமோ! எ - று.

முன்னே நிகழ்ந்தமையிற் றுறந்தமையென்றும், கேட்டதுணையான் மெலிந்து உற்றமையின் இறவாநின்றவென்றுங் கூறினாள். அழுங்குவித்தற்குக் கூறற்பாலை யல்லையாய் நீயும் இவ்வளைகள்செய்தனவே செய்தாயெனப் புலந்து கூறியவாறு.(எ)

ககருஅ இன்னா தினனில்லூர் வாழ்த லதனினு
மின்னா தினியார்ப் பிரிவு. அ.

இதுவுமது.

இ - ள். இனன் இல் ஊர் வாழ்தல் இன்னாது - மகளிர்க்குத்தங்குறிப்பறியுந் தோழியரில்லாத வேற்றூரின் கண் வாழ்தலின்னாது;—இனியார்ப் பிரிவு அதனினும் இன்னாது - அதன்மேலுந் தங்காதலரைப்பிரிதல் அதனினுமின்னாது. எ - று.

தலைவன் செலவினையழுங்குவித்து வாராது உடன்பட்டுவந்தமைபற்றிப் புலக்கின்றாளாகலின், இனனில்லூரென்றாள். உலகியல் கூறுவான்போன்று தனக்கவ் விரண்டு முண்மை கூறியவாறு. (அ)

ககருகூ. தொடிற்சுடி னல்லது காமநோய் போல
விடிற்சுட லாற்றுமோ தீ. கூ.

காமந் தீயேபோன்று தானின்றவிடத்தைச்

பிரிவு ஆற்றிப் பின் இருந்து வாழ்வார் பலர் - பிரிந்தால் அப்பிரிவுதன்னையுமாற்றி பின்னுமிருந்து உயிர்வாழுமகளிர் உலகத்துப் பலர். எ - று.



## ககள-ம் அதி.—படர்மெலிந்திரங்கல்.

பண்டைச்சிறப்புத் தலையளிபெற்றின்புறுகின்ற வெல்லைக்கண்ணே அஃதிழந்து துன்புறுதற்குடம்படுதல் அரியதொன்றாகலின் அரியதனைச்செய்தேனென்றும், செல்லுந்தேயத்து அவர்க்கியாது நிகழுமென்றும் வருந்தினையும் யாமாற்றியிருக்குமாறென்னென்றும் அவ்வரவுதான் எஞ்ஞான்று வந்தெய்துமென்றும் இவ்வாறு நிகழுங்கவலை மனத்துநோக்காதாகலான் அல்லனோய் நீக்கியென்றும், பிரிந்தால் வருந்துனையும் அகத்து நிகழும் காமவேதனையும் புறத்து யாழிசை, மதி, தென்றலென்றிவைமுதலாக வந்து இதனை வளர்ப்பனவும் ஆற்றலரியவாகலிற் பிரிவாற்றியென்றும், தங்காதலரை யிகந்தியமையா மகளிருள் இவையெல்லாம் பொறுத்துப் பின்னுமிருந்து உயிர்வாழ்வார் ஒருவருமில்லையென்பது குறிப்பாற்றோன்றப் பின்னிருந்து வாழ்வார் பலரென்றுங் கூறினாள். அரிதென்பது வினைக்குறிப்புப்பெயர். பிரிவின்கணிகழ்வனவற்றைப் பிரிவென்றாள். செய்து, நீக்கி, ஆற்றியென்பன ஓசைவகையான் அவ்வவற்றதருமைபுணர நின்றன. சிறப்பும்மை விகாரத்தாற்றொக்கது. யானுமிறந்து படுவலென்பது கருத்து. (௧௦)

---

## ககள-ம் அதி.—படர்மெலிந்திரங்கல்.

அது படரான்மெலிந்திரங்கலெனவிரியும்,
அஃதாவது பிரிவாற்றாளாய தலைமகள் தானுறுகின்ற துன்பத்தினை
யெப்பொழுதும் நினைத்தலின் அந்நினைவான் மெலிந்திரங்குதல்.
அதிகாரமுறைமையும் இதனானே விளங்கும்.

ககசுக. மறைப்பேன்மன் யானிஃதோ நோயை யிறைப்பவர்க்
ஊற்றுநீர் போல மிகும். க.

காமநோயை வெளிப்படுத்தல்

நின்னுணுக்கேலாதென்ற

தோழிக்குச் சொல்லியது.

இ - ள். நோயை யான் மறைப்பேன் - இந்நோயைப் பிறரறியாமல் யான் மறையாநின்றேன்;—இஃதோ இறைப்பவர்க்கு ஊற்றுநீர்போலமிகும் - நிற்பவும் இஃது அக்காவலை நில்லாது நீர் வேண்டுமென்றிறைப்பவர்க்கு ஊற்றுநீர் மிகுமாறு போல் மிகாநின்றது. எ - று.

அம்மறைத்தலாற் பயனென்னென்பதுபட நின்றமையின், மன் ஒழியிசைக்கண் வந்தது. "இஃதோ செல்வர்க்கொத்தனென்யான்" என்புழிப்போல ஈண்டுச்சுட்டுப் பெயர் நிற்கின்றது. இஃதோர் நோயையென்று பாடமோதுவாருமுளர்; அது பாடமன்மையறிக. இனி அதற்கேற்றது நீ செயல்வேண்டுமென்பதாம். (௧)

௧௧௬௨. கரத்தலு மாற்றேனிந் நோயைநோய் செய்தார்க்
குரைத்தலு நாணுத் தரும். ௨.

ஈண்டையாரறியாமன் மறைத்தல் ஆண்டையாரறியத் தூதுவிடுதலென்னு
மிரண்டனுள் ஒன்றுசெயல் வேண்டுமென்ற தோழிக்குச் சொல்லியது.

இ - ள். இந்நோயைக் கரத்தலும் ஆற்றேன் - இந்நோயை ஈண்டையாரறியாமன் மறைத்தலும் வல்லேனல்லேன்;—நோய் செய்தார்க்கு உரைத்தலும் நாணுத் தரும் - ஆகாக்கால், நோய்செய்தவர்க்குரைக்கவெனின், அதுவும் எனக்கு நாணினைத் தாராநின்றது; இனியெஞ் செய்வேன்! எ - று.

## ௧௧எ ம் அதி.—படர்மெலிந்திரங்கல்.

க.க.[illegible]

நின்கண்கள் பேரழகழிகின்றனவாகலின் ஆற்றற்பாலை யல்லையென்றாட்குச் சொல்லியது.

இ - ள். உள்ளம்போன்று உள்வழிச் செல்கிற்பின் - மனம்போலக் காதலருள்ள தேயத்துக் கடிதிற்செல்லவல்லனவாயின், — என் கண் வெள்ளநீர் நீந்தல - என்கண்கள் இவ்வளவும் வெள்ளமாகிய தன்னீரை நீந்தா. எ - று.

அது மாட்டாமையின் இனி அவற்றிற்கு நீந்தாதவேயுள்ளதென்பதுபட நின்றமையின், மன் ஒழியிசைக்கண்வந்தது. மனத்திற்குச் செல்வாவது நினைவேயாகலின் உள்ளம்போன்றென்றும், மெய்க்கு நடந்துசெல்லவேண்டுதலிற் கண்கள் அதனொடு சென்று காதலரைக்காண்டல் கூடாதென்னும் கருத்தாற் செல்கிற்பினென்றும் கூறினாள். இதனான் வருகின்றவதிகாரமும் தோற்றுவாய் செய்யப்பட்டது. (௰)

## ககஅ-ம் அதி.—கண்விதுப்பழிதல்.

அஃதாவது கண்கள் தங்காட்சி விதுப்பான் வருந்துதல். காட்சிவிதுப்புத் தலைமகனைக் காண்டற்கு விரைதல். இது படர்மெலிவுத்தவழி நிகழ்வதாகலின், படர்மெலிந்திரங்கலின்பின் வைக்கப்பட்டது.

கக௭க. கண்டாங் கலுழ்வதெவன்கொலோ தண்டாநோய்
தாங்காட்ட யாங்கண் டது. க.

நின்கண்கள் கலுழ்ந்து தம்மழகிழவாநின்றன
நீயாற்றல்வேண்டுமென்ற
தோழிக்குத் தலைமகள் சொல்லியது.

இ - ள். தண்டா நோய் யாம் கண்டது தாம் காட்ட -
இத்தணியாநோயை யாமெய்தியது தாமெமக்குக் காதலரைக்

இதுவுமது.

இ-ள். தாம் கதுமென நோக்கித் தாமே கலுழும் இது - இக்கண்கள் அன்று காதலரைத் தாமே விரைந்து நோக்கி இன்றுந்தாமே விழுந்தழுகின்றவிது—நகத்தக் கது உடைத்து - நம்மாற்சிரிக்கத்தக்க வியல்பினையுடைத்து. எ-று.

கண்களென்பது அதிகாரத்தான் வந்தது. இதுவென்றது மேற்கூறிய கழிமடச் செய்கையை. அது வருமுன்னர்க்காப்பார்க்கு நகைவிளைக்குமாகலான், நகத்தக்கது டைத்தென்றாள். (௩)

௧௧௭௪. பெயலாற்றா நீருலர்ந்த வுண்க ணுயலாற்றா
வுய்விறோ யென்க ணிறுத்து. ௪.

இதுவுமது.

இ-ள். உண்கண் - உண்கண்கள்,—உயலாற்றா உய்வு இல் நோய் என்கண் நிறுத்து - அன்று யானுய்யமாட்டாமைக் கேதுவாய ஒழிவில்லாத நோயை என் கண்ணே நிறுத்தி,—பெயலாற்றா நீர் உலர்ந்த - தாமுமழுதலமாட்டாவண்ணம் நீர் வற்றிவிட்டன. எ-று.

நிறுத்தல் பிரிதலும் பின்கூடாமையுமுடையாரைக் காட்டி அதனால் நிலைபெறச் செய்தல். முன் எனக்கின்னாதசெய்தலாற் பின் தமக்கின்னாதன தாமே வந்தன வென்பதாம். (௪)

௧௧௭௫. படலாற்றா பைத லுழக்குங் கடலாற்றாக்
காமநோய் செய்தவென் கண். ௫.

இதுவுமது.

இ-ள். கடல் ஆற்றாக் காமநோய் செய்த என்கண் - எனக்குக்

கண்கள் — உழந்துழந்து உள்நீர் அறுக - இன்று இத்துயிலாதுழுங்கலாய துன்பத்தினையுழந்துழந்து தம்மகத்துள்ள நீர் அற்றுப்போக. எ - று.

அகைக்கு இடைவிடாமைக்கண் வந்தது. அறுதலாகிய தொழில் இடத்தின்மேனின்றது.
இடத்துநிகழ்பொருளின்

(எ)

ககஎஅ. பேணாது பெட்டா ருளர்மன்னோ மற்றவர்க்
காணா தமைவில கண். அ.

காதலர் பிரிந்துபோயினரல்லர் அவரீண்டுளர்
அவரைக்காணுமளவும்
நீயாற்றல்வேண்டுமென்ற தோழிக்குச் சொல்லியது.

இ - ள். பேணாது பெட்டார் உளர் - நெஞ்சால் விழையாதுவைத்துச் சொல் மாத்திரத்தால் விழைந்தவர் இவ்விடத்தேயுளர்;— மற்று அவர்க் கண் காணாது அமைவில - அவ்வுண்மையாற் பயன்யாது, அவரைக் கண்கள் காணாதமைகின்றன வில்லையாயின. எ - று.

செயலாற் பிரிந்த தின்மையிற் பேணாதென்றும், முன்னலம்பாராட்டிப் பிரிவச்சமும் வன்புறையுங் கூறினாராகலிற் பெட்டாரென்றுங்கூறினாள். மன் ஒழியிசைக்கண் வந்தது. மற்று வினைமாற்றின்கண் வந்தது. ஓகாரம் அசைநிலை. யானுற் றுங் கண்கள் அவரைக் காண்டற்கு விரும்பாநின்றன வென்பதாம். இனிக்கொண் கனையென்று பாடமாயின், என்கண்கள் தம்மைக் காணாதமைகின்ற கொண்கனைத் தான்காணாதமைகின்றனவில்லை இவ்வாறே தம்மையொருவர் விழையாதிருக்கத் தாம வரை விழைந்தார் உலகத்துளரோவென்றுரைக்க. இதற்கு மன் அசைநிலை. (அ)

ககஎக. வாராக்காற் றுஞ்சா வரிற்றுஞ்சா வாயிடை

கிகழ்வதனைப் புறத்தன் ளார்க் கறிவித்தலாகிய தொழிலான் ஒற்றமைபுண்மையின்; அறைபறையாகிய கண் ணென்றான். இங்ஙனஞ்செய்யுள்விகாரமாக்காது அறைபறைக் கண்ணுறென்று பாட மோது வாருமுளர்.
யான் மறைக்கவும் இவை வெளிப்படுத்தாநின்றன வென்பதாம்.()

---

## கககஅம் அதி.—பசப்புறுபருவரல்.

தம்.

அது பசப்புற்ற பருவரலென விரியும். அஃதாவது பசப்புறுதலானுய வருத் தத்தினைப்"பக்தெரிர்தவயர்க" வென்பதுபோலக்கொள்க. பசப்பாவது பிரிவாற் றுமையான் வருவதோர் நிறவேறுபாடு. இது, தலைமகளைக் காணப்பெறுதவழி நிகழ் வதாகலின், கண்விதுப்பழிதலின்பின் வைக்கப்பட்டது.

கககஅக. நயந்தவர்க்கு நல்காமை நேர்ந்தேன் பசந்தவென்
பண்பியார்க் குரைக்கோ பிற க.
முன் பிரிவுடம்பட்ட தலைமகள் அஃதாற்றுது பசந்தவழித்
தன்னுள்ளே சொல்லியது

இ - ள். நயந்தவர்க்கு நல்காமை நேர்ந்தேன் - என்னை நயந்தவர்க்கு அது பொழுது பிரிவையுடம்பட்ட நான்—பசந்த என் பண்பு யார்க்கு உரைக்கோ - அதனையாற்றுது இதுபொழுது பசந்தவென்னியல்பினை யார்க்குச்சொல்வேன்)எ-று.

பிறவென்பது அசைநிலை. உடம்படாவழி ஒழிதல்குறித்துப்பிரிவுணர்த்தினராக லின் அவரன்புடையரென்னும் கருத்தான் நயந்தவரென்றும், இதுவேயுடம்பாடாக மேலும் பிரிவு நிகழுமாகலின் இனி அவரை உடுதலரிதென்னுங்கருத்தான் நல்கா

அவ்விரண்டற்குந் தலைமாறாக இக்காமநோ பிணியும் பசலையையும் எனக்குத் தந்து,—சாயலும் நாணும் அவர் கொண்டார் - என்மேனியழகினையும் நாணினையும் அவர் கொண்டு போயினார். எ - று.

எதிர்நிரனிறை. அடக்குந்தோறும் மிகுதலான், நோய் நாணிற்குத் தலைமாறு ஆயிற்று. இனி அவர் தந்தாலல்லது அவையுளவாகலும் இவையிலவாகலும் கூடாவென் பதாம். (௩)

௧௧௮௪. உள்ளுவன் மன்யா னுரைப்ப தவர்திறமாற்
கள்ளம் பிறவோ பசப்பு. ௪.

பிரிகின்றவர் தெளிவித்த சொற்களையும் அவர் கற்றிறங்களையு மழிதியாகலின்

நீட்டியாது வருவரென்றவழிச் சொல்லியது.

இ - ள். யான் உள்ளுவன்-அவர் சொற்களை யான் மனத்தானினைப்பேன்,— உரைப்பது அவர்திறம் - வாக்கானுரைப்பதும் அவர் கற்றிறங்களையே;—பசப்புக் கள்ளம் - அங்ஙனஞ் செய்யாநிற்கவும், பசப்பு வந்து நின்றது, இது வஞ்சனையாயிருந்தது. எ - று.

பிறவும் ஓவும் அசைநிலை. மெய் மற்றை மனவாக்குக்களின் வழித்தாகலின் அதன்கண்ணும் வரற்பாற்றன்றாயிருக்க வந்தமையின், இதன்செயல் கள்ளமாயிருந்ததெனத் தானுற்றதின்மை கூறியவாறாயிற்று. (௪)

௧௧௮௫. உவக்காணெங் காதலர் செல்வா ரிவக்காணென்
மேனி பசப்பூர் வது. ௫.

காதலர் பிரிந்தணித்தாயிருக்கவும் ஆற்றயின்றிலையென்ற
முன்னிகழ்ந்தது கூறியது.

தோழிக்கு

இ - ள் எங்காதலர் உவக்காண் செல்வார் - பண்டும் எங்காதலர் உங்கே செல்வா

௱௬௧,—என்மேனி பசப்பூர்வது இலக்காரன் - என்மேனி பசப்பூர்வதில்லேயன்றே!
அப்பெற்றியது இன்றா பிறிதொன்றுமோ! எ - று.

---

௳ வேலத்ராமணி, விமியாகிலப்பசம், ௧.
௱௮௦ ௧௧௯ ம்

அதி.—பசப்புறுபருவரல்.

கவ்வென் இலக்காமென்பன ஒட்டிநின்ற இடைச்சொற்கள். சேவலன் யாத் காலவன்மை கருதப்பட்டது. அவர்செலவும் பசப்பினதுவரவும் பகலிரவுக செலவும் வரவும்போலவதறிந்துவைத்து அறியாதாய்போல இசொல்லு மென்றதென் மென்பதாம்.

௧௧௮௬. விளக்கற்றம் பார்க்கு மிருளேபோற் கொண்கன்
முயக்கற்றம் பார்க்கும் பசப்பு. ௬.

பரிமேலழகர் உரை.

இ - ள். விளக்கு அற்றம் பார்க்கும் இருளேபோல் - விளக்கினது மெலிவு பார்த்து நெருங்கிவரு மிருளேபோல —கொண்கன் முயக்கு அற்றம் பார்க்கும் பசப்பு - கொண்கன்முயக்கினது மெலிவுபார்த்து நெருங்கிவரும் இப்பசப்பு. எ - று.

பார்க்குமென்பன இலக்கணைச்சொல். முன் பிரியாதிருக்கவும் தனக்கவகாசம் பார்த்துவரும் பசப்புப் பிரிவுபெற்றால் என்செய்யாதென்பதாம். (௬)

௧௧௮௭. புல்லிக் கிடந்தேன் புடைபெயர்ந்தே னவ்வளவி
லள்ளிக்கொள் வற்றே பசப்பு. ௭.

இதுவுமது.

இ - ள். புல்லிக்கிடந்தேன் புடைபெயர்ந்தேன் - முன்னொருநான்று காதலரைப் புல்லிக்கிடந்த யான் அறியாது புடைபெயர்ந்தேன்;— அவ்வளவில் பசப்பு அள்ளிக்கொள்வற்று-அப்புடைபெயர்ந்தவளவிலே பசப்பு அள்ளிக்கொள்வதுபோல வந்து செறிந்தது. எ - று.

கொள்வதென்பது குறைந்துநின்றது. அள்ளிக்கொள்வது அள்ளிக்கொள்ளப் படும் பொருள். அப்புடைபெயர்ச்சி மாத்திரத்திற்கு அவ்வாறுவது இப்பிரிவின்கண் மாறு சொல்லவேண்டுமோ வென்பதாம். (எ)

கஅஅ. பசந்தா ளிவளென்ப தல்லா லிவளைத்
துறந்தா ரவரென்பா ரில். அ.

நீயிங்ஙனம் பசக்கற்பாலையல்லையென்ற தோழியோடேலந்து சொல்லியது.

இ - ள். இவள் பசந்தாள் என்பது அல்லால் - இவள் ஆற்றியிராது பசந்தா ளென்று என்னைப் புழிகூறுவதல்லது—இவளை அவர் துறந்தார் என்பார் இல்-இவளையவர் துறந்துபோயினாரென்று அவரைக் கூறுவாரொருவருமில்லை. எ - று.

என்பாரென வேறுபடுத்திக்கூறினாள், தன்னையே நெருங்குதல்பற்றிப் புலக்கின்றமையின். (அ)

கஅகூ. பசக்கமற் பட்டாங்கென் மேனி நயப்பித்தார்
நன்னிலைய ராவ ரெனின். கூ.

இதுவுமது.

அது முடிவதொன்றன்று, முடிந்தாலும் பயனில்லையென்பது பென்னுங்குறிப்பான், வாழியவென்றான்.

கருதாது முயலாநின்று

(௬0)

---

## கஉ௧ ம் அதி.—நினைந்தவர் புலம்பல்.

அஃதாவது முன்கூடிய ஞான்றைபின்பத்தினை நினைந்து தலைமகடனிமை யெய்தலும், பாசறைக்கட்டலைமகன்றனிமையெய்தலுமாம். இவ்வாறு இருவர்க்கும் பொதுவாதல்பற்றிப் பன்மைப்பாலாற் கூறப்பட்டது. இது, படர்மிகுதி தன்கண்ணை தாகு நினைந்த தலைமகட்கு முரித்தாகலின், அவ்வியைபுபற்றித் தனிப்படர்மிகுதியின் பின் வைக்கப்பட்டது.

கஉ0௧. உள்ளினுந் தீராப் பெருமகிழ் செய்தலாற்
கள்ளினுங் காம மினிது. ௧.

ஞாதாய்ச்சென்ற பாங்கனுக்குத் தலைமகன் சொல்லியது.

இ - ள். உள்ளினும் தீராப் பெருமகிழ் செய்தலால் - முன்கூடியஞான்றையின் பத்தினைப் பிரிந்துழி நினைந்தாலும் அதுபொழுது பெற்றாற்போல நீங்காத மிக்க மகிழ்ச்சியைத் தருதலால்,—கள்ளினும் காமம் இனிது - உண்டுழியல்லது மகிழ்ச்சி செய்யாத கள்ளினுங் காமம் இன்பம்பயத்தலுடைத்து. எ - று.

தன்றனிமையுந் தலைமகனை மறவாமையுங் கூறியவாறு.

(௧)

கஉ0உ. எனைத்தொன் றினிதேகாண் காமந்தாம் வீழ்வார்
நினைப்ப வருவதொன் றில். உ.

இதுவுமது.

இதுவுமது.

இ - ள். எந்நெஞ்சத்து அவர் ஓஒ உளரே - எம்முடைய நெஞ்சத்து அவர் எப்பொழுது முளரேயாயிராநின்றார்; — அவர் நெஞ்சத்து யாமும் உளேங்கொல் - அவ்வகையே அவருடைய நெஞ்சத்து யாமுமுளமாதுமோ, ஆகேமோ! எ - று.

ஓகாரவிடைச்சொல் ஈண்டிடைவிடாமையுணர்த்திநின்றது.
உளமாயும் வினை முடியாமையின் வாராராயினாரோ, அது முடிந்தும்
வென்பது கருத்து.
இலமாகலின் வாராராயினாரோ
(ச)

கஉ0ரு. தந்நெஞ்சத் தெம்மைக் கடிகொண்டார் நாணார்கொ
லெந்நெஞ்சத் தோவா வரல். ரு.

இதுவுமது.

இ - ள். தந்நெஞ்சத்து எம்மைக் கடிகொண்டார் - தம்முடைய நெஞ்சின்கண் யாஞ்செல்லாமல் எம்மைக் காவல்கொண்ட காதலர் — எந்நெஞ்சத்து ஓவா வரல் நாணார்கொல் - தாமெம்முடைய நெஞ்சின்கண் ஒழியாது வருதலை நாணார்கொல்லோ! எ - று.

ஒருவரைத் தங்கண் வருதற்கு ஒருகாலுமுடம்படாது தாமவர்கட் பலகாலுஞ் சேறல் நாணுடையார்செயலன்மையின், நாணார்கொலென்றாள். (ரு)

கஉ0சு. மற்றியா னென்னுளேன் மன்னோ வவரொடியா
னுற்றநா ளுள்ள வுளேன். சு.

அவரோடு புணர்ந்தஞான்றையின்பத்தை நினைந்து இறந்துபாடெய்தா நின்றாய் அதுமறத்தல்வேண்டுமென்றாட்குச் சொல்லியது.

இ - ள். யான் அவரொடு உற்ற நாள் உள்ள உளேன் - யான் அவரொடு புணர்ந்தஞான்றையின்பத்தை நினைதலான் இத்துன்ப வெள்ளத்தும், உயிர்வாழ்கின்றேன்;—மற்று யான் என்னுளேன் - அதனின்றுமின், வேறொன்றால் உயிர்வாழ்வேன்! எ - று.

நாள் ஆகுபெயர். உயிர்வாழ்தற்கு வேறுமுளவாகிய அவைபெற்றிலேனென்பது படநின்றமையின், மன் ஒழியிசைக்கண் வந்தது. அவை அவன்றானேவருதல், தன்றூது ... கடிதம் ... நினைந்தவர்புலம்பல்.

சென்முதலாயின. அவையாவுமின்மையின், இதுவல்லது எனக்குப் பற்றுக்கோடில்லையென்பது கருத்து.
(க)

கஉ௦எ. மறப்பி னெவனாவன் மற்கொன் மறப்பறியே
னுள்ளினு முள்ளஞ் சுடும். எ.

இதுவுமது.

இ - ள். மறப்பு அறியேன் உள்ளினும் உள்ளம் சுடும் - அவ்வின்பத்தை மறந்தறியேனாய் இன்றுள்ளாநிற்கவும், பிரிவு என்னுள்ளத்தைச் சுடாநின்றது,—மறப்பின் எவனாவன் - அங்ஙனம் பிரிவாற்றாத யான் மறந்தால் இறந்துபடாது உளேனாவது எத்தால்! எ - று.

மறக்கப்படுவேறு அதிகாரத்தான்வந்தது. மன் ஈண்டும் அதுபடநின்று ஒழியிசை யாயிற்று. கொல் அசைநிலை. (எ)

கஉ0அ. எனைத்து நினைப்பினுங் காயா ரனைத்தன்றோ
காதலர் செய்யுஞ் சிறப்பு. அ.

## இத்துன்பமறிந்துவந்த காதலர் நினக்கின்பஞ் செய்வரென்றாட்குச் சொல்லியது.

இ - ள். எனைத்து நினைப்பினும் காயார் - தம்மை யானெத்துணையும் மிகநினைத் தாலும் அதற்கு வெகுளார்;—காதலர் செய்யும் சிறப்பு அனைத்து அன்றோ - காதலர் எனக்குச் செய்யுமின்பமாவது அவ்வளவன்றோ! எ - று.

வெகுளாமை அதற்குடன்பட்டு நெஞ்சின்கணிற்றல். தனக்கு அவ்வின்பத்திற் சிறந்ததின்மையின், அதனைச் சிறப்பென்றாள். காதலர் நம்மாட்டருளென்றும், செய் புங்குணமென்றும் பாடமோதுவாருமுளர். தோழி கூறியவதனைக் குறிப்பானிகழ்ந்து கூறியவாறு. (அ)

கஉ0கூ. விளியுமெ னின்னுயிர் வேறல்ல மென்பா
ரளியின்மை யாற்ற நினைந்து. கூ.

## தலைமகன்றாதுவரக் காணாது வருந்துகின்றாள் தோழிக்குச் சொல்லியது.

வற்புறுத்துங்

இ - ள். வேறு அல்லம் என்பார் அளியின்மை ஆற்ற நினைந்து - முன்பெல்லாம் ஈமிருவரும் வேறல்லமென்று சொல்லுவார தளியின்மையை மிகநினைந்து,—என் இன்னுயிர் விளியும் - எனதினியவுயிர் கழியாநின்றது. எ - று.

அளியின்மை பின்வருவாராகலுமாய்ப்பிரிதலும்,

பிரிந்தவாராமையும், ஆண்மகின் றழித் தரவிடாமையும் முதலாயின. பிரிவாற்றல்வேண்டுமென வற்புறுத்தாட்கு என்னுயிர் கழிகின்றது பிரிவிற்கன்று அவரன்பின்மைக்கென எதிரழிந்துகூறிய வாறு. (க)

கஉகo. விடாஅது சென்றாரைக் கண்ணினாற் காணப்
படாஅதி வாழி மதி. கo. :

## கஉஉ ம் அதி.—கனவுநிலையுரைத்தல். கஉசஉ

வன்புறையெதிரழிந்தாள் காமமிக்ககழிபடரால் சொல்லியது.

இ - ள். மதி - மதியே,—விடாது சென்றாரைக் கண்ணினால் காணப் படாதி - என்னெஞ்சின் இடைவிடாதிருக்தே விட்டுப்போயினாரை யானென்கண்ணளவாறு மினும் எதிர்ப்படும்வகை நீ படாதொழிவாயாக. எ - று.

கண்ணளவானெதிர்ப்படுதலாவது மதி இருவராலுநோக்கப்படுதலின் இருவர் கண்ணும் அதன்கண்ணே சேர்தல், முதலெரம் நினைக்கொற்றுமைபுண்மையிற் சென்றாரைக்காணவென்றும், குறைபுறுகின்றாளாகலின் வாழிமயன்றுங்கூறினாள். இனிப் படாதென்பது பாடமாயின், கனவிடைக் கண்ணினாற்காணுமாறு மதிபடுகின்றதில்லை யென அதனாற்றுயில்பெறுது வருந்துகின்றாள் கூற்றாக்குக . யென்பது அசைநிலை.

இப்பொருட்கு வாழி
(கo)

---

## கஉஉ ம் அதி.—கனவுநிலையுரைத்தல்.

அஃதாவது தலைமகள் தான்கண்ட கனவினது நிலைமையைத் தோழிக்குச் சொல்லுதல். அக்கனவு கனவின்கணிலையுமிருதியாற்

கண்டதாகலின் இது நினைந்து வர்புலம்பலின்பின் வைக்கப்பட்டது.

௧௨௧௧ காதலர் தூதொடு வந்த கனவினுக்
யாதுசெய் வேன்கொல் விருந்து. ௧.

## தலைமகன்றூதுவரக்கண்டாள் சொல்லியது.

இ - ள். காதலர் தூதொடு வந்த கனவினுக்கு - யான் வருந்துகின்றதறிந்து அதுதீரக் காதலர் விடுத்த தூதினைக்கொண்டு என் மாட்டுவந்த கனவினுக்கு—விருந்து யாது செய்வேன் - யான் விருந்தாக யாதனைச்செய்வேன்! எ - று.

விருந்தென்றது விருந்திற்குச்செய்யுமுபகாரத்தினை. அது கனவிற்கொன்று காணமையின், யாதுசெய்வேனென்றாள்.
(௧)

௧௨௧௨. கயலுண்கண் யானிரப்பத் துஞ்சிற் கலந்தார்க்
குயலுண்மை சாற்றுவேன் மன். ௨.

## தூதுவிடக்கருதியாள் சொல்லியது

இ - ள். கயல் உண்கண் யான் இரப்பத் துஞ்சின் - துஞ்சாது வருந்துகின்ற என் கயல்போலு முண்கண்கள் யானிரந்தாற்றுஞ்சுமாயின்,—கலந்தார்க்கு உயல் உண்மை சாற்றுவேன் - கனவிடைக் காதலரைக் காண்பேன், கண்டால் அவர்பிரிய ஆற்றியுளேனாயதன்மையை யானே விரியச்சொல்வேன். எ - று.

கயலுண்கணென்றாள், எழிர்நலத்திற்சென்மி. உயல் காமநோய்க்குத் தப்புதல். தூதர்க்குச்சொல்லாது யாமடக்குவனவும் சொல்லுவனவற்றன்னுஞ் சுருக்குவனவற் றின்பரப்புந் தோன்றச்சொல்வேனென்னும் கருத்தாற் சாற்றுவேனென்றாள். இனி அவையு ந்துஞ்சா சாற்றது ங்கூடாதென்பதுபட நின்றமையின், மன் ஒழியிசைக்கண் வந்தது. முன்னுங்கண்டாள் கூற்றாகலின், கனவுநிலையுரைத்தலாயிற்று. (௨)

௧௨௧௩. நனவினா னல்கா தவரைக் கனவினாற்
காண்டலி னுண்டென் னுயிர். ௩.



ஆற்றாளெனக் கவன்றாட்கு ஆற்றுவலென்பதுபடச் சொல்லியது.

இ - ள். நனவினான் நல்காதவரை - நனவின்கண் வந்து தலையளிசெய்யா தாரை—கனவினாற் காண்டலின் என் உயிர் உண்டே - யான் கனவின்கட்கண்டகாட்சி யானே என்னுயிருண்டாகின்றது. எ - று.

மூன்றனுருபுகள் ஏழன்பொருண்மைக்கண் வந்தன. அக்காட்சியானே யாற்றி யுள்ளேனென்றேன். நீ கவலல்வேண்டாவென்பதாம். (௩)

௧௨௧௪. கனவினா னுண்டாகுங் காம நனவினா
னல்காரை நாடித் தரற்கு. ௪.

இதுவுமது.

இ - ள். நனவினான் நல்காரை நாடித் தரற்கு - நனவின் கண்வந்து தலையளி செய்யாதாரை அவர்சென் றவழி நாடிக்கொண்டுவந்து கனவு தருதலான்,—கனவினாற் காமம் உண்டாகும் - அக்கனவின்கண்ணே எனக்கின்பமுண்டாகின்றது. எ - று.

காமம் ஆகுபெயர். நான்கனவது மூன்றன்பொருண்மைக்கண்வந்தது. இயல்பான் நல்காதவரை அவர்சென்ற தேயமறிந்துசென்று கொண்டுவந்துதந்து நல்குவித்த கனவால் யானாற்றுவலென்பதாம்.
(௪)

௧௨௧௫. நனவினாற் கண்டதூஉ மாங்கே கனவுந்தான்
கண்ட பொழுதே யினிது. ரு.

## இதுவுமது.

இ - ள். நனவினாற் கண்டதூஉம் (இனிது) ஆங்கே - முன்னனவின்கண் அவரைக்கண்டு நுகர்ந்தவின்பந்தானுமினிதாயிற்று அப்பொழுதே,—கனவுந்தான்கண்ட பொழுதே இனிது-இன்று கனவின்கட்கண்டு நுகர்ந்தவின்பமும் அக்கண்டபொழுதே யினிதாயிற்று, அதனான் எனக்கிரண்டுமொத்தன. எ - று.

இனி தென்பது முன்னுங்கூட்டப்பட்டது. கனவு ஆகுபெயர். முன்னும் யான் பெற்றதிவ்வளவே, இன்னும் அதுகொண்டாற்றுவலென்பதாம். (ரு)

௧௨௧௬. நனவென வொன்றில்லை யாயிற் கனவினாற்
காதலர் நீங்கலர் மன். சு.

## இதுவுமது.

இ - ள். நனவென ஒன்று இல்லையாயின் - நனவென்றசொல்லப்படுகின்ற ஒரு பாவியில்லையாயின்,—கனவினாற் காதலர் நீங்கலர் - கனவின்கண் வந்துகூடிய காதலர் என்னைப் பிரியார். எ - று.

ஒன்றென்பது அதன்கொடுமைவிளக்கி நின்றது. அஃது

இடைவேபுகுந்து கன
வைப்போக்கி அவரைப் பிரிவித்ததென்பதுபட நிற்றலையின், மன்
வந்தது. கனவிற்பெற்றாற்றுகின்றமை கூறியவாறு.

ஒழிவிசைக்கண்

(சு)

௧௨௧௭. நனவினா னல்காக் கொடியார் கனவினால்

கஉகக. கனவினு னல்லாரை நோவர் கனவினாற்
காதலர்க் காணு தவர். க.

இதுவுமது.

இ - ள். கனவினாற் காதலர்க் காணாதவர் - தமக்கோர்காதலரின்மையின் அவரைக் கனவிற்கண்டறியாத மகளிர்—கனவினுன் நல்லாரை நோவர் - தாமறிய நனவின்கண் வந்து நல்காத நங்காதலரை அன்பிலரென நோவாநிற்பர். எ - று.

இப்பழித்ததுபொருது புலக்கின்றாளாகலின், அயன்மைதோன்றக் கூறினாள். தமக்குக்காதலருளராய் அவரைக்கனவிற் கண்டறிவாராயின் நங்காதலர் கனவின்கணுற்றி நல்குதலறிந்து நோவாரென்பதாம்.

(க)

கஉஉ0. நனவினு னந்நீத்தா ரென்பர் கனவினாற்
காணார்கொ லிவ்வூ ரவர். க0.

இதுவுமது.

இ - ள். இவ்வூரவர் நனவினுன் நந்நீத்தார் என்பர் - இவ்வூரின்மகளிர் நனவின்கண் நம்மை நீத்தாரென்று நங்காதலரைக்கொடுமைகூறுகிற்பர்,—கனவினாற் காணார் கொல் - அவர் கனவின்கண் நீங்காதுவருதல் கண்டறியாரோ! எ - று.

என்றுெம் தன்னிடை வேற்றுமையின்றிப் பரந்தகண்டது தாலுங்கண்டமை யும், அதுகாணுது அவரைக்கொடுமை கருத்தால், இவ்வூரவரென்றாள்.

கூறுமின்றமையின் அயலாரேயாமென்னும்

(க0)

அஃதாவது மாலைப்பொழுது வந்துழி அதனைக்கண்டு தலைமகளிரங்குதல். கனவுமுந்துறுத வினையில்லை * யென்பதுபற்றிப் பகற்பொழுதாற்றியிருந்தாட்கு உரிய தாகலின்; இது கனவுநிலையுரைத்தலின்பின் வைக்கப்பட்டது.

௧௨௨௧. மாலையோ வல்லை மணந்தா ருயிருண்ணும்
வேலைநீ வாழி பொழுது. ௧.

பொழுதோடு புலந்து சொல்லியது.

இ - ள். பொழுது - பொழுதே,—நீ மாலையோ அல்லை - நீமுன்னாள்களின் வந்த மாலையோவெனின், அல்லை;—மணந்தார் உயிர் உண்ணும் வேலை - இருந்தவாற்றான் அந்நாட் காதலரை மணந்த மகளிருயிரையுண்ணும் இறுதிக்காலமாயிருந் தாய். எ - று.

முன்னாள் கூடியிருந்தமை அந்நாண்மணந்தாரெனவே, பின் பிரிந்தாராதல் பெறுதும். வாழியென்பது குறிப்புச்சொல்; "வாலிழை மகளி ருயிர்ப்பொதி யவிழ்க்குங் காலை †" என்றாற்போல நண்புப் பொருண்மையாற் கூறப்பட்டது. வேலையென்பது ஆகுபெயர். வேலையென்பதற்கு வேலாயிருந்தாயென்பாருமுளர். (௧)

௧௨௨௨. புன்கண்ணை வாழி மருண்மாலை யெங்கேள்போல்
வன்கண்ண தோநின் றுணை. ௨.

தன்னுட்கையாற்றை அதன்மேலிட்டுச் சொல்லியது.

இ - ள். மருண்மாலை - மயங்கிய மாலாய்,—புன்கண்ணை - நீயுமெம்போலப் புன்கணுடையையாயிருந்தாய்,—நின்றுணை எங்கேள்போல் வன்கண்ணதோ - நின்றுணையும் எந்துணைபோல வன்கண்மையுடையதோ, கூறுவாயாக. எ - று.

மயங்குதல் பகலுமிரவுந் தம்முள் விரவுதல்; கலங்குதலுந்தோன்றநின்றது. புன்கண் ஒளியிழத்தல்; அதுபற்றித்

துணையுமுண்டாக்கிக் கூறினாள். எச்சவும்மை விகாரத்தாற்றொக்கது. எமக்குத் துன்பஞ்செய்தாய், நீயுமின்பமுற்றிலையென்னுங் குறிப்பால் வாழியென்றாள். (௨)

கஉஉ௩. பனியரும்பிப் பைதல்கொள் மாலை துனியரும்பித்
துன்பம் வளர வரும். ௩.

ஆற்றல்வேண்டுமென்ற தோழிக்குச் சொல்லியது.

இ - ள். பனி அரும்பிப் பைதல்கொள் மாலை - காதலர் கூடிய நாளெல்லாம் என் முன் நடுக்கமெய்திப் பசந்துவந்த மாலை—துனி அரும்பித் துன்பம் வளர வரும்-இக் காலத்து எனக்கிறந்துபாடு வந்துதோன்றி அதற்கேதுவாகிய துன்பம் ஒருகாலைக்கொருகால் மிக வாராநின்றது. எ - று.

குளிர்ச்சி தோன்ற மயங்கிவருமாலையென்றுஞ் செம்பொருளும் இக்குறிப்புணர நின்றது. துனி உயிர்வாழ்தற்கண்வெறுப்பு. அதனால் யானாற்றுமாறென்னையென்பது குறிப்பெச்சம்.

(௩)

கஉஉ௪. காதலரில்வழி மாலை கொலைக்களத்
தேதிலர் போல வரும். ௪.

* பழமொழி, ௨. † கலி, நெய்தல், ௨.

கஉ௩ ம் அதி—பொழுதுகண்டிரங்கல்.

க. இரு

துறையது.

இ - ள். மாலை - காதலருள்ளபொழுதெல்லாம் என்னுயிர் தளிப்ப வந்தமாலை,—காதலர் இல்வழி - அவரில்லாத இப்பொழுது—கொலைக்களத்து ஏதிலர்போலவரும்- அஃதொழிந்து தளிர்த்தலேயன்றிக் கொல்லுங்களரியிற்கொலைஞர் வருமாறுபோல அவ்வினைக்கோடற்கு வாராநின்றது. எ - று.

ஏதிலர் அருள்யாதுமில்லார். முன்னெல்லாம் எனக்கு நட்பாய் இன்பஞ்செய்து வந்தபொழுதும் இன்று என்மேற்பகையாய்த் துன்பஞ்செய்து வாராநின்றது, இனி யானுற்றமாறென்னை யென்பதாம்.
(ச)

கஉடுரு. காலைக்குச் செய்தநன் றென்கொ லெவன்கொல்யான்
மாலைக்குச் செய்த பகை. ரு.

இதுவுமது.

இ - ள். காலையும், மாலையும், அவர் கூடியஞான்றுபோலாது இஞ்ஞான்று வேறுபட்டு வாராநின்றன : அவற்றுள்,—யான் காலைக்குச் செய்த நன்று என் - யான் காலைக்குச் செய்தவுபகாரம் யாது ?—மாலைக்குச் செய்த பகை எவன் - மாலைக்குச் செய்த அபகாரம் யாது ? எ - று.

கூடியஞான்று பிரிவென்றஞ்சப்பண்ணிய காலை அஃதொழிந்து இஞ்ஞான்று கங்குல்வெள்ளத்திற்குக் கரையாய் வாராநின்றதென்னுங்கருத்தால் நன்றென்கொ லென்றும், கூடியஞான்று இன்பஞ்செய்துவந்த மாலை அஃதொழிந்து இஞ்ஞான்று அளவிறந்துன்பஞ்செய்யாநின்றதென்னுங் கருத்தாற் பகையெவன்கொலென்றுங் கூறினாள். பகை ஆகுபெயர். தன்னோடொத்த காலைபோலாது மாலை தன்கொடுமையாற் றுன்பஞ் செய்யாநின்றதென்பதாம்.
(ரு)

கஉஉசு. மாலைநோய் செய்தல் மணந்தா ரகலாத
காலை யறிந்த திலேன். சு.

இன்று இன்னையாகின்ற நீ அன்று அவர்பிரிவிற்குடம்பட்ட
தென்னையென்றாட்குச் சொல்லியது.

இ - ள். மாலை நோய் செய்தல் - முன்னெல்லாம் எனக்கு நட்பாய் இன்பஞ் செய்துபோந்த மாலை இன்று பகையாய்த்

துன்பஞ்செய்தலை—மணந்தார் அகலாத காலை அறிந்தது இலேன் - காதலர் பிரிதற்குமுன்னே அறியப்பெற்றிலேன்! எ - று.

இவ்வனம் வேறுபடுதலறிந்திலேன், அறிந்தேனாயின் அவர் னென்பதாம்.

பிரிவிற்குடம்படேன்
(௬)

கஉஉஎ. காலை யரும்பிப் பகலெல்லாம் போதாகி
மாலை மலருமிந் நோய். எ.

மாலைப்பொழுதின்கண் இனையையாதற்குக் காரண
மென்னையென்றாட்குச் சொல்லியது.

இ - ள். இந்நோய் - இக்காமநோயாகிய பூ—காலை அரும்பி - காலைப்பொழுதின் கணரும்பி,—பகல் எல்லாம் போது ஆகி - பகற்பொழுதெல்லாம் பேரரும்பாய் முதிர்ந்து,—மாலை மலரும் - மாலைப்பொழுதின்கண் மலராநிற்கும். எ - று. [illegible] [illegible]ம்.

## அதி.—பொழுதுகண்டிரங்கல்:

தமியேனுற்றபொழுதாகலிற் கனவின்கட்கூட்டம்பிறத்தல்பற்றிக் காலை யரும்பியென்றும், பின் பொழுது செலச்செல அதுமறந்து பிரிவுன்னியாற்றாமைபற்றிப் பகலெல்லாம் போதாகியென்றும், தத்தந்துணையையுள்ளி வந்துசேரும் விலங்குகளையும் மக்களையுங்கண்டு தான் அக்காலத்திலுணர்ந்தவிப்பிரிவாற்றாமைமிகுதி பற்றி மாலைமலருமென்றும் கூறினள். பூப்போல இந்நோய் காலவயத்ததாகாநின்றதென்பது உருவகத்தாற்பெறப்பட்டது. ஏகதேசவுருவகம். (௭)

கஉஉஅ. அழல்போலு மாலைக்குத் தூதாகி யாயன்
குழல்போலுங் கொல்லும் படை. அ.

இதுவுமது.

இ - ள். ஆயன் குழல் - முன்னெல்லாம் இனியதாய்ப்போந்த

ஆயன்குழல்— அழல்போலும் மாலைக்குத் தூதாகி - இதுபொழுது
அழல்போலச் சுடுவதாய மாலைக் குத் தூதுமாய்,—கொல்லும் படை
ஆம் - வந்தென்னைக்கொல்லுழிக் கொல்லும் படையுமாயிற்று. எ - று.

பின்னின்ற போலுமென்பது உரையசை. முன்னரே வரவுணர்த்தலிற் றூதா யிற்று, கோறற்கருவியாக லிற் படையாயிற்று. தானே சுடவல்லமாலை இத்துணையும் பெற்றால் என்செய்யாதென்பதாம்.
(௮)

௧௨௨௯. பதிமருண்டு பைதல் உழக்கு மதிமருண்டு
மாலை படர்தரும் போழ்து. ௯.

இதுவுமது.

இ - ள். இதற்கு முன்னெல்லாம்
மாலை படர்தரும் போழ்து - இனி
யானேமயங்கி நோயுழந்தேன்,—மதி மருண்டு
கண்டாரும் மதிமருளும்வகை மாலை வரும்
பொழுது—பதி மருண்டு பைதல் உழக்கும் - இப்பதியெல்லாம் மயங்கி
நோயுழக் கும், எ - று.

மதிமருளவென்பது மதிமருண்டெனத் திரிந்துநின்றது. உற்றமாகக் கருதிக் கூறினாளாகலின் மாலைபடர்தரும் போழ்தென்றாள். யானிறந்து படுவலென்பதாம். மாலை மயங்கிவரும் போழ்து என் பதி நிலைகலங்கி நோயுழக்குமென்றுரைப் பாருமுளர்.
(௯)

௧௨௩௰. பொருண்மாலை யாளரை யுள்ளி மருண்மாலை
மாயுமென் மாயா வுயிர். ௰.

இதுவுமது.

இ - ள். மாயா என் உயிர் - காதலர்பிரிவைப் பொறுத்து

இறந்துபடாதிருந்த என்னுயிர்—பொருண்மாலையாரை உள்ளி மருண்மாலை மாயும் - இன்று பொருளியல்பே தமக்கியல்பாகவுடையவரை நினைந்து, இம்மயக்குமாலைக்கண்ணே இறந்துபடாநின்றது. எ - று.

குறித்தபருவம் கழியவும் பொருண்முடிவு நோக்கி வாராமையின் சொல்வேறு படாமையாகிய தம்மியல்பொழிந்தவர் அப்பொருளியல்பே தம்மியல்பாயினர், கால மிதுவாயிற்று, இனி நீ சொல்லுகின்றவாற்றுற் பயனில்லையென்பதாம். (௧௦)

## ௧௨௪ ம் அதி.—உறுப்புநலனழிதல்.

அஃதாவது தலைமகடன் கண்ணும், தோளும், நுதலு முதலாய அவயவங்கள் தம்மழகழிதல். இஃது, இரக்கமிக்குழி வைக்கப்பட்டது.
நிகழ்வதாகலின், பொழுதுகண்டிரங்கலின்பின்

௧௨௩௧. சிறுமை நமக்கொழியச் சேட்சென்றா ருள்ளி
நறுமலர் நாணின கண். ௧.

ஆற்றுமை மிகுதியான் வேறுபட்ட தலைமகட்குத் தோழி சொல்லியது.

இ - ள். சிறுமை நமக்கு ஒழியச் சேட்சென்றார் உள்ளி - இவ்வாற்றுமை நங்கண் ஒழியத் தாஞ்சேணிடைச்சென்ற காதலரை நீ நினைத்தழுதலால்,—கண் நறுமலர் நாணின - நின் கண்கள் ஒளியிழந்து முன்றமக்கு நாணிய நறுமலர்கட்கு இன்று தாம் நாணிவிட்டன. எ - று.

நமக்கென்பது வேற்றுமைமயக்கம். உள்ளவென்பது உள்ளியெனத் திரிந்துநின்றது. உள்ளுதலென்பது காரணப்பெயர் காரியத்திற்காயவாகுபெயர். இவைகண்டார் அவரைக் கொடுமைகூறுவர்,

நீயாற்றல் வேண்டுமென்பது கருத்து. (௪)

௧௨௩௨. நயந்தவர் நல்காமை சொல்லுவ போலும்
பசந்து பனிவாருங் கண். ௨.

இதுவுமது.

இ - ள். பசந்து பனிவாரும் கண் - பசப்பெய்தன்மேனீர்வாரநின்ற நின்கண்கள்—நயந்தவர் நல்காமை சொல்லுவ போலும் - நம்மானயக்கப்பட்டவரது நல்காமையைப் பிறர்க்குச் சொல்லுவபோலாநின்றன, இனி நீயாற்றல்வேண்டும். எ - று.

சொல்லுவபோறல் அதனையவருணர்தற்கனுமானமாதல். நயந்தவர்க்கென்று பாடமோதுவாருமுளர். (௨.)

௧௨௩௩. தணந்தமை சால வறிவிப்ப போலு
மணந்தநாள் வீங்கிய தோள். ௩.

இதுவுமது.

இ - ள். மணந்த நாள் வீங்கிய தோள் - காதலர் மணந்தஞான்று இன்பமிகுதியாற் பூரித்த நின்றோள்கள்—தணந்தமை சால அறிவிப்பபோலும் - இன்று அவர் பிரிந்தமையை விளங்க உணர்த்துவதுபோல மெலியாநின்றன, இது தகாது. எ - று.

அன்றுமவ்வாறு பூரித்து இன்றுமிவ்வாறு மெலிந்தால் இரண்டுங் கண்டவர் கடிதினறிந்து அவரைத் தகவின்மை கூறுவரென்பதாம். (௩.)

௧௨௩௪. பணைநீங்கிப் பைந்தொடி சோருந் துணைநீங்கித்
தொல்கவின் வாடியதோள். ௪.

இதுவுமது.

இ - ள். துணை நீங்கித் தொல் கவின் வாடிய தோள் - அன்றுநந்துணைவர் நீங்குதலான் அவராற்பெற்ற

செயற்கையழகேயன்றிப் பழையவியற்கையழகுமிழந்த இத் கூடுகூ

## கூஉசம் அதி-ஊஉறுப்புநலனழிதல்.

தோன்தன்—பிணை நீங்கிப் பைந்தொடி சோரும் - இன்றதற்குமேலே தம்பெருமை பிழந்து வனை கழலாநின்றன, இவை யிங்ஙனஞ் செயற்பாலவல்ல. எ - று.

பெருமையிழத்தல் மெலிதல். பைந்தொடி பசிய பொன்னாற்செய்த தொடி, சோருமென்னும் வினைத்தொழில் தோன்மேனின்றது. அன்றும்பிரிந்தாரென்று அவ ரன்பின்மையுணர்த்தி இன்றுங் குறித்தபருவத்து வர்திலரென்று அவர் பொய்மை புணர்த்தாநின்றன; இனி அவற்றைக்கூறுகின்றார்மேற் குறையுண்டோவென்பதாம்.()

கஉஙகு. தொடியார் கொடுமை யுரைக்குந் தொடியொடு
தொல்கவின் வாடிய தோள். ரு.

### இதுவுமது.

இ - ள். கொடியார் கொடுமை உரைக்கும் - கவவுக்கை நெகிழினும் ஆற்று நாட்கு இக்கால நீட்டத்து என்னுமென்று நினையாத கொடியாரது கொடுமையைத் தாமே சொல்லாநின்றன—தொடியொடு தொல்கவின் வாடிய தோள் - வளைகளுங் கழன்று பழைய வியற்கையழகுமிழந்த இத்தோள்கள், இனியதனை யாமறைக்குமா றென்னை! எ - று.

உரைக்குமென்பது அப்பொருண்மைதோன்ற நின்ற குறிப்புச்சொல். ஒடு வேறு வினைக்கண் வந்தது. அவரொடு கலந்த தோள்களே சொல்லுவனவானல் அயலார் சொல்லுதல் சொல்லவேண்டுமோ வென்பதாம். (௬)

கஉஙசு. தொடியொடு தோணெகிழ நோவ லவரைக்
கொடிய ரெனக்கூற றொந்து. சு.

தாஞற்றுதற்போருட்டியற்பழித்த தோழிக்குத் தலைமகன் சோல்லியது.

இ - ள். தொடியொடு தோள் நெகிழ - யானாற்றவும் என்வயத்தவன்றித் தொடி தன் கழலுமாறு தோள்கண்மெலிய,—அவரைக் கொடியர் எனக் கூறல் நொந்து நோவல் - அவற்றைக் கண்டு நீயவரைக் கொடியரெனக் கூறுதலைப் பொறுது யானென்னுள்ளே நோவாநின்றேன். எ - று.

ஒடு மேல்வந்தபொருண்மைத்து. யானாற்றேனாகின்றது அவர் வாராததற்கன்று, நீ கூறுகின்றதற் கென்பதாம். (■)

௬௨௬எ. பாடு பெறுதியோ நெஞ்சே கொடியார்க்கென்
வாடுதோட் பூச லுரைத்து. எ.

அவ்வியற்பழிப்புப்போருது தன்னெஞ்சிற்குச் சோல்லியது.

இ - ள். நெஞ்சே - நெஞ்சே,—கொடியார்க்கு என் வாடுதோட்பூசல் உரைத்து- இவள் கொடியாரென்கின்றவர்க்கு நீசென்று என்மெலிகின்ற தோளினால் விளைகின்ற ஆரவாரத்தைச்சொல்லி—பாடு பெறுதியோ - ஒருமேம்பாடெய்தவல்லையோ, வல்லையாயின் அதனையொப்பதில்லை. எ - று.

கொடியார்க்கென்பது கொடியரல்லரென்பது தோன்றநின்ற குறிப்புச்சொல். வாடுதோளென்பதும் அவை தாமே வாடாநின்றனவென்பது தோன்றநின்றது. பூசல் ஆகுபெயர். அஃது அவள் தோளுக்கியற்பழித்தன்மேலும் அதனாற்றனக்

கசுரு ம் அதி:—நெஞ்சொடுகிளத்தல்.

௬௨௭

காற்றுமை மிகன்மேலும் நின்றது, நின்றுழை கேட்டலும் அவர் வருவர், வந்தால் இவையெல்லாநீங்கும், நீங்க அஃதெனக்குக் காலத்தினாற்செய்த நன்றியாமாகலின், அதன்பயனெல்லாமெய்துதியென்னுங் கருத்தாற் பாடுபெறுதியோவென்றான். (எ)

௧௨௩௮. முயங்கிய கைகளை யூக்கப் பசந்தது
பைந்தொடிப் பேதை நுதல். அ.

வினைமுடித்து மீடலுற்ற தலைமகன் முன்னிகழ்ந்தது நினைந்து

தன்னுள்ளே சொல்லியது.

இ - ள். முயங்கிய கைகளை யூக்க - தன்னையிறுக முயங்கிய கைகளை இவட்கு நோமென்று கருதி ஒருஞான்றியானெகிழ்த்தேனாக,—பைந்தொடிப் பேதை நுதல் பசந்தது - அத்துணையும் பொறாது பைந்தொடிகளையணிந்த பேதையது நுதல் பசந்தது, அப்பெற்றித்தாய நுதல் இப்பிரிவிற்கியாது செய்யுமோ! எ - று.

இனிக்கடிதிற் செல்லவேண்டுமென்பது கருத்து. (அ)

௧௨௩௯. முயக்கிடைத் தண்வளி போழப் பசப்புற்ற
பேதை பெருமழைக் கண். கூ.

இதுவுமது.

இ - ள். முயக்கிடைத் தண் வளி போழ - அங்ஙனங்கைகளை யூக்குதலான் அம் முயக்கிடையே சிறுகாற்று நுழைந்ததாக,—பேதை பெருமழைக்கண் பசப்புற்ற - அத் துணையிடையீடும் பொறாது, பேதையுடைய பெரியமழைக்கண்கள் பசப்புற்றன; அத் தன்மையவான கண்கள் மலைகளும், காடும், நாடுமாய இவ்விடையீடெல்லாம் யாங்ஙனம் பொறுத்தன! எ - று.

தன்மை ஈண்டு மென்மைமேனின்றது. போழவென்றது உடம் பிரண்டும் ஒன் றுனதுதோன்ற நின்றது. மழை குளிர்ச்சி. (க)

கஉ௫0. கண்ணின் பசப்போ பருவர லெய்தின்றே
ஒண்ணுதல் செய்தது கண்டு. கυ.

இதுவுமது.

இ - ள். கண்ணின் பசப்போ பருவரல் எய்தின்று - தண்வளி போழவந்த கண் ணின்பசப்புத் துன்பமுற்றது,—ஒண்ணுதல் செய்தது கண்டு - தனக்கயலாய ஒண்ணு தல் விளைத்த பசப்பைக்கண்டு. எ - று.

அது கைகளையூக்க அவ்வளவிற்பசந்தது, யான் கைகளையுமுக்கி மெய்களுங்கிச் சிறுகாற்று மூடறுக்குற் துணையும் பசந்திலனெனத் தன்வன்மையும் அதன்மென் மையுங்கருதி வெள்கிற்றென்பதாம். ஆகவே, அவளுறுப்புக்கள் ஒன்றினொன்று முற் பட்டு கலனழியும், யாங்கடிதிற் சேறுமென்பது கருத்தாயிற்று. (௰)

---

## கஉ௫ ம் அதி.—நெஞ்சொடுகிளத்தல்.

அஃதாவது ஆற்றுமை மீதூரத் தனக்கோர் பற்றுக்கோடு காணுத தலைமகள் தன்னெஞ்சொடு செய்திறனறியாது சொல்லுதல். இஃது, உறுப்புக்கள் நலனழிக் தவழிக்கழ்வதாகலின், உறுப்பு நலனழிதலின்பின் வைக்கப்பட்டது.

## கஉ௫ ம் அதி.—நெஞ்சொடுகிளத்தல்.

கஉ௫க. நினைத்தொன்று சொல்லாயோ நெஞ்சே
எனைத்தொன்று

மெவ்வநோய் தீர்க்கு மருந்து.

க.

தன்னாற்றாமைதீரத்திறனுடையது.

இ - ள். நெஞ்சே - நெஞ்சே—எவ்வநோய் தீர்க்கும் மருந்து ஒன்று - இவ்வெவ்வநோயினைத் தீர்க்குமருந்தாவ தொன்றனை—எனைத்து ஒன்றும் நினைத்துச் சொல்லாய் - யானறியுமாற்றலிலன், எத்தன்மையதாயதொன்றாயினும் நீயறிந்தெனக்குச் சொல். எ - று.

எவ்வம் ஒன்றானுந் தீராமை. உயிரினுஞ் சிறந்த நாணினை விட்டேச் செய்வதியா தொன்றாயினு மென்பான், எனைத்தொன்று மென்றாள்.
(௧)

௧௨௪௨. காத லவரில ராகநீ நோவது
பேதைமை வாழியென் னெஞ்சு. ௨.

தலைமகனைக் காண்டற்கண் வேட்கைமிகுதியாற் சொல்லியது.

இ - ள். என் நெஞ்சு வாழி - என்னெஞ்சே, வாழ்வாயாக;—அவர் காதல் இலர் ஆக நீ நோவது - அவர் நங்கட்காதலிலராகவும் நீயவர்வரவு நோக்கி வருந்துதற் கேது—பேதைமை - நின்பேதைமையே, பிறிதில்லை. எ - று.

நம்மை நினையாமையின் நங்கட்காதலிலரென்ப தறியலாம், அஃதறியாமை

மேலும் அவர்பாற்செல்லக் கருதாது அவர்வரவுபார்த்து வருந்தாநின்றாய், இது நீ செய்துகொள்கின்றதென்னுங் கருத்தாற் பேதைமையென்றாள். வாழி இகழ்ச்சிக் குறிப்பு. யாமவர்பாற்சேறலே அறிவாவதென்பதாம்.
(௨)

௧௨௪௩. இருந்துள்ளி யென்பரித னெஞ்சே பரிந்துள்ளல்
பைதனோய் செய்தார் கணில். ௩.

இதுவுமது.

௧௨௪௫. செற்றா ரெனக்கை விடலுண்டோ நெஞ்சேயா
முற்றா லுறாஅ தவர். ௫

இ-ள். நெஞ்சே - நெஞ்சே,—யாம் உற்றால் உறாதவர் - யாம் தம்மையுறத் தாமுறாத அக்காதலரை—செற்றாரெனக் கைவிடல் உண்டோ - வெறுத்தாரென்று கருதிப் புலந்து கைவிட்டிருக்கும்வலி எமக்குண்டோ, இல்லை. எ-று.

உறுதல் அன்புபடுதல். அவ்வலியின்மையின் அவர்பாற்செல்வதே தென்பதாம்.

பெயர்க்குத் தருவ

(௫)

௧௨௪௬. கலந்துணர்த்துங் காதலர்க் கண்டாற் புலந்துணராய்
பொய்க்காய்வு காய்திஎன் னெஞ்சு. ௬

தலைமகன் கொடுமைநினைந்து செலவுடன்படாத நெஞ்சினைக் கழறியது.

இ-ள். என் நெஞ்சு - என்னெஞ்சே,—கலந்து உணர்த்தும் காதலர்க்கண்டாற் புலந்து உணராய் - யான்றம்மொடு புலந்தால் அப்புலவியைக் கலவிதன்னானே நீக்க வல்ல காதலரைக் கண்டாற் பொய்யேயாயினும் ஒருகாற் புலந்து பின்னதனை நீக்க மாட்டாய்,—பொய்க் காய்வு காய்தி - அதுவுமாட்டாத நீ இப்பொழுது அவர் கொடிய ரெனப் பொய்க்காய்வு காயாநின்றாய்; இனியிதனை யொழிந்து அவர்பாற்செல்லத் துணிவாயாக. எ-று.

கலத்தலானென்னும் பொருட்டாய கலக்கவென்பது திரிந்து நின்றது. அதனா னுணர்த்தலாவது கலவியின்பத்தைக் காட்டி அதனான் மயக்கிப் புலவிக்குறிப்பினை யொழித்தல். பொய்க்காய்வு நிலையில் வெறுப்பு. கண்டால் மாட்டாத நீ காணாதவழி வெறுக்கின்றதனாற் பயனில்லையென்பதாம். (௬)

௧௨௪௭. காமம் விடுவொன்றோ நாண்விடு நன்னெஞ்சே

யாஞெ பொறேனிவ் விரண்டு. எ.

நாண்டடுத்தலின் அச்சேலவோழிவாள் சோல்லியது.

இ - ள். நன்னெஞ்சே - நல்லநெஞ்சே,—ஒன்று காமம் விடு - ஒன்றின் நாண் விடமாட்டாயாயிற் காமவேட்கையை விடு,—(ஒன்று) நாண் விடு - ஒன்றின் அது விடமாட்டாயாயின் நாணினை விடு,—இவ்விரண்டு யாஞெ பொறேன் - அன்றியே இரண்டும் விடாமை நின்கருத்தாயின், ஒன்றற்கொன்று மறுதலையாய இவ்விரண் டினையும் உடன்றாங்குமதுகை யானிலன். எ - று.

யாஞெவென்னும் பிரிநிலை ஏ
யென்றது, இரண்டையும் விடாது

பொறுப்பினு மென்பதுபட நின்றது. நன்னெஞ்சே
பெண்மையை நிலைபெறுத்தலின், நல்லயென்னும்

குறிப்பிற்று. அது நன்றேயெனினும் என்னுயிருண்டாதல்
இன்றிலெனென்பதாம். முற்றும்மை விகாரத்தாற்றொக்கது.

சாலாமையின், அதற்கா

(எ)

கஉசஅ. பரிந்தவர் நல்காரென் றேங்கிப் பிரிந்தவர்
பின்செல்வாய் பேதையென் னெஞ்சு. அ.

கஉ௦
ரு அ 1 ககசு ம் அதி,—நிறையழிதல்.

இதுவுமது.

இ - ள். என் நெஞ்சு - என்னெஞ்சே,—அவர் பரிந்து நல்காரென்று - அவர் இவ்வாற்றாமையை யறியாமையின் நொந்துவந்து தலையளிசெய்யாராயினரென்று கருதி—பிரிந்தவர்பின் ஏங்கிச் செல்வாய் பேதை - அஃதறிவித்தற்பொருட்டு நம்மைப் பிரிந்துபோயவர்பின் ஏங்கிச்செல்லுற்ற நீ யாதுமறியாய். எ - று.

ஆற்றாமைகண்டவழியும் நல்காது போயினாரைக் காணாதவழிச் சென்றறிவித்த துணையானே நல்குவரென்று கருதினமையிற் பேதையென்றாள். (அ)

௧௨௪௯ உள்ளத்தார் காத லவராக வுள்ளிநீ
யாருழைச் சேறியென் னெஞ்சு. ௯.

இதுவுமது

இ - ள். என் நெஞ்சு - என்னெஞ்சே,—காதலவர் உள்ளத்தாராக - காதலர் நின்னகத்தாராக,—நீ உள்ளி யாருழைச் சேறி - முன்பெல்லாங் கண்டுவைத்து இப்பொழுது நீ புறத்துத் தேடிச் செல்கின்றது யாரிடத்து! எ - று.

உள்ளமென்புழி அம்முப் பகுதிப்பொருள்விகுதி. நின்னகத்திருக்கின்றவரை அஃதறியாது புறத்துத்தேடிச்சேறல் நகையுடைத்து, அதனையொழியென்பதாம். (௯)

௧௨௫௦. துன்னாத் துறந்தாரை நெஞ்சத் துடையேமா
வின்னு மிழத்துங் கவின். ௰.

அவரை மறந்தாற்றல்வேண்டுமென்பதுபடச் சொல்லியது.

இ - ள். துன்னாத் துறந்தாரை நெஞ்சத்து உடையேமா - நம்மைக்

கூடாவண்
ணந் துறந்துபோயினாரை நாம் நம்மகத்துடையேமாக,—இன்னும் கவின் முன்னிழந்த புறக்கவினேயன்றி நின்ற அகக்கவினுமிழப்பேம். எ - று.

இழத்தும் -

"குன்றி - னெஞ்சுபக வெறிந்த வஞ்சுடர் நெடுவேல்*" என்புழிப்போல நெஞ்சென்பது ஈண்டும் அகப்பொருட்டாய் நின்றது. அவர் நம்மைத்தன்னுமற்றுறந்தாராகவும், நாமவரை மறந்தன்மாட்டேமாகவும், போன மெய்க்கவினேயன்றி நின்ற நிறையுமிழப்பேமென்பதாம். (௧0)

---

## ௧௨௬-ம் அதி.—நிறையழிதல்.

அஃதாவது தலைமகள் மனத்தடக்கற்பாலனவற்றை வேட்கைமிகுதியான் அடக்கமாட்டாது வாய்விடுதல்: "நிறையெனப்படுவது மறைபிறரறியாமை†" என்றார் பிறரும். அஃதழிதற்காரணம் நெஞ்சொடுகிளத்தலமையின், இது நெஞ்சொடுகிளத்தலின்பின் வைக்கப்பட்டது.

௧௨௫௧. காமக் கணிச்சி யுடைக்கு நிறையென்னு
நாணுத்தாழ் வீழ்த்த கதவு. ௧.

நாணுநிறையுமழியாமை நீயாற்றல்வேண்டுமென்ற
தோழிக்குத் தலைமகள் சொல்லியது.

* குறுந்தொகை, கடவுள் வாழ்த்து. † கலி, நெய்தல், ௧௧.



இ-ள். நாணுத் தாழ் வீழ்த்த நிறையென்னுங் கதவு - நாணாகிய தாழினைக் கோத்த நிறையென்னுங் கதவினை—காமக் கணிச்சி உடைக்கும் - காமவேட்கையாகிய கணிச்சி முறியாநின்றது, இனி அவை நிற்றலுமில்லை, யானாற்றலுமில்லை. எ-று.

கணிச்சி குந்தாலி, நாணுள்ள துணையும் நிறையழியாதாகலின் அதனைத் தாழாக்கியும், அகத்தனவற்றைப் பிறர்கொள்ளாமற் காத்தலின் நிறையைக் கதவாக்கியும், வலியவாய்த் தாமாக நீங்காத அவ்விரண்டனையும் ஒருங்கு நீக்கலிற் றன்காமவேட்கையைக் கணிச்சியாக்கியுங் கூறினாள். (௧)

௧௨௫௨. காம மெனவொன் றோ கண்ணின்றென் னெஞ்சத்தை
யாமத்து மாளுந் தொழில். ௨.

நெஞ்சின்கட்டோன்றிய காமம் நெஞ்சாலடக்கப்படு
மென்றாட்குச் சொல்லியது.

இ - ள். யாமத்தும் என் னெஞ்சத்தைத் தொழில் ஆளும் - எல்லாருந்தொழி லொழியு மிடையாமத்தும் என்னெஞ்சத்தையொறுத்துத் தொழில்கொள்ளாநின் றது,—காமமென ஒன்று கண் இன்று - ஆகலாற் காமமென்றுசொல்லப்பட்ட வொன்று கண்ணோட்டமின்றாயிருந்தது. எ - று.

ஓவென்பது இரக்கக்குறிப்பு. தொழிலின்கண்ணேயாடல் தலைமகன்பாற்செல விடுத்தல். தாயைப்பணிகோடல் உலகியலன்மையிற் காமமெனவொன்றென்றும், அது தன்னைக்கொள்கின்றது அளவறியாது கோடலிற் கண்ணின்றென் றுங்கூறினாள் . அடக்கப்படாமை கூறியவாறு. (௨)

௧௨௫௩. மறைப்பேன்மற் காமத்தை யானோ குறிப்பின்றித்
தும்மல்போற் றோன்றி விடும். ௩.

மகளிர்காமம் மறைக்கப்படுமென்றாட்குச் சொல்லியது.

இ - ள். காமத்தை யான் மறைப்பேன் - இக்காமத்தை யானென்னுள்ளே மறைக் கக்கருதுவேன்;—குறிப்பு இன்றித் தும்மல்போல் தோன்றி விடும் - அதுவென், இஃதென்கருத்தின் வாராது தும்மல்போல வெளிப்பட்டேவிடாநின்றது. எ - று.

மன் ஒழியிசைக்கண் வந்தது. ஓகாரம் இரக்கற்கண் வந்தது. தும்மலடக்கா தாற்போல அடக்குநின்றதில்லையென்பதாம். (௩)

௧௨௫௪. நிறையுடையே னென்பேன்மன் யானோவென் காம
மறையிறந்து மன்று படும். ௪.

இதுவுமது.

இ - ள். யான் நிறையுடையேன் என்பேன் - இன்றுகாறும் எல்லாம் யானென்னை நிறையுடையேனென்று கருதியிருந்தேன்;—என் காமம் மறை இறந்து மன்று படும் - அதனுலென், இன்றென்காமம் மறைத்தலைக்கடந்து மன்றின்கண் வெளிப்படாநின்றது. எ - று.

மன்னும் ஓவும் மேலவற்றின்கண் வந்தன. மன்றுபடுதல் பலருமறிதல். இனி நன்னைத்தன்றென்பதாம்.

(௫) க.க்.. ௧௨௫௫. அறி.—நிறையழிதல்.

௧௨௫௫. செற்றார்பின் செல்லாப் பெருந்தகைமை காமநோ
யுற்றா ரறிவதொன் றன்று. ௫.

நம்மைமறந்தாரை நாமுமறக்கற்பாலமென்றாட்குச்சொல்லியது

இ - ள். செற்றார்பின் செல்லாப் பெருந்தகைமை - தம்மையகன்றுசென்றார் பின் செல்லாது தாமும் அகன்றுநிற்குநிறையுடைமை—காமநோய் உற்றார் அறிவது ஒன்று அன்று - காமநோயினையுறுதார் அறிவதொன்றன்றி உற்றார் அறிவதொன்றன்று. எ-று.

இன்பத்தொடு கழியுங்காலத்தைத் துன்பத்தொடு கழியுமாறு செய்தலிற் செற்றா ரென்றாள். பின்சேறல் மனத்தால் இடைவிடாது நினைத்தல். பெருந்தகைமை ஈண் டாகுபெயர். காமநோயுறுதார் மானமுடையார். நன்றெனவுணராமாட்டின் சென்றே நிற்கும் யானறிவதொன்றன்றென்பதாம்.

*கஉ௬௬. செற்றவர் பின்சேறல் வேண்டி யளித்தரோ*
*வெற்றென்னை யுற்ற துயர்.* ௬.

இதுவுமது.

இ - ள். *செற்றவர்பின் சேறல் வேண்டி* - என்னையகன்று சென்றார்பின்னே யான் சேறலைவேண்டுதலான்,—என்னை உற்ற துயர் எற்று அளித்து - *என்னை யுற்ற துயர் எத்தன்மையது ! சால நன்று.* எ - று.

*செற்றவரென்றது ஈண்டும் அப்பொருட்டு. வேண்டவென்பது வேண்டியெனத் திரிந்துநின்றது. அளித்தென்பது* இகழ்ச்சிக்குறிப்பு. இக்காமநோய் யான் சொல்ல வுங்கேட்கவுமாவதொன்றன்று, *சாலக்கொடிதென்பதாம்.* (௬)

*கஉ௬௭. நாமென வொன்றோ வறியலங் காமத்தாற்*
*பேணியார் பெட்ப செயின்.* ௭.

பரத்தையிற்பிரிந்துவந்த தலைமகனோடு நிறையழிவா ற் கூடியதலைமகள்
நீ புலவாமைக்குக் காரணம் யாதென்ற தோழிக்குச் சொல்லியது.

இ - ள். *பேணியார் காமத்தாற் பெட்ப செயின் - நம்மால் விரும்பப்பட்டவர் வந்து காமத்தால் நாம் விரும்பியவற்றைச் செய்புமளவின் —நாண் என ஒன்றோ அறியலம் - நாணென்றொன்றையும் அறியமாட்டேமாயிருந்தேம்.* எ - று.

*பேணியாரெனச் செயப்படுபொருள் வினைமுதல்போலக் கூறப்பட்டது. விரும் பியன வேட்கைமிகவினுற் கருதியிருந்த கலவிகள் . நாண் பரத்தையர் தோய்ந்த மார்பைத் தோய்தற்கு நாணுதல். ஒன்றென்பது ஈண்டுச் சிறிதென்னும் பொருட்டு. இழிவு சிறப்பும்மை விகாரத்தாற்றொக்கது. நிறையழிவான் அறியாது கூடிய*

தன் குற்றநோக்கி, அவனையுமனப்பழித்தான்.
(எ)

கஉ௫அ. பன்மாயக் கள்வன் பணிமொழி யன்றோநம்
பெண்மை யுடைக்கும் படை. அ.

இதுவுமது.

இ-ள். நம்பெண்மை உடைக்கும் படை - நம்நிறையாகிய அரணையழிக்குந் தானை—பன்மாயக் கள்வன் பணிமொழியன்றோ - பல பொய்களைவல்ல கள்வனுடைய தாழ்ந்த சொற்களன்றோ! ஆனபின் அதனிற்குமாறென்னை! எ-று.

௧௨௭ம் அதி.—அவர்வயின்விதும்பல்.

கஉ௫க.

பெண்மை நன்றித் தலைமைபற்றி நிறைமேனின்றது. வந்தாற் புலக்கக்கடவே மென்றும் புலந்தால் அவன்சொற்களாலுஞ் செயல்களாலும் நீங்கேமென்றும் இவை முதலாகவெண்ணிக்கொண்டிருந்தன யாவுங் காணுது கலவிக்கட்டன்னிலுமுற்பமிம் வகை வந்துதோன்றினனென்பான், பன்மாயக்கள்வனென்றான். பணிமொழி நம்பி னுந்தானன்புமிகுதியுடையனாகச் சொல்லுஞ்சொற்கள். அவன் அத்தன்மையனாக, சொற்கள் அவையாக, நந்நிறையழியாதொழியுமோ வென்பதாம்.
(அ)

கஉ௫௯ புலப்ப லெனச்சென்றேன் புல்லினே னெஞ்சம்
கலத்த லுறுவது கண்டு. கூ.

இதுவுமது.

இ-ள். புலப்பல் எனச் சென்றேன் - அவர் வந்தபொழுது புலக்கக்கடவே னென்று கருதி முன்னில்லாது பிறிதோரிடத்துப்போயினேன்; —நெஞ்சம் கலத்த லுறுவது கண்டு புல்லினேன் - போயும், என்னெஞ்சம் நிறையினில்லாது அறை போய்

அவரோடு கலத்தலுறுடங்குதலையறிந்து, இனி அது வாயாதென்று புல்லினேன். எ - று.

வாயாமை புலத்தற்கருவியாய நெஞ்சுதானே கலத்தற்கருவியாய் நிற்றலின் அது முடியாமை.
(௯)

கஉ௯ப. நிணந்தீயி லிட்டன்ன நெஞ்சினார்க் குண்டோ
புணர்ந்தூடி நிற்பே மெனல். ௯௦.

இதுவுமது.

இ - ள். நிணம் தீயில் இட்டன்ன நெஞ்சினார்க்கு - நிணத்தைத் தீயின்கண்ணே யிட்டால் அஃதுருகுமாறுபோலத் தங்காதலரைக் கண்டால் நிறையழிந்துருகுநெஞ்சினையுடைய மகளிர்க்கு,—புணர்ந்து ஊடி நிற்பேம் எனல் உண்டோ - அவர் புணர யாமூடிப் பின்பு உணராது அந்நிலையே நிற்கக்கடவேமென்று கருதுதலுண்டாகுமோ, ஆகாது. எ - று.

புணர்தல் ஈண்டு மிகவணுகுதல்; எதிர்ப்படலுமாம். புணர வென்பது புணர்ந்தெனத் திரிந்து நின்றது. யானத்தன்மையேனாகலின் எனக்கஃதில்லையாயிற் றென்பதாம்.
(௯0)



கஉ௭ம் அதி.—அவர்வயின்விதும்பல்.

அஃதாவது செலவிடைப்பிரிவின்கட்டலைமகனும் தலைமகளும் வேட்கைமிகவி னான் ஒருவரையொருவர் காண்டற்கு விரைதல். தலைமக ன்பிரிவும் தலைமகளாற்றுமை யும் அதிகாரப்பட்டுவருகின்றமையின், இருவரையுங்கூட்டிப் பொதுவாகிய பன்மைப் பாலாற் கூறினர். பிறரெல்லாம் இதனைத் தலைமகளொழிவொக்கு தலைமகள் விதுப்புற லென்றார் : கட்டுப்பெயர் சொல்லுவான் குறிப்பொடு கூடியபொருளுணர்த்துவதல் லது தாமென்றற்குப் பெயராகாமையாலும், கவிகூற்றாய அதிகாரத்துத் தலைமகன் உயர்த்தற்பன்மையாற் கூறப்படாமையாலும், அஃதுரையன்மையறிக. இதனுட்டலை மகன் கூற்று நிறையழிவானிகழ்ந்ததாகலின், அவ்விவைபுபற்றி நிறையழிதலின்பின் வைக்கப்பட்டது.

## ௧௨ள ம் அதி.—அவர்வயின்விதும்பல்.

௧உ௬௧. வாளற்றுப் புற்கென்ற கண்ணு மவர்சென்ற
நாளொற்றித் தேய்ந்த விரல். ௧.

தலைமகள் காண்டல்விதுப்பினால் சொல்லியது.

இ - ள். அவர் சென்ற நாள் ஒற்றி விரல் தேய்ந்த - அவர் நம்மைப்பிரிந்துபோய நாள்கள் சுவரின்கணிழைத்தவற்றைத்தொட்டு எண்ணுதலான் என்விரல்கடேய்ந் தன;—கண்ணும் வாள் அற்றுப் புற்கென்ற - அதுவேயன்றி அவர்வரும் வழிபார்த்து என்கண்களும் ஒளியிழந்து புல்லியவாயின ; இவ்வாறும் அவர்வரவுண்டாயிற் றில்லை. எ - று.

நாள் ஆகுபெயர். புல்லியவாதல் நுண்ணிய காணமாட்டாமை. ஒற்றவென்பது ஒற்றியெனத் திரிந்துநின்றது. இனி யான் காணுமாறென்னையென்பதாம். நாளெண்ண லும் வழிபார்த்தலும் ஒருகாற் செய்தொழியாது இடையின்றிச்செய்தலான், விதுப் பாயிற்று.

(௪)

௧௨௩௨. இலங்கிழா யின்று மறப்பினென் றோன்மேற்
கலங்கழியுங் காரிகை நீத்து. ௨

ஆற்றாமைமிகுதலின் இடையின்றிநினைக்கற்பாலையல்லை சிறிது

மறக்கல்வேண்டுமென்ற தோழிக்குச் சொல்லியது.

இ - ள். இலங்கு இழாய் - விளக்காநின்றவிழையினையுடையாய்,—இன்று மறப் பின்-காதலரை இன்று யான் மறப்பேனாயின்,—மேல் காரிகை நீத்து என்றோள் கலங் கழியும்-மேலுங்காரிகையென்னை நீப்ப என்றோள்கள் வளைகழல்வனவாம். எ - று.

இலங்கிழாவென்பது இதற்கு நீ யாதும் பரியலைவென்னுங்குறிப்பிற்று. இன்று யானிறந்துபடுகின்றவின்று. மேலும் மறுபிறப்பினும். எச்சவும்மை விகாரத்தாற்றொக் கது. நீப்பவென்பது நீத்தெனத் திரிந்துநின்றது. கழியுமென்னும் இடத்துநிகழ் பொருளின்றொழில் இடத்தின்மேனின்றது. இவ்வெல்லைக்கணினைந்தால் மறமைக் கண் அவரையெய்தியின்புறலாம், அதனான் மறக்கற்பாலேனல்லேனென்பதாம். (௨)

௧௨௩௩. உரனசைஇ யுள்ளந் துணையாகச் சென்றார்
வரனசைஇ யின்னு முளேன். ௩

இதுவுமது.

இ - ள். உரன் நசைஇ உள்ளம் துணையாகச் சென்றார்-இன்பநுகர்தலை நச்சாது வேறலை நச்சி காத்துணையாதலையிகழ்ந்து தம்முக்கர்துணையாகப் போயினார்—வரல் நசைஇ இன்னும் உளேன் - அவர்றைவிகழ்ந்து ஈண்வெருதலை நச்சதலான், யானிவ் வெல்லையினுமுளேனாயினேன். எ - று.

உரனென்பது ஆகுபெயர். அக்கையாலுயிர்வாழாநின்றேன்.
இறந்துபடுவேனென்பதாம்.
அஃதில்லையாயின்
(௩)

௧௨௬௪. கூடிய காமம் பிரிந்தார் வரவுள்ளிக்
கோடுகொ டேறுமென் னெஞ்சு. ௪.

இதுவுமது.

இ-ள். பிரிந்தார் கூடியகாமம் வரவு உள்ளி -
நீங்கியகாமத்தராய் நம்மைப் பிரிந்துபோயவர் மேற்கூடியகாமத்துடனே
தங்கண்வருதலை நினைந்து,—என்னெஞ்சு

## ௧௨௭ம் அதி.—அவர்வயின்விதும்பல்.

௧௨௬௪ கோடுகொடு ஏறும் - என்னெஞ்சு வருத்தமொழிந்து
றது. எ - று.
மேன்மேற் பணைத்தெழாநின்

வினைவயிற்பிரிவுழிக் காமவின்பநோக்காமையும் அதுமுடிந்துழி அதுவேநோக்கு தலுந் தலைமகற்கியல்பாகலின், கூடியகாமமொடென்றாள். ஒடுவுருபு விகாரத்தாற் றொக்கது. கோடுகொண்டேறலாகிய மரத்ததொழில் நெஞ்சின்மேலேற்றப்பட்டது. கொண்டென்பது குறைந்துநின்றது. அஃதுள்ளிற்றிலேனாயின் இறந்துபடுவே னென்பதாம்.
(௪)

௧௨௬௫. காண்கமற் கொண்கனைக் கண்ணாரக் கண்டபி
னீங்குமென் மென்றோட் பசப்பு. ௫.

தலைமகன்வரவுகூறி ஆற்றுயாய்ப் பசக்கற்பாலை
யல்லையென்ற தோழிக்குச் சொல்லியது

இ-ள். கண் ஆரக் கொண்கனைக் காண்க-என் கண்கள் ஆரும்வகை என்கொண்கனை யான் காண்பேனாக;—கண்டபின் என்

மென்றோட்பசப்பு நீங்கும் - அவ்வனம் கண்டபின் என் மெல்லியதோளின்கட்பசப்புத் தானே நீங்கும். எ - று.

காண்கவென்பது ஈண்டு வேண்டிக் கோடற்பொருட்டு. அதுவேண்டுமென்பது பட நின்றமையின், மன் ஒழியிசைக்கண் வந்தது. கேட்டதனையா னின்னாதென்பதாம்.

(௬)

கஉகசு. வருகமற் கொண்க னொருநாட் பருகுவன்
பைதனோ யெல்லாங் கெட. சு.

## இதுவுமது.

இ - ள். கொண்கன் ஒருநாள் வருக - இத்துணைநாளும் வாராக்கொண்கன் ஒரு நாள் என்கண் வருவானாக;—பைதல் நோயெல்லாம் கெடப் பருகுவன் - வந்தாற் பையுளைச்செய்கின்ற இந்நோயெல்லாங்கெட அவ்வமிழ்தத்தை வாயில்களைத்தானும் பருகக்கடவேன். எ - று.

வருகவென்பதற்கும் மன்னென்பதற்கும் மேலுரைத்தவாறேகொள்க. அக்குறிப்பு அவ்வொருநாளைக்குள்ளே இனி வரக்கடவ நோய்களுங் கெடுப்பலென்ப தாம்.

(௭)

கஉகஎ. புலப்பேன்கொல் புல்லுவேன் கொல்லோ கலப்பேன்கொல்

கண்ணன்ன கேளிர் வரின். எ.

## இதுவுமது.

இ - ள். கண் அன்ன கேளிர் வரின் - கண்போற்சிறந்த கேளிர் வருவராயின்,— புலப்பேன்கொல் - அவர்வரவு நீட்டித்தமை நோக்கி யான் புலக்கக்கடவேனோ;புல்லுவேன்கொல்-அன்றி என்னாற்றாமைநோக்கிப்புல்லக்கடவேனோ,—கலப்பேன் கொல் - அவ்விரண்டும் வேண்டுதலான் அவ்விருசெயல்களையும்

விரவக்கடவேனோ, யாதுசெய்யக்கடவேன் 1 எ - று.

புலவியும் புல்லலும் ஒருபொழுதின்கண் விரவாமையிற் கலப்பேன்கொலென் றான். முன்றனைபுஞ்செய்தல் கருத்தாகலின், விதப்பாயிற்று. இனிக் கலப்பேன்கொ லென்பதற்கு ஒருபுறமைசெய்யாது பிரியாதாட்போலக் கலந்தொழுகுவேனோ வென்றுரைப்பாருமுளர். (ஏ)

## கஉஅ கஉஎ ம் அதி.—அவர்வயின்விதும்பல்.

கஉகஅ. வினைகலந்து வென்றீக வேந்தன் மனைகலந்து
மாலை யயர்கம் விருந்து. அ.

வேந்தற்குற்றுழிப்பிரிந்த தலைமகன் வினைமுடிவுகீட்டித்துழித்
தலைமகனை நினைந்து தன்னுள்ளே சொல்லியது.

இ - ள். வேந்தன் வினை கலந்து வென்றீக - வேந்தன் வினைசெய்தலைப் புரிந்து வெல்வானாக.—மனைகலந்து மாலை விருந்து அயர்கம் - யாமும் மனைவியைச் சென்று கூடி ஆண்டை மாலைப்பொழுதிற்கு விருந்தயர்வேமாக. எ - று.

மனையென்பது ஈண்டாகுபெயர், "மங்கல மென்ப மனையாட்சி 1" என்புழிப் போல. வினைசெய்தற்கண்வந்த மாலைப்பொழுதிற்கு எதிர்கோடல் அலங்கரித்தன் முதலியவின்மையின், மனைகலந்து மாலைக்கு விருந்தயர்கமென்றான். கான்கனுருபு விகாரத்தாற் றொக்கது, இது வினைமுடியாமுன் கூறலான் விதப்பாயிற்று . பிறரெல் லாம் இதனைத் தலைமகன் கூற்றாக்கியுரைத்தார். தலைமகனைக்கூறாது வேந்தன் வெல்க வென்றும், மனைகலந்தென்றும், மாலைப்பொழுதின்கண் விருந்தயர்கமென்றும் வந்த அவவுரைதானே அது கூடாமைக்குக் கரியாயிற்று. (அ)

கஉகக ஒருநா ளெழுநாள்போற் செல்லுஞ்சேட் சென்றார்
வருநாள்வைத் தேங்கு பவர்க்கு. க,

இதுவுமது.

இ - ள். சேண் சென்றார் வருநாள் வைத்து எஞ்குபவர்க்கு - சேணிடைச்சென்ற தங்காதலர் மீண்வேர்க்குறித்த நாளைபுட்கொண்டு அதுவருந்துணையும் உயிர்தாங்கி வருந்துமகளிர்க்கு—ஒருநாள் எழுநாள்போல் செல்லும் - ஒருநாள் பலநாள்போல நெடிதாகக்காட்டும். எ - று.

எழென்பது அதற்குமேலாய மிக்கபன்மைகுறித்து நின்றது, "ஒருவர்கூறை யெழுவருடுத்து" என்றாற்போல. தலைமகள் வருத்தம் பிறர்மேலிட்டுக் கூறிய வாறு. இதனான் இதுவுர் தலைமகள் கூற்றாகாமையறிக. இருநாளென்று பாடமோது வாருமுளர். (௯)

௧௨௭௦. பெறினென்னும் பெற்றக்கா லென்னு முறினென்னு முள்ள முடைக்துக்கக் கால். ௧௦.

இதுவுமது.

இ - ள். உள்ளம் உடைந்து உக்கக்கால் - காதலி மடைக்கிறக்குபட்டவழி,—பெறின் என் - நம்மைப் நம்பிரிவினையாற்றாது உள்ள பெறக்கடவளானாலென்,—

பெற்றக்கால் என் - அதுவன்றியே பெற்றாலென்,—உறின் என் - அதுவன்றியே மெய்யுறக் கலந்தாற்றானென், இவையொன்றானும் பயனில்லை. எ - று.

இம்மூன்றும் உடம்பொடுபுணர்த்துக் கூறப்பட்டன, அதன்மேலும் முன்னை வழக்குண்மையின். அதற்குமுன்னே யான் செல்லவேண்டுமென்பது கருத்தாகலின், விதப்பாயிற்று. இது தலைமகன் கூற்றுயவழி இரங்கலாவதல்லது விதப்பாகா தூயறிக. (௧௦)

## கஉஅம் அதி.—குறிப்பறிவுறுத்தல்.

அஃதாவது தலைமகன், தலைமகள், தோழியென்றிவர் ஒருவர் குறிப்பினை யொருவர்க்கறிவுறுத்தல். இது, பிரிந்துபோய தலைமகன் வந்துகூடியவழி நிகழ்வதாகலின், அவர்வயின்விதும்பலின்பின் வைக்கப்பட்டது.

கஉஎக. கரப்பினுங் கையிகந் தொல்லாநின் னுண்க
ணுரைக்க லுறுவதொன் றுண்டு. க.

பிரிந்துகூடிய தலைமகன் வேட்கைமிகவினாற் புதுவது பன்னாளும் பாராட்டத் தலைமகள் இதுவோன்றுடைத்தென வஞ்சியவழி அதனையவள் குறிப்பானறிந்த அவனவட்குச் சொல்லியது.

இ - ள். கரப்பினும் - நீசொல்லாது மறைத்தாயாயினும்,—ஒல்லா கையிகந்து - அதற்குடம்படாதே நின்னைக் கைகடந்து—நின் உண் கண் உரைக்கலுறுவது ஒன்று உண்டு - நின்னுண்கண்களே எமக்குச் சொல்லலுறுவதொரு காரியமுண்டாயிராநின்றது, இனியதனை நீயே தெளியச்சொல்வாயாக. எ - று.

கரத்தல் நாணுடைக்குதல். தன்கட்பிரிதற்குறிப்புளதாகக்கருதி வேறுபட்டாளது வேறுபாடு குறிப்பானறிந்து அவட்குத் தன்பிரியாமைக்குறிப்பறிவுறுத்தவாறு.

கஉஎஉ. கண்ணிறைந்த காரிகைக் காம்பேர்தோட் பேதைக்குப்
பெண்ணிறைந்த நீர்மை பெரிது. உ

காணுல் அவள் அதுசொல்லாளாயவழி அவன்றோழிக்குச் சொல்லியது.

இ - ள். கண் நிறைந்த காரிகைக் காம்பு ஏர் தோட்பேதைக்கு -

என்கண்ணி றைந்தவழகினையும் வேயையொத்த தோளினையுமுடைய இன்பேதைக்கு—பெண் நிறைந்த நீர்மை பெரிது - பெண்பாலாரிடத்து நிறைந்த மடமை அவ்வளவன்றி மிருக்கின்றது. எ - று.

இலதாயபிரிவினைத் தன்கணேற்றி அதற்கஞ்சுதலான், இவ்வாறு கூறினான்.(உ)

கஉஎங. மணியிற் றிகழ்தரு நூல்போன் மடந்தை
அணியிற் றிகழ்வதொன் றுண்டு. ௩.

இதுவுமது.

இ - ள். மணியில் திகழ்தரும் நூல்போல்-கோக்கப்பட்ட பளிக்குமணியகத்துக் கிடந்து புறத்துப்புலனாநூல்போல—மடந்தை அணியில் திகழ்வது ஒன்று உண்டு-இம் மடந்தையதணியகத்துக் கிடந்து புறத்துப் புலனாகின்ற தொருகுறிப்புண்டு. எ - று.

அணி புணர்ச்சியானாயவழகு. அதனகத்துக்கிடத்தலாவது அதனோடு உடனிகழ் தற்பாலதன்றிவைத்து உடனிகழ்தல். வேண்டுமென்பது கருத்து.

அதனையானறிகின்றிலேன், கேட்டுக் கூறல்

(௩.)

கஉஎச. முகைமொக்கு ளுள்ளது நாற்றம்போற் பேதை
நகைமொக்கு ளுள்ளதொன் றுண்டு. ௪.

இதுவுமது.

இ - ள். முகை மொக்குள் உள்ளது நாற்றம்போல் - முகையது முகிழ்ப்பினுள்ளதாய்ப் புறத்துப் புலனாகாத நாற்றம்போல—பேதை நகை மொக்குள் உள்ளது ஒன்று

கஉஅ ஆம் அதி.—குறிப்பறிவுறுத்தல்.

உண்டு - இன்பேதை என்னோடு நக்கருது நகையது முகிழ்ப்பினுளதாய்ப் புறத்துப் புலனாகாததோர் குறிப்புண்டு. எ - று.
முகிழ்ப்பு முகிர்ச்சியாற்புடைபடுதல். நகை

புணர்ச்சியின்பத்தானிகழ்வது. (ச)

கஉஎரு. செறிதொடி செய்திறந்த கள்ள முறுதுயர்
தீர்க்கு மருந்தொன் றுடைத்து. ரு.

இதுவுமது.

இ - ள். செறி தொடி செய்து இறந்த கள்ளம்-நெருங்கிய வளைகளையுடையாள் என்கண்ணில்லாதொன் றினையுட்கொண்டு அது காரணமாக என்னை மறைத்துப் போன குறிப்பு—உறு துயர் தீர்க்கு மருந்து ஒன்று உடைத்து - என் மிக்கதுய ரைத் தீர்க்குமருந் தாவதொன்றினையுடைத்து. எ - று.

உட்கொண்டது பிரிவு. கள்ளம் ஆகுபெயர். மறைத்தற்குறிப்புத் தானுமுடன் போக்குட்கொண்டது. உறுதுயர் நன்றுசெய்யத் தீங்குவிளைதலானும் அதுதான் நீர் திறம்பெறுமையானும் உளதாயது. மருந்து அப்பிரிவின்மை தோழியாற்றெளிவித்தல். நீயது செய்தல் வேண்டுமென்பதாம்.
(ரு)

கஉஎசு. பெரிதாற்றிப் பெட்பக் கலத்த லரிதாற்றி
யன்பின்மை சூழ்வ துடைத்து. சு.

தலைமகன்குறிப்பறிந்த தலைமகள் அதனை அதுதேளிவிக்கச்
சென்ற தோழிக்கறிவுறுத்தது.

இ - ள். பெரிது ஆற்றிப் பெட்பக் கலத்தல் - காதலர் வந்து தம்பிரிவினுறுய துன்பத்தினை மிகவுமாற்றி நாமகிழும்வண்ணங் கலக்கின்ற கலவி—அரிது ஆற்றி அன் பின்மை சூழ்வது உடைத்து-இருந்தவாற்றுன் மேலுமத்துன்பத்தினை அரிதாகவாற்றி யிருந்து அவரன்பின்மையை நினைபுந்தன்மையுடைத்து. எ - று.

பிரிதற்குறிப்பினுற் செய்கின்றதாகலான், முடிவில் இன்றாகா கின்ற தென்பதாம்.
(சு)

கஉஎஎ. தண்ணந் துறைவன் றணந்தமை நம்மினு
முன்ன முணர்ந்த வளை. எ.

## இதுவுமது.

இ - ள் தண்ணந்துறைவன் தணந்தமை-குளிர்ந்த துறையையுடையவன் நம்மை மெய்யாற்கூடியிருந்தே மனத்தாற்பிரிந்தமையை—நம்மினும் வளை முன்னமுணர்ந்த- அவன்குறிப்பானறிதற்குரிய நம்மினும் இவ்வளைகள் முனனேயறிதன. எ - று.

கருத்துநிகழ்ந்ததாகலிற் றணந்தமையென்றும், யான்றெளிவுணர்தற்குமுன்னே தோள்கண் மெலிந்தனவென்பாள் அதனை வளைமேலேற்றி அதுதன்னைபுணர்வுடைத் தாக்கியுங்கூறினள். (எ)

கஉஎஅ. தொருநற்றுச் சென்றுரெங் காதலர் யாமு
மெழுநாளே மேனி பசந்து. அ.

## கஉக ம் அதி.—புணர்ச்சிவிதும்பல்.

## இதுவுமது.

இ - ள். எங்காதலர் சென்றார் நெருநற்று - எங்காதலர் பிரிந்துபோயினர் நெருநற்றே;—யாமும் மேனி பசந்து எழுநாளேம் - அப்பிரிவிற்கு யாமும் மேனிபசந்து எழுநாளுண்டயமாயினேம். எ - று.

நெருநற்றுச்செய்த தலையளியாற் பிரிவு துணியப்பட்டதென்பாள் நெருநற்றுச் சென்றாரென்றும், அதனையையுற்றுச்செல்கின்றது

எழுகாலுண்டாகலின் அன்றே மேனிபசந்ததென்பான் மேனி பசந்தெழுகாவேமென்றக் கூறினாள். இவ்வாற்றாற் றலைமகனது பிரிதற்குறிப்பினைபுணர்த்தினின்றது. (அ)

கஉஎகூ. தொடிநோக்கி மென்றோளு நோக்கி படிநோக்கி
யஃதாண் டவள்செய் தது. கூ.

## தலைமகள் குறிப்பறிந்ததோழி அதனைத் தலைமகற்கறிவித்தது.

இ - ள். யானது தெளிவித்தவழித் தெளியாது,—தொடி நோக்கி - அவர் பிரிய யானீண்டிருப்பின் இவை நில்லாவெனத் தன்றொடியை நோக்கி,—மென்றோளும் நோக்கி - அதற்கேதுவாக இவை மெலியுமெனத் தன்மென்றோள்களைபுநோக்கி,— அடி நோக்கி - பின்னிவ்விரண்டும் நிகழாமல் நீர் நடந்து காத்த ல்வேண்டுமெனத் தன் னடியையுநோக்கி,—ஆண்டு அவள் செய்தது அஃது-அவ்வனம் அவள் செய்த குறிப்பு உடன்போக்காயிருந்தது. எ - று.

செய்தகுறிப்புச் செய்தற்கேதுவாய குறிப்பு. அஃதென்றான் "செறிதொடி செய் திறந்தகள்ள" மென்றாகலின். பிரிதற்குறிப்புண்டாயின் அஃதமுக்குதல்பயன்.()

கஉஅ௦. பெண்ணினாற் பெண்மை யுடைத்தென்ப கண்ணினாற்
காமநோய் சொல்லி யிரவு. க().

## தலைமகன் பிரியாமைக்குறிப்பினைத் தோழிக்கறிவுறுத்தது.

இ - ள். காமநோய் கண்ணினாற் சொல்லி இரவு - மகளிர் தங்காமநோயினைத் தோழியர்க்கும் வாயாற்சொல்லாது கண்ணிற்சொல்லி அது நீக்கவேண்டுமென்று

அவரையிரவாது உடன்போதல் குறித்துத் தம்மடியினையிரத்தல்—பெண்ணினால் பெண்மை உடைத்து என்ப - தமக்கியல்பாகிய பெண்மைமேலும் ஒருபெண்மையு டைத்தென்று சொல்லுவர் அறிந்தோர். எ - று.

தலைமகனதுடன்போதற்றுணிபு தோழியாற் றெளிந்தானாகலின்,

தன்பிரிவின் மைக் குறிப்பினையறிவுறப்பான், அவள்பெண்மையினைப் பிறர்மேலிட்டு வியந்து

உறியவ ராய.
(௧0)

## ௧௨௯ ம் அதி.—புணர்ச்சிவிதும்பல்.

அஃதாவது தலைமகனுந் தலைமகளும் புணர்ச்சிக்கண்ணே விரைதல். மேற் புணர்ச்சியிருதிபற்றித் தலைமகன்பிரிதற்குறிப்பறிவுறுத்ததலைமகன்அவன்மாட்டேயிக ழாது வேட்கைமிகவினுந் பின்னுர் தன்கண்ணே நிகழ்தலான், இது குறிப்பறிவுறுத் தலின்பின் வைக்கப்பட்டது.

---

* திருக்குறள். ௧௨௭0.



௧௨௮௧. உள்ளக் களித்தலும் காண மகிழ்தலும்
கள்ளுக்கில் காமத்திற் குண்டு. ௧.

பிரிதற்குறிப்பினளுகியாளோடு நீ புலவாமைக்குக் காரணம் யாதென

நகையாடிய தோழிக்குத் தலைமகள் சொல்லியது.

இ - ள். உள்ளக் களித்தலும் - நினைத்தலையானே களிப்பெய்தலும்—காண மகிழ்தலும் - கண்டதனையானே மகிழ்வெய்தலும்—கள்ளுக்கு இல் காமத்திற்கு உண்டு - கள்ளுண்டார்க்கில்லை, காமமுடையார்க்குண்டு. எ - று.

களித்தல் உணர்வழியாதது. மகிழ்தல் அஃதழிந்தது.

இவ்விரண்டும் உண்மையி னல்லதின்மையிற் கண்ணுக்கில்லென்றாள். உண்டென்பது இறுதிவிளக்கு. அப்பெற் றித்தாய காமமுடைய யான்புலத்தல் யாண்டையதென்பதாம். (௧)

௧௨௮௨. தினைத்துணையு மூடாமை வேண்டும் பனைத்துணையுங்
காம நிறைய வரின். ௨.

இதுவுமது.

இ - ள். காமம் பனைத்துணையும் நிறைய வரின் - மகளிர்க்குக்காமம் பனையளவினும் மிகவுண்டாமாயின், — தினைத்துணையும் ஊடாமை வேண்டும் - அவரால், தங் காதலரோடு தினையளவுமூடுதல்செய்யாமை, வேண்டப்படும். எ - று.

பனைத்துணையுமென்புழி ஐந்தனுருபு விகாரத்தாற்றொக்கது. ஊடின் வருத்த மிகுமெனப் பிறர்க்குறுதிகூறுவாள்போன்று, தன்விதுப்புக் கூறியவாறு. (௨)

௧௨௮௩. பேணாது பெட்பவே செய்யினுங் கொண்கனைக்
காணா தமையல கண். ௩.

இதுவுமது.

இ - ள். பேணாது பெட்பவே செய்யினும் - நம் மையவமதித்துத் தான் வேண்டியவற்றையே செய்யுமாயினும், — கொண்கனைக் கண் காணாது அமையல - கொண்கனை என் கண்கள் காணாதமைகின்றனவில்லை. எ - று.

தன்விதுப்புக் கண்கண்மேலேற்றப்பட்டது. அத்தன்மையேன் அவனோடு புலக் குமாறென்னை யென்பதாம். (௩)

௧௨௮௪. ஊடற்கட் சென்றேன்மற் றோழி யதுமறந்து
கூடற்கட் சென்றதென் னெஞ்சு. ௪.

இதுவுமது.

இ - ள். தோழி - தோழீ,—ஊடற்கண் சென்றேன் - காதலரைக் காணுமுன் அவர்செய்த தவற்றை நினைந்து அவரோடு ஊடுதற்கண்ணே சென்றேன்;— என்னெஞ்சு அது மறந்து கூடற்கண் சென்றது - கண்டபின் என்னெஞ்சு அதனை மறந்து கூடுதற்கண்ணே சென்றது. எ - று.

சேறல் நிகழ்தல் நினைந்த நெஞ்சிற்கு மொத்தலின், அது மறந்தென்றாள். அச்செலவாற் பயனின்னென்பதுபட நின்றமையின், மன் ஒழியிசைக்கண் வந்தது. அவ்வெல்லையிலே நெஞ்சு அறைபோகலான், அது முடித்ததில்லை யென்பதாம். (௪)

## கஉகூ-ம் அதி.—புணர்ச்சிவிதும்பல்.

கஉஎக

கஉஅரு. எழுதுங்காற் கோல்காணாக் கண்ணேபோற் கொண்கன்
பழிகாணேன் கண்ட விடத்து. ௫.

இதுவுமது.

இ - ள். எழுதுங்கால் கோல் காணாக் கண்ணேபோல் - முன்னெல்லாங்கண்டிருந்தும் எழுதுங்காலத்து அஞ்சனக்கோலினியல்பு காணமாட்டாத கண்ணேபோல,— கொண்கன்பழி கண்டவிடத்துக் காணேன்-கொண்கனது தவறு காணாதவிடத்தெல்லாங் கண்டிருந்து அவனைக்கண்டவிடத்துக் காணமாட்டேன். எ - று.

கோல் ஆகுபெயர். இயல்பு கருமை. என்னியல்பிதுவாகலின் மேலும் அது முடியாதென்பதாம்.
(௫)

கஉ அகூ. காணுங்காற் காணேன் றவறாய காணாக்காற்
காணேன் றவறல் லவை. கூ.

இதுவுமது.

இ - ள். காணுங்கால் தவறாய காணேன் - கொண்கனை யான் காணும்பொழுது அவன் றவறாயவற்றைக் காண்கின்றிலேன்,—காணாக்கால் தவறல்லவைகாணேன்- காணாதபொழுது அவையேயல்லது பிறவற்றைக் காண்கின்றிலேன். எ - று.

செயப்படுபொருள் அதிகாரத்தான் வந்தது. முன்பு நான் நின்னொடு சொல்லிய தவறுகள் இதுபொழுது காணாமையிற் புலக்கிலேனென்பதாம். (கூ)

கஉ அஎ. உய்த்த லறிந்து புனல்பாய் பவரேபோற்
பொய்த்த லறிந்தென் புலந்து. எ.

இதுவுமது.

இ - ள். உய்த்தல் அறிந்து புனல் பாய்பவரேபோல் - தம்மையீர்த்துக்கொண்டு போதலறிந்துவைத்து ஒழுகுகின்ற புனலுட்பாய்வார் செயல்போல,—பொய்த்தல் அறிந்து புலந்து என் - புலவிமுடிவுபோகாமை யறிந்துவைத்துக் கொண்கனோடு புலந்து பெறுவதென்! எ - று.

பாய்பவரென்பது ஆகுபெயர். பொய்த்தல் புரைபடுதல். புலந்தாலும் பயனில்லை யென்பதாம். பொய்த்தலறிந்தேனென்பது பாடமாயின், உய்த்தலறிய ஓடுகுட்பாய் வார்போல முடிவறியப்பண்டொருகாற்புலந்து முடியாமையறிந்தேன் இனி அது செயற்பாற்றன்றெனவுரைக்க. (எ)

கஉஅஅ. இளித்தக்க வின்னா செயினுங் களித்தார்க்குக்
கள்ளற்றே கள்வநின் மார்பு.. அ.

தலைமகள் புணர்ச்சிவிதுப்பறிந்த தோழி தலைமகற்குச் சொல்லியது.

இ - ள். கள்வ - வஞ்சகா,—களித்தார்க்கு இளித்தக்க இன்னாசெயினும் கள் ளற்றே - தன்னையுண்டுகளித்தார்க்கு இளிவரத்தக்க இன்னாதவற்றைச் செய்யினும் அவரால் மேன்மேல் விரும்பப்படுவதாய கள்ளுப்போலும்—நின்மார்பு - எங்கட்கு நின்மார்பு. எ - று.

கஉஎஉ கஉ௦ம் அதி.—நெஞ்சொடுபுலத்தல்.

அவ்வின்னாதன காணின்மை, நிறையின்மை, ஒழுக்கமின்மை, உணர்வின்மை யென்றிவைமுதலாயின. எங்கட்கு காணின்மை முதலியவற்றைச் செய்யுமாயினும் எங்களால் மேன்மேல் விரும்பப்படாநின்றதென்பதாம். கள்வவென்றதும் அது நோக்கி. (அ)

கஉஅக. மலரினு மெல்லிது காமஞ் சிலரதன்
செவ்வி தலைப்படு வார். க.

உணர்ப்புவயின்வாராவூடற்கட்டலைமகள் சொல்லியது.

இ - ள். காமம் மலரினும் மெல்லிது - காமவின்பம் மலரினு மெல்லியதாயிருக் கும்,—அதன்செவ்வி தலைப்படுவார் சிலர் - அங்ஙனம் மெல்லிதாதலையறிந்து அதன் செவ்வியைப் பெறுவார் உலகத்துச் சிலர். எ - று.

தொட்டதுணையானே மணச்செவ்வியழிவதாய மலர்

எல்லாவற்றினும் மெல்லி தென்பது விளக்கலின், உம்மை சிறப்பின்கண்வந்தது. குறிப்பும், வேட்கையும், நுகர்ச்சியும், இன்பமும் ஒருகாலத்தின்கண்ணேயொத்து நுகர்தற்குரியாரிருவர் அதற் கேற்ற இடனுங்காலமும் உபகரணங்களும்பெற்றுக் கூடி நுகரவேண்டுதலின் அதன் செல்விதலைப்படுவார் சிலரென்றும், அவற்றுள் யாதானுமொன்றனுற் சிறிது வேறு படினும் வாடுதலின் மலரினுமெல்லிதென்றுங் கூறினன். குறிப்போவ்வாமையின் யானதுபெறுகின்றிலேனென்பதாம். தலைமகளுடன்பாடிர்வது பயன். (க)

௧௨௯௦. கண்ணிற் றுனித்தே கலங்கினுள் புல்லுத
லென்னினுந் தான்விதுப் புற்று. ௧௦.

இதுவுமது.

இ - ள். கண்ணின் துனித்தே - காதலி முன்னொருஞான்று புல்லல்விதுப்பினாற் சென்ற என்னொடு தன்கண் மாத்திரத்தானூடி,—புல்லுதல் என்னினும் தான்விதுப் புற்றுக் கலங்கினுள் - புல்லுதலை என்னினுந்தான்விதும்பலான் அது தன்னையும் அப் பொழுதே மறந்து கூடி விட்டாள்; அதனால் யானித்தன்மையேனுகவும் விதுப்பின்றி யூடிநிற்கின்றவிவள் அவளல்லள். எ - று.

கண்மாத்திரத்தானூடல் சொன்னிகழ்ச்சியின்றி அது சிவர்ததுணையேயாதல், அவளாயின் இங்ஙனமூடற்க ணிடாளென்பது பயன். (௧௦)

---

## ௧௩௦ ம் அதி.—நெஞ்சொடுபுலத்தல்.

அஃதாவது காரணமுண்டாயவழியும் புலக்கக்கருதாது

புணர்ச்சிவிதும்பு லென்ற நெஞ்சுடனே தலைமகள் புலத்தலும், தலைமகன் மையும் இதனுனே விளங்கும்.
புலத்தலுமாம். அதிகாரமுறை

கஉஙக. அவர்நெஞ் சவர்க்காதல் கண்டு மெவனெஞ்சே
நீயெமக் காகா தது. க.

தலைமகன்கட்டவறுண்டாயவழியும் புலவிகருதாத
நெஞ்சிற்குத் தலைமகள் சொல்லியது.

## கஉ௦ ம் அதி.—நெஞ்சொடுபுலத்தல்.

கடன்டு

இ - ள். நெஞ்சே - நெஞ்சே,—அவர் நெஞ்சு அவர்க்கு ஆதல்கண்டும் - அவருடைய நெஞ்சு நம்மை நினையாது அவர்க்காய்நிற்றல் கண்டுவைத்தும்,—நீஎமக்கு ஆகாதது எவன் - நீயெமக்காய் நில்லாது அவரை நினைத்தற்காரணம் யாது ! எ - று.

அவர்க்காதல் அவர்கருதியதற்குடம்படுதல் எமக்காகாததென்றது புலவிக் குடம்படாமையை. ஒருகருமத்தைத் தாமாகவறிந்து செய்யமாட்டாதார் செய்வாரைக் கண்டாயினுஞ் செய்வர். நீயதுவுஞ் செய்கின்றிலையென்பதாம். (க)

கஉகஉ. உறாஅ தவர்க்கண்ட கண்ணு மவரைச்
செறாஅரெனச் சேறியென் னெஞ்சு. உ.

இதுவுமது

இ - ள். என்னெஞ்சு - என்னெஞ்சே, —உறாதவர்க் கண்ட கண்ணும் - மேலும் நம்மாட்டன்புடையராகாதவரை உள்ளவாறறிந்தவிடத்தும்,—செறுரென அவரைச் சேறி - நாஞ்சென்றால் வெகுளாரென்பதுபற்றி நீயவர்மாட்டுச் செல்லாநின்றாய், இப்

பெற்றியதுமேலுமோரறியாமையுண்டோ ! எ - று.

அவரையென்பது வேற்றுமைமயக்கம். பழங்கண்ணோட்டம்பற்றி வெகுளாரென்பது கருத்தாகச் சென்றாய், நீ கருதியது முடியுமோவென்பதாம். (உ)

கஉகங. கெட்டார்க்கு நட்டாரில் லென்பதோ நெஞ்சேநீ
பெட்டாங் கவர்பின் செலல். ங.

இதுவுமது.

இ - ள். நெஞ்சே - நெஞ்சே,—நீ பெட்டாங்கு அவர்பின்செலல் - என்மாட்டு நில்லாது நீ விரும்பியவாறே அவர்மாட்டுச் செல்லுதற்குக் காரணம்—கெட்டார்க்கு நட்டார் இல்லென்பதோ - கெட்டார்க்கு நட்டார் உலகத்தில்லையென்றுநினைவோ, நின்னியல்போ, கூறுவாயாக. எ - று.

என்னைவிட்டு அவர்மாட்டுச்சேறல் நீபண்டே பயின்றதென்பாள் பெட்டாங் கென்றும், தானிதுபொழுது மானமிலளாகலிற் கெட்டார்க்கென்றுங்கூறினாள். பின் னென்பது ஈண்டிடப்பொருட்டு. செலலென்பது ஆகுபெயர். "ஒல்கிடத்துலப்பிலா வுணர்விலார் தொடர்பு" பாயிற்று நின்றொடர்பென்பதாம். (ங)

கஉகச. இனியன்ன நின்னொடு சூழ்வார்யார் நெஞ்சே
துனிசெய்து துவ்வாய்காண் மற்று.

இதுவுமது.

இ - ள். நெஞ்சே - நெஞ்சே,—துனி செய்து மற்றுத் துவ்வாய் - நீயவரைக் கண்டபொழுதே இன்பநுகரக் கருதுவதல்லது அவர்தவறுநோக்கி முன் புலவியை யுண்டாக்கி அதனையளவறிந்து பின்னுகரக்கருதாய்,—இனி அன்ன நின்னொடு சூழ்வார் யார் - ஆகலான், இனியப்பெற்றிப்பட்டவற்றை நின்னோடெண்ணுவார்யார் !

௲ளச       கஉ௦ ம் அதி.—நெஞ்சொடுபுலத்தல்.

அப்பெற்றிப்பட்டன புலக்குரிதிறங்கள். காணென்பது உரையசை. மற்று வினை மாற்றின்கண்வந்தது. முன்னெல்லாம் புலப்பதாகவெண்ணியிருந்து பின் புணர்ச்சி விதும்பலின், இவ்வாறு கூறினள். (ச)

௲உ௬௫. பெறாஅமை யஞ்சும் பெறிற்பிரி வஞ்சு
மறாஅ விடும்பைத்தென் னெஞ்சு. ௫.

வாயிலாகச் சென்ற தோழிகேட்பத் தலைமகள் சொல்லியது.

இ - ள். பெறாமை அஞ்சும் - காதலரைப் பெறாத ஞான்று அப்பெறாமைக்கஞ்சாநின்றது,—பெறின் பிரிவு அஞ்சும் - பெற்றக்கால் வரக்கடவ பிரிவினைப்புட்கொண்டு அதற்கஞ்சாநின்றது,—என்னெஞ்சு அறா இடும்பைத்து - ஆகலான், என்னெஞ்சம் எஞ்ஞான்றும் நீங்காதவிடும்பையையுடைத்தாயிற்று. எ - று.

காதலரைப் பெற்றவைத்துக் கலவிமுத்தல் உறுதியன்றென்னுங் கருத்தான் வாயினேர்கின்றனாகலிற் பெறாமையஞ்சுமென்றும், கலவியாராமையின் இன்றுமிவர் பிரிவராயின் யாதுசெய்துமென்பது நிகழ்தலிற் பெறிற்பிரிவஞ்சு மென்றும் இவ்விரண்டுமல்லது பிறிதின்மையின் எஞ்ஞான்றுமறாவிடும்பைத்தென்றுங் கூறினள்.()

௲உ௬௬. தனியே யிருந்து நினைத்தக்கா லென்னைத்

தினிய விருந்ததென் னெஞ்சு. ௬.

## இதுவுமது.

இ - ள். என்னெஞ்சு இருந்தது-என்னெஞ்சு ஈண்டிருந்தது,—தனியேஇருந்து நினைத்தக்கால் - காதலரைப் பிரிந்திருந்து அவர் கொடுமைகளை யானொன்றும் நினைத்தக்கால்,—என்னைத் தினிய - அவ்வளவறிந்து என்னைத் தின்பதுபோன்று துன்பஞ்செய்தற்கே. எ - று.

எம்மாட்டிருந்து அன்று அவர்கொடுமைகளையுட்கொண்டு எனக்காற்றாமை செய்தற்கே, இன்று அவைநோக்கி அவரொடு புலத்தற்கன்றென்பதாம். (௬)

௧௨௯௭. நாணு மறந்தே னவர்மறக் கல்லாவென்
மாணா மடநெஞ்சிற் பட்டு. ௭.

## இதுவுமது.

இ - ள். அவர் மறக்கல்லா என் மாணா மடநெஞ்சிற் பட்டு - தன்னைமறந்த காதலரைத் தான் மறக்கமாட்டாத என்மாட்சிமையில்லாத மடநெஞ்சுடனே கூடி,— நாணும் மறந்தேன்-என்னுயிரினுஞ்சிறந்த நாண்டன்னையும் மறந்துவிட்டேன். எ-று.

மாணாமை ஒருநிலையினில்லாமை. மடமை கண்டவழி நினைந்து காணாதவழி மறக்குந் தவற்றைக் காணாவழிநினைந்து கண்டவழிமறத்தல். நாண் எஞ்ஞான்றுங் கூடி பொழுதினும் அஞ்ஞான்று கண்டார்போலன்றோங்குதல், கண்டபொழுதே புணர்ச்சி விதும்பலின், அதனையுமறந்தேனென்றாள். (௭)

௧௨௯௮. எள்ளி னிளிவாமென் றெண்ணி யவர்திற

௧௩00. தஞ்சர் தமரல்ல ரேதிலார் தாமுடைய
நெஞ்சர் தமரல் வழி. ௧0.

இதுவுமது.

இ - ள். தாம் உடைய நெஞ்சம் தமர் அல்வழி - தாமுரித்தாகவுடையநெஞ்சம் ஒருவர்க்குத் தமரல்லாவழி,—ஏதிலார் தமர் அல்லர் தஞ்சம் - அயலார் தமரல்லராதல் சொல்லவேண்டுமோ! எ - று.

பிறளொருத்தியைக் காதலியென்று கருதி என்னெஞ்சே என்னை வருத்தாநின்ற பின் அப்பிறள் புலக்கின்றதெனிதென் பதாம். (௧0)

---

## ௧௩௧-ம் அதி.—புலவி.

அஃதாவது இருவர் நெஞ்சும் புணர்ச்சி விதும்பாது புலக்கக்குறியவழி ஒருவரோடொருவர் புலத்தல்.
அதிகாரமுறைமையும் இதனானே விளங்கும்.

௧௩0௧. புல்லா திராஅப் புலத்தை யவருறு
மல்லனோய் காண்கஞ் சிறிது. ௧.

வாயிலாகச்சென்ற தோழி தலைமகன் வாயினேர்தற்பொருட்டு
அவனோடு கையாடிச் சொல்லியது.



இ - ள். அவர் உறும் அல்லல் நோய் சிறிது காண்கம்-அன்னம்

புலந்தாரக் காத லசெய்தமல்லனோயினை யாஞ்சிறிது காணக் கடவேம், —புல்லாது இராப் புலத்தை- நீயவரை விரைந்துசென்று புல்லாதே இத்தொழிலை மேலிட்டுக்கொண்டிருந்து புலப்பாயாக. எ - று.

அல்லனோய் துன்பத்தைச் செய்யுங் காமநோய் சிறிதென்றான், புலவியை நீள விடலாகாதென்பதுபற்றி. புலத்தையென்புழி ஐகாரம் " கடம்பூண்டொருகானீ வந்தை" என்புழிப்போல முன்னிலை வினைவிகுதி. புலத்தியென்பதூஉம் பாடம். புலவிக்குறிப்புக்கண்டு அவள் வழியளாய் நின்று காமுற்ற வருத்தம் அவருஞ்சிறிதுற் றறிதல் வேண்டுமென நகையாடி கோர்வித்தவாறு.

(௪)

கங0உ. உப்பமைந் தற்றாற் புலவி யதுசிறிது
மிக்கற்றா னீள விடல். உ.

புலவியோழிந்து வாயினேரும்வகை அவள் சோல்லியது.

இ - ள். புலவி உப்பு அமைந்தற்று - புலவி கலவி இன்பஞ்செயற்கு வேண்டு மளவிற்றாதல் உப்புத் துய்ப்பனவற்றை இன்சுவையவாக்கற்கு வேண்டுமளவிற்றாதல் போலும்;—சிறிது நீளவிடல் அது மிக்கற்று - இனி அதனையவ்வளவிற்சிறிதுமிக விடுதல் அவ்வுப்பு அளவின்மிக்காற்போலும். எ - று.

நீளவிடல் அளவறிந்துணராது கலவிமேலெழுந்த குறிப்பழுங்குமளவுஞ்செய் தல்: சிறிதுநீளவிடலாகாதென்றான், கோர்விக்கின்றாளாகலின். உப்பு மிக்கவழித் துய்ப்பது சுவையின்றாற்போலப் புலவிமிக்கவழிக் கலவி இன்பமின்றாமென்றமையின், இது பண்புவமை.

(உ)

கங0௩. அலந்தாரை யல்லனோய் செய்தற்றாற் றம்மைப்
புலந்தாரைப் புல்லா விடல். ௩.

பரத்தையரிடத்துநின்றும் வந்த தலைமகனோடு

தலைமகள் புலந்து சொல்லியது.

இ - ள். தம்மைப் புலந்தாரைப் புல்லாவிடல் - தம்மைப்பெறாது புலந்த மகளிரைப் புலவிநீக்கிக் கலவாது ஆடவர்சேறல்—அலந்தாரை அல்லல்நோய் செய்தற்று - பண்டே துன்பமுற்றழிந்தாரை அதன்மேலும் மிக்க துன்பத்தினைச் செய்தாற் போலும். எ - று.

பிறர்பாற்சேறலின் நம்மைப்பெறாது புலந்தூடியிருக்கின்ற பரத்தையரைப் போய்ப் புலவிநீக்கிப் புல்லீராயின், அவராற்றாரென்பதாம். (௩)

க௩0௪. ஊடி யவரை யுணராமை வாடிய
வள்ளி முதலரிந் தற்று. ௪.

இதுவுமது.

இ - ள். ஊடியவரை உணராமை - நம்மோடூடிய பரத்தையரை ஊடலுணர்த்திக் கூடாதொழிதல்—வாடிய வள்ளி முதல் அரிந்தற்று - பண்டே நீர்பெறாது வாடிய கொடியை அடியிலேயறுத்தாற்போலும். எ - று.

---

* கலி, குறிஞ்சி, உ௭.

## ௧௩௧-ம் அதி.—புலவி. ௩௭௭

நீர் பரத்தையரிடத்திராயவழி எம்புதல்வரைக் கண்டாற்றியிருக்கற்பாலமாய யாம் நும்மோடூடுதற்குரியமல்லம், அன்மையின் எம்மையுணர்த்தல்வேண்டா, உரியராயூடிய பரத்தையரையே உணர்த்தல்வேண்டுவது, அதனால் ஆண்டுச்சென்மினென்பதாம். (௪)

கக0௫. கலத்தகை நல்லவர்க் கேஎர் புலத்தகை
பூவன்ன கண்ணா ரகத்து. ௫.

தலைமகளைப் புலவிநீக்கிக் கூடிய தலைமகன் றன்னுள்ளே சொல்லியது.

இ - ள். நலத்தகை நல்லவர்க்கு ஏர் - நற்குணங்களாற் றகுதியுடையராய தலைவர்க்கும் அழகாவது —பூ அன்ன கண்ணார் அகத்துப் புலத்தகை - தம்பூவன்னகண்ணார் செஞ்சின்கண் நிகழும் புலவியிகுதியன்றே. எ - று.

சிறப்பும்மை விகாரத்தாற் றொக்கது.

தவறில்லார்க்கும் புலவி இனிதென்பான், நலத்தகை நல்லவர்க்குமென்றான். அழகு இன்பப்பயனைத்தலைப்படுதல். தானுகர்ந்த வின்பத்திற்கேதுவாகிய புலவியை வியந்து கூறியவாறு.
(௫)

கக0௬. துனியும் புலவியு மில்லாயிற் காமங்
கனியுங் கருக்காயு மற்று. ௬.

இதுவுமது.

இ - ள். துனியும் புலவியும் இல்லாயின் -முதிர்ந்த கலாமாகிய துனியும் இளைய கலாமாகிய புலவியும் இல்லையாயின்,—காமம் கனியும் கருக்காயும் அற்று - காமம் செவ்வி முதிர்ந்தபழமும் இளங்காயும்போலும். எ - று.

மிகமுதிர்ந்திறுமெல்லைத்தாய கனி நுகர்வார்க்கு மிகவுமினிமைசெய்யாதாகலிற் றுனியில்லையாயிற்கனியற்றென்றும்; கட்டிளமைத்தாய காய் நுகருஞ்செவ்வித்தன்றாகலிற் புலவியில்லையாயிற் கருக்காயற்றென்றும் கூறினான். இவ்விரண்டும் வேண்டுமென்று வியந்து கூறியவாறு .
(௬)

கக0௭. ஊடலி னுண்டாங்கோர் துன்பம் புணர்வது
நீடுவ தன்றுகொ லென்று. ௭.

இதுவுமது.

இ - ள். புணர்வது நீடுவது (கொல்) அன்றுகொல் என்று - இனிப்புணர்ச்சி நீட்டிக்குமோ நீட்டியாதோவென்றுகருதலான்,— ஊடலின் ஓர் துன்பம் உண்டு - இன்பத்திற்கின்றியமையாத ஊடலின்கண்ணேயும் ஒருதுன்பமுளதாம். எ - று.

என்றென்றுமெச்சத்திற்குக் கருதலானென்பது வருவிக்கப்பட்டது. சிறப்பும்மை விகாரத்தாற்றொக்கது. கொல்லென்பதனை நீடுவதென்பதனோடுங்கூட்டுக. ஆங்கென்பது அசைநிலை. ஊடல் கூடற்கண் விரைவித்தல் கூறியவாறு. (எ)

கஙoஅ. நோது லெவன்மற்று நொந்தாரென் றஃதறியுங்
காதல ரில்லா வழி. அ.

## உணர்ப்புவயின்வாராவூடற்கட்டலைமகன் புலந்து சொல்லியது.

தலைமகளோடு

கசஅ கங உ-ம் அதிகாரம் புலவி நுணுக்கம்.

இ - ள். நொந்தாரென்று அஃதறியும் காதலர் இல்லாவழி - இவர் நம்பொருட்டாக நொந்தாரென்று அந்நோவினையறியு மன்புடையாரைப்பெறாவழி; நோதல் மற்று எவன் - ஒருவர் நோகின்றதனாற்பயனென்! எ - று.

அறிதல் கண்டுடம்பினிதுணர்தல். மற்று வினைமாற்றின்கண் வந்தது. இவள் நங்காதலியல்லள், அன்மையின் இந்நோவறியாள், அறியாமையின் நாம் புலக்கின்றதனாற் பயனில்லையெனத் தன்னுட்குறைபுணர்த்தியவாறு. (அ)

கஙoகூ. நீரு நிழல திளிதே புலவியும்
வீழுநர் கண்ணே யினிது. கூ.

இதுவுமது.

இ - ள். நீரும் நிழலது இனிது - உயிர்க்கின்றியமையாத

நீரும் நிழலின் கண்ணதே இனிதாவது, ஏனை வெயிலின்கண்ணது ஆகாது;—புலவியும் வீழுநர் கண்ணே இனிது - அதுபோலக் கலவிக்கின்றியமையாத புலவியும் அன்புடையார் கண்ணே இனிதாவது, ஏனையன்பிலார்கண் ஆகாது. எ - று.

நிழற்கணிருந்த நீர் குளிர்ச்சியிற்குத் தாகந்தணித்தலின் இனிதாயிற்று. வீழுநர் ஆற்றாமைக்கு நோதலுங் கூடுதற்கண் வேட்கையுமுடையராவார். இவன் கண்மாட்டு அவ்விரண்டுமின்மையின் இப்புலவிதானு மின்னாதாகாநின்ற தென்பதாம். (௯)

கஙக0. ஊட லுணங்க விடுவாரோ டென்னெஞ்சங்
கூடுவே மென்ப தவா. க0.

இதன்பொருள்.

இ - ள். ஊடல் உணங்க - தானூடற்கண்ணே மெலியவிடுக்கவும்,—விடுவாரோடு கூடுவேம் என்பது என்னெஞ்சம் அவா - விட்டிருக்கவல்லாரோடு கூடக்-கடவேமென்று என்னெஞ்சம் முயறற்கேது தன்னவாவே, பிறிதில்லை. எ - று.

அன்புமருளுமில்லாதாரை உடையரென்றும் அவரோடியாங் கூடுவேமென்றுங் கருதி அதற்கு முயறல் அவாவுற்றார் செயலாகலின், கூடுவேமென்பதவாவென்றான். காரியங் காரணமாக வுபசரிக்கப்பட்டது. இக்கூட்டம் முடியாதென்பதாம். (க0)

---

## கஙஉ ம் அதி.—புலவி நுணுக்கம்.

அது புலவியது நுணுக்கமென விரியும். அஃதாவது தலைமகனுந் தலைமகளும் ஓரமளிக்கட் கூடியிருந்தவழி அவன்மாட்டுப் புலத்தற்காரணமில்லையாகவும் காதல் கைம்மிகுதலான் நுண்ணியதோர் காரணமுண்டாகவுட்கொண்டு அதனை யவன்மேலேற்றி அவள் புலத்தல். காரணத்தினுணுக்கம் காரியத்தின்மேனின்றது. அதிகாரமுறைமையும் இதனானே விளங்கும்.

யாத்தம்மோடுடிபுரையாடாதிருந்தே மாகக் காதலர் தும்மினார், — யாம் தம்மை நீடுவாழ்கென்பாக்கு அறிந்து - அதனையொழிந்து தம்மை நீடுவாழ்கென்றுரையாடுவேமாகக் கருதி. எ - று.

தும்மியக்கால் வாழ்த்துதல் மரபாகலான், உரையாடல் வேண்டிற்றென்பதாம். இயல்பானிகழ்ந்த தும்மலைக் குறிப்பானிகழ்ந்ததாகக் கோடலின், நுணுக்கமாயிற்று.

௩௩. கோட்டுப்பூச் சூடினுங் காயு மொருத்தியைக்
காட்டிய சூடினீ ரென்று. ௩.

தலைமகள் புலவிக்குறிப்பினைக் கண்டு நீவிர்கூடியோமுகாமிற்கவும் இகழ்தற்குக் காரணம் யாதென்ற தோழிக்குத் தலைமகன் சொல்லியது.

இ - ள்: கோட்டுப்பூச் சூடினும் - யான் கோடுதலைச் செய்யுமாலையைச் சூடினேனாயினும், — ஒருத்தியைக் காட்டிய சூடினீர் என்று காயும் - அம்மாற்காதலிக்கப்பட்டாளொருத்திக்கு இப்பூவணி காட்டல்வேண்டிச் சூடினீரென்று வெகுளாநிற்கும்; இத்தன்மையாட்கு ஒருகாரணம் வேண்டுமோ! எ - று.

கோடென்பது முதனிலைத்தொழிற்பெயர். பூ ஆகுபெயர். வினையமாகச்சூடினு மென்பதாம்; "கோட்டல் கண்ணியும் கொடுந்திரை யாடையும்" என்றார் பிறரும்.

இனி

னும்

அம்மருதநிலத்துப்பூவன்றி வேற்றுநிலத்துக் கோட்டுப்பூவைச் சூடினேனாயி னென்னுடையாள் பிறளொருத்திக்கு அவ்வேற்றுப்பூவணி காட்டல்வேண்டிச் சூடினீரென்று வெகுளுமெனினுமமையும்.

(௩)

௩௪. யாரினுங் காதல மென்றேனா வூடினாள்
யாரினும் யாரினு மென்று.

கூகசு. உள்ளினே னென்றேன்மற் றென்மறந்தீ ரென்றென்னைப்
புல்லாள் புலத்தக் கனள். சு.

இதுவுமது.

இ - ள். உள்ளினேன் என்றேன் - பிரிந்தகாலத்து நின்னையிடையின்றி நினைத்தேனென்னுங் கருத்தால் யானுள்ளினேனென்றேன்;— மற்று என்மறந்தீர் என்று என்னைப் புல்லாள் புலத்தக்கனள் - என, அதனை ஒருகால் மறந்து பின்னினைத்தே னென்றதாகக் கருதி, என்னையிடையே மறந்தீரென்று சொல்லிமுன் புல்லுதற்கமைந் தவள் அஃதொழிந்து புலத்தற்கமைந்தாள். எ - று.

மற்று வினைமாற்றின்கண் வந்தது. அருத்தாபத்திவகையான் மறத்தலையுட் கொண்டு புலந்தாளென்பதாம்.
(சு)

கூகஎ. வழுத்தினா டும்மினே னாக வழித்தழு தாள்
யாருள்ளித் தும்மினீ ரென்று. எ.

இதுவுமது.

இ - ள். தும்மினேனாக வழுத்தினாள் - கூடியிருக்கின்றவள் யான் தும்மினேனாகத் தன்னியற்கைபற்றி வாழ்த்தினாள்,—அழித்து யார் உள்ளித்தும்மினீர் என்று அழுதாள் - அங்ஙனம் வாழ்த்தியதானே மறித்து, நும்மை நினைந்து வருந்துகின்ற மகளிருள் யாவர் நினைத்தலாற் றும்மினீரென்று சொல்லிப் புலந்தழுதாள். எ - று.

வாழ்த்தலொடு புலத்தல் இயையாமையின், அழித்தென்றான். அன்புடையார் நினைத்தவழி அந்நினைக்கப்பட்டார்க்குத் தும்மலுண்டாமென்பது மகளிர்வழக்கு. இவ் வழக்கை உள்வழக்காகக் கருதிப் புலந்தாளென்பதாம். (எ)

கூகஅ. தம்முச் செறுப்ப வழுதா ளுமருள்ள
வெம்மை மறைத்திரோ வென்று. அ.

# கூக ம் அதி.—ஊடலுவகை.

ஊடல்

இ - ள். தம்முச் செறுப்ப - எனக்குத் தம்மரேன்றியவழி யாருள்ளித்தம்பின் சென்று புலத்தலையஞ்சி, அதனை யானடக்கினேன்; அவ்வனமடக்கவும் — நமர் உள்ளல் எம்மை மறைத்திரோ என்று அழுதாள் - நமர் நம்மை நினைத்தல எம்மை மறைக்கவுற்றீரோவென்று சொல்லிப் புலந்தழுதாள். எ - று.

தம்முவென்பது முதனிலைத்தொழிற்பெயர். செறுப்பவென்புழி இறந்தது தழீஇயவெச்சவும்மை விகாரத்தாற்றொக்கது. எம்மையென்பது நம்மோடியாதுமியைபில்லாத வெம்மை யென்பதுபடநின்ற இசையெச்சம். இதனை வடநூலார் காரு வென்ப. தம்மினுங் குற்றம் ஒழியினுங்குற்றமாயக்காற் செயற்பாலதியாதென்பதாம்.

கூகசு. தன்னை யுணர்த்தினுங் காயும் பிறர்க்குநீ
ரிந்நீர ராகுதி ரென்று. க.

இதுவுமது.

இ - ள். தன்னை உணர்த்தினுங் காயும் - இவ்வாற்றுளூடிய தன்னை யான் பணிந் துணர்த்துங்காலும் வெகுளாநிற்கும், — பிறர்க்கும் நீர் இந்நீர் ஆகுதிர் என்று - பிற மகளிர்க்கும் அவருடியவழி இவ்வாறே பணிந்துணர்த்துநீர்மையையுடையீராகுதி ரென்று சொல்லி. எ - று.

இவன் தெளிவித்தவழியுந் தெளியாளென்பதுபற்றி என்மேலேற்றிய தவற்றை உடம்பட்டுப் பணிந்தேன், பணிய அதுதானும் புலத்தற்கேதுவாய் முடிந்தது, இனி யிவண்மாட்டுச் செய்யத்தகுவதியா

தென்பதாம். (க)

கஉ௦. நினைத்திருந்து நோக்கினுங் காயு மனைத்துநீர்
யாருள்ளி நோக்கினீ ரென்று. க௦.

இதுவுமது.

இ - ள். நினைந்து இருந்து நோக்கினும் காயும் - என்சொற்களுஞ் செயல்களும் பற்றித் தான் வெகுடலான், அவற்றையொழிந்திருந்து தன்னவயவங்களதொப்பின் மையை நினைந்து அவற்றையே நோக்கினும், என்னை வெகுளாநிற்கும்,—அனைத்தும் நீர் நோக்கினீர் யார் உள்ளி என்று - என்னவயவமனைத்தும் நோக்கினீர் அவற்ற தொப்புமையான் எம்மகளிரை நினைந்தென்று சொல்லி. எ - று.

யான் எல்லாவவயவங்களாலும் ஒருத்தியோடொத்தல் கூடாமையின் ஒன்று லொருவராகப் பலரையுநினைக்கவேண்டும்; அவரெல்லாரையும் யானறியச் சொல்லுமி னென்னுங் கருத்தால், அனைத்துநோக்கினீர் யாருள்ளியென்றாள். குற்றமாயிற்றென்பதாம்.

வாளாவிருத்தலும்

(௪௦)

---

## கஉக ம் அதி.—ஊடலுவகை.

அஃதாவது அப்பெற்றித்தாய வூடலாற் றமக்குக் கூடலின்பஞ் சிறத்தலின் அச்சிறப்பிற்கேதுவாய அவ்வூடலைத் தலைமகளுவத்தலும் தலைமகனுவத்தலுமாம். அதிகாரமுறைமையும் இதனானே விளங்கும்.

கஉ௨க. இல்லை தவறவர்க் காயினு மூடுதல்
வல்ல தவரளிக்கு மாறு. க.

மேறுண்பதனிலும் முன் றுண்டதறதல் இன்பர்தரும்;—காமம் புணர்தலின் ஊடல் இனிது - அது போ லக் காமத்திற்கு மேற்புணர்தலினும் முன்னைத்தவறுபற்றி யூடுதல் இன்பர்ரும். எ - று.

காமத்திற்கென்புழிச் சாரியையும் நான்கனுருபும் விகாரத்தாற்றொக்கன. பசித்துண்ணும்வழி மிகவுண்ணலுமாய் இன்கவைத்துமாம் அதுபோல அகன்றுகூடும்வழி ஆராததுமாய்ப் பேரின்பத்ததுமாமெனத் தன்னனுபவம்பற்றிக் கூறியவாறு. (௬)

கஉஉஎ. ஊடலிற் றோற்றவர் வென்றா ரதுமன்னுங்
கூடலிற் காணப் படும். எ.

இதுவுமது.

இ - ள். ஊடலின் தோற்றவர் வென்றார் - காமநுகர்தற்குரிய இருவருள் ஊட லின்கட்டோற்றவர் வென்றாராவர்;—அது கூடலிற் காணப்படும் - அஃதப்பொழு தறிப்படாதாயினும் பின்னைப்புணர்ச்சியின்கண் அவராலறியப்படும். எ - று.

தோற்றவர் எதிர்தலாற்றாது சாய்ந்தவர். அவர் புணர்ச்சிக்கட் பேரின்பமெய்த லின் வென்றாராயினர். மன்னும் உம்மும் அசைநிலை. யானதுபொழுது சாய்தலின் இதுபொழுது பேரின்பம்பெற்றேனென்பதாம். (எ)

கஉஉஅ. ஊடிப் பெறுகுவங் கொல்லோ நுதல்வெயர்ப்பக்
கூடலிற் றோன்றிய வுப்பு. அ.

இதுவுமது.

இ - ள். நுதல் வெயர்ப்பக் கூடலில் தோன்றிய உப்பு - இதுபொழுது இவளு தல் வெயர்க்கும்வகை கலவியின்கணுளதாய இனிமையை—ஊடிப் பெறுகுவம் கொல்லோ - இன்னுமொருகால் இவளூடி யாம் பெறவல்லேமோ! எ - று.

௧௦

கற்பியல் கலையும் புலவி—ஊடலுவகை.

தலைமகள் காரணமின்றிப் புலக்கின்றமை
கேட்டதோழி அங்ஙனம்
நீ புலக்கின்றதென்னையென்றாட்கு அவள் சொல்லியது.

இ - ள். அவர்க்குத் தவறு
இல்லையாயினும் - அவர்மாட்டுத் தவறில்லையாயினும், — அவர் அளிக்குமாறு
ஊடுதல் வல்லது - நமக்கவர் தலையளிசெய்கின்றவாறு அவரோ
டூடுதலை விளைக்க வற்றாகின்றது. எ - று.

அவர்க்கென்பது வேற்றுமைமயக்கம்.
அளவிறந்தவின்பத்தராகலின் யாரையும் நயப்பவராய இத்தலையளி
ஒழிவாருமெய்யவரெனக்கருதி அது பெருகுமாயுள்
ஊடனிகழா நின்றதென்பதாம்.

(■)

௩௨௨. ஊடலிற் றோன்றுஞ் சிறுதுனி நல்லளி
வாடினும் பாடு பெறும். ௨.

புலவாக்காலும் அத்தலையளி பெறலாயிருக்க அஃதிழந்து
புலவியான்
வருந்துவதென்னையென்றாட்கு அவள் சொல்லியது.

இ - ள். ஊடலின் தோன்றும் சிறுதுனி - ஊடலேதுவாக
நங்கட்டோன்றி நின்ற சிறிய துனிதன்னால்—நல்லளி வாடினும்
பாடுபெறும் - காதலர்செய்யு நல்ல
தலையளிவாடுமாயினும் பெருமையெய்தும். எ - று.

தவறின்றி நிகழ்கின்றவூடல் கடிதினீங்கலின்
அத்துன்பமுமில்லையென்பாள் சிறு
துனியென்றும், ஆராமைபற்றி நிகழ்தலின் அதனான் நல்லளி
வாடாதென்பாள் வாடினுமென்றும், பின்னே
பேரின்பம்பயக்குமென்பாள் பாடுபெறுமென்றுங்கூறினாள்.
அது வருத்தமெனப்படாதென்பதாம்.

(௪)

## ௱௩௰௩-ம் அதி.—ஊடலுவகை.

[illegible]

௲௩௱௨௰௫. தவறில ராயினுந் தாம்வீழ்வார் மென்றோ
ளகறலி னாங்கொன் றுடைத்து. ரு.

தலைமகளையூடனீக்கிக் கூடிய தலைமகன் கழியுவகையனாய்த்
தன்னுள்ளே சொல்லியது.

இ - ள். தவறு இலராயினும் தாம் வீழ்வார் மென்றோள் அகறலின் - ஆடவர் தங்கட்டவறிலராயினும் உடையார்போலவூடப்பட்டுத் தாம் விரும்புமகளிருடைய மெல்லிய தோள்களைக் கூடப்பெறாதவெல்லைக்கண் — ஆங்கு ஒன்று உடைத்து-அவர்க்கு அப்பெற்றியதோரின்பம் பயத்தலுடைத்து. எ - று. உடையராயக்கால் இருத்தலின்பத்தோடு வருமின்பமுமெய்துவராகலின் அது மிகன்று. மற்றையிலராயக்காலும் வருமின்பத்தையிகழ்ந்ததில்லையென்னுங் கருத்தால், தவறிலராயினு மாங்கொன்றுடைத்தென்றான். ஊடலினாயவின்பம் அளவிறந்தலிற் கூறற்கரிதென்பான், அப்பெற்றியதொன்றென்றான். தவறின்றியூடியவதூஉம் எனக்கின்பமாயிற்றென்பதாம்.

(௫)

௲௩௱௨௰௬. உணலினு முண்ட தறலினிது காமம்
புணர்தலி னூட லினிது. ௬.

இதுவுமது.

இ - ள். உணலினும் உண்டது அறல்இனிது-உயிர்க்கு மேலுண்பதனினும் முன்னுண்டதறுதல் இன்பந்தரும்;—காமம் புணர்தலின் ஊடல் இனிது - அதுபோலக் காமத்திற்கு

மேற்புணர்தலினும் முன்னைத்தவறுபற்றி யூடுதல் இன்பந்தரும். எ - று.

காமத்திற்கென்புழிச் சாரியையும் நான்கனுருபும் விகாரத்தாற்றொக்கன. புணர்ந்தன்றும்வழி மிகவுண்டாமாய் இன்கைத்தமாம் அதுபோல அகன்றகூடும்வழி ஆர்ந்தமாய்ப் பேரின்பத்ததுமாமெனத் தன்னனுபவம்பற்றிக் கூறியவாறு. (சு)

கூஉஎ. ஊடலிற் றோற்றவர் வென்றா ரதுமன்னுங்
கூடலிற் காணப் படும். எ.

இதுவுமது.

இ - ள். ஊடலின் தோற்றவர் வென்றார் - காமநுகர்தற்குரிய இருவருள் ஊடலின்கட்டோற்றவர் வென்றாராவர்;—அது கூடலிற் காணப்படும் - அஃதப்பொழுதறியப்படாதாயினும் பின்னைப்புணர்ச்சியின்கண் அவராலறியப்படும். எ - று.

தோற்றவர் எதிர்தலாற்றாது சாய்ந்தவர். அவர் புணர்ச்சிக்கட் பேரின்பமெய்தலின் வென்றாராயினர். மன்னும் உம்மும் அசைநிலை. யானதுபொழுது சாய்தலின் இதுபொழுது பேரின்பம்பெற்றேனென்பதாம். (எ)

கூஉஅ. ஊடிப் பெறுகுவங் கொல்லோ நுதல்வெயர்ப்பக்
கூடலிற் றோன்றிய வுப்பு. அ.

இதுவுமது.

இ - ள். நுதல் வெயர்ப்பக் கூடலில் தோன்றிய உப்பு - இதுபொழுது இவளுதல் வெயர்க்கும்வகை கலவியின்கணுண்டாய இனிமையை—ஊடிப் பெறுகுவம் கொல்லோ - இன்னுமொருகால் இவளூடி யாம் பெறவல்லேமோ! எ - று.

இ0

க.அச கஙங ம் அதி.—ஊடலுவகை.

கலவிபற்றி விசேடம்பற்றி நுதல்வெயர்ப்பவென்றான். இனிமைகண்டு வேட்கின் மிகுந்தூற்றிதலானுயின்பம். இனி அப்பெற கூடாதெனப் பெற்றதன்சிறப்புக் கூறியவாறு.

௧௩௨௯. ஊடுக மன்னோ வொளியிழை யாமிரப்ப
நீடுக மன்னோ விரா. ௯.

இதுவுமது.

இ - ள். ஒளியிழை ஊடுக மன் - ஒளியிழையினையுடையாள் இன்னுமெம்மோடூடுவாளாக;—யாம் இரப்ப இரா நீடுக மன் - அங்ஙனம் அவளூடிநிற்றற்கும் அதனையுணர்த்துதற்பொருட்டு யாமிரந்து நிற்றற்கும் காலம்பெறும்வகை இவ்விரவு விடியாது நீட்டித்தல்வேண்டுக. எ - று.

ஊடுக நீடுகவென்பன வேண்டிக்கோட்பொருள. மன்னிரண்டும் ஆக்கத்தின்கண் வந்தன. ஓகாரங்கள் அசைநிலை. கூடலின் ஊடலேயமையுமென்பதாம். (௯)

௧௩௩௦. ஊடுதல் காமத்திற் கின்ப மதற்கின்பங்
கூடி முயங்கப் பெறின். ௰.

இதுவுமது.

இ - ள். காமத்திற்கு இன்பம் ஊடுதல் - காமநுகர்ச்சிக்கு இன்பமாவது அதனை நுகர்தற்குரியாரவர் கூராமைபற்றித் தம்முளூடுதல்;—அதற்கு இன்பம் கூடி முயங்கப் பெறின் - அவ்வூடுதற்கின்பமாவது, அதனையளவறிந்து நீங்கித் தம்முட்கூடி முயங்குதல் கூடுமாயின், அம்முயக்கம். எ - று.

ஊடுதல் ஒத்தவளவினராதல். முதிர்ந்ததனியாயவழித் துன்பம் பயத்தலானும், முதிராத புலவியாயவழிக் கலவியின்பம் பயவாமையானும், இரண்டற்குமிடையாகிய அளவறிந்து நீங்குதலரிதென்பதுபற்றிக் கூடிமுயங்கப்பெறினென்றான். அவ்விரண்டின்பமும் யான் பெற்றேனென்பதாம். (௰)

ஈண்டுப் பிரிவினை உடனன்மதம்பற்றிச் செலவு ஆற்றாமை

விதுப்புப் புலவி யென நால்வகைத்தாக்கிக் கூறினர். அவற்றுட்செலவு பிரிவாற்றாமையுள்ளும், ஆற்றாமை படர்மெலிந்திரங்கல் முதல் நிறையழிதலீறாயவற்றுள்ளும், விதுப்பு அவர் வயின்விதும்பன்முதற் புணர்ச்சிவிதும்பலீறாயவற்றுள்ளும், புலவி நெஞ்சொடுபுலத் தன்முதல் ஊடலுவகையீறாயவற்றுள்ளுங் கண்டுகொள்க. அஃதேல் வடநூலார் இவற்றுடனே சாபத்தினுளைய நீக்கத்தினையுங் கூட்டிப் பிரிவினை ஐவகைத்தென்றாரா லெனின், அஃது, அறம்பொருளின்பமென்னும் பயன்களுள் ஒன்றுபற்றிய பிரிவன் மையானும், முனிவரானையான் ஒருகாலத் தோர்குற்றத்தானாவதல்லது உலகியல் பாய் வாராமையானும், ஈண்டொழிக்கப்பட்டதென்க.

கற்பியல் முற்றிற்று.

காமத்துப்பால் முற்றிற்று.



திருவள்ளுவர் பரிமேலழகருரை முற்றுப்பெற்றது.



## உரைச்சிறப்புப்பாயிரம்.



திருத்தகுசீர்த் தெய்வத் திருவள் ளுவர்தங்
கருத்தமைதி தானே
கருதி—விரித்துரைத்தான் பன்னு தமிழ்நேர்
பரிமே லழகனெனு மன்னு முயர்நாமன் வந்து.
பாலெல்லா நல்லாவின் பாலாமோ பாரிலுள்ள
நூலெல்லாம் வள்ளுவர்செய்
நூலாமோ—நூலிற் பரித்த வுரையெல்லாம்

டரிமே லழகன் றெரித்தவுரை யாமோ தெளி.

---

௨

திருக்குறளின்

சிறப்புப்பாயிரமாகிய

# திருவள்ளுவமாலை.

---

## அசரீரி.

௧. திருத்தகு தெய்வத் திருவள் ளுவரோ
டுருத்தகு நற்பலகை யொக்க—விருக்க
வுருத்திர சன்ம ரெனவுரைத்து வானி
லொருக்கவோ வென்றதோர் சொல்.

இ - ள். திருத்தகு தெய்வத் திருவள்ளுவரோடு - அருட்செல்வத்தையும் அதற் குத்தக்க தெய்வத்தன்மையையுமுடைய திருவள்ளுவரோடு—உருத்தகு நற்பலகை உருத்திரசன்மர் ஒக்க இருக்க என உரைத்து - அவரிருத்தற்குத் தனது உருவத்தி னாலே தக்க நல்ல சங்கப்பலகையிடத்து உருத்திரசன்மர் ஒருவரே ஒப்பவேறியிருக்க வென்று கூறி,—வானில் ஒருக்க ஓர்சொல் ஓவென்றது - ஆகாசத்திலிருந்து அவ்வி டத்துள்ள புலவர் கருத்தையெல்லாம் ஒற்றுமைசெய்யும்படி ஒருவாக்கியம் ஓவென்று இரைக்தெழுந்தது.

" அருட்செல்வஞ் செல்வத்துட் செல்வம் " என்பவாகலின்,

திருவென்றதற்கு அப்பொருளுரைக்கப்பட்டது. தெய்வத்தன்மை தெய்வத்தினவதாரமாய் விளங் குகை: தெய்வத்தன்மை யில்லார்க்கு அருளுளதாயினும் அதனாலே பெரும்பயன் விளை யாமையின், தகுதி சொல்லப்பட்டது. திருவள்ளுவரென்னும் பெயருள், திருவென் பது உயர்வையும், வள்ளுவரென்பது வண்மையையுடைய ரென்பதையும், விளக்கி நின்றனவாகலின், அது வேதத்தில் இலைமறைகாய்கள்போற் பலவிடங்களிலும் மறைந்து வெளிப்படாதிருந்த மெய்ப்பொருள்களையெல்லாம் தொகுத்து உலகத்தா ருக்குக் கொடுத்தருள்செய்தவரென்னுங் காரணம்பற்றி வந்த பெயராயிற்று. வள் முதனிலை, அர் இறுதிநிலை, உ சாரியை. அம்முதனிலைக்குப் பொருள் ஈகை. உருத்திர சன்மர் உருத்திரனால் அடைந்த சன்மத்தையுடையரென விரியும். அவர் முருகக்கட வுளது. திருவவதாரமாய் வணிகர்மரபிற்றோன்றிய மூங்கைப்பிள்ளையார். அசரீரி அருவமாய் எங்கும்நிறைந்துள்ள முதற்றெய்வம். அரங்கேற்றத்தொடங்கிய காலத்துத் தெய்வப் புலவரோடு ஒப்பவிருந்து கேட்டற்குத் தகுதியுடையோர் யாரென யாவருஞ் எண்ணமுற்று நின்றவழி இவ்வசரீரிவாக்கியம் பிறந்தது. என்றதெனப் படர்க்கைவினையாகக்கூறலின், ஆண்டு நின்று கேட்ட புலவர்களுள் ஒருவர் அதனை இங்ஙனம் பாடலாகச் செய்தனரென்றறிக. (௧)

## நாமகள்.

௨. நாடா முதனூன் மறைநான் முகனாவிற்
பாடா விடைப்பா ரதம்பகர்ந்தேன்—கூடாரை
யெள்ளிய வென்றி யிலங்கிலைவேன் மாறபின்
வள்ளுவன் வாயதென் வாக்கு.

தெ

இ - ள். கூடாரை எள்ளிய வென்றி இலங்கு இலை வேல் மாற -

பகைவரைப் புறங்கொடுக்கச்செய்து இகழ்ந்த வெற்றியை உண்டாக்கி விளக்குகின்ற இலைபோ லும் வேற்படையையுடைய பாண்டியராசனே,—நாடா - உலகத்தார் விதிவிலக்குக் களை அறிந்து உய்யும்வழியை நாடி,—முதல் நான்முகன் நாவில் நான்மறை பாடா - படைப்புக்காலத்திலே பிரமனது நாவிலிருந்து இருக்குமுதலாகிய நான்குவேதங் களையும் பாடி,—இடைப் பாரதம் பகர்ந்தேன் - நவோனகாலத்திலே பாரதமாகிய வேதத்தைக் கூறினேன்;—பின் என் வாக்கு வள்ளுவன் வா யது - அதற்குப் பிற்பட்ட இக்காலத்திலே என்வாக்குத் திருக்குறளாகிய வேதத்தைச்சொல்லி வள்ளுவன் வாயின்கண்ணதாயிற்று. எ - று.

தன் கணவனாகவின் நான்முகனுவிலிருந்தேன்றும், அவனவதா ரமாகவின், வள்ளுவன்வாயதேன் வாக்கென்றும், கூறினன். பாரதம் வியாசரைக்கொண்டு சொல்லப்பட்டது. இதனல் நான்மறை பூர்வவேதமும், பாரதம் மத்தியவேதமும், திருக்குறள் உத்தரவேதமும், என்றதாயிற்று. வேதம் மூவகைத்தென்பதூஉம், இவற்றது தோற்றமுறையால் இது சொல்லியபடி. வாக்கியப்பிரமாணத்திற் சிறப்புடைத்தென்பதூஉம்,

(உ)

## இறையனர்.

> ௩. என்றும் புலரா தியாணர்நாட் செல்லுகினு
> நின்றலர்ந்து தேன்பிலிற்று நீர்மையதாய்—குன்றுத
> சேர்தளிர்க் கற்பகத்தின் தெய்வத் திருமலர்போன்
> மன்புலவன் வள்ளுவன்வாய்ச் சொல்.

இ - ள். மன் புலவன் வள்ளுவன் வாய்ச்சொல் - புலவர்க்கரசனுகிய வள்ளு வன் வாயிற் பிறந்த திருக்குறளானது,—என்றும் யாணர் புலராது நாட்செல்லுகினும் நின்று அலர்ந்து தேன் பிலிற்றும் நீர்மையதாய் - எக்காலத்தும் தன்னழகுகெடாது நெடுங்காலங் கழியினும் நிலைபெற்று மலர்ந்து தேனைச்சொரிகின்ற குணமுடையதாய் விளங்குமாதலால், —குன்றுத சேர்தளிர்க் கற்பகத்தின்

தெய்வத்திருமலர்போன்ம் - குறைவுபடாத செய்ய தளிர்களையுடைய கற்பகத்தினது தெய்வத்தன்மைபொருந்திய உயர்வாகிய மலர்போலும். எ - று.

திருக்குறளுக்கு அழகு சொன்முடிபு பொருண்முடிபின் குணங்களும், அலர்தல் எங்கும் பரவுதலும், தேன் பிலிற்றல் இருமையின்பங்களும் விளைத்தலுமாம். சொல் ஆகுபெயர்.இறையனார் கடவுளாகலின், இனி இதிற் சிறப்புதோன்றனதாவதின்றென் றுக் துணிவுதோன்ற என்றுமென்றும், பின்னும் அதனை வலியுறுத்தற்கு நாட்செல்லு கினுமின்றென்றும், வாழ்த்துப் பொருள்பட இவ்வாறு கூறினர். இஃது அழியாது நின்றுபெருகிப் பயன்படுமாறு சொல்லியபடி. (க)

## உக்கிரப்பெருவழுதியார்.

உ. நான்மறையின் மெய்ப்பொருளை முப்பொருளா நான்முகத்தோன்
றான்மறைந்து வள்ளுவனாய்த்
தந்துரைத்த—நூன்முறையை
வந்திக்க சென்னிவாய் வாழ்த்துக நன்னெஞ்சஞ்
சிந்திக்க கேட்க செவி.

இ - ள். நான்முகத்தோன் தான் மெய்ப்பொருளை முப்பொருளாத் தந்து

மறைந்து வள்ளுவனாய் நான் மறையின்
உரைத்த நூன்முறையை-நான்முகன் தான்

தன்னுருமறைத்து திருவள்ளுவனுபவதரித்து நான்குவேதங்களிலுள்ளமைப்பொருளை அறம் பொருள் இன்பமென்னும் முப்பாற்பொருளாகத் தமிழிற்றாகூறிய திருக்குற ளெழுதிய திருமுறையை—சென்னி வந்திக்க - என்றலை வணங்குக,—வாய் வாழ்த்துக - வாய் நவிக்க,—நன்னெஞ்சம் சிந்திக்க - நல்லமனம் தியானிக்க,—செவி கேட்க - காதுகேட்க. எ - று.

முப்பொருள் ஆகுபெயர். இவ்வேதப்பொருள் ஆதியிலே வேதஞ்சொல்லியோனாலேயே சொல்லப்பட்டமையால் உலகத்துச் சமயாசாரியர்களாலும் பிறராலும் ஒன்றற்கொன்று மாறாகக் கொள்ளப்பட்ட பொருள்கள்போல்வதன்றென்பது தோன்ற, மெய்ப்பொருளென்றார். கலைபுணர்புலமையிற்றலைமையோனாகி விதிமுறைவழாது முதலிலம் புரக்கும் பெருந்தகை யுக்கிரப் பெருவழுதியென்னுந் தன்னிகரில்லா மன்னவர் பெருமான் தான்மேற்கொண்ட சிறப்பைப் பலரும் அறிந்து மேற்கொள்ள, இவ்வாறு வழிபாடடைந்தான், "மன்னனெப்படி மன்னுயிரப்படி" ஆகலின், இப்புத்தகத்தை முன்னே பூசித்து மெய் மொழி மனங்களால் வணக்கஞ்செய்து பின் கேட்க வேண்டுமென்று சொல்லியபடி. (௩)

## கபிலர்.

> ௫. தினையளவு போதாச் சிறுபுன்னீர் நீண்ட
> பனையளவு காட்டும் படித்தால்—மனையளகு
> வள்ளைக் குறங்கும் வளநாட வள்ளுவனார்
> வெள்ளைக் குறட்பா விரி.

இ - ள். மனை அளகு வள்ளைக்கு உறங்கும் வளநாட - மனையில் வளர்க்கப்படு கின்ற பறவைப்பேடுகள் உலக்கைப்பாட்டால் கண்ணுறங்குகின்ற வளம்பொருந்திய நாட்டையுடைய அரசனே,—வள்ளுவனார் வெள்ளைக்குறட்பா விரி - திருவள்ளுவரால் அருளிச்செய்யப்பட்ட குறள்வெண்பா மிகப்பெரிய பொருளைத் தன்னுட் கொண்டு காட்டுதல்—தினையளவு போதாச் சிறுபுன்னீர் நீண்ட

பனையளவு காட்டும் படித்து - தினையரிசியினளவுக்கும் போதாத சிறிய புல்லினது நுனியின்கணுள்ள பனிநீர் உயர்ந்த பனையினளவான அதன்சாயையைத் தன்னுட்கொண்டு காட்டுங் குணம் போலுங் குணத்தையுடைத்து. எ - று.

பனை ஆகுபெயர். ஆல் அசை. பறவை கிளி முதலியவை. உலக்கைப்பாட்டு மகளிர் பரிமளப்பொடி இடிக்கின்றபோது பாடும்பாட்டு. விரி விரித்தல். எப்படி மிகச் சிறிய பனித்துளியிலே மிகப் பெரிய பனைமரத்தின்சாயை அடங்கி விளங்குகின் றதோ அப்படியே மிகச்சிறிய இக்குறள்வெண்பாவில் மிகப்பெரிய பொருள் அடங்கி விளங்குகின்றதென்பதாம். இது சுருங்கியிருந்தும் விரிவான பொருளை விளக்குமாறு சொல்லியபடி. இது முதலியன சங்கத்துப்புலவராலே பாடப்பட்டன. (௭)

## பரணர்.

க. மாலுங் குறளாய் வளர்ந்திரண்டு மாணடியான்
ஞால முழுது நயந்தளந்தான்—வாலறிவின்
வள்ளுவருந் தங்குறள்வெண் பாவடியால் வையத்தா
ருள்ளுவவெல் லாமளந்தா ரோர்ந்து.

இ - ள். மாலும் குறளாய் வளர்ந்து இரண்டு மாண் அடியால் ஞாலம் முழுதும் நயந்து அளந்தான் - திருமாலும் குறளாய்ப் பிறந்து வளர்ந்து இரண்டு பெரிய அடி



களால் உலகமனைத்தையும் விரும்பி அளந்தான்;—வாலறிவின் வள்ளுவரும் தங்குறள் வெண்பா அடியால் வையத்தார் உள்ளுவ எல்லாம் ஓர்ந்து அளந்தார்-மெய்யறிவினை யுடைய திருவள்ளுவரும் தம்மினின்றுந்தோன்றி அங்கீகரிக்கின்ற வெண்பாக்குறளின் இரண்டுசிறிய அடி களால் அவ்வுலகமனைத்தினுமுள்ளோரால் நினைக்கப்பட்டவற்றையெல்லாம் ஆராய்ந்து அளந்தார். எ - று.

உம்மையிரண்டும், முறையே தேவரிற் பெரியோருகியவென்றும், மனிதரிற்சிறிய ராய்க் காணப்பட்டவென்றும், பொருள்பட நின்றன உவமானத்திலே வளர்தலும் பெருமையும் சொல்லுதலால், உவமேயத்திலே அவற்றுக்கு மாருகிய நிலைநிற்றலும் சிறுமையும் வருவிக்கப்பட்டன. மாலுக்குத்தானே குறளாதலும் பின்பு அந்நிலை நில்லாது வளர்தலும் போடிகளால் அளவுபட்ட உலகத்தையளத்தலும், திருவள்ளுவருக் குத் தம்மினின்றுங் குறளை உண்டாக்குதலும், அது தன்னிலைநிற்றலும் அதன் சிற்றடி களால் அளவுபடாத நினைப்பின் விடயங்களை அளத்தலும், சொல்லப்படுதலாலும், வேற்றுமையறிக. நினைக் கப்பட்டனவெல்லாம் இதனகத்து அளவுசெய்யப்பட்டமை சொல்லியபடி.
(௬)

## நக்கீரர்.

எ. தானே முழுதுணர்ந்து தண்டமிழின் வெண்குறளா
லானு வறமுதலா வந்நான்கு—மேனோருக்
கூழி னுரைத்தாற்கு மொண்ணீர் முகிலுக்கும்
வாழியுல கென்னாற்று மற்று.

இ - ள். தானே முழுது உணர்ந்து - தானே வேதப்பொருளனைத்தையும் அறிந்து,—தண்டமிழின் வெண்குறளால் ஆனுஅறம் முதலா அந்நான்கும் மேனோருக்கு ஊழின் உரைத்தாற்கும் - தண்ணிய தமிழின்கண் குறள்வெண்பாக்களால் விட்டு நீங்குதல் கூடாத அறமுதலாகிய அந்நான்குபொருள்களையும் அவற்றையறியாதவர்களுக்கு அவர் எளிதினறிய முறையாற் சொல்லியருளிய திருவள்ளுவருக்கும்—ஒண் ணீர் முகிலுக்கும் - ஒள்ளிய நீரைத் தந்த மேகத்துக்கும்—உலகு மற்று என் ஆற்றும்- இவ்வுலகம் எதிர் நன்றி யாதுசெய்யும்! செயக்கிடந்தது ஒன்றும் இல்லை;—வாழி - அவரும் அதுவும் வாழ்க. எ - று.

ஆனுமை நீங்காமை. தானே முழுதுணர்ந்தெனவே,

ஆசாரியராயிருந்து பிறரதி
விக்க அறிந்திலரென்றதாயிற்று. முழுதுமென்றும்மை தொக்கது. ஒண்மை இனி மைமேனின்றது. முறை நாலின்முப்பொருள்களின் கிடக்கையொழுங்கு. காயனூர் கொடைச்சிறப்புச் சொல்லியபடி. (எ)

## மாமூலனார்.

அ. அறம்பொரு ளின்பம்வீ டென்னுமந் நான்கின்
திறந்தெரிந்து செப்பிய தேவை—மறந்தேயும்
வள்ளுவ னென்பானோர் பேதை யவன்வாய்ச்சொற்
கொள்ளா ரறிவுடை யார்.

இ - ள். அறம் பொருள் இன்பம் வீடு என்னும் அந்நான்கின் திறம் தெரிந்து செப்பிய தேவை - அறமுதலாகச் சொல்லப்பட்ட அவ்வேதப்பொருள்களாகிய நான்கனது கூறுபாட்டையும் தெரிந்து உலகத்தார்க்குச் சொல்லிய தேவனை—மறந்தேயும் வள்ளுவன் என்பான் பேதை - மறந்தாயினும் ஒருமனிதனை உட்கொண்டு வள்ளுவ

ன

னென்று சொல்லுதற்கு ஒருவனுளனாயின், அவன் அறிவில்லாதவனாவன்;—அவன் வாய்ச் சொல் அறிவு உடையார் கொள்ளார் - அவனது வாயிற்பிறந்த அச்சொல்லை அறிவுடையார் கொள்ளார். எ - று.

அறமுதலியவற்றின் கூறுபாடு அவற்றினது தொகை வகை விரிகள். மறந்தேயு மென்றதனால், நினைப்புடன் சொல்லுவோன் பேதையிற் பேதையாமென்பதாயிற்று. முன்னும் பின்னுமுள்ள பாட்டுக்களில் இப்பெயர் தெய்வத்தன்மையைக் குறிப்பிக்கும் படி நன்குமதித்து உயர்த்திச் சொல்லப்படுதலால், ஒருமனிதனை யுட்கொண்டென் பது வருவிக்கப்பட்டது; அன்றி ஒலிக்குறிப்பினாலே சாதியிழிவு தோன்ற வள்ளுவ னென்பானெனினுமமையும்.

இச்சூறிப்பொலியை வடநூலார் காகுகாமென்பர். தெய் வப்புலவரை அவமதிப்பினிழிவு சொல்லியபடி. (அ)

## கல்லாடர்.

௯. ஒன்றே பொருளெனின் வேறென்ப வேறெனி
னன்றென்ப வாறு சமயத்தார்—நன்றென
வெப்பா லவரு மியைபவே வள்ளுவனார்
முப்பான் மொழிந்த மொழி.

இ - ள். ஆறுசமயத்தார் ஒன்றே பொருள் எனின் வேறு என்ப - அறுவகைமதத் தோரும் ஒருமதத்தார் தமது நூலிலே உலகமும் உயிரும் கடவுளுமாகிய பொருள் கள் ஒன்றேயென்று காட்டுவாராயின், மற்றொருமதத்தார் தமது நூலிலே அதனை மறுத்து அவை வேறுமென்று காட்டுவர்;—வேறு எனின் அன்று என்ப - அப்படி வேறென்றுகாட்டின், பின்னொருமதத்தார் அதனை அன்றென்று மறுப்பர்; ஆதலால், சமயநூல்களெல்லாம் இவ்வாறு மறுக்கப்படுகின்றன—வள்ளுவனார் முப்பால் மொழிந்த மொழி நன்று என எப்பாலவரும் இயைப - திருவள்ளுவராலே முப்பாலாகச் சொல்லப்பட்ட நூலே நன்றென்று கொள்ளுதற்கு எல்வகைப்பட்ட பகுதியோரும் உடன்படுவார். எ - று.

மொழி ஆகுபெயர். ஆறுமதமாவன வியாசமதம், சைமினிமதம், பதஞ்சலிமதம், கபிலமதம், கணாதமதம், அக்ஷபாதமதம்; அன்றிச் சைவ வைணவ முதலியவற்றைக் கூறினுமாம். எச்சமயத்தாரு மென்னாது எப்பாலவருமென்றதனால், வேதத்துக்கு உட்பட்ட சமயத்தாரேயன்றிப் புறப்பட்ட சைனம், பௌத்தம் முதலிய மதத்தாரும், பலவகைப்பட்ட சாதியாரும், தேசத்தாரும், காலத்தாரும், பிறரும், தழுவப்படுதே லறிக. இதுவே பொதுவேதமென்றபடி.
(க)

## சீத்தலைச்சாத்தனார்.

௪௦. மும்மலைய முந்நாட்டு முந்நதிய முப்பதிய
மும்முரச முத்தமிழ் முக்கொடிய—மும்மாவுந்
தாமுடைய மன்னர் தடமுடிமேற் றாரன்றே
பாமுறைதேர் வள்ளுவர்முப் பால்.

இ - ள். வள்ளுவர் பா முறை தேர் முப்பால் - திருவள்ளுவரது பாக்களின் முன்பின் முறைதெரிதற்கிடனாகிய திருக்குறளானது,—மும்மலையும் - கொல்லிமலை சேரிமலை பொதியமலை எனப்படுகின்ற மூன்றுமலைகளையும்—முந்நாடும் - குடநாடு புனனாடு தென்னாடு எனப்படுகின்ற மூன்றுநாடுகளையும்—முந்நதியும் - பொருநை நதி காவிரிநதி வைகைநதி எனப்படுகின்ற மூன்றுநதிகளையும்—முப் பதியும் - கரு வூ

ர் உறையூர் மதுரை எனப்படுகின்ற மூன்று பதிகளையும்—மும்முரசம் - மங்கல முரசு வெற்றிமுரசு கொடைமுரசு எனப்படுகின்ற மூன்றுமுரசங்களையும்—முத்தமி ழும் - இயற்றமிழ் இசைத்தமிழ் நாடகத்தமிழ் எனப்படுகின்ற மூன்று தமிழ்களையும்—முக்கொடியும் - விற்கொடி புலிக்கொடி மீனக்கொடி எனப்படுகின்ற மூன்று கொடிகளையும்—மும்மாவும் - கவட்டம் பாடலம் கோரம் எனப்படுகின்ற மூன்று குதிரைகளையும்—தாம் உடைய மன்னர் தடமுடிமேல் தார் அன்றே - தாம் முறையே யுடைய சேரசோழபாண்டியர் எனப்படுகின்ற மூவரசருடைய பெரிய முடிகளின்மே லும் கொள்ளப்பட்டமாலையன்றோ. எ - று.

அன்றேயென்றது பலரறிதேற்றம். முப்பால் ஆகுபெயர்.

மும்மூலகம் முத்தமி மூம் அம்மூவரசர்க்கும் பொதுமையவாயினும், இம்முலைநயுரிமை அவர் குடிமைபிற்கு இயைந்தனபோலும். அரசர் மூவரும் மேற்கொண்ட சிறப்புச்சொல்லியபடி. (௫0)

## மருத்துவன்றாமோதரனார்.

௫௧. சிற்றிநீர்க் கண்டந் தெறிசக்குந் தேனளாய்
மோர்தபின் யார்க்குந் தலைக்குத்தில்—கார்த்தி
மலைக்குத்து மால்யானை வள்ளுவர்முப் பாலாற்
றலைக்குத்துத் தீர்வுசாத் தற்கு.

இ - ள். கார்த்தி மலைக்குத்தும் மால் யானை - தன்பகையென வெகுண்டு மலையைக் குத்துகின்ற பெரிய களிறுபோலுள்ள அரசனே,—சிற்றி நீர்க்கண்டம் தெறி சக்குந் தேன் அளாய் மோர்தபின் யார்க்கும் தலைக்குத்து இல் - சிற்றி நீர்ச் சருக்கரையையும் சிதைக்கப்பட்ட சுக்கையும் தேனொடு கலந்து மோர்தபின் அதனால் தலைக்குத்துடையோர் யாவர்க்கும் தலைக்குத்து இல்லையாகும்—வள்ளுவர் முப்பாலால் சாத்தற்குத் தலைக்குத்துத் தீர்வு - திருவள்ளுவர் அருளிச்செய்த முப்பாலினாலே சீத்தலைச்சாத்த னார்க்குத் தலைக்குத்து இல்லையாயிற்று. எ - று.

யானைபோல்பவனை யானையெனலால் ஆகுபெயர்.

முன்கேட்கப்பட்ட நூல்களி
லெல்லாம் பலசொற்குற்றங்களும், பொருட்குற்றங்களும், கண்டு பொறுது நிலையில் அறைந்துகொண்டேர்தமையால், புண்பட்டுக் குத்தல் உண்டாயிருந்தது; இதன்கண் ஒருகுற்றமுங்காணப்பெறுமையால் அது நீங்கிற்றென்க. எப்படி அம்மூன்று சரக்கும் அதற்கு மருந்தாமோ அப்படியே இதற்கு இம்மூன்றுபாலும் மருந்தாயினவென்ப தாம். தீர்வென்னுந்தொழிற்பெயர் முற்றுப்பொருளில் வந்தது. இதன் குற்றமற்று விளக்குமை சொல்லியபடி. (௫௧)

## நாகன்றேவனார்.

௫௨. தாளார் மலர்ப்பொய்கை தாங்குடைவார் தண்ணீர

வேளா தொழிதல் வியப்பன்று—வானோதா
மப்பா லொருபாலை யாப்பவோ வள்ளுவனார்
முப்பான் மொழிமூழ்கு வார்.

இ-ள். தான் ஆர் மலர்ப்பொய்கை குடைவார் தண்ணீரை வேளாதொழிதல் வியப்பு அன்று - ஊறுந்தேம் பொருந்திய தாமரைமலர்களையுடைய ஒருகுளத்தில் நீரின்கண்ணே மூழ்குவோர் வேறுதண்ணீரை விரும்பாதொழிதல் வியப்பைச்செய்வ தன்று;—வள்ளுவனார் முப்பால் மொழி மூழ்குவார் தாம் வானோர் அப்பால் ஒருபாலை யாப்பவோ - திருவள்ளுவரது முப்பால்களையுடைய நூலின்கண்ணே மூழ்குவார் தாம்

வினாக அப்பால் ஒரு நூலை விரும்புவரோ! விரும்பார்; ஆகலின், இதுவே செய்வதாம். எ-று.

வியப்பைச்

தானார்மலரெனலால், தாமரைமலரெனப்பட்டது. வியப்பைச் செய்வதை வியப்பென்றார். மூழ்குதல் இங்கே கருத்துமுழுதும் அழுந்திநிற்றன்மேனின்றது. மொழி ஆகுபெயர். ஓகாரம் எதிர்மறை. விரும்புதலாகிய காரணத்தை ஆப்பவோ வெனக்காரியமாக உபசரித்தார். அது வியப்பன்றென்றமையால், இது வியப்பென் றதாயிற்று. உயர்வானபொருள் பெற்றோர்க்கு அதனிழிவானபொருளையும் பெற விரும்புதல் இயல்பாயிருக்க, குளிர்ச்சி இன்சுவை நறுமணம் முதலிய குணங்களாலே சிறந்த ஒரு தாமரைக்குளத்து நீரைப் பெற்றோர்க்கு அதனாற்றானே அமைதி பெற்று வேறுதண்ணீரைப் பெற விரும்பாமை வியப்பைச் செய்வதாயிற்று; ஆயினும் இதுகாறும் ஒரு நூலைக் கற்றோர்க்கு வேறுநூலைக்கற்க விரும்புதலன்றி விரும்பாமையில்லா திருக்க, இப்போது உளதாகலின், இதுவே பெருவியப்பைச்செய்வதென்றதாயிற்று. இதனால், இந்நூலகத்து எந்நூற்பொருளும் அடங்கியிருக்கின்றமை குறிப்பிக்கப் பட்டது. பன்னூல்களையும் கற்க விரும்புவோர்க்கு இதுவொன்றே அமைதல் சொல்லியபடி.
(௩௨)

அரிசில்கிழார்.

௩௩. பரந்த பொருளெல்லாம் பாரறிய வேறு

தெரிந்து திறந்தெரறுஞ் சேரச்—சுருங்கிய
சொல்லால் விரித்துப் பொருள்விளங்கச் சொல்லுதல்
வல்லாரார் வள்ளுவரல் லால்.

இ - ள். பார்த்த பொருளெல்லாம் பார் அறிய வேறு தெரிந்து - வேதத்திலே ஒன்றோடொன்று மயங்கிநின்ற நால்வகைப் பொருள்களையும் இப்பூமியிலுள்ளோர் அறிதற்பொருட்டு வேறாகப் பிரித்து—திறந்தெரறுஞ் சேரச் சுருங்கிய சொல்லால்

பொருள்விளங்க விரித்துச் சொல்லுதல் வல்லார் - அது அது தனது தனது வகையோடு சேரும்படி சுருங்கிய சொல்லால் பொருள் விளங்க விரியும்படி வைத்துச் சொல்லுதல் வல்லார்—வள்ளுவரல்லால் ஆர்-வள்ளுவரல்லது ஒருவருமில்லை. எ-று.

பார் ஆகுபெயர். திறம் அறமுதலியவற்றின் கூறுபாடு. சுருக்கச்சொல்லல் விளங்கவைத்தன்முதலிய அழகுகள் எப்படி இவரால் அமைக்கப்பட்டனவோ அப்படிப் பிறரால் அமைக்கப்படுதல் கூடாமை காட்டியதாயிற்று. நூலுக்கும் நாயனார்க்கும் தகுதி சொல்லியபடி. (சங)

## பொன்முடியார்.

சச. காணின்ற தொங்கலாய் காசிபனார் தந்ததுமுன்
கூவின் றளந்த குறளென்ப—நான்முறையான்
வானின்று மண்ணின் றளந்ததே வள்ளுவனார்
தாமின் றளந்த குறள்.

இ - ள். காண் நின்ற தொங்கலாய் - மணத்தங்கப்பெற்ற மாலையையுடைய பாண்டியராசனே,—முன் காசிபனார் தந்தது கூவின்று அளந்த குறள் என்ப - முன் காசிபராலே தரப்பட்ட குறளை மண்ணின்கண்ணே நின்று உலகத்தை அளந்த குறளென்று சொல்லுவர்;—தாம் நின்ற வள்ளுவனார் அளந்த குறள் நின்று மண் நின்று அளந்தது - தாம் இங்கே எழுந்தருளித்

நான்முறையான் வரன்
திருவள்ளுவராலே தரப்

அ

பட்டகுறள் நாலின் முறைபோடு கூடி விண்ணின்கண்ணே நின்றும் மண்ணின் கண்ணே நின்றும் உலகத்தை அளந்தது. எ - று.

கு கூ எனநின்றது. ஆனுருபு ஒடுவுருபின் பொருளில் வந்தது. அக்குறள் வஞ் சித்துப்பெற்றனத்தலால் நான்முறைபோடு கூடாததாயிற்று. இக்குறளுக்கு ஒலிவடிவும் வரிவடிவுமென இரண்டுவடிவுண்மையால், ஒலிவடிவுக்கிடம் வானாகலின் வானின்றென்றும், வரிவடிவுக்கிடம் மண்ணாகலின் மண்ணின்றென்றும், கூறினர்.

இக்குறளுக்கு நான்முறைபோடு கூடலும் வானிற்றலும் மிகுத்துச் சொல்லி வேற்றுமை செய்யப்பட்டது. முன் மாறுமென்பாட்டிலே காயனுர்க்கும் மாலுக்கும், இப்பாட்டிலே திருக்குறளுக்கும் மாலவதாரக் குறளுக்கும், ஒப்புமை குறித்துச்சொல்லலால் வேறுபாடாம். உலகத்துப் பொருளெல்லாம் இஃது சொல்லியபடி.

அனத்தற் சிறப்புச்

(கச)

## கோதமனார்.

கசு. ஆற்ற லழியுமென் றந்தணர்க ணான்மறையைப்
போற்றியுரைத் தேட்டின்
புறத்தெழுதா—ரேட்டெழுதி
வல்லாரும் வல்லாரும் வள்ளுவனார் முப்பாலைச்
சொல்லிடினு மாற்றல்சோர் வின்று.

இ - ள். அந்தணர்கள் நான்மறையை உரைத்துப் போற்றி ஆற்றல் அழியும்

என்று ஏட்டின்புறத்து எழுதார் - அந்தணர்கள் நான்குவேதங்களையும் வாய்ப்பாட

மாகக் காப்பாற்றி, ஏட்டின்கண் எழுதிவைத்தால் வலியில்லாரும் ஓதுவாராகலின்

அவற்றின் வலிமை குறைபுமென்று எட்டின்கண்
எழுதார்;—வள்ளுவனார் முப்பாலை
எட்டு எழுதி வல்லாரும் வல்லாரும் சொல்லிடினும் ஆற்றல்
சோர்வின்று - திருவள்
ளுவரது திருக்குறளை எட்டின்கணெழுதிவைத்து வலியுடையவரும்
வலியில்லாரும்
ஓதினும், வலிமை குறைதலில்லை. எ - று.
அவ்வேதத்துக்கு உதாத்தம் அநுதாத்தம் சுவரிதமென்னுஞ்
சுரங்களின் வழுவா
மல் ஓதல்வேண்டுமென்னும் விதியுளதாகலின், அதற்குத் தகுதியுடைய
அந்தணரே
அதிகாரிகளாயினர்; இதற்கு அஃதில்லாமையால் யாவரும்
அதிகாரிகளாயரென்ற
திக. சொல்லிடினுமென்றதனால் பொருளுணர்ச்சிக்கு இதற்கும்
வலிமைவேண்டு
மென்பது பெறப்பட்டது. ஆற்றல் சொற்செறிவின்றிட்பம்.
இங்ஙனங்கூறவே, அவ்
வேதம் சொல்லின்கண்ணே தலைமையுடைத்தென்பதூஉம், இவ்வேதம்
பொருளின்
கண்ணே தலைமையுடைத்தென்பதூஉம், பெறப்பட்டன.
ஓதப்படுதலின் அவ்வேதத்
தினும் இது சிறப்புடைமை சொல்லியபடி.
(கஅ)

நத்தத்தனார்.

கக. ஆயிரத்து முந்நூற்று முப்ப தருங்குறளும்
பாயிரத்தி னோடு பகர்ந்ததற்பின்—போயொருத்தர்
வாய்க்கேட்க நூலுளவோ மன்னு தமிழ்ப்புலவ

ராய்க்கேட்க விற்றிருக்க லாம்.

இ-ள். பாயிரத்திஞேடு ஆயிரத்துமுந்நூற்றுமுப்பது அருங்குறளும் பகர்ந்த

நூற்பின் போய் ஒருத்தர் வாய்க்கேட்க நூல் உளவோ - பாயிரமான்கதிகாரங்க

ளோடு சேர்ந்துதொகையாகிய அரிய ஆயிரத்துமுந்நூற்றுமுப்பது குறள்வெண்பாக்க

ளையும் ஓதியுணர்ந்தபின்பு, போய் ஒருவரது வாயாலே கேட்டறிதற்கு நூலுளவோ!

இல்லை:—மன்னு தமிழ்ப்புலவராய்க் கேட்க விற்றிருக்கலாம் - நிலைபெற்ற தமிழிலே

புலமை நிரம்பியோராகிப் பிறர் தம்மிடத்து வந்துகேட்க விற்றிருக்கலாம். எ-று.

விற்றிருத்தல் ஒரு சபைநடுவிலே உயர்வாகிய ஆதனத்தில் ஏறியிருத்தல். இவற்றுட் பலவகைப்பட்ட நூல்களின் கருத்துக்களெல்லாம் விளங்குகின்றவின், கேட்க நூலுளவோ வென்ருர். புலவராயெனவே, புலமை நிரம்புதற்கு இவை ஆயிரத்து முந்நூற்றுமுப்பது குறள்களும் போதுமென்பது பெறப்பட்டது. ஓதியோர்க்கு வரும் இம்மைப்பயன் சொல்லியபடி. (எ)

முகையலூர்ச் சிறுகருந்தும்பியார். கஎ.

உன்னுதொறு ளுள்ளி யுரைத்தொறு ளுரைத்தலைத்
தென்னுத லன்றே செயற்பால—வள்ளுவனார்
முப்பாலின் மிக்க மொழியுண் டெனப்பகர்வா
ரெப்பா லவரினு மில்.

இ - ள். வள்ளுவனார் முப்பாலின் மிக்க மொழி உண்டு எனப்பகர்வார் எப்பால

லரினும் இல் - திருவள்ளுவரது திருக்குறளின்மேற்பட்ட நூலொன்று உளதென்று சொல்லவல்லவர் எவ்வகைப்பட்ட புலவருள்ளும் இல்லை;—செயற்பால உள்ளுதல் உள்ளி உரைத்தல் உரைத்ததனைத் தெள்ளுதல் அன்றே - ஆதலால், நாம் இந்நூலைக் குறித்துச் செயக்கடவன நாம் இதன்பொருளைச் சிந்தித்துக்கொள்ளுதலும், சிந்தித் துப் பிறர்க்கு அதனைச் சொல்லுதலும், பிறரால் சொல்லப்பட்ட அதனைத் தெளி தலும் அன்றே! எ- று.

மொழி ஆகுபெயர். ஒப்பது வடமொழி வேதமிருத்தலின் மிக்கமொழியென் றும், தமிழின்மாத்திரமன்றி வடமொழி முதலியவற்றிலுள்ள புலவரையுந் தழுவு தற்கு எப்பாவலரினுமென்றும், அறிவொப்புக்காண்டற்கு உரைத்ததனைத் தெள்ளுத லென்றும், கூறினர். உள்ளுதலெனவே கேட்டலும், தெளிதலெனவே அவ்வாறொழு கலும், அடங்கின. இது பயிற்சி செய்தொழுகுமாறு சொல்லியபடி . (௪௭)

## ஆசிரியர் நல்லந்துவனார்.

௪அ. சாற்றிய பல்கலையுந் தப்பா வருமறையும்
போற்றி யுரைத்த பொருளெல்லாந்—தோற்றவே
முப்பான் மொழிந்த முதற்பா வலரொப்பா
ரெப்பா வலரினு மில்.

இ - ள். சாற்றிய பல்கலையும் தப்பா அருமறையும் போற்றி உரைத்த பொரு ளெல்லாம் தோற்ற - அறிவுடையோரால் சொல்லப்பட்ட பலநூல்களாலும் தப்பாத அரிய வேதத்தினாலும் காப்பாற்றிவைத்திருந்து உலகத்தார்க்குச்சொல்லப்பட்ட விட யங்களெல்லாம் தன்னிடத்தே காட்டும்படி—முப்பால் மொழிந்த முதற்பாவலர் ஒப் பார் எப்பாவலரினும் இல் - திருக்குறளைச்சொல்லிய திருவள்ளுவரையொப்பவர் எவ் வகைப்பட்ட பாவலருள்ளும் இல்லை. எ - று.

